## இருபத்துமூன்றும் பாட்டு

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க வெப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாவுன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த
காரிய மாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.

பதவுரை:— மாரி — மழை காலத்தில். மலைமுழைஞ்சில் — மலைக்குகையொன்றில், மன்னிக்கிடந்து — (பேடையோடு ஒன்றாகப்) பொருந்திக்கிடந்து, உறங்கும் — தூங்குகின்ற சீரியசிங்கம் — (வீர்யமாகிற) சீர்மையை உடைய சிங்கம், அறிவுற்று — உணர்ந்தெழுந்து, தீ விழித்து — நெருப்புப்பொறி பறக்கும்படி கண்களை விழித்து, வேரி மயிர் — பரிமளம் நிரம்பிய பிடரி மயிர்கள், பொங்க — எழும்படி, எப்பாடும் — எல்லாப் பக்கங்களிலும், பேர்ந்து — அசைந்து, உதறி — (தேஹத்தை) உதறி, மூரி நிமிர்ந்து — உடல் ஒன்றாகும் படி நிமிர்ந்து, முழங்கி — கர்ஜனை செய்து, புறப்பட்டு — வெளிப் புறப்பட்டு, போதரும் ஆ போலே — வருகிறது போல், பூவை பூ வண்ணா — காயாம்பூப்போல் நிறத்தையுடையவனே! நீ — நீ, உன் கோயில் நின்று — உன்னுடைய திருக்கோயிலிலிருந்து, இங்ஙனே போந்தருளி — இவ்விடத்திலே எழுந்தருளி, கோப்பு உடைய — அழகிய அமைப்பையுடைய, சீரிய — மேன்மைபெற்ற, சிங்காசனத்து — ஸிம்ஹாஸனத்தின் மீது, இருந்து — எழுந்தருளியிருந்து, யாம் வந்த காரியம் — நாங்கள் (மநோரதித்துக்கொண்டு) வந்த காரியத்தை, ஆராய்ந்து அருள் — விசாரித்து அருளவேணும்.

---

ஸ்வா:- அதுக்கு இசைந்தவாறே ஸமஸ்தகல்யாணகுண பரிபூர்ணனை தன்னை அநுபவிப்பித்து, அநுபவஜநிதப்ரீதிகாரித கைங்கர்யத்தையுண்டாக்கி, அக்கைங்கர்யத்தில் ஸ்வபோக்த்ருத்வ புத்தியைத் தவிர்ப்பிக்கை. முழுநோக்குப் பெறுமளவானவாறேயென்றது — இவ்வளவான பாகம் பிறந்தவாறே என்றபடி. இப்படியல்லது தேஹாத்மாபிமாநிக்குப் பரமபக்தியையுண்டாக்கிலும் உண்டாகாதிறே. (அங்கணித்யாதி) சந்த்ரஸூர்யர்களிருவரும் உச்சிப்பட்டாற்போலேயிருக்கிற அழகிய திருக்கண்களிரண்டுங்கொண்டு, இவ்வளவான பாகம்பிறந்த எங்களைக் கடாக்ஷித்தாயாகில். அதாவது — பரமபக்தியை உண்டாக்குகை. அத்தால் (எங்கள்மேல் சாபமிழிந்து) மேல் அவஸ்யாநுபாவ்யமாயிருக்கிற விஸ்லேஷவ்யஸநம் தீரும்; ஆகையால் உத்தரீத்யா கடாக்ஷிக்கவேணுமென்று கருத்து. ''திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்'' என்றது, அவன் கடாக்ஷம் ஸுகரூபமாயும் அஜ்ஞாந நிவர்த்தகமாயு மிருக்கையாலே. 22.

## மூவாயிரப்படி — இருபத்துமூன்ரும் பாட்டு

அவ :— இருபத்துமூன்ரும் பாட்டு. a 1. "வசஸா ஸாந்த்வயித்வைநம்" என்று — ஸாபராத4ரைப்போலே $a_1$ ஸாந்த்வநம் பண்ணுமவனுகையாலே, பெண்களை $a_2$ ஸாந்த்வநம் பண்ணியருளினுன்; அவ்வளவிலே, 'நாங்கள் வந்த காரியத்தைக் கேட்டருளவேணும்' என்கிருர்கள்.

வ்யா :— b(மாரி $b_2$ மலை $b_3$ முழைஞ்சில்) c வர்ஷாகாலம் ராஜாக்கள் படைவீடுவிட்டுப் புறப்படாதாப்போலே, ஸிம்ஹமும் வர்ஷாகாலம் முழைஞ்சு விட்டுப் புறப்படாது; d பெருமாள் வர்ஷாகாலம் மால்யவானிலே எழுந்தருளி யிருந்தாற்போலே. e விஶ்லேஷித்தார் கூடுங் காலமுமாய், கூடியிருந்தார்

---

பெ. அ. இருபத்துமூன்ரும் பாட்டு. (மாரி இத்யாதி3) a கீழ்ப்பாட்டில் "அங்கணிரண்டுங்கொண்டெங்கள்மேல் நோக்குதியேல்" (22) என்று கடாக்ஷத்தை ப்ரார்த்தி2த்த வாறே, அவன் ஆபி4முக்2யம்பண்ணுவிடில் "யாம் வந்த காரியமாராய்ந்தருள்" என்னக் கூடாமையால், ஆபி4முக்2யம் பண்ணினது அர்த்த2ஸித்3த4மென்று திருவுள்ளம்பற்றி, ஸத்3ருஷ்டாந்தமாக அத்தை அருளிச்செய்துகொண்டு, ஸங்க3தியிடுகிருர் (வசஸேத்யாதி3) ஸ்ரீவிபீ4ஷணுழ்வான் "ராவணனாலே அவமாநிதனுனேன்" என்று சொல்லிக் கொண்டு ஶரணம்புக்கவாறே, பெருமாள் 1. "வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்4யாம் பிப3ந்நிவ | ஆக்2யாஹி மம தத்த்வேந ராக்ஷஸாநாம் ப3லாப3லம் ||" என்று லங்கையில் அவர்பட்ட எளிவரவையும், 2. "ஸத்4யதாம் ப3த்4யதாம்" என்ருற்போலே. இங்கு முதலிகள் பண்ணின சிலுகையும் நினைத்து, இதெல்லாம் தம்மாலே வந்ததாகத் திருவுள்ளம்பற்றி, மது4ரபா4ஷணங்களாலே ஸந்தோஷிப்பித்தாற்போலே, பெண்களும், பனியும் குளிரும் பாராமல் கு3ணவித்3த4ராய்க்கொண்டு அவ்வவக்3ருஹங்களிலேபோய் எழுப்புகையும் அவர்கள் பள்ளிகொள்ளுகையும், அப்படியிருக்கவும் எல்லாரையும் கூட்டிக்கொண்டு திருவாசல்காக்கும் முதலிகள் தொடக்கமானுரை எழுப்புகையும், நப்பின்னையையும் நன்னையும் பலபடி எழுப்புகையும், இவையாகிற எளிவரவெல்லாம் நாம் முற்பாடராய் எழுந்திருந்து செய்யாமையாலே வந்ததன்ருே; ஆகையால், நம்ம தன்ருே குற்றம் என்று நினைத்து, சில மது4ரபா4ஷணம்பண்ண, பெண்களும் "வந்த காரியத்தைக் கேட்டருளவேணும்" என்கிருர்களென்று கருத்து. $a_2$ ஸாந்த்வநம் — நல்ல வார்த்தை. 3. "ஸாம ஸாந்த்வே உபே4 ஸமே" என்றதிறே.

b, c "மலைமுழைஞ்சில்" இத்யாதி3 அமைந்திருக்க, "மாரி" என்று விஶேஷித்ததுக்கு பா4வம் அருளிச்செய்கிருர் (வர்ஷாகாலம் இத்யாதி3) $b_3$ மலைமுழைஞ்சு — பர்வத கு3ஹை. d த்3ருஷ்டாந்தாந்தரம் (பெருமாள் இத்யாதி3) e இத்தாலே ப்ரக்ருதத்திலே சொல்லிற்றுய்த்தென்னென்ன; அருளிச்செய்கிருர் (விஶ்லேஷித்தார் இத்யாதி3) மாரிகாலம் போலே மார்கழித் திங்களும் விஶ்லேஷித்தார் கூடவும், ஸம்ஶ்லேஷித்தார் ரஸிக்கவும் யோக்3யமான காலமாயிருக்க, நீ எங்கள் காரியம் ஆராய்ந்து ஸம்ஶ்லேஷிக்க வேண்டாவோ? என்று கருத்து.

---

சி. அ. இருபத்து மூன்ரும்பாட்டு (மாரி) a இங்கே அவதாரிகையை ஸங்க்3ரஹித்து மேலே 4 "உபஸ்தே2யைருபஸ்தி2த:" என்கிற வாக்யத்தாலே இத்தை விவரிக்கிருர். அங்கே கண்டுகொள்வது,

$b_3$ முழைஞ்சு—கு3ஹை. b, e'மாரிமலைமுழைஞ்சில்' என்றத்தால் பலிதம் (விஶ்லேஷித்தார் கூடும் காலம் இத்யாதி3) $b_3$, f, g "முழைஞ்சில் மன்னி" என்று கூட்டி அருளிச்செய்கிருர்

பே₄ாக₃ரஸம் அநுப₄விக்குங் காலமுமாயிருக்க, நாங்கள் உன்வாசலிலே நின்று துவளக்கடவோமோ? என்கை. f (மன்னிக்கிடந்து) g மிடுக்காலே ஒருவர்க்கும் அஞ்சவேண்டாமையாலே g₂ குவடுபோலே பொருந்தி g₃ வீசுவில்லிட்டு எழுப் பிறலும் எழுப்பப்போகாதிருக்கை. h (மன்னிக் கிடந்து உறங்கும்) i தன் பேடையோடே ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக்கிடக்கிற என்றுமாம். j இங்கு j₂ ''நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த j₃ மலர்மார்பா'' (19) என்று j₁ நப்பின்னைப்பிராட்டிக்கு ஓராப₄ரணம் என்னலாம்படியிறே முலையோடே பொருந்திக்கிடக்கிறபடி. k (உறங்கும்) l ஸம்ஸாரிகளுறக்கம்போலே தமோபி₄ பூதியாலன்றே இவனுறக்கம்; வ்யதிரேகத்தில் ஆற்றுதார் வருமளவும் ஆகையால், அவ்வுறக்கத்துக்கு ஸ்மாரகமாயிருக்கை. m (சீரியசிங்கம்) n உறக்கத்திலும் க்ஷுத்₃ரம்ருக₃ங்கள் மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயையுடைத்தா யிருக்கை. o 1. ''ஸ மயா பே₃ாதி₄த: o₂ ஸ்ரீமாந்'' என்னும்படிக்கு ஸ்மாரகமா யிருக்கை.

p (அறிவுற்று) q பூ அலர்ந்தாற்போலே காலம் உணர்த்த உணருகை. r ஸம்ஸாரிகள் காலம் உணர்த்த உணருவர்கள்; இவன் ஆஶ்ரிதர் ஆர்த்தி

---

பெ. அ. g₂ குவடுபோலே - ஶிக₂ரம்போலே. g₃ வீசுவில்லிட்டு - தனித்தடிபோட்டு. j க்ருஷ்ணன் நப்பின்னையோடே கூடியிருக்கை சொல்லுகையாலே இவ்வர்த்த₂த்துக்கு த₃ார்ஷ்டாந்தி காநுகு₃ண்யமுண்டென்கிறார் (இங்கு இத்யாதி₃) j₃ (மலர்மார்பா) என்றது - மலர்மார்பனன்றோ என்றபடி. k, l ''மன்னிக்கிடக்கும் சீரிய சிங்கம்'' என்ன அமைந்திருக்க, ''உறங்கும்'' என்றது, க்ருஷ்ணனுடைய யோக₃நித்₃ராஸ்மாரகமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகள் இத்யாதி₃) m, n, o ஸுஷுப்தி பண்ணுநிற்கச்செய்தேயும் 1. ''பரந்தப:'' என்று சொல்லும்படி வீரஸ்ரீயோடேயிருக்கும்படிக்கு ஸ்மாரகம் ''சீரிய'' என்றது என்று அதன் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (உறக்கத்திலும் இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே).

p, q ''சிங்கமறிந்து'' என்னுதே, ''உற்று'' என்கையாலே, இதன் தௌர்லப்₄யம் தோன்றுகையால், அதுக்குக் காலமொழிய வேறு காரணாந்தரமில்லையென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறா (பூ அலர்ந்தாற்போலே இத்யாதி₃) r ஸிம்ஹம் காலமுணர்த்த உணர்ந்த

---

சி. அ (மிடுக்காலே இத்யாதி₃) g₃ (வீசுவில்லிட்டு) தனியிட்டு. 'வீசுவில்லிட்டு' என்றது-க்₃ருஹம் சரிந்தால் தூண்போலே ஒன்றைக்கொடுத்தெடுப்பார்கள்; அத்தைச்சொல்லுகிறது. அப்படியே இந்த ஸிம்ஹமும் ஒரு ப்ரயத்னம்பண்ணி எழுப்பவேண்டும்படி நித்₃ரையிலே பொருந்தியிருக்கிறதென்றபடி. h, i 'உறங்கும்' என்ற பத₃த்தோடே 'மன்னி'க்குஅர்த்த₂ாந்தரம் (தன்பேடை இத்யாதி₃) இத்தால் அந்த ஸிம்ஹம் தன்பேடையோடேயிருக்கிற இருப்பு க்ருஷ்ணன் நப்பின்னைப்பிராட்டியோடே கூடியிருக்கிறதுக்கு ஸ்மாரகமாயிருக்கிறதென்றபடி. j₂, j₄ 'நப்பின்னை கொங்கைமேல்' என்ற பாசுரத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நப்பின்னைப்பிராட்டிக்கு ஓராப₄ரணமித்யாதி₃)m, n, o சீரிய—வீரஸ்ரீயாதல், அழகாதல்.o 1, ''ஸ மயா பே₃ாதி₄த: ஸ்ரீமாந்''என்றது அர்த்த₂ாந்தரமாகவுமாம். n, o அன்றிக்கே 1 ''பரந்தப:' என் றத்தைக்கடாக்ஷித்துக் கீழர்த்த₂த்துக்கு ப்ரமாணமாகவுமாம். o₂ ''ஸ்ரீமாந்''—வீரஸ்ரீயாதல், அழகு

உணர்த்த உணரும். s (தீவிழித்து) ப்ரத2ம கடாக்ஷஸந்நிபாதத்திலே பேடைக்கும் அருகு நிற்கவொண்ணுதிருக்கை. t ஐஶ்வரமான தேஜஸ்ஸுமுன் ஒருவர்க்கும் நிற்கவொண்ணுதிருக்கை. u (வேரிமயிர் பொங்க) வேரி—பரிமளம். ஜாத்யுசிதமான க3ந்த4ம். v உளைமயிர், w பொங்க— x சிலும்ப. 1. "ஸர்வக3ந்த4:" என்னும்படிக்கு ஸ்மாரகமாயிருக்கை. y (எப்பாடும் பேர்ந்துதறி) z ஒருகாரியப் பாடு இல்லாமையாலே z2 நாலு பாடும் பேருகிறபடி. (உதறி) அவயவங்களைத் தனித்தனியே உதறினபடி. (மூரிநிமிர்ந்து) உடல் ஒன்ருக நிமிர்ந்தபடி. a (முழங்கி) ஸ்வவ்யதிரிக்த ம்ருக3ங்கள் b முழுக்காயாக அவிந்து கிடக்கும்படி; c "பெண்காள்! வந்திகோளோ" என்கை.

d மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதருமாபோலே நீ d2 போதர வேணும்; e 'ஸிம்ஹமோ நமக்கு த்3ருஷ்டாந்தம்?' என்ன, f (நீ f2 பூவைப்பூவண்ணு) 'கா3ம்பீ4ர்யத்துக்கு த்3ருஷ்டாந்தமாக ஒன்றைச் சொன்னேமித்தனை; g வடி வழகையும் நிறத்தையும் உன்னைப்போலே பண்ணப்போமோ?' h பூவைப்பூவின் நிறம் உனக்கு த்3ருஷ்டாந்தமானவன்றிறே ஸிம்ஹம் உனக்கு த்3ருஷ்டாந்த மாவதென்னவுமாம்.

---

பெ. அ. தாகில் க்ருஷ்ணன்பெண்களாலேஉணர்த்தப்பட்டிருக்கையாலேத்3ருஷ்டாந்த த3ார்ஷ் டாந்திக வைருப்யமுண்டே: இது கூடும்படி எங்ஙனே என்ன; அருளிச்செய்கிருர் (ஸம்ஸாரிகள் இத்யாதி3) காலஸ்த2ாநத்தில் இவனுக்கு ஆர்த்தியாகையாலே காரணாந்தரமில்லாமை ஒக்கு மாகையாலே சேருமென்று கருத்து, s, t புண்ட3ரீகாக்ஷனை க்ருஷ்ணனுக்குத் தீவிழிக்கக் கூடுமோ? என்ன அருளிச்செயகிருர் (ஐஶ்வரமான இத்யாதி3) t ஐஶ்வரமான தேஜஸ் என் றது- விரோதி4நிரஸநம் பண்ணும்போது நியமனத்தால் வந்த நிக்3ரஹஸாமர்த்2யம் என்ற படி. v உளைமயிர் - பிடரிமயிர். x சிலும்ப - நெறிக்க. z 'ஒருகாரியப்பாடில்லாமையாலே' என்றது - வேருெரு காரியத்துக்காக யத்நம் பண்ண வேண்டாதபடியாலே என்கை. z2 நாலு பாடும் - நாலுபார்ஶ்வமும்; இத்தால் - பதருமல் மெள்ள எழுந்திருந்து என்றபடி. b "முழுக்கா யாக" என்றது - காய்முழுமனுக "என்றபடி. a, c "முழங்கி" என்றத்தால், த3ார்ஷ்டாந்திகத் தில் ப2லித்த அர்த்த2த்தை அருளிச்செய்கிருர் (பெண்காள் இத்யாதி3)

d, e முந்துற, "பூவைப்பூவண்ணு" என்று வர்ணவிஶேஷத்தையிட்டு ஸம்பே3ாதி4க்கைக்கு ப்ரயோஜநமில்லாமையால், மத்4யே ஸம்பே3ாதி4க்கைக்கு ஶங்காஸமாத4ாநம் ப்ரயோஜநமாகச் சொல்லிக்கொள்ளலாமென்று திருவுள்ளம்பற்றி, "அப்போது கீழே வாக்யஸமாப்தி தோன்றவேண்டுகையாலே "போதரவேணும்"(d2)என்று அத்4யாஹரித்துவாக்யத்தைப் பூர்ண மாக்கிக்கொண்டு மேலுக்கு அவதாரிகை இடுகிருர் (மூரி இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே.) f, g "நீ" என்ற பத2த்தைப்பற்ற 'வடிவழகையும்' என்றது. f2, h "பூவைப்பூவண்ணு"

---

சி. அ காதல். s தீவிழித்து-எரிவிழித்து. v உளைமயிர்-ஸ்கந்த4ரோமங்கள். u, w, x வேரி-பரிமளம், பொங்குகை—சிலும்புகை—பரிமளத்தையுடைத்தான ஸ்கந்த4ரோமங்கள் சிலும்ப. y எப் பாடும்—எல்லாப் பார்ஶ்வமும்: b (முழுக்காயாக) உள்ளுமாத்ரமன்றிக்கே மேலில் தோலோடே கூட, a, c இங்கு க்ருஷ்ணன் முழங்குகையாவதென்? என்ன (பெண்காளித்யாதி3) இத்தால் ஆகர்ஷகத்வம் தோற்றுகிறது. f2 பூவை—காயா.

(உன்கோயில்நின்று இங்ஙனே i போந்தருளி) j 1. ''பர்வதாதி₃வ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கி₃ரிகு₃ஹாஶய:'' என்று பிராட்டி மங்க₃ளாஶாஸநம் பண்ண ஸுமந்த்ரனோடே புறப்பட்டாற்போலே காணவேணும். (போந்தருளி) 2. ''சதுர்க்க₃தி''யிறே, — நடையிலே, ரிஷப₄த்தினுடைய k வீறும், மத்தக₃ஜத்தி னுடைய l மதிப்பும், புலியினுடைய m சிவிட்கும், ஸிம்ஹத்தினுடைய n பரா பி₄ப₄வநஸாமர்த்₂யமும் தோற்றியிருக்கை. நமக்கு இவையெல்லாம் நம்பெருமாள் நடையழகிலே காணலாம். o (இங்ஙனே போந்தருளி) p படுக்கையில் வார்த் தையாய்ப் போகாமே, $p_2$ தனி மண்டபத்தில் வார்த்தையாகவேணும்.

q (கோப்புடைய) r சராசரங்களையடையத் தொழிலாக வகுப்புண்டிருக்கை. s உப₄யவிபூ₄தியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை என்னவுமாம். t த₄ர்மஜ்ஞா நாதி₃களாலும், $t_2$ அத₄ர்மஅஜ்ஞாநாதி₃களாலும் கோப்புடைய ஸிம்ஹாஸந மென்றுமாம். (சீரிய சிங்காசனம்) இந்த ஸிம்ஹாஸநத்திலேயிருந்து நினைப்

---

பெ. அ. என்றது-த்₃ருஷ்டாந்தார்த்த₂மென்று விவக்ஷித்து, உன்னுடைய நிறத்துக்கு ஸத்₃ருஶ மாகாதிருக்கிறத்தைச் சொன்னவோபாதி, உன்க₃ாம்பீ₄ர்யத்துக்கும் ஸத்₃ருஶமாகாதத்தைச் சொன்னேமென்னும் அபி₄ப்ராயத்தாலே சொன்னர்களென்று தாத்பர்யாந்தரம் அருளிச் செய்கிருர் (பூவைப்பூ இத்யாதி₃) $f_2$ பூவைப்பூ - அதஸீகுஸுமம்.

$d_2$, i, j ''போதரவேணும்'' என்று ப்ரார்த்தி₂த்து, மீளவும் 'போந்தருளி' என்று அநுவதிக்கையால் தோன்றுகிற ஆத₃ரத்தை த்₃ருஷ்டாந்தமுகே₂ந வெளியிடுகிருர் (பர்வ தாதி₃த்யாதி₃) k வீறு - க₃ர்வம். l மதிப்பு - ப₃ஹுமாநம். m சிவிட்கு-கோபம். n பராபி₄ப₄வந ஸாமர்த்₂யம் - தேஜஸ்ஸு, o, p ''இங்ஙனே'' என்றதுக்கு - இத்திருமண்டபத்திலே என்று அர்த்த₂ம் விவக்ஷித்து, ''சீரியசிங்காசனம்'' என்றபோதே அர்த்த₂ஸித்₃த₄மாயிருக்கவும் சொல்லுகைக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிருர் (படுக்கை இத்யாதி₃) போ₄க₃காலத்தில் உல்லாஸவிஶேஷத்தாற் சொல்லும் வார்த்தையை மந்த்ரிகள் கைக்கொள்ளாமைகையாலே, ஓலக்கவார்த்தையே கார்யகரமென்று கருத்து. $p_2$ 'தனிமண்டபம்' என்றது - அத்₃விதீயமான மண்டபமென்றுய், பெரியதிருமண்டபத்தைச் சொல்லுகிறது.

q, r, s, t ''கோப்பு'' என்று — விசித்ரஸந்நிவேஶவிஶேஷமாய். அத்தை மூன்று வகையாக விவரித்தருளுகிருர் (சராசரேத்யாதி₃) r முந்தினது — லீலாவிபூ₄தி மாத்ரபர மென்று கருத்து. t 'த₄ர்மஜ்ஞாநாதி₃களாலும்' என்ற ஆதி₃ஶப்₃த₃ம் — வைராக்₃யை ஶ்வர்யங்களைச் சொல்லுகிறது. $t_2$ 'அத₄ர்மாஜ்ஞாநாதி₃களாலும்' என்ற ஆதி₃ஶப்தம் — அவைராக்₃ய அநைஶ்வர்யங்களைச் சொல்லுகிறது. இவைகளாகிற எட்டுத்திருக்கால்களான

---

**சி. அ. m (சிவிட்கு) வேக₃ம்; அதாவது—ஸர்கவம். r,s,t ஸிம்ஹாஸனம் விபூ₄த்யதிஷ்டி₂தமா கையாலே விபூ₄திர்விதா₄த்மகமாயிருக்கையாலே அத்தைப் பற்ற மூன்று யோஜனை அருளிச் செய்கிருர்(சராசரங்கள் இத்யாதி₃வாக்யத்ரயத்தாலே) t அத₄ர்மம், அஜ்ஞானம், அவைராக்₃யம், அநைஶ்வர்யம், த₄ர்மம், ஜ்ஞாநம் வைராக்₃யம், ஐஶ்வர்யம் ஆக எட்டுக் காலுக்கும் எட்டு.**

பிட்டது என்றால் u அறுதியாயிருக்கை. v ‘கடற்கரையில் வார்த்தை’ என்னுமா போலேயும், ‘தேர்த்தட்டில் வார்த்தை’ என்னுமாபோலேயும், v2 பெண்களும் க்ருஷ்ணனுமேயாயிருந்து சொல்லிலும் அமோக4மாயிருக்கை. w அணுவாகிலும் க்ருஷ்ணனோடொத்த வரிசையைக் கொடுக்கவற்றான ஸிம்ஹாஸநம் என்றுமாம். (இருந்து) நடையழகுபோலே இருப்பில் வேண்டற்பாட்டையும் காணவேணு மென்கை. A “கண்ணிணை குளிரப் புதுமலராகத்தைப் பருக — இருந்திடாய்” என்னுமாபோலே, உன்னைக் காண விடாய்த்த கண்களின் விடாய் கெட்டு அநுப4விக்கலாம்படி இருந்து.

x (யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்) அநந்யப்ரயோஜநைகளான நாங்கள் வந்த காரியம் ஆராய்ந்தருளவேணும். y 1. “உபஸ்தே2யைருபஸ்தி2த:” என்று ஸ்ரீத3ண்ட3காரண்யத்தில் ரிஷிகளுடைய து3:க்க2நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப் பெற்றிலோமென்று வெறுத்தாற்போலே, y2 ‘பெண்கள் நோவு படப் பார்த்திருந்தோமாகாதே’ என்று வெறுத்து, அவர்களை அழைத்து ‘உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?’ என்ன; y3 ‘இங்ஙனே சொல்ல வொண்ணாது; பேரோலக்கமாக இருந்து கேட்டருளவேணும்’ என்கிறார்கள்.

---

பெ அ.ஸந்நிவேசத்தை உடைத்தாயிருக்கை. u அறுதியா யிருக்கை-பழுதுபோகாமலிருக்கை. u, v அமோக4மாயிருக்கையை த்3ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிறார் (கடற்கரை இத்யாதி3) v ‘கடற்கரையில் வார்த்தை’ என்றது — அப4யப்ரதா3நஸர்க்கம். w ‘அணுவாகிலும்’ என்றது — அல்பபுருஷனாகிலுமென்றபடி.

x y “யாம் வந்த காரியமாராய்ந்தருள்” என்றதுக்கு அவதாரிகையில் சொன்ன அர்த்த2த்தைப் பின்னையும் ஒரு த்3ருஷ்டாந்தத்தைச் சொல்லிக்கொண்டு விஸ்தரிக்கிறார் (உபஸ்தே2யைரித்யாதி3) y3 ‘இங்ஙனே சொல்லவொண்ணாது’ என்றது — ஏகாந்தமாகச் சொல்லவொண்ணாது என்றபடி, y2, z “பெண்கள் நோவுபடப்பார்த்திருந்தோமாகாதே” என்று இவன் தன்னை வெறுத்துக்கொள்கைக்கு ஹேது ஏதென்ன, — அருளிச்செய்கிறார் (நப்பின்னை இத்யாதி3) a அநந்யக3தியென்னப் பொருமைக்கு ஸம்வாத3ம் காட்டுகிறார்

---

சி. அ, v2, 1, “விவாஹகாலே ரதிஸம்ப்ரயோகே3” என்று காமுகவாக்யங்கள் ஸத்யமோ? என்ன அருளிச்செய்கிறார் (பெண்களுமித்யாதி3) அதுவும் ஸிம்ஹாஸனவைப4வாத் ஸத்யமென்கை. w மூன்றும் தாத்பர்யம் (அணுவாகிலுமித்யாதி3) y இந்தப்பாட்டின் அவதாரிகையை இங்கே விஸத3மாக்குகிறார் (உபஸ்தே2யைரித்யாதி3) (அதாவது-கீழ்ப்பாட்டில் “சங்கமிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்”(22)என்று தங்கள் அநந்யக3தித்வம் தோற்றச்சொன்னார்கள்; அந்தப் பாசுரத்தைக்கேட்டு “நப்பின்னைப்பிராட்டி பரிகரமாயிருக்க அநந்யக3திகளாகச் சொல்லுவதே” என்று பொறுத்திலனாகையாலே, 1. “உபஸ்தே2யை: உபஸ்தி2த:” என்று ஸ்ரீத3ண்ட3காரண்யத்தில் ருஷிகளுடைய து3:க்க2நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப் பெற்றிலோம் என்று வெறுத்தாற் போலே பெண்கள் நோவுபார்த்திருந்தோமாகாதே என்று வெறுத்து அவர்களை அழைத்து உங்களுக்குச் செய்யவேண்டுவதென்? என்ன, “இங்ஙனே சொல்லவொண்ணாது; பேரோலக்கமாக இருந்து கேட்டருள வேணும்” என்கிறார்கள் என்று இந்த வாக்யத்தை இப்படி அநுஸந்தி4த்

---

A திருவாய் 9-2-9.

z 'நப்பின்னைப்பிராட்டி பரிக்3ரஹமாயிருக்க "சங்கமிருப்பார்போல் வந்து தலைப் பெய்தோம்" (22) என்று அநந்யக3திகளாகச் சொல்லுவதே!' என்று பொறுத் திலன். a அழகர் கிடாம்பியாச்சானை அருள்பாடிட்டு "ஒன்று சொல்லிக்காண்" என்ன; — a2 1. "அபராத4ஸஹஸ்ரப4ாஜநம்" என்று தொடங்கி 1. "அக3திம்" என்ன; 'நம்மிராமாநுசனையுடையையாயிருந்துவைத்து, 1. "அக3திம்" என்னப் பெறுமோ!' என்று அருளிச்செய்தார். b ஆகையாலே, இருப்பில் b3 வேண்டற் பாட்டையும் b3 காணவேணும். c வந்த காரியத்தை, c2 சிற்றஞ்சிறுகாலைக்கு (29) வைக்கிறார், இப்போது சொல்லாதே. அதுக்கு அடியென்? என்னில், — d அவஸரத்திலே சொல்லவேணுமென்று நினைத்து; e அதாவது — 2. "ஏபி4ஶ்ச ஸசிவைஸ் ஸார்த்த4ம் ஶிரஸா யாசிதோ மயா" என்று — அவர்களுடைய ஆர்த்தியையும் காட்டித் திருவடிகளிலே சென்று விழ இரங்குவர்காணென்று நினைத்து வந்த ஸ்ரீப4ரதாழ்வானுக்கும், 3. "அபி4த: பாவகோபமம்" என்று அவன் நினைத்து வந்ததுக்கு அங்கு அவஸரமில்லாமையாலே அநபி4ப4வநீயரானார்; e2 ஆகையாலே e3 * அவஸரத் திலே சொல்லக்கடவோம் என்றிருந்தார்கள். (ஆராய்ந்தருள்) 'நீங்கள் என் பட்டிகோள்! என் செய்திகோள்!' என்கை. அதாவது — "பெண்களை எழுப்புவது, வாசல்காப்பானை எழுப்புவது, ஸ்ரீநந்த3கோ3பருள்ளிட்டாரை எழுப்புவது, நம்மை எழுப்புவதாய், போர வ்யஸநப்பட்டிகோளாகாதே!" என்கை. f A எதிர்சூழல்புக்குத் திரியுமவனுக்கு, இவையெல்லாம் தன்குறையாகத் தோற்றுமிறே. 23.

---

பெ. அ. (அழகர் இத்யாதி3) b "இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய சீரிய சிங்காசனத்திருந்து
யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்" என்றதுக்குப் ப2லிதார்த்த2த்தை அருளிச்செய்கிறார்
(ஆகையாலே இத்யாதி3) 'ஆகையாலே' என்றது — காண ஆசைப்பட்டிருக்கையாலே
என்றபடி. b2 'வேண்டற் பாட்டையும்' என்ற சகாரத்தால் — நடையினழகைச்சொல்லு
கிறது. b3 'காணவேணும்' என்ற அநந்தரம் "என்கிறார்கள்" என்று ஶேஷம்.
c இன்னகாரியம் என்று விஶேஷித்துச்சொல்லாமல் ஸாமாந்யமாகச் சொன்னதுக்கு
ஹேதுவை அருளிச்செய்கிறார் (வந்த காரியத்தை இத்யாதி3) d, e இவன் விஷயத்தில்
அவஸரம் பார்க்கவேணுமோ? என்ன, அருளிச்செய்கிறார் (அதாவது இத்யாதி3)
e2 ஆகையாலே — அநவஸரத்தில் வார்த்தை கார்யகரமல்லாமையாலே. e3 'அவஸரத்தே'
என்றது — ஓலக்கத்தே வந்துபோது என்றபடி. f இப்படி வினவுகைக்கு ஹேதுவை
அருளிச்செய்கிறார் (எதிர்சூழல் இத்யாதி3) 23.

---

சி. அ. துக்கொண்டு அவதாரிகையாகப் பாட்டுக்கடியிலே கூட்டிக்கொள்வது. "வசஸா ஸாந்
த்வயித்வை நம்" (பக்கம் 392 a) என்று தொடங்கி அருளிச்செய்த அவதாரிகை ஸங்க்ஷேபம்.
இதுவிஸ்தரம். z, a நப்பின்னைப் பிராட்டி பரிக்3ரஹம் என்ற வாக்யார்த்த2த்துக்கு ஸம்வாத3மாக
ஐதிஹ்யம் (அழகர் கிடாம்பியாச்சான் இத்யாதி3) b இத்தால் ப2லிதத்தை அருளிச்செய்கிறார்
(ஆகையாலித்யாதி3) b2 வேண்டற்பாட்டையும் என்கிற 'ச' ஶப்3த3த்தாலே நடையழகையும்
காட்டுகிறது. c2 தாங்கள் வந்த கார்யம் சொல்லாதே 'ஆராய்ந்தருள்' என்கிறதென்?
என்ன அருளிச்செய்கிறார் (சிற்றஞ்சிறுகாலைக்கு இத்யாதி3) 23.

---

A திருவாய் 2-7-6. * (பா) அவஸரத்தே.

அவ :— இருபத்துமூன்றும் பாட்டு. ''சங்கமிருப்பார்போல்'' [22] என்று பெண்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ''அநந்யகதிகளாய் வந்தோம் என்று சொல்லுவதே, நப்பின்னைப்பிராட்டி பரிகரமாயிருந்துவைத்து!'' என்று திருவுள்ளத்திலே போரப்புண்பட்டு, A ''பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை'' என்று — அவளுடைய ஸம்பந்தமே நமக்கு ஏற்றமாக நமக்கு நல்லவர்கள் சொல்லாநிற்கச்செய்தே, அவளோடே ஒரு கோவையாயிருந்துவைத்து நம் முன்னே இப்படி சொல்லுவதே! நாமாரானோம்?'' என்று தன்னை நொந்து கொண்டு, பரமரிஷிகள் ஆர்த்தராய்வர, தன் காவற்சோர்வைநினைத்து 'ஸாபராதர் செய்தவற்றை நிரபேக்ஷரான பூர்ணர் பொறுக்குமத்தனையன்றோ, 1. ''கூர்ப்பூத'' என்று நினைத்திருக்கிற உங்களால் வந்ததன்றே; உங்கள் வ்யஸநத்தைக் காண்கையாலும், அதுக்கடி நம்குற்றமாகையாலும், உங்களளவல்ல நமக்கு லஜ்ஜை; முதலிலே ரக்ஷகனானவனுக்குச் சென்று ரக்ஷிக்கவேணும்; அதிலே ஆர்த்தரை ''ஐயோ!'' என்று வினவவேணும்; இப்படியிருக்க, நோவுபடுவி கோளும், அது வந்து அறிவிப்பிகோளும் நீங்களாம்படி பிற்பாடரானோமே! அத்தை நீங்கள் பொறுக்கவேணும்' என்று க்ஷமிப்பித்துக் கொண்டாற்போலேயும், ஸ்ரீவிபீஷணாழ்வான், ''ராவணன் பின்னே பிறந்த என்னை ஆராயாதே அருள் பாடிடுவதே!'' என்று தரையைப்பார்த்துக் கவிழ்ந்துநிற்க, ''அவன் லங்கையிற் பட்ட நெருக்கும் முதலிகளால்வந்த சிலுகுமெல்லாம் நம்மாலே வந்ததன்றோ; நீரிருந்தவிடத்திலே வந்து கொண்டுபோராதது நங்குறையன்றோ'' என்று ஸாபராதரைப்போலே ஸாந்த்வநம் பண்ணினாற்போலேயும், ''ஆண்கள் விஷயத் திலகப்பட இப்படியிருக்கக்கடவ நாம், பெண்கள் வந்தெழுப்பப் பார்த்திருப் போமே!'' என்று பெண்களுக்கு இனிதாகச்சொல்லி, ''உங்கள் கார்யம் அழகிதாகச் செய்து தரக்கடவோம்; செய்யவேண்டுவதென் சொல்லுங்கோள்?'' என்ன; ''இங்ஙன் குன்றுங்குருச்சியாகக் கேட்டருளவொண்ணாது; பேரோலக்கமாக இருந்து கேட்டருளவேணும்'' என்று ஆஸ்தாநத்தில் புறப்பாடிருக்கும் க்ரமத்தை பாசுரப் பரப்பறக் கையோலைசெய்து கொடுக்கிறார்கள். ஆச்சான் 2. ''அகதிம் ஶரணாகதம்'' என்று விண்ணப்பம் செய்ய; ''நம்மிராமானுசனையுடையையா யிருந்துவைத்து நம்முன்னே இப்படி சொல்லப்பெறுமோ'' என்றார் அழகர்.

வ்யா :— (மாரி) வைரங்கொள்ளும் மார்க்கங்களும், 3. ''ஸலிலேந ஸமீக்ருதா:'' என்னும்படி தேசமடைய ஒரு நீர்க்கோப்பாக வர்ஷம்பெய்து, வழிகளெல்லாம் தூறெழுந்து ஸஞ்சார யோக்யதையின்றியிலேயொழிகையாலே, ராஜாக்களும் தந்தாம் ஶத்ருக்கள் பக்கல் த்வேஷங்களையும் மறந்து, எடுத்துவிடுகையையுந் தவிர்ந்து, கைகழியப்போனவர்களும் வர்ஷாவாகப்புகா நின்றது என்று தந்தாம் வீடுகளைக்குறித்து வந்து நின்று, நாலு மாஸமும் உகந்த விஷயங்களோடே கூடியிருக்கும்படியாயிறேயிருப்பது. மஹாராஜரும்

A திருவாய் 1-7-8.

தாரையுடைய ஸ்தநோஷ்மாவைப் பற்றிக்கிடந்து, பெருமாளோடே பண்ணின ஸமயத்தையும் மறந்தபடியாலே பெருமாளும் சீறி, "ஸபா₃ந்த₄வமாக அறுக்கக் கடவோம்" என்று இளையபெருமாளுக்கு அருளிச்செய்துவிட; அவரும், கிஷ்கிந்தை₄ வாசலிலே ‡ சென்று நாணெறிய; நின்ற திருவடியைப் பார்த்து, 'போக்கடி சொல்' என்ன; அவனும், "தீரக்கழிய அபராத₄ம் பண்ணின உனக்கு ஓரஞ்ஜலி நேராமல் போகாது" என்ன; தான் ஸாபராத₄னுகையாலே நேர்கொடு நேர் புறப்படமாட்டாமையாலே தாரையைப் புறப்படவிட; அவளும் "உமக்குக்கோப காரணமென்? உமக்குக் கோபத்துக்குப் போருவாரும் உண்டோ?" என்று பொறுப்பித்துக் கொள்ளும்படி பண்ணுங்காலமிறே வர்ஷாவாகிறது. பெருமாள் தானும், மால்யவானிலே எழுந்தருளியிருந்து ஸலிலாதிப₄ரத்தை வஹித்துக் கொண்டு ரணோத்₃யுக்தங்களான ஆனைகள்போலே கிளம்பி நீர்க்கனத்தாலே மலைக்கொடுமுடிகளிலே படிந்து ஸோபாநபங்க்திகள் படுத்தாற்போலே கிடக்கிற கிடையைக் கண்டு, "அர்ச்சிராதி₃க₃தியாலே பரமபத₃த்துக்கு ஏறுவாரைப்போலே இவற்றிலே அடியிட்டு ஆகாசத்திலே ஏறி, பறித்துக்கொள்ள வேண்டாதபடி, நினைத்தபடி அள்ளிப் பரிமாறலாம்படியிருக்கிற இக்காலத்துக்கு அடைத்த பூக்களைக் கொண்டு ஆதி₃த்யாந்தர்வர்த்தியான பெரியபெருமாளை ஸமாராத₄நம் பண்ணலாயிருந்தது; எடுத்துக் கைநீட்டுவாரில்லையாயிற்றே" என்கிற இழவோடே வர்ஷாகாலத்திலிருக்கும்படிகளெல்லாம் அருளிச்செய்தாரிறே. (மாரி) பிரிந்தார் கூடுங்காலம்; கூடினர் போ₄க₃ரஸமநுப₄விக்குங்காலம்; பூ₄ஜிக்கிறவர்கள் கைநெகிழில் உடம்புவெளுத்து அணையுங்காலம்; (மாரி) பெண்டுகளோடே மேக₄ம் A அறையிடும்காலம்; B பிரிந்தார் கொடுமை குழறுங்காலம், C கலந்தார் வரவெதிர் கொள்ளும் காலம்; D பெண்ணீர்மையீடழிக்குங்காலம். (மாரி) ஸிம்ஹங்களும் எதிரிகளான ஆனைகள் வாசலிலே நின்று பிளிறவும், அது செவிப்படாதே தனக்கு ஒரு விரோதி₄யில்லையென்று பர்வதகு₃ஹைகளைப் பற்றிக்கிடந்துறங்குங் காலம். இனி, இவர்களுக்கு ஊராரும் இசைந்து, அவர்கள் ஒரோ இடங்களிலே அடங்கவும் பெற்று, இவர்களுக்குப் ப₃லம் கொடுக்கிற க்ருஷ்ணனும் நப்பின்னைப் பிராட்டி கட்டிலிலே உறங்கி, இவர்கள் சென்றெழுப்பவேண்டும்படியான காலமிறே. (மலை முழைஞ்சில்) ஸிம்ஹந்தான் மலைக்கு ஆப₄ரணமாயிறே இருப்பது; இவனும், நப்பின்னையினுடைய 1. "துங்க₃ஸ்தநகி₃ரிதடி"யிலே ஸ்தநாப₄ரணம்போலே தங்குகிறானிறே.

(மன்னிக்கிடந்து) மிடுக்காலே ஒருவர்க்கு அஞ்சவேண்டாமையாலே மலைக் குவடுபோலே பொருந்தி வீசுவில்லிட்டெழுப்பினாலும் கிளப்பப் போகாதபடி ஒட்டிக்கொண்டு கிடக்கை. அன்றிக்கே, தன் பேடையோடே ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக்கிடக்குமென்றுமாம். "வைத்துக் கிடந்த மலர்மார்பா" (19) என்னும் படியிறே கிடக்கிறது; E "அடங்க வஞ்சிறைகோலி" என்னுமாபோலே. (கிடந்துறங்கும்) ஸ்பர்ஶஸுக₂ம் மயக்கினபடியொழிய தமோகு₃ணபி₄பூ₄தமாய் உறங்கு

‡ (பா) சிறு, A திருவிருத்தம் 19, B திருவிருத்தம் 7, C திருவிருத்தம் 68, D நாச்-திரு 8-1, E பெரிய திரு 8-5-8.

கிறதன்றே இவனுறக்கம்; தன்னாலல்லது செல்லாதே வ்யதிரேகத்தில் ஆற்றுதார் வருமளவும் குறுவிழி கொள்ளுகையிறே. (உறங்கும் சீரிய சிங்கம்) உறங்கா நிற்கச்செய்தே கிட்டமாட்டாதே க்ஷுத்ரம்ருகங்கள், கண்டகாட்சியிலே மண்ணுண்ணும்படி வீரஶ்ரீயையுடைத்தான ஸிம்ஹம் ஸுகஸுப்தி பண்ணாநிற்கச்செய்தே ஶத்ருக்கள் தபிக்கும்படி கிடக்கையாலே, 'உணர்த்திகொள்ளுங் கார்யத்திலும் உறக்கமே நன்றாயிருக்க, என்றியவுணர்த்தினேய்?' என்னும்படி மடிகொடுத்தார் துடிக்கும்படியிறே இவனுடைய உறக்கமிருப்பது. (சீரியசிங்கம்) "ம்ருகேந்த்ரன்" என்றும், "ம்ருகராஜன்" என்றும் ஒருத்தர் முடிசூட்ட வேண்டாதே, பிறப்பே நிரங்குஶமான வைபவமுண்டாகை. (சீரிய சிங்கம்) நரஸிம்ஹம்போலே கலந்துகட்டியாய்ச் சீர்மை கெட்டிராதே A சிற்றாயர் சிங்கத்துக்கு.

(அறிவுற்று) மேலிடவல்லதொன்றில்லை; கிட்டி எழுப்பவல்லாரில்லை; காலமுணர்த்த உணருமத்தனையிறே. (அறிவுற்று) அறிவில்லாததொரு பதார்த்தத்துக்கு அறிவு புகுந்து நடையாடினாற்போலேயிருக்கை. ஆஶ்ரிதார்த்தமாக உணர்ந்தபோதிறே இவன் அறிவுடையனானாவது பூவலர்ந்தாற்போலே காலமுணர்த்தவுணர்ந்தபடி. (தீவிழித்து) "நம்மெல்லைக்குள் புகுந்தாரார்" என்னுமாபோலே, பார்க்கும் பார்வையிலுள்ள வெம்மை. ப்ரதமகடாக்ஷஸந்நிபாதத்தில், ஸர்வகாலமும் அணையும் பேடைக்கும் குட்டிகளுக்கும் அணையவொண்ணாதிருக்கை. B "பூங்கோதையாள்வெருவ" C "வானோர் கலங்கியோட" என்னும்படியிறே கோபித்து விழித்தால் D எரிவட்டக் கண்களாலே ஐஸ்வரமான தேஜஸ்ஸு ப்ரவஹிக்கும்படி. "ஐந்தலைப் பாம்போடே விளையாடுகிறவனார்? பாண்டவ ஸாரதி, க்ருத்துதனால் பிழைக்கிறவனார்?" என்று சிவக்கப்பார்த்தால் ப்ரஹ்மருத்ராதிகளாலும் நோக்கவொண்ணாதபடியிறே இருப்பது. (தீவிழித்து) இவனைக்கொண்டு வேறொரு ப்ரயோஜநங் கொள்ளுமவர்களன்றிக்கே; இவனிருந்தபடியே உத்தேஶ்யம் என்றிருக்குமவர்களாகையாலும், E "கொண்ட சீற்றம்" என்று — ஆஶ்ரிதார்த்தமான சீற்றத்தை "நிதியுண்டு" என்று நினைத்திருக்குமவர்களாகையாலும், ஏதேனுமாக இவன் F செய்கை இவர்களை F நைவிக்கையாலும், "சீரியசிங்கம்" என்றத்தோடு, "அறிவுற்று" என்றத்தோடு "தீவிழித்து" என்றத்தோடு வாசியற இவையெல்லாம் போக்யமாயிருக்கிறபடி. D "இவையா, இவையா" என்று தனித்தனியே ஆகர்ஷகமிறே.

(வேரி மயிர் பொங்க) பரிமளத்தையுடைத்தான உளைமயிர்களானவை சிலும்ப. (வேரிமயிர்) ஸிம்ஹத்துக்கு ஜாத்யுசிதமான கந்தம். 1. "ஸர்வகந்த:" என்கிற விஷயமாகையாலே உபமேயத்திலுள்ளதெல்லாம் உபமாநத்திலேயிட்டுச் சொல்லக்கடவதிறே. G தண்டுழாய் விரைநாறக்கடவதிறே. (எப்பாடும் பேர்ந்து)

---

A பெரியாழ் திரு 3-3-5. B முதல் திருவ 23. C பெரிய திரு 1-7-6. D நான் திரு 21. E பெரிய திரு 5-8-3. F திருவாய் 5-10-2. G திருவாய் 2-6-10.

அறிவுகலந்து நடையாடச் செய்தேயும் நித்₃ராபாரவஶ்யத்தாலே வந்த கலக்கத்தாலே ஒருகார்யப்பாடற நாலுபாடும் பேருகிறபடி. (உதறி) உறங்கும்போது அவயவங்களைச்சேர இட்டுக்கிடக்கையாலே வந்த திமிர்ப்புப் போம்படி அவயவங்களைத் தனித்தனியே உதறி.

(மூரிநிமிர்ந்து) உலாவுகைக்கு ஶரீரம் விதே₄யமாகைக்காக அவயவியான உடலை ஒன்றாக நிமிர்த்து. (முழங்கி) இதர து₃ஷ்டம்ருக₃ங்கள் கிடந்தவிடத்திலே முழுக்காயாக அவிந்துகிடக்கும்படி முழங்கி; மேக₄ம் போன்ற க்ருஷ்ணனுடைய முழக்கம் எதிரிகளை மண்ணுண்ணும்படி பண்ணி, பெண்கள்வந்து எதிர்கொள்ளக் கடவதாயிருக்கும். (புறப்பட்டுப் போதருமாபோலே) ஸ்ரீகுஹரத்தில்நின்றும் இப்படிப்பட்டதொரு ஸிம்ஹம் புறப்பட்டு ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுமாபோலே, இங்ஙனே போரவேணும் என்கிறார்கள். "பெண்காள்! நம்மை ஸிம்ஹம் புறப்படுமாபோலே புறப்படவோ சொல்லுகிறது? ராக₄வஸிம்ஹமாய்ப்புறப்படவோ? நரஸிம்ஹமாய்ப்புறப்படவோ?" என்ன; "உன்னுடைய மேன்மை அந்யாயத்தமன்றென்கைக்காகவும், ஸ்வாப₄ாவிகமான ஶௌர்யத்துக்கும் கா₃ம்பீ₄ர்யத்துக்கும் ஸிம்ஹத்தை த்₃ருஷ்டாந்தமாகச் சொன்னோமித்தனையல்லது, ஸிம்ஹம்போலேயென்றோம் என்று, ஹிரண்ய ராவணாதி₃கள் முன்னே நிற்குமாபோலே நிற்கவோ தேடுகிறது பிரானே!"

(நீபூவைப்பூவண்ணா) உன்னை நீயறியவேண்டாவோ? எதிரிகளான ஶிஶுபாலாதி₃கள் முன்னே நிற்கிலும் இவ்வழகு குலையாமே நிற்குமவனல்லையோ நீ? ஸிம்ஹத்தால் உன்னுடைய வடிவழகையும் குளிர்த்தியையும் ஸௌகுமார்யத்தையும் ஏறிட்டுக்கொள்ளப்போமோ? உன் வடிவுக்குப்பூவைப்பூவை ஒராகாரத்துக்கு த்₃ருஷ்டாந்தமிடுகிறமாத்ரம், ஶௌர்யாதி₃களுக்கு ஒருபோலி சொன்னோமித்தனையன்றோ? பிரிந்தார்க்குப்பிழைக்கவொண்ணாதபடி வடிவுபடைத்ததோ அது? (பூவைப்பூவண்ணா) A வண்டறுப்பூவைதான் கண்ணனார் வடிவுக்கு ஸ்மாரகமாயிறேயிருப்பது. "வடிவைக் கொண்டாடாநின்றிகோள்: உங்களுக்கு அநுப₄விக்க ஆசையாகில் உள்ளே புகுருங்கோள்" என்றான்; (உன்கோயில் நின்றிங்ஙனே) எங்களை உள்ளேயழையாதே நீதான் உள்ளில்நின்றும் புறப்பட்டாலோ? படுக்கைத் தலையிலே எடுத்துக்கைநீட்டுவித்துக் கொள்ளுமளவன்று; எங்களை அழகோலக்கத்தே அடிமைகொண்டருளவேணும். (பூவைப்பூவண்ணா உன் கோயில் நின்று) இவ்வடிவழகையெல்லாம் இட்டளத்தில் வெள்ளமாக்குகிறதென்?

(உன்கோயில்) "நந்த₃கோ₃பனுடைய கோயில்" என்றார்கள்-கீழே; இங்கே "உன்கோயில்" என்கிறார்கள்; வாஸபூ₄மி ஒன்றாய், அது இருவர்க்கும் பொதுவாயாய்த்திருப்பது. இவன் வர்த்திக்கும் கோயிலுக்கு ஶேஷஶேஷிகளுடைய ப்ராதா₄ந்

A பெரியதிருவ 49.

யங் கொள்ளக்கடவதிறே ப்ரணவம்போலவும் ஹ்ருதயகமலம்போலவும். A "திருவரங்கம் நம்மூர்" B "எம்பெருமான் கோயிலென்றேற்கு இதுவன்றோ எழிலாலி" என்னக்கடவதிறே. (இங்ஙனே போந்தருளி) பெருமாள் திருமாளிகையில் நின்றும் ஸுமந்த்ரனைக் கையைப் பிடித்துக்கொண்டு, பிராட்டி பின்தொடரப் புறப்பட்டாற்போலே C ஞாலததூடே நடக்கவொண்ணாது. (இங்ஙனே) எங்கள் முன்னே நடக்கவேணும். எங்களுக்குத் தனியே சில நிர்ப்பந்தமுண்டுகாண். கண்வளர்ந்தருளினபடிகண்டு வாழ்ந்தோம், இனி நடையழகுகண்டு வாழவேணும். நடைச் சக்ரவர்த்துப் பிடிக்கலாம்படியிறே இந்நாலடியுமிருப்பது. க்ருஷ்ணனுடைய லலித கதியை அநுகரித்து தரிக்கத்தேடுகிறவர்கள் தாங்களுட்பட, 'கண்ணுடையாரடங்கலும் கண்டு வாழுங்கோள்' என்னும்படியிறேயிருப்பது D "கானகம்படியுலாவியுலாவி" என்று க்ருஷ்ணன் நடக்கும்போது ஆடல்பாடல் மறக்கக்கடவதிறே அப்ஸரஸ்ஸுக்களுட்பட ஆடுமதுகண்டு. E [கைதொழவீதிவருவான்] காலும் நடையும்கண்டு கையெடுப்பார் மடலெடுப்பாராவர்களிறே பெண்கள். (போந்தருளி) 1. "சதுர்க்கதி" யிறே; — ரிஷபத்தினுடைய செருக்கும், மத்தகஜத்தினுடைய திமிர்ப்பால் வந்த பிசுகுதலும், புலியினுடைய சிவிட்குமைமையால் வந்த உறட்டுதலும், ஸிம்ஹத்தினுடைய மேனணிப்பால்வந்த பராபிபவநமும். F "ஆயர்பாடி கவர்ந்துண்ணும் காரேறு" G "வாரணம் பையநின்றூர்வதுபோல்." H "சிற்றயர்சிங்கம்" என்கிற க்ருஷ்ணனுக்குச் சொல்லவேணுமோ, 2. "புருஷர்ஷப:" 3. "ராமஸார்த்தூலம்" 4. 'மத்தமாதங்ககாமிநம்' 5. "ஸிம்ஹவிக்ராந்தகாமிநம்" என்று சக்ரவர்த்திப் பிள்ளையுள்பட விருதுபிடியாநிற்க? இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் நடையழகிலே காணலாம்.

'போந்துகேட்குமித்தனையன்றோ கார்யம் வேண்டுவது" என்றுன்; (கோப்புடைய சீரியசிங்காசனத்திருந்து) படுக்கையில்வார்த்தையாகவொண்ணாது, (கோப்புடைய) உபயவிபூதியிலுண்டான சராசரபதார்த்தங்களையடங்கலும்தொழிலாக வகுப்புண்டிருக்கை. (சீரியசிங்காசனம்) சீரியசிங்கத்துக்கு ஸத்ருஸமான ஆஸநம். (சீரிய) பெண்களுக்குப் பொய் குறிக்கும் க்ருஷ்ணனேயாகிலும் இவ்வாஸனத்திலே இருந்தால் பொய்சொல்லவொண்ணாதே, சொன்னது அமோகமாயிருக்கை. ஆஸனத்துக்குச் சீர்மையாவது-கடற்கரைவெளியிலே வாநரஸகாஸத்தில் வார்த்தைபோலேயும், பூசல் களரியில் தேர்த்தட்டில் வார்த்தைபோலேயும், பெண்கள் திரளிமல திவ்யஸிம்ஹாஸனத்திலேயிருந்து I பொய்ந்நம்பியான க்ருஷ்ணன் சொன்னதேயாகிலும் ஆஸநவிஶேஷத்தாலே பழுதுபோகாதபடியாயிருக்கும். தர்மாஸனத்திலே இருந்தால் தோற்றிற்றுச் சொல்லவொண்ணாதிறே. இதுதான் தர்மாதிபீடமிறே. ராஜாக்கள் மெய்க்காட்டுக்கு, இன்ன மண்டபத்திலே இன்ன ஆஸனத்திலேயிருந்து தினைப்பிட்டது என்றால் தப்பாதாப்போலே.

---

A திருநெடு 23. B திருநெடு 22. C திருவாய் 6-9-3. D பெரியாழ் திரு 3-6-4. E பெரியதிரு 3-3-7. F நாச் திரு 13-4. G பெரியாழ்திரு 1-8-1. H பெரியாழ் திரு 3-3-5. I பெரியதிரு 10-7-4.

(உன்கோயில் நின்று இத்யாதி₃) நம்பெருமாள் கோயிலாழ்வாரில் நின்றும் புறப்பட்டருளி, பெரியதிருமண்டபத்திலே சேரபாண்டியனிலே நாய்ச்சிமாரோடே கூட விருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாப்போலே. (சீரியசிங்காசனம்) ஓரணு சென்று அடியிடிலும் க்ருஷ்ணனோடு ஸாம்யாபத்தியைக் கொடுக்கும் ஆஸநம். A "இருந்தால் சிங்காசனமாம்" என்கிற ஆஸனத்திலே ஏறவிறே தங்களுக்குக் கணிசம்; கண்வளரு கிறபோதையழகும் உலாவுகிறபோதையழகும் கண்டால், இருக்கும் போதையழகும் காணவேணுமிறே; B "இருந்தமை காட்டினீர்" என்றிறே உத்₃தே₃ஶ்யம். C "தடங் கொள் தாமரைக்கண் விழித்து—உன் தாமரைமங்கையும் நீயும் இடங்கொள் மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக் கிடந்தானே!". கிடந்தமைகண்டா லும் நடந்தமைகண்டாலும் காணவிடாய் கெட்டுக் குளிராது. D "கண ணிண குளிரப் புதுமலராகத்தைப் பருகவிருந்திடாய்." (சீரியசிங்காசனத்திருந்து) நாங்கள் சுற்றும் ஒலக்கமிருக்க நீ ஸிம்ஹாஸனத்திலே இருந்தாலன்றோ E "பல் லாயிரம் பெருந்தேவிமாருடனே - எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தேயிருந்தானைக் கண்டவர்களுண்டு" என்கிற ப்ரஸித்₃தி₄ உனக்குப் படைக்கலாவது. (இருந்து) காவலுங்கட்டுமாய் "நில்" என்பாரின்றிக்கே, நினைத்தபடி அநுப₄விக்கலாம்படி இருந்த இருப்பிறே,

(யாம்வந்த) எங்ஙனே அறிவுதியிறே, நீ வரவிருக்குமவர்களன்றோ நாங்கள், (வந்த) விரஹதௌ₃ர்ப்ப₃ல்யத்தால் கால்நடைதாராத நாங்களன்றோ வந்தோம். (காரியம்) கார்யமின்னதென்னுவிடுகிறது — அவஸரத்திலே சொல்லவேணுமென்று நினைத்து; ஸ்ரீப₄ரதாழ்வான் தம்மோடொக்க ஆர்த்தரானரெல்லாரையும் திரட்டிக் கொண்டுசென்று திருவடிகளிலே விழ இரங்குவரென்று வர, அவன் நினைத்து வந்ததுக்கு அவஸரமில்லாமையாலே அணுகவொண்ணாதபடியிருந்து திருவடி நிலைகளைக் கொடுத்துவிடும் ஸ்வதந்த்ரனாகையாலே; 'இப்போது சொல்லுவோமல் லோம்; இன்னம் இரண்டடி புகுரநின்றவாறே "உற்றோமேயாவோம்" (29) என் கிறோம்' என்று கார்யமின்னதென்னுமிடத்தை "சிற்றஞ் சிறுகாலைக்கு" (29) வைக்கிறார்கள். (காரியம்) ஸ்வஸ்வரூபாபத்தியளவுமிறே விதி₄க்கு விஷயமுள்ளது. அவ்வருகு பரிமாற்றத்தால் வருமவையெல்லாம் ப்ரமாணவிஷயமாய்ப் பேச்சுக்கு நில மாயிராதே; அதுதானும் காரியவறுதிபிறந்தாலிறே சொல்லுவது. (ஆராய்ந்தருள்) "நாம் போமிடந் தேடிக் காலம்பார்த்து F எதிர்சூழல்புக்கு, புருஷகாரமாகப்பற்றி, நாம்படுவதெல்லாம் நீங்கள் படுவதே! நீங்கள் என்செய்திகோள்! என்பட்டிகோள்!" என்று ஆராயவேணும். "பெண்காள்! ஒருவரையொருவரெழுப்பி, எல்லாருந் திரண்டு நம்வாசற் காக்குமவனையெழுப்பி, ஐயரை எழுப்பி, ஆய்ச்சியை எழுப்பி, நம்மை எழுப்பி, அண்ணரை எழுப்பி, மீளவும் நம்மையெழுப்பி, போர வ்யஸநப் பட்டிகோளே!" என்று திருவுள்ளம்பற்றி க்ருபைபண்ணி அருளவேணும். 23.

---

A முதல் திருவ 53. B திருவாய் 6-5-5. C திருவாய் 9-2-3, D திருவாய் 9-2-9. E பெரியாழ் திரு 4-1-6- F திருவாய் 2-7-6.

## ஈராயிரப்படி — இருபத்து மூன்றும்பாட்டு

அவ: இருபத்துமூன்றும் பாட்டு:- "பெண்காள்! உங்கள் காரியமழகிதாகச் செய்து தருகிறோம்; உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்?" என்ன; "இங்ஙனே குன்றுங்குருச்சியாகக் கேட்டருளவொண்ணாது; புறப்பட்டுக் கேட்டருள வேணும் என்கிறார்கள். A "பின்னை நெடும்பணைத்தோள மகிழ்பீடுடை முன்னை அமரர் முழுமுதலானே".

வ்யா: (மாரிமலை முழைஞ்சில்) பெருமாள் மால்யவானிலே எழுந்தருளியிருந்தாப்போலே வர்ஷம் பெய்து வழிகளெல்லாம் தூறெழுந்து ராஜாக்கள் படைவீட்டிலேயிருந்து வினையுண்டானாலும் புறப்படாதாப்போலே, ஸிம்ஹங்கள் கி₃ரிகு₃ஹைகளிலே கிடந்துறங்குங்காலம். விஶ்லேஷித்தார் கூடுங்காலம். கூடியிருந்தார் ஸம்பே₄ாக₃ம் அனுப₄விக்குங்காலம். நாங்கள் உன்வாசலிலே நிற்குங்காலம். (மன்னி) ஆருக்கஞ்சுமது? மலைக்குவடு போலேயிருக்கை. (கிடந்துறங்கு மித்யாதி₃) ஒருத்தர் முடிசூட்ட வேண்டாதே புறம்பே ம்ருகே₃ந்த்₃ரனுகையும் திர்யக்₃ஜாதீயபு₄வமுண்டாகையும். 1. "ஸ மயா பே₃ாதி₄த: ஶ்ரீமாந்" க்ஷுத்₃ர ம்ருக₃ங்கள் மண்ணுண்ணும்படியிருக்கை. 2. "அபி₄த: பாவகோபமம்" அனுகூலரான தப்பிக்குமகப்பட அணுகவொண்ணாதபடியிருக்கை. (அறிவுற்று) பூவலர்ந்தாற்போலே காலத்திலே உணருகை. ஸம்ஸாரி உறங்கும்போது தமோபி₄பூ₄தனாய், உணர்ந்தால் பராகு₃ர்த்த₂ானுப₄வமாயிருக்கும்; இவனுறக்கம் வ்யதிரேகத்தில் ஆற்றுதார் வருமளவும். (தீ விழித்து) ப்ரத₂மாக்ஷிஸந்நிபாதத்திலே பேடைக்கும் அருகே நிற்கவொண்ணாதென்கை.

(வேரிமயிர்) உளைமயிர். அவனுக்காகில் 3. "ஸர்வ க₃ந்த₄:". (எப்பாடும் பேர்ந்துதறி) ஒரு கார்யப்பாடில்லாமையாலே நாலு பாடும் பேருகிறபடி. (உதறி) அவயவங்களைத் தனித்தனியே உதறினபடி. (மூரி நிமிர்ந்து) உடப்பு ஒன்றாய் நிமிர்ந்தபடி. (முழங்கி) மானுள்ளிட்ட ம்ருக₃ங்கள் முழுக்காயாகப் பினத்திக்கிடக்கும்படி. (முழங்கிப் புறப்பட்டுப் போதருமா போலே) 'கி₃ரிகு₃ஹ்வரத்தில்நின்றும் இப்படிப்பட்டதொரு ஸிம்ஹம் புறப்பட்டுப் போருமா போலே போரவேணும்" என்ன, "பெண்காள்! நரஸிம்ஹம் போருமாபோலே போரவேணுமோ?" என்ன (நீ பூவைப்பூவண்ணா) கா₃ம்பீ₄ர்யத்துக்கு ஒன்றைச் சொன்னோமாகில் நீ போருமாபோலே போரவேணும் என்கை. வடிவையும் திறத்தையும் உன்னைப் போலே பண்ணவொண்ணுமோ? என்கை. இவனை ஸிம்ஹத்தைப் போலே ப₄ாவிக்கிறது நாச்சியார் விழிவிழிக்கைக்காக. (உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி) நப்பின்னைப்பிராட்டியை ஊன்றிக்கொடு திருப்பள்ளியறையில்நின்றும் பெரிய திருமண்டபத்தேறப் புறப்பட்டருள வேணும்; 4. "பூர்வாம் தி₃ஶம்" இத்யாதி₃ப்படியே பிராட்டி மங்க₃ளாஶாஸநம் பண்ணப் புறப்பட்டருளினாப்போலே. 5. "பர்வதாதி₃வ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கி₃ரிகு₃ஹாஶய: । லக்ஷ்மணம் த்₃வாரி ஸோ ऽபஶ்யத் ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்தி₂தம்॥" என்னக் கடவதிறே.

A திருவாய் 1-7-8.

(இங்ஙனே போந்தருளி) கண்வளர்ந்தருளின அழகு காணப்பெற்றோம். இனி நடையழகும் இருப்பில் வேண்டப்பாடுங்கண்டு வாழவேணுமென்கிறார்கள். A "தடங்கொள் தாமரைக்கண் விழித்து நீயெழுந்து" இத்யாதிவத். (போந்தருளி) 1. "சதுர்க்கதி" யிறே, 2. "கஜஸிம்ஹகதீ விரௌ" இத்யாதிப்படியிறே நடையழகிலே ருஷபத்தின் செருக்கும், மத்தகஜத்தினுடைய திமிர்ப்பும், புலியினுடைய உறட்டும், ஸிம்ஹத்தினுடைய பராபிபவன ஸாமர்த்யமும தோன்றியிருக்கும். இதெல்லாம் நம்பெருமாள் நடையழகிலே காணலாம். (கோப்புடைய) உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை. (சீரிய சிங்காசனம்) ராஜாக்கள் இன்ன மண்டபத்திலே இன்ன ஸிம்ஹாஸனத்தில் இருந்தாப்போலே. (யாம் வந்த காரியம்) இப்போது சொல்லார்கள்; சிற்றஞ்சிறுகாலைக்கு (29) வைக்கிறார்கள். (ஆராய்ந்தருள்) "நீங்கள் என்பட்டீர்கள்? என்செய்தீர்கள்" என்கை. 23.

## நாலாயிரப்படி — இருபத்துமூன்றும் பாட்டு

அவ: இருபத்துமூன்றும் பாட்டு. "பெண்காள்! உங்கள் கார்யம் அழகிதாகச் செய்கிறோம்; உங்களுக்குச் செய்யவேண்டுவதென் என்னச் செய்யும்படியை உள்வரியிட்டுத்தாருங்கோள்" என்ன, பாசுரத்தைச் சுருங்கவிட்டு உள்வரியிட்டுச் செய்து கொடுக்கிறார்கள். "சங்கமிருப்பார்போல்" (22) என்ற வார்த்தையைக் கேட்டு, 'நீங்கள் அநந்யகதிகளென்பதை நப்பின்னைப் பிராட்டி பரிக்ரஹமாயிருந்து வைத்து' என்று திருவுள்ளம் புண்பட்டு, 'உங்களுக்குச் செய்யவேண்டுவதென்?' என்ன: "இங்ஙனம் குன்னுங்குநச்சியாகக் கேட்டருளவொண்ணாது; பேரோலக்கமாகவிருந்து நீ கேட்டருளுமாபோலே கேட்டருளவேணும்" என்கிறார்கள். புருஷகாரப் — B "பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை முன்னையமரர் முழுமுதலானே". அழகர் கிடாம்பியாச்சானை அருளப்பாடிட்டு, 'நீ ஒன்று சொல்' என்ன, 3. "அபராத ஸஹஸ்ரபாஜநம்" என்று தொடங்கி, 3. "அகதிம்" என்ன, 'நம் இராமாநுசனையுடையயாயிருந்துவைத்து அகதியென்னப்பெறாய்' என்று அருளிச்செய்தாராம். அநந்தாழ்வான், 3. "அமர்யாத:" என்கிற ச்லோகத்தை ஆளவந்தார் அருளிச்செய்தாரெனக்கேட்டு 'எனக்கது சொல்லவேண்டா' என்றான், அவர் ஸம்பந்தத்தாலே. 4. "வசஸா ஸாந்த்வயித்வைநம்" என்றருளி, 'ஸாபராதனன்றோ ஸாந்த்வநம் பண்ணுவான்' என்றருளிச்செய்தாப்போலே, 'நீங்கள் சொல்லிற்றெல்லாம் நம் குறையாலே வந்தது' என்றருளிச்செய்து, பெண்களை ஸாந்த்வநம் பண்ணியருளினான்.

வ்யா:— (மாரிமலை முழைஞ்சில்) பெருமாள் மால்யவானிலே எழுந்தருளியிருந்தாப்போலே வர்ஷம் பெய்து வழிகளெல்லாம் தூறெழுந்து ராஜாக்கள் படைவீட்டிலேயிருந்து வினையுண்டானாலும் புறப்படாதாப்போலே, ஸிம்ஹங்கள் கிரிகுஹரங்களிலே கிடந்துறங்கும் காலம்; விச்லேஷித்தார் கூடும் காலம்; கூடியிருந்தார் ஸம்போகரஸமநுபவிக்கும் காலமென்றுமாம். நீ எங்கள் வாசலிலே வர ப்ராப்தமாயிருக்க, நாங்கள் உன்வாசலிலே நிற்கும் காலமென்றுமாம். (மன்னி) ஆர்க்கு அஞ்சவேணுமிதுக்கு? மலைக்குவடுபோலே பொருந்தியிருக்கை. தன் பேடையோடே ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக்கிடக்கிறது என்றுமாம். இங்கு

A திருவாய் 9-2-3. B திருவாய் 1-7-8.

'நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்ப'னிறே (19). ஹார விசேஷம். 1. "ஸ்ரீஸ்தநாப₄ரணம்". இது முலை; அது மலை 2. "ஆஷாடே₄", (கிடந்துறங்கும் சீரிய சிங்கம்) ஒருத்தர் முடிசூட்டவேண்டாதே பிறப்பே ம்ருகேந்த்₃ரனுகையும். நிரங்குசவைப₄வமுண்டாகையும். 3. "ஸ மயா போ₃தித₄: ஸ்ரீமாந்" இத்யாதி₃'. 3. "பரந்தப:" — க்ஷுத்₃ர ம்ருக₃ங்கள் மண்ணுண்ணும்படியிருக்கை. 4. "அபி₄த: பாவகோபமம்" அநுகூலரான தம்பிக்குமகப்பட அணுகவொண்ணாத படியிருக்கை. (அறிவுற்று) பூ அலர்ந்தாற்போலே காலத்திலே உணருகை. ஸம்ஸாரிக்கு நித்₃ரை மேலிட தமஸ்ஸு அபி₄ப₄விக்கை. இவனுக்கு உறக்கம் வ்யதிரேகத்தில் ஆற்றுதார் வருமளவும். (தீவிழித்து) ப்ரக₃மாக்ஷிஸங்நிபாதத்திலே பேடைகளும் அருகு நிற்கவொண்ணாதென்கை.

(வேரி மயிர்பொங்க) உளைமயிர் சிலும்ப. (வேரி) ஜாத்யுசிதமான க₃ந்த₄ம். அவனுக்காகில் ஸர்வக₃ந்த₄ம். (எப்பாடும் பேர்ந்துதறி) ஒரு கார்யப்பாடில்லாமையாலே, நாலு பாடும் பேருகிறபடி. (உதறி) அவயவங்களைத் தனித்தனியே உதறினபடி. (மூரிநிமிர்ந்து) உடலொன்றாக நிமிர்ந்தபடி. (முழங்கி) மானுள்ளிட்ட ம்ருக₃ங்கள் முழுக்காயாக அவிந்து கிடக்கும்படி முழங்கி. (புறப்பட்டு) 'கி₃ரிகு₃ஹையில் நின்றும் இப்படி புறப்பட்டதொரு ஸிம்ஹம் புறப்பட்டுப்போருமா போலே போரவேணும்' என்ன, "பெண்காள்! நரஸிம்ஹம் போருமாபோலே போரவோ?" என்ன;—

(நீ பூவைப் பூவண்ணா) கா₃ம்பீ₄ர்யத்துக்கு ஒன்றைச் சொன்னோமாகில், நீ போருமாபோலே போரவேணுமென்கை. வடிவையும் நிறத்தையும் உன்னைப்போலே பண்ணவொண்ணுமோவென்கை. இவன் ஸிம்ஹத்தைப்போலே வருகையாகிற இது நாய்ச்சிமார் விழி விழிக்கையாயிருக்கை. (உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி) பிராட்டிபோடேயிறே கண்வளர்ந்தருளுவது; அவள் எங்களைத் தனித்தனியே நோக்கியருளும்படி அவள் திருக்கையை ஊன்றிக்கொண்டு திருப்பள்ளியறையில் நின்றும் பெரிய திருமண்டபம் புறப்பட்டருளவேணும். பிராட்டி மங்க₃ளாஸாஸநம் பண்ண, பெருமாள் புறப்பட்டருளினாற்போலே புறப்பட்டருள ஆசைப்படுகிறார்கள். 5. "பர்வதாதி₃வ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கி₃ரிகு₃ஹாஶய:। லக்ஷ்மணம் த்₃வாரி ஸோபஶ்யத் ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்தி₂தம் ॥". கண்வளர்ந்தருளுமழகு காணப் பெற்றோம்; இனி நடையழகும் இருப்பில் வேறுபாடும் கண்டு வாழவேணுமென்கிறார்கள். A 'தடங்கொள் தாமரைக் கண்விழித்து நீயெழுந்துன் தாமரை மங்கையும் நீயும் இடங்கொள் மூவுலகுந்தொழவிருந்தருளாய்'' என்கிறார்கள். இப்படியிருந்தருள வேணும். (போந்தருளி) 6. "சதுர்க்க₃தி"யிறே. 7. "க₃ஜஸிம்ஹக₃தீ வீரௌ ஶார்தூ₃லவ்ருஷபோ₄பமௌ। புண்ட₃ரீகவிஶாலாக்ஷௌ க₂ட்₃க₃தூணீத₄நுர்த₄ரௌ ॥"—நடையிலே ருஷப₄த்தின் செருக்குத் தோற்றியிருப்பது; மத்தக₃ஜத்தின் திமிர்ப்புத் தோற்றியிருப்பது; புலியினுடைய உறட்டுத் தோற்றியிருப்பது; ஸிம்ஹத்தினுடைய பராபி₄ப₄வநமும் தோற்றியிருப்பது. நமக்கிவையெல்லாம் நம்பெருமாள் நடையழகிலே காணலாமிறே. (கோப்புடைய) உப₄யவிபூ₄தியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை.

(சீரியசிங்காசனம்) ராஜாக்கள் இன்ன மண்டபத்திலே இன்ன ஆஸநத்திலே இருந்து நினைப்பிட்டதென்றால் அதையறியுமாபோலே. இங்கு 'கடற்கரையில்

A திருவாய் 9-2-3.

வார்த்தையும், திருத்தேர்த்தட்டில் வார்த்தையும்' என்னுமாபோலே ஸிம்ஹாஸநத்திலேயிருந்து நினைப்பிட்டதென்றால் பெண்களுக்குப் பொய் சொல்லும் க்ருஷ்ணனேயாகிலும் அமோகமாய்த் தவிரவொண்ணாதிருக்கை. தர்மாஸநம்போலே தர்மாதிபீடமிறே. சீரிய சிங்கத்துக்குத் தகுதியான ஆஸநம் — சீரிய சிங்காசநம் ஓரணுவாகிலும் க்ருஷ்ணனோடொத்த வரிசையைக்கொடுக்கவற்றான ஸிம்ஹாஸநமென்றுமாம். (யாம்வந்த காரியம்) இப்போது சொல்லார்கள். சிற்றம் சிறுகாலைக்கு (29) வைக்கிறார்கள். (ஆராய்ந்தருள்) "நீங்கள் என்பட்டிகோள்? என்செய்திகோள்?" என்கை. அதாகிறது— "பெண்களை எழுப்புவது, வாசல்காப்பானை எழுப்புவது, ஸ்ரீநந்தகோபருள்ளிட்டாரை எழுப்புவது, நம்மை எழுப்புவதாய்ப் போர வ்யஸநப்பட்டு வந்திகோளாகாதே" என்கை. ப்ரஜை கிணற்றில் விழுந்தால், தாயன்றோ நோக்காதே பரிவிட்டாளென்பர்கள். அவன் A எதிர்சூழல் புக்குத் திரிந்தால் இன்றிறே இவன் B "ஒழிவில் காலம்" என்பது. 23.

## ஸ்வாபதேசவ்யாக்யாநம்—இருபத்துமூன்றாம்பாட்டு

அவ:— இருபத்துமூன்றாம்பாட்டு. (மாரி இத்யாதி) இப்பாட்டில், 1. "வசஸா ஸாந்த்வயித்வைநம்" என்கிறபடியே "பெண்காள்! என்செய்திகோள்! என்பட்டிகோள்! பெண்களை எழுப்புவது, கோயில்காப்பான் முதலானாரை எழுப்புவது, நப்பின்னைப்பிராட்டியை எழுப்புவது, நம்மை எழுப்புவதாக பஹுஸ்ரமப்பட்டிகோளே. உங்களுக்கு நான் செய்யவேண்டுவது என்?" என்ன; 'பேரோலக்கமாய் ஸிம்ஹாஸனத்திலே இருந்து கேட்டருளவேணும்' என்கிறார்கள்.

வ்யா:— (மாரி இத்யாதி) வர்ஷாகாலத்தில் பர்வதகுஹையிலே பர்வதசிகரமென்னலாம்படி தன் பேடையோடே ஏகத்ரவ்யமென்னலாம்படி கிடந்து உறங்கும் அத்தசையிலும் க்ஷுத்ர ம்ருகங்கள் முழுக்காயாயவியலாம்படி பராபிபவநஸாமர்த்யத்தையுடைய ஸிம்ஹமானது காலமுணர்த்த உணர்ந்து ப்ரதமகடாக்ஷத்திலே தன் பேடைக்கும் அணுகவொண்ணாதபடி க்ரூரமாக விழித்து, ஜாத்யுசிதகந்தம் மயிர்க்கால்தோறும் அபிவ்ருத்தமாக நாலு பார்ஸ்வத்திலும் துல்யமாக எழுந்திருந்து, அவயவங்களைத் தனித்தனியே உதிர்த்து, முன்னும் பின்னும் ஏகரீதியாய் நீண்ட முதுகு உயரும்படி நிமிர்ந்து கர்ஜித்து குஹையில்நின்றும் வெளிப்பட்டு வருமாபோலே, நீயும் தம:ப்ரசுரமானகாலத்திலே வேதாந்தங்களில் அதில் ஏகதேசமென்னலாம்படி கிடந்து; பிராட்டியோடே ஏகவஸ்து என்னலாம்படி கிடந்து என்னவுமாம். யோகநித்ரை பண்ணுநிற்கிற வளவிலும் தமோவித்வம்ஸநசக்தியையுடைய நீ, 2. "காலே ஶம்ஸதி" என்கிறபடியே காலமுணர்த்த உணர்ந்து, பிராட்டிக்கும் அணுகவொண்ணாதபடி தீயதாகக் கடாக்ஷித்து 3. "ஸர்வகந்த:" என்கிற தன்னுடைய கந்தம் திருமேனியில் மயிர்க்கால்வழியேஎங்கும்பரிமளிக்கும்படி ஜகத்ஸ்ருஷ்டியிலே உத்யோகித்து, தன்னோடு அவிபக்தநாமரூபங்களாய் ஸ்வாவயவங்களான சேதநாசேதநங்களை விபக்தநாமரூபங்களாம்படி பண்ணி. இப்படி 'ஸ்வாவயவவிஸிஷ்டனான தான் தண்டாகாரமாய் நீண்டு, பிண்டாகாரமாய் நிமிர்ந்து, மஹாஸம்ப்ரமத்துடனே மஹதாதிரூபேண ப்ரக்ருதியில்நின்றும் வேறுபட்டு வருமாபோலே, பூவைப்பூவண்ணா!

A திருவாய் 2-7-6. B திருவாய் 3-3-1.

# இருபத்துநான்காம் பாட்டு

**அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி**
**சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி**
**பொன்றச் சகட முதைத்தாய் புகழ்போற்றி**
**கன்று குணிலா வெறிந்தாய் கழல்போற்றி**
**குன்று குடையா வெடுத்தாய் குணம்போற்றி**
**வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி**
**என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான்**
**இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்.**

பதவுரை :— அன்று — (இந்திரன் முதலானவர்கள் மஹாபலியினால் வருந்திய) அக்காலத்தில், இ உலகம் — இந்த உலகங்களை, அளந்தாய் — (இரண்டடிகளால்) அளந்தருளியவனே! அடி — (உன்னுடைய அந்தத்) திருவடிகள், போற்றி — பல்லாண்டு பல்லாண்டு வாழ்க; அங்கு — இராவணன் இருக்குமிடத்தில், சென்று — எழுந்தருளி, தென் இலங்கை — (அவன் நகராகிய) அழகிய இலங்கையை, செற்றாய் — அழித்தவனே! திறல் — (உன்னுடைய) பலம், போற்றி — பல்லாண்டு வாழ்க; சகடம் — சகடாசுரனானவன், பொன்ற — அழிந்துபோகும்படி, உதைத்தாய் — (அச்சகடத்தை) உதைத்தவனே! புகழ் — (உன்னுடைய) கீர்த்தியானது, போற்றி — நீடூழி வாழ்க; கன்று — கன்றாய் நின்ற வத்ஸாஸுரனை, குணிலா — எறிதடியாகக்கொண்டு, எறிந்தாய் — (விளங்கனியாய்நின்ற அஸுரன் மீது) எறிந்தருளியவனே! கழல் — (அப்போது மடக்கிநின்ற) உன் திருவடிகள், போற்றி — நீடூழி வாழ்க; குன்று — கோவர்த்தநமலையை, குடையா — குடையாக, எடுத்தாய் — தூக்கினவனே! குணம் — (ஸௌசீல்யம் முதலான உன்) குணங்கள், போற்றி—பல்லாண்டு விளங்கவேணும், வென்று—(எதிரிகளை) ஜயித்து, பகை கெடுக்கும்— அப்பகைவர்களை அழியச்செய்யும், நின் கையில் வேல் — உன் கையிலுள்ள வேல், போற்றி -- நீண்டநாள் வாழவேணும்; என்று என்று — என்று இப்படிப் பலதடவை மங்களாஸாஸனம் பண்ணிக்கொண்டு, உன் சேவகமே — உன்னுடைய வீர்யங்களையே, ஏத்தி — புகழ்ந்து, பறை கொள்வான் — பறைகொள்வதற்காக, யாம் — நாங்கள், இங்கு— இவ்விடத்திற்கு. வந்தோம்—வந்து சேர்ந்தோம்; இரங்கு—கிருபை புரியவேண்டும்.

---

ஸ்வா:- நீ. (உன்கோயில் நின்றுஇத்யாதி3) உன்னுடைய தி3வ்யாந்த:புரத்தினின்றும் தி3வ்யாஸ்த்தா2நமண்டபத்துக்கு எழுந்தருளி. (கோப்புடைய இத்யாதி3) ஏழுலலகும்தொழிலாக வகுப்புண்டதாய், நினைப்பிட்ட கார்யம் தலைக்கட்டும்படியான சீர்மையையுடைய ஸிம்ஹாஸனத்திலே எழுந்தருளியிருந்து, உனக்கு அநந்யார்ஹ ஶேஷபூ4தரான நாங்கள் வந்த கார்யத்தை விசாரித்து அருளவேணும்.

''ஸஞ்சரணயோக்3யமல்லாத ராத்ரி காலத்திலே அரண்மனையில் தி3வ்யாந்த:புரத்தில் நப்பின்னைப்பிராட்டியோடே ஏகதத்வமென்னலாம்படி படுக்கையிலே சாய்ந்து உறங்கும் அவ்விருப்பிலேதானே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படி வீர ஸ்ரீயை உடையனாய், காலமுணர்த்த உணர்ந்திருந்து அருகிருந்த நப்பின்னைப் பிராட்டிக்கும் அணுகவொண்ணாதபடி க்ரூரமாகத் திருக்கண்களை விழித்துத் திருமேனிக3ந்த4ம் மயிர்க்கால்வழியே பரிமளிக்க, நாலுபாடும் ஒக்க எழுந்திருந்து அவயவங்களைத் தனித்தனியே உதறி, நீண்டு நிமிர்ந்து ஸிம்ஹநாத3த்தைப் பண்ணி, பூவைப்பூவண்ணா? நீ இத்யாதி3'' ஆகவுமாம்.

## மூவாயிரப்படி—இருபத்துநாலாம் பாட்டு

அவ:— இருபதத்துநாலாம் பாட்டு. a தாங்கள் அபேக்ஷித்தபடியே செய்தருளக் கண்டு, வந்த கார்யத்தை மறந்து அத்திருப்பள்ளியறையில்நின்றும் தி3வ்ய-ஸிம்ஹாஸநத்தளவும் நடக்கிறபோதை நடையழகுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிருர்கள். b காணுமளவுமிறே "அதுவேணும் இதுவேணும்" என்பது; கண்டால் அவனுக்குப் பரியுமித்தனையிறே.

வ்யா:— c (அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி) d தன் விபூ4தியை மஹாப3லி அபஹரிக்க நோவுபட்டிருக்கிற அன்று; e தன்னைப்பிரிந்து நாங்கள் ஆர்த்தியாலே நோவுபட்ட இன்று. f ஜக3த்தை மஹாப3லியினுடைய அபி4மாநத்தினின்றும மீட்ட அன்று; g எங்களுடைய ஸ்த்ரீத்வாபி4மாநத்தினின்றும் மீட்ட இன்று. h நாட்டுக்கெல்லாம் தன் திருவடிகளை h2 தூ4ளிதா3நம் பண்ணின அன்று; i அழகையும் ஶீலத்தையும் எங்களுக்கு தூ4ளிதா3நம் பண்ணின இன்று-

---

பெ. அ. இருபத்துநாலாம்பாட்டு. (அன்று இத்யாதி3) a சீரியசிங்காசனத்து இருந்தபின்பு 'குற்றேவல்செய்கையாகிற அந்தரங்க3வ்ருத்தி கண்டருளவேணும்' என்று சொல்லவேண்டியிருக்க, "உன்சேவகமேயேத்திப் பறைகொள்ளுகைக்காக யாம்வந்தோம்" என்று மங்க3ளாஶாஸநமாகிற கார்யாந்தரத்தை இப்போது சொல்லுகை சேருமோவென்னும் ஶங்கையிலே, ஸிம்ஹாஸநத்தில் வந்தபின்பு சொல்லத்தக்க கார்யத்தை மறந்து இவனழகிலே ஈடுபட்டு, இதுவே தங்களுக்குக் கார்யமென்று தோற்றிச் சொல்லுகிருர்களென்று அவதாரிகை அருளிச்செய்கிருர் (தாங்கள் இத்யாதி3) b தங்கள் ப்ரயோஜநத்தை மறந்து திருப்பல்லாண்டு பாடக்கூடுமோவென்ன, — அருளிச்செய்கிருர் (காணுமளவும் இத்யாதி3)

c 'க்ருஷ்ணனை அநுப4விக்கிறவர்கள் த்ரிவிக்ரமாபதா3நத்தைச் சொல்லுவானென்?' என்ன; தங்களார்த்திக்கு உதவினது இந்த்3ரனுடைய ஆர்த்திக்கு உதவினும்போலே இருக்கிறதென்றத்தைப் பற்றவாதல், வஸ்த்வைக்யத்தாலேயாதல். c...i "இவ்வுலகமளந்தாய்" என்ற நிர்த்தே3ஶத்தாலேதானே பூ4தகாலம் தோன்றியிருக்க, "அன்று" என்றதுக்கு ப1ாவம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, "அன்று" என்ற பத3ம் இன்று என்றத்தையும் காட்டுகையாலே இவையிரண்டுக்கும் உண்டான ஆகாரத்தை மூன்றுவகையாகக் காட்டுகிருர் (தன் விபூ4தி இத்யாதி3 வாக்யஷட்கத்தாலே) h2 'தூ4ளிதா3நம்' என்றது-தூ4ளி பர்யந்ததா3நமென்றுய், ப3ஹூவாக ஜநங்களுக்கு வஸ்துக்களைக் கொடுக்கும்போது அதில்

---

சி. அ. இருபத்து நாலாம் பாட்டு. (அன்றிவ்வுலகம்) c 'க்ருஷ்ணனை அநுப4விக்கிறவர்கள் த்ரிவிக்ரமாபதா3நத்தைச் சொல்லுவானென்?' என்னில்: தங்களார்த்திக்குதவினது இந்த்3ரனுடைய ஆர்த்திக்குதவினுற்போலே இருக்கிறதைப் பற்றவாதல், வஸ்த்வைக்யத்தாலேயாதல். b தாங்கள் வந்த கார்யத்தை விட்டு மங்க3ளாஶாஸனம் பண்ணுகிறதென்? என்ன (காணுமளவுமிறேஇத்யாதி3) c அன்று-முன்பு. c...i 'அன்று' என்றது இன்றையும் காட்டுகையாலே. அன்றைக்கும் இன்றைக்குமுள்ள வாசியை முக2பே4தே3ந அருளிச்செய்கிருர் (தன்விபூ4தியை இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே)

j இதிரே ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் ஸ்ரீ வாமநனுக்கும் ஸாம்யம். k (இவ்வுலகமளந் தாய்) l பிராட்டிமார் பூத்தொடுமாபோலே கூசிப்பிடிக்கும் திருவடிகளைக் கொண்டு காடுமோடையும் அகப்பட அளப்பதே! என்கை, m அன்று எல்லே நடந்து மஹாப3லிபக்கல்நின்றும் பூ4மியை மீட்டுக்கொண்டாற்போலே நடையழகைக்காட்டி m3 விஶ்லேஷத்தினின்றும் மீட்டுக்கொண்டாயென்கை. n (அடிபோற்றி) o தாங்கள் சொல்லுமளவிற் புறப்பட்டு ஸுகுமாரமான திருவடிகளைக் கொண்டு உலாவியருளினபடி -- திருவுலகளந்தருளின o2 ஆயாஸம் போரும் என்று மங்க3ளாஶாஸநம் பண்ணுகிறார்கள். p திருவுலகளந்தருளுகிறபோது இரண்டடியிறே இட்டது; இப்போது எங்களுக்காகப் பத்தெட்டடி இடுவதே! q திருவுலகளந்தருளின அன்று, இந்த்3ரன் ப்ரயோஜநத்தைக் கொண்டுபோனான், மஹாப3லி ஔதா3ர்யம்பெற்றுப்போனான், தாங்கள் அன்று உதவப்பெறாத இழவு தீரத் திருப்பல்லாண்டுபாடுகிறார்களென்றுமாம். (அடிபோற்றி) r A "உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்னுமவர்களிறே.

---

பெ.அ. உதிர்ந்த ரேணுக்களையும்கூட உதறிக்கொடுக்கை என்றபடி. j க்ருஷ்ணன் ஸிம்ஹாஸநத்தேற எழுந்தருளும்போது த்ரிவிக்ரமாபதா3நத்தைச் சொல்லுகைக்கு நிமித்தம் அருளிச்செய்கிறார் (இதிரே இத்யாதி3) K, l "இ" என்றதுக்குப் பரிவுதோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிராட்டிமார் இத்யாதி3) c, m "அன்றிவ்வுலகமளந்தாய்" என்ற ஸமுதா3யத்துக்கு ஹார்த்த3ாபி4ப்ராயத்தை அருளிச்செய்கிறார் (அன்று எல்லே நடந்து இத்யாதி3) m2 (விஶ்லேஷத்தில்நின்றும் மீட்டுக்கொண்டாய்) என்றது உபலக்ஷணமாய், ஸ்த்ரீத்வாபி4மாநத்தினின்றும் மீட்டுக்கொண்டாயென்று கண்டுகொள்வது. உலகளக்கை என்கிற வ்யாஜத்தாலே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்தருளுகையாகிற தூ4ளிதா3நம் பண்ணினாற்போலே எங்களுக்கும் நடையழகை தூ4ளிதா3நம் பண்ணினாயென்று ப்ரீத்யநுஸந்தா4நமாகவும் தாத்பர்யம் கண்டுகொள்வது. இத்தால், 'அன்று' என்றதுக்குச் சொன்ன தாத்பர்யத்ரயாநுகுணமாக ஸமுதா3யத்துக்கு பா4வம் சொல்லிற்றாய்த்து. n, o ஸிம்ஹாஸநத்துக்கு எழுந்தருளுகிறபோது ஆயாஸப்ரஸக்தியின்றிக்கேயிருக்க, "அடிபோற்றி" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தாங்கள் இத்யாதி3) o2 (ஆயாஸம் போரும்) என்றது - ஆயாஸத்துக்குத் துல்யமென்றபடி. p மஹாப்ருதி2வியை அளக்கையும், இங்கு நாலடியிடுகையும் துல்யமாக ஆயாஸத்தையுண்டாக்குமோவென்னும் ஶங்கையிலே, அதிற்காட்டில் ஆதி4க்யமேசெல்லுமென்று கோபிமார்க்குக் கருத்தாகக் கீழ்ச்சொன்னத்தை த்3ருடீ4கரிக்கிறார் (திருவுலகளந்தருளுகிற இத்யாதி3) q கீழே க்ருஷ்ணனுக்கும் வாமநனுக்குமுள்ள ஸாம்யத்தாலே க்ருஷ்ணனுக்கு மங்க3ளாஶாஸநம்பண்ணினார்களாக ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, க்ருஷ்ணனுக்கும் ஸ்ரீவாமநனுக்குமுள்ள த4ர்மைக்யத்தாலேதானே அவ்வபதா3நத்துக்கு மங்க3ளாஶாஸநம்பண்ணுகிறார்களென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (திருவுலகளந்தருளினவன்று இத்யாதி3) r பத்தெட்டடியிட்ட மாத்ரத்திலேதானே காடுமோடையுமளந்த அபதா3நத்திலும் விஞ்சின ஆயாஸம் என்னக்கூடுமோ? என்ன; இவர்கள் செவ்வியைக்கண்டு அஞ்சும்படியான ப்ரேமத்தாலே சொல்லுகிறார்களென்னுமத்தை த்3ருஷ்

---

சி.அ. j (இதிரே) என்றது அழகும், ஶீலமும். k, l "உலகம்" என்ற அசேதனஸமாதி4க்குத் தாத்பர்யம் (பிராட்டிமார் இத்யாதி3) c "அன்றிவ்வுலகமளந்தாய் அடிபோற்றி" என்றது தம்மை அங்கீகரிக்கைக்காக ஸிம்ஹாஸனத்திலே எழுந்தருளும்போது இந்த்3ரனுக்காகத் திருவுலகளந்தாப்போலேயிருக்கிறதென்று த்3ருஷ்டாந்தமாதல், பூ4தகாலத்தில் அபதா3னமானது தனக்கே மங்க3ளாஶாஸனம் பண்ணுகிறார்களென்னுதல். p முந்தின அர்த்த2த்துக்குச்சேர அருளிச்செய்கிறார் (திருவுலகளந்தருளினபோது இத்யாதி3) அதாவது:- அத்தைப்பற்றவும் இது மிகவும் ஆயாஸமென்றபடி.

---

A திருப்பல் 1

s (சென்று இத்யாதி$_3$) t அழகுக்கு இலக்காகாதாரை அம்புக்கு இலக்காக்கினபடி. u (சென்றங்கு) v புலிகிடந்த தூற்றிலே செல்லுமாபோலே பிராட்டியைப் பிரித்த பையலிருந்தவிடத்தே செல்லுவதே! (சென்று) w வழிப்போக்கிலே க$_2$ரகப$_3$ந்த$_4$ விராத$_4$ாதி$_3$களை அழியச்செய்தபடி என்றுமாம். x (அங்கு) y நின்றவிடத்தே நின்று பூவலர்ந்தாற்போலே அநாயாஸேந அளந்தவளவன்றிக்கே, A "கானகம்படி உலாவி உலாவி" என்னுமாபோலே, கொடிய காட்டிலே அந்தத் திருவடிகளைக்கொண்டு நடப்பதே! என்கை. B "எவ்வாறு நடந்தனை" என்று வயிறு பிடிக்கை இவர்களுக்குக் குடிப்பிறப்பு. (தென்னிலங்கை) அழகியதான கோட்டையையும் அரணையும் உடைத்தாய், குளவிக்கூடுகொண்டாற்போலே ஹிம்ஸகர் சேர்ந்த தே$_3$ஶம். (செற்றாய்) ஆஶ்ரிதவிரோதி$_4$கள் தனக்கு ஶத்ருக்களென்கை. z (திறல்போற்றி) a மதிளுக்கு மதிளிடுமாபோலே மிடுக்குக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். b C "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்னுமவர்களாகையாலே, குடிப்பிறப்பாலே வந்தது. c D "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதும்" என்னுமவர்களிறே.

---

பெ. அ, டாந்தமுகே$_2$ந அருளிச்செய்கிறார் (உன் செவ்வடி இத்யாதி$_3$) s. t தன்னழகைக்காட்டி மஹாப$_3$லியை வஶீகரித்துச் செய்த அபக$_3$ாநத்துக்கு மங்க$_3$ளாஶாஸநம் பண்ணினவாறே அழகுக்கு இலக்காகாதார்விஷயத்தில் செய்த அபத$_3$ாநம் தோற்றிற்றென்று ஸங்க$_3$தியைக் காட்டுகிறார் (அழகுக்கு இத்யாதி$_3$) u, v "தென்னிலங்கை செற்றாய்" என்றபோதே அங்குச் செல்லுகை ஸித்$_3$த$_4$மாயிருக்க, "அங்குச்சென்று" என்றதுக்கு து$_3$ஷ்கரதை தோற்றத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (புலிஇத்யாதி$_3$) u, w அங்கு—லங்கையிலே, சென்று-கிட்டி என்று ஶப்$_2$த$_3$ார்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் அருளிச்செய்து, அங்குச்சென்று - லங்கையை உத்$_3$தே$_3$ஶித்து நடந்து என்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$மாய், அழித்துக்கொண்டுசென்று என்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (வழி இத்யாதி$_3$) x, y 'அங்கு' என்றது—பு$_3$த்$_3$தி$_4$ஸ்த$_2$வாசியாய், த$_3$ண்ட$_3$காரண்யத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நின்றவிடத்தே இத்யாதி$_3$) b 1. "அங்கு$_3$ள்யக்$_3$ரேண தாந் ஹந்யாம்" என்று பரிவரான மஹாராஜர் ப$_4$யம் தீரக்காட்டும்படியான மிடுக்குக்கு மங்க$_3$ளாஶாஸனம் பண்ணுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (மல்லாண்ட இத்யாதி$_3$) c அதீதகாலாபத$_3$ாநத்துக்குப் போற்றுகிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (இலங்கை இத்யாதி$_3$)

---

சி, அ, t அழகுக்கிலக்கானன் மஹாப$_3$லி; அதுக்கிலக்கன்றிக்கேயிருக்கிற ராவணனை அம்புக்கிலக்காக்கினான் என்றபடி. u, v, w "சென்று" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். w இரண்டாவது (வழிப்போக்கிலே இத்யாதி$_3$) அதாவது—செல்லுகிறபோதே க$_2$ராதி$_3$களை முடித்துக்கொண்டு சென்று லங்கையை அழித்தாய் என்றபடி. x, y "அங்கு" என்றதுக்குத் தாத்பர்யம் (நின்றவிடத்தே நின்று இத்யாதி$_3$) z திறல்-மிடுக்கு. z, a திறலுக்கு மங்க$_3$ளாஶாஸனம் பண்ணவேணுமோ? என்ன அருளிச்செய்கிறார் (மதிளுக்கு மதிளித்யாதி$_3$) b திறலுக்கு மங்க$_3$ளாஶாஸனம் பண்ணினபேருண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (மல்லாண்ட திண்டோள் இத்யாதி$_3$) c இலங்கை செற்றதுக்கு மங்க$_3$ளாஶாஸநம் பண்ணினவர்களுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (இலங்கை பாழாள்

---

A பெரியாழ் திரு 3-6-4. B பெரு திரு 9-2. C திருப்பல்-1. D திருப்பல்-3.

d (பொன்ற இத்யாதி3) e ராவணனைப்போலே விரோதி, என்று இருக்க வொண்ணாத அபாயம். f (பொன்ற) g மாரீசனைப்போலே g2 குற்றுயிராக்கி மேல் அநர்த்த2ம்விளைக்க வையாதே, முடிக்கப்பெற்றபடி. (புகழ்போற்றி) தாயுங்கூட உதவாத த3ஶையிலே அநாயாஸேந திருவடிகளாலே ஶகடாஸுரனை அழித்த புகழ். (போற்றி) h ராமாவதாரத்திற்காட்டில் மங்க3ளாஶாஸநம் பண்ணவேண்டி யிருக்கை; ராமாவதாரத்துக்கு, பிதா ஸம்ப3ராந்தகன்; ஊர் திருவயோத்4யை; புரோஹிதர் மந்த்ரவாதி3களான வஸிஷ்ட2ாதி3கள்; பிள்ளைகள் A ஆண்திறல் மீளிமொய்ம்பிலரக்கன்குலத்தைத் தடிந்தவர்கள்; 1, ''இச்ச2ாம:'' என்னும்படி தாங்கள் கு3ணவான்கள்; இங்கு, மாதாபிதாக்கள் ஸாது4, இடையர்: ஊர் இடைச்சேரி; கம்ஸாதி3கள் எதிரிகள்; ஸ்ரீ ப்3ருந்த3ாவநத்தில் முளைத்தெழும் பூண்டுகளடைய ராக்ஷஸர்கள், i தமையன் ஒருக்ஷணம் தப்பில், பாம்பின்வாயிலே விழும் தீம்பன்; பூதநாதி3களாலே பிறந்த அபாயங்களுக்கு ஓர் அவதி4யில்லை: ஆனபின்பு, இனி மங்க3ளாஶாஸநமொழியக் காவலில்லை.

j (கன்று இத்யாதி3) k ஶத்ருவையிட்டு ஶத்ருவை எறிந்தால் ஸங்கேதித்து வந்து இருவருமொக்க மேல்விழுந்தார்களாகில் என்செய்யக்கடவோம்! என்று வயிறுபிடிக்கிறார்கள்; l குஞ்சித்த திருவடிகளுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள். (கன்று m குணிலா) கன்றை n எறிதடியாக. குணில் - எறிதடி.

---

பெ. அ. d, e தென்னிலங்கை செற்றாற்போலே ஒருஶகடத்தை உதைத்தது து3ஷ்கரமோ? இதுக்கு மங்க3ளாஶாஸநம் பண்ணுகை என்? என்ன;— அருளிச்செய்கிறார் (ராவணன் இத்யாதி3) f, g ''பொன்ற'' என்றதுக்கு நஶிக்கவென்று ஶப்3த3ார்த்த2மாய், அத்தை வ்யாவர்த்ய பூர்வகமாக அருளிச்செய்கிறார் (மாரீசனை இத்யாதி3) g2 குற்றுயிர் – குறுகின உயிர்; அல்பப்ராணனென்றபடி. h ராமாவதார அபத3ாநத்துக்கு ஒருகால் மங்க3ளாஶாஸநம் பண்ணி, இது தொடங்கி மேலெல்லாம் க்ருஷ்ணாவதாரவ்ருத்தாந்தங்களைச் சொல்லிப் போற்றுகைக்கு நிமித்தத்தைப் பலபடியாக உபபாதி3க்கிறார் (ராமாவதாரத்தில் இத்யாதி3) i 2. ''ஏகத3ா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்3ருந்த3ாவநம் யயௌ'' என்று தொடங்கி 3. ''அ கி4ருஷ்ய பதிஷ்யாமிஹ்ரதே3஽ஸ்மிந் அநிலாஶிந:'' என்ற ப்ரமாணத்தைக் கடாக்ஷித்து காளியன்மடுவிலே விழுகையே பாம்பின் வாயிலே புகுருகையென்று அருளிச்செய்கிறார் (தமையன் இத்யாதி3)

j, k கன்றையெறிந்தால் இதுக்கு ''போற்றி'' என்னவேணுமோ? என்ன; அருளிச்செய்கிறார் (ஶத்ருவை இத்யாதி3) வத்ஸாஸுரனும் கபித்த2ாஸுரனும் ஶத்ருக்களென்று கருத்து. l ''எறிந்தாய் கழல்போற்றி'' என்னவேண்டியிருக்க, கழலுக்கு ப்ரஸக்தியேதென்ன; அருளிச்செய்கிறார் (குஞ்சித்த இத்யாதி3) இரண்டும் ப்ரஸக்தங்களாகிலும் அடிவிடாதவர்களாகையாலே கழலைப்போற்றினார்களென்று கருத்து.

---

சி. அ. இத்யாதி3) d பொன்ற – முடிய. g மாரீசனை விஶ்வாமித்ரயாக3த்திலே ஸமுத்3ரத்திலே போகட்டார்; அத்தைச் சொல்லுகிறது (மாரீசனை இத்யாதி3) l குஞ்சித்த – வளைத்த; எறியும்போது ஒரு ஸ்ரீபாத3மெடுத்து, ஒரு ஸ்ரீபாத3ம் குஞ்சிதமாயிருக்கும்; அத்தைச் சொல்லுகிறது (குஞ்சித்த திருவடிகள்) என்று. m, n குணில் — எறிதடி. o இந்த்3ரனையும் தலையறுத்துப்

---

A திருவாய் 7-6-9.

(குன்று இத்யாதி₃) இதுக்கு முன்பு இந்த்₃ரனுக்காகச் செய்த செயல். இப்போது அவன்தான் பகையானபடி. மலையைக் குடையாக எடுத்துப் பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்த ஆபத்தைப் போக்கினபடி. o அனுகூலன் ப்ரதிகூலித்தால், செய்யலாவதில்லையிறே. (குணம்போற்றி) பசிக்₃ராஹத்தாலே கையோயுந்தனையும் வர்ஷிக்க, மலையெடுத்துக்கொண்டு நின்ற ஆந்ருஶம்ஸ்ய கு₃ணத்திற்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிருர்கள்.

(வென்று பகைகெடுக்கும் இத்யாதி₃) p இவன்பக்கல் பரிவாலே, இவன் மிடுக்கைக்கண்டு கண்ணெச்சிற் படுவர் என்று பயப்பட்டு அத்தை விட்டு, 'இவ்வேலன்ரே இவ்யாபாரமெல்லாம் பண்ணிற்று' என்கிருர்கள். q A "மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன்" என்றிறே இவர்கள்படி. r சக்ரவர்த்தி விற்பிடிக்கப் பெருமாளும் விற்பிடித்தாற் போலே, "கூர்வேல்கொடுந்தொழிலன்"(1) என்னுமவர் மகனுகையாலே, வேலே ஆயுத₄ம். s (வென்று பகைகெடுக்கும்) t ஆஶ்ரிதவிரோதி₄களான ப்ரதிபக்ஷத்தை அறச்செய்து மாய்க்கை, (நின்கையில் வேல் போற்றி) வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்க. அதுக்கு மேலே வேலைப்பிடிப்பதே! என்று வேல்பிடித்த கைக்குத் திருப்பல்லாண்டு பாடுகிருர்கள். B "வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்று ஆயுத₄ங்களுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணினுரிறே தமப்பனர். u "க₃தே ஜலே ஸேதுப₃ந்த₄ம். தமப்பனுருக்கும் மகளுக்கும் பணி" என்று சீயர் அருளிச்செய்வர்.

---

பெ.அ o "அன்றிவ்வுலகமளந்தாய்" என்று தொடங்கி இவ்வளவும் - ஆஶ்ரித விரோதி₄களை வென்ற ப்ரகாரங்களைச் சொல்லி மங்க₃ளாஶாஸநம் பண்ணி, அவற்றைக் காட்டிலும் ஆஶ்ரிதனுனவன் பகைத்துவருகையாலே இவ்வபதா₃நத்துக்கு மிகவும் பரியவேணுமென்று தாத்பர்யத்தை அருளிச்செய்கிருர் (அநுகூலன் இத்யாதி₃) ஒருகால் தமோகு₃ணத்தால் ப்ரதிகூலித்தாலும் பொறுக்கவேணுமென்று கருத்து.

p இவ்வளவும் சொன்ன அபதா₃நங்களால் மிடுக்குத் தோற்றுகையால் அத்தை நினைத்துக் கண்ணெச்சில் வராமைக்காக, "இவ்வபதா₃நங்கள், இவன் மிடுக்காலல்ல, வேலாலே" என்று அந்யத்ர ஆரோபித்து. அதுவும் இவனதாகையாலே அதுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிருர்களென்கிருர் (இவன் பக்கல் இத்யாதி₃) s, t "பகையை - வென்று - கெடுக்கும்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி, வெல்லுகைக்கும் கெடுக்கைக்கும் அர்த்த₂ம் அருளிச்செய்கிருர் (ஆஶ்ரிதேத்யாதி₃)

---

சி.அ. பொகடாதே வைத்ததென்? என்ன அருளிச்செய்கிருர் (அநுகூலன் ப்ரதிகூலித்தால் இத்யாதி₃) p (இவன் பக்கல் பரிவாலே) என்ற பத₃த்துக்குத் தாத்பர்யம் — கீழெல்லாம் அவனுக்கு மங்க₃ளாஶாஸனம் பண்ணிக்கொடுவந்து இப்போது வேலுக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுவானென்? என்ன, இவனுடைய மிடுக்கைச் சொன்னுல், இப்படி ப₃லிஷ்ட₂னே? என்று பிறர் கேட்டால் த்₃ருஷ்டிதோ₃ஷமாமென்று 'இவன் ஒன்றும் செய்தானல்லன்; இவ்வேலே எல்லா வ்யாபாரங்களும் செய்தது' என்று அந்யத₂ாகரித்து அருளிச்செய்கிருர் என்றபடி. q அப்படி அந்யத₂ாகரித்த பேருண்டோ? என்ன (மிடுக்கிலாமையால் இத்யாதி₃) அதாவது A "கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்" என்கையாலே, அவனுடைய ப₃லத்தைச்சொல்லி A "மிடுக்கிலாமையால்" என்கையாலே அது அவனுடைய ஸ்வபா₄வமன்று; நம்முடைய ப₃லஹானியாலே அல்பவ்யவஹாரமும் அதி₄கமாகத் தோற்றுகிறதென்று மறைத்துச் சொன்னுளிறே" என்றபடி. r க்ருஷ்ணனுக்கு வேலுண்டோ? என்ன (சக்ரவர்த்தி விற்பிடிக்க இத்யாதி₃) u (க₃தே ஜலே ஸேதுப₃ந்த₄ம்) என்றது பூ₄தகாலங்களில் அபதா₃

---

A பெரியாழ் திரு 1-1-9, B திருப்பல் 2.

v (என்றென்று) w இதுதானே ப்ரயோஜநமென்கை. 1. "தே3ஹி மே த3த3ாமி தே" என்னுமவர்களன்றே. ஸம்ஸாரிகள் புறம்பும் கொள்ளுவர்கள், இவன் பக்கலிலும் கொள்ளுவர்கள்; இவர்கள் புறம்பும் கொள்ளார்கள், இவன் பக்கலிலும் கொள்ளார்கள். A "ஒன்று நூருயிரமாக் கொடுத்துப் பின்னுமாளுஞ் செய்வன்" என்று - அவனுக்கும் தான் கொடுத்து, "ஆந்தனையும் கைகாட்டி"(2) என்று புறம்பும் தானே கொடுக்கும் என்கை. (உன் சேவகமேயேத்திப் x பறை கொள்வான்) உன்னுடைய வீர சரிதமே ஏத்தி y உன்னை அனுப4விக்கைக்காக; B"உன்னுடைய விக்கிரமமொன்ருெழியாமலெல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி எழுதிக்கொண்டேன்" என்னுமவர்களிறே.

(இன்று) z இசைவுபிறந்த இன்று என்னுதல்; a நீ உறங்க நாங்கள் உறங்காத இன்று என்னுதல். b நென்னேற்று வந்தோமோ? ஊராக இசைந்த இன்று என்றுமாம். c (யாம்) d ப3ந்து4க்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள். (வந்தோம்) e வ்ருத்3தை4கள் உறங்க, நாங்கள் ஆற்ருமையாலே வந்தோம்; f எங்களிழவுகளெல்லாம் உன்னுலே தீரும். g (யாம் வந்தோம்) h எங்கள்வரவு உனக்குப் புண்ணுயிருக்க, நாங்கள் ஆற்ருமையாலே வந்தோம். i (இரங்கு) எல்லாம்பட்டாலும் அவனிரங்கினலல்லது கார்யகரமாகாமை. j அத்தலைக்கு இரங்குகை ஸ்வரூபம்; 'அவனுக்கு என்வருகிறதோ!' என்றிருக்கை-இத்தலைக்கு ஸ்வரூபம். k தாங்கள் பண்ணின மங்க3ளாஶாஸநம் ஸாத4நமன்று என்று இருக்கிருர்கள். 24,

பெ. அ. v, w "என்றுஎன்று" என்ற வீப்ஸைபாலே — இதுவே இவர்களுக்கு யாவதா3த்ம பா4வியென்று தோன்றுகையாலே, இதுக்குப் ப2லாந்தரமில்லை என்று தோன்றுகையால் ப2லித்த அர்த்த2த்தை அருளிச்செய்கிருர் (இதுதானே இத்யாதி3) x. y 'பறைகொள்வான்' என்றதுக்கு ஸ்வாபதே3ஶாநுகு3ணமாக ஶப்3தா3ர்த்த2ம் (உன்னையனுப4விக்கைக்காக) என்றது.

z ஸ்வாபதே3ஶத்திலே அருளிச்செய்கிருர் (இசைவுபிறந்த இத்யாதி3) b (நென்னேற்று வந்தோமோ?) என்றது—சே3ாபவ்ருத்3த4ர் ஸம்மதியாத நேற்று வந்தோமோ? என்றபடி. c, d, e, f, h "யாம்" என்றதுக்கு நாலு தாத்பர்யம் - நிலவறைகளிலே நலிவுபட்ட நாங்கள் என்றும், வ்ருத்3தை4களைப்போலேயன்றிக்கே ஆற்ருமை மிகுந்த நாங்கள் என்றும், விஶ்லேஷது3:க்க2ம் தீருகைக்கு உன் கைபார்த்திருந்த நாங்கள் என்றும், உன்னைப் புண்படுத்தும்படி வரவையுடைய நாங்கள் என்றும்; இவற்றை அடைவே அருளிச்செய்கிருர் (ப3ந்து4க்களாலே இத்யாதி3) 24.

அ. அ. னங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிகிறதுக்கு த்3ருஷ்டாந்தம். v, w வீப்ஸைக்குத் தாத்பர்யம்(இதுதானே ப்ரயோஜனமென்கை)என்று. a(நீ உறங்க நாங்கள் உறங்காத இன்று) என்றதுக்குத் தாத்பர்யம்—ரக்ஷகனை நீ உபேக்ஷித்திருக்க நாங்கள் ஸாபேக்ஷராய் வந்த இன்று என்றபடி. g, h "இன்றுயாம் வந்தோம்" என்கிற பத3ங்களுக்குத் தாத்பர்யாந்தரம் (எங்கள் வரவு இத்யாதி3) i, j கீழே "போற்றி போற்றி" என்றதெல்லாம் 'இரங்கு' என்றதுக்கு ஸாத4நம்போலே இருக்கிறதே என்ன (அத்தலைக்கு இத்யாதி3) k இதுக்கு விவரணம் (தாங்கள் பண்ணின இத்யாதி3). 24.

A நாச்-திரு 9-7, B பெரியாழ் திரு 5-4-6.

# ஆருயிரப்படி—இருபத்து நான்காம்பாட்டு

அவ:— இருபத்துநாலாம்பாட்டு. (அன்றிவ்வுலகம்) ஒருநாள் அர்ஜுநன் "உபயஸேநைக்கும் நடுவே தேரை நிறுத்து" என்று சொல்ல, அப்படியே செய்தவன், இத்தனை பெண்கள் திரண்டு "இங்ஙனே போந்தருளி" (23) என்றால் அது செய்யாதிருக்கமாட்டானிறே; தாங்கள் அபேக்ஷித்தபடியே திருப் பள்ளியறையில்நின்றும் திவ்ய ஸிம்ஹாஸநத்தளவும் நடந்துபோரத் தொடங் கினான்; பிராட்டி கட்டுவாசலளவுந் தொடர்ந்து மங்களாசாஸநம் பண்ணினாற் போலே, நப்பின்னைப் பிராட்டியும் தொடர்ந்து ஏத்துமிறே. அவனைக் காணு மளவுமிறே 'இங்ஙனே போரவேணும், எழுந்தருளியிருக்கவேணும், வந்த கார்ய மாராய்ந்தருளவேணும், அது வேணும், இது வேணும்' என்று பல தேவைகளைச் சொல்லி அலைக்கலாவது. தண்டகாரண்யத்தில் ரிஷிகள், கண்டவாறே ராக்ஷஸ பரிபவங்களை மறந்து மங்களாசாஸனத்திலே மண்டினார்களிறே; அப்படியே இவர்களும் பெரியாழ்வார் படியாயாய்த்து. இங்ஙனே போந்தருளுகிறபோது பின்னே நின்று நடந்த நடையழகு கண்டு மாறி இட்டஇட்டவடிதோறும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வந்து, திவ்ய ஸிம்ஹாஸநத்திலேயிருந்த வநந்தரம் "பறை என்று ஒரு வ்யாஜத்தையிட்டு இங்குத்தை மங்களங்களை ஆசாஸித்து மங்களாசாஸநமே பரமப்ரயோஜநமாக வந்தவர்களன்றோ நாங்கள்" என்கிறார்கள். "இங்ஙனே போந்தருளி" (23) என்று தாங்கள் சொலத் தங்களுக்காக நப்பின்னைப்பிராட்டியோடேகூட சீரிய சிங்காசனத்திலே யிருந்தவளவிலே ஆலவட்டக் காற்றிலே அத்தவாளத்தலை மேலேபறக்க, பாத பீடத்திலே நீட்டியருளின திருவடிகளையும் மடித்திட்ட திருவடிகளையுங்கண்டு, திருமுலைத் தடங்களிலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொண்டு, தங்கள் கரஸ்பர்சம் பொறாதே கன்றும்படியான மார்த்தவத்தைக்கண்டு, 'இப்படி ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு இங்ஙனே நடக்கச் சொல்லுவோமே! திருவடிகளை வாங்கியிடுகிறபோது திருவுலகளந்தருளினபடிக்கு ஸ்மாரகமாயிருந்தது; அன்று அளக்கப்பண்ணினவர்களோடொத்தோமிறே இன்று நடக்கப்பண்ணின நாங்களும்; A "நடந்தகால்கள் நொந்தவோ" என்றுபிடித்து நாங்கள் சொல்லுமளவில் புறப்பட்டு உலாவிட்டருளினபடி, திருவுலகளந்தருளின ஆயாஸத்தோபாதிபோருமே!' என்று — 'அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி' என்கிறார்கள்.

வ்யா:— (அன்றிவ்வுலகமளந்தாய் — இன்று யாம்வந்தோம்) அன்றுமின்று காணும் இவர்களுக்கு வயிற்றெரிச்சல். இவர்களுக்கு இரண்டு காலமும் ஒரு காலமாய்த் தோற்றுகையாலே, "அன்று, இன்று" என்கிறார்கள். (அன்று) ஆர் நோன்பு நோற்கத்தான் இச்செயல் செய்தது? நோற்றுக் கூடுவாரையும் விலக் குமவர்கள் தலையிலேயிறே திருவடிகளை வைக்கிறது. (அன்று) தன்னதான

---

A திருச்சந்த 61.

விபூ4தியை அஸுரனான மஹாபலி நெருக்கித் தன்னதாக்க, நோவுபட்ட அன்று; அவனபி4மாநத்தில்நின்றும் மீட்டுத் தன்காற்கிழே இட்டுக்கொண்ட அன்று: எங்கள் ப3ந்து4க்களும் எங்களை உன்னோடே சேர்க்கவொட்டாதே நாங்களும் ஆர்த்தைகளாய் அபி4மாநம் கால் கட்டி வாராதிருக்க, எங்களுடைய ஸ்த்ரீத்வாபி4மாநத்தையும் ப4க்3நமாக்கி உன்காற்கிழே இட்டுக்கொண்டு உன்வடிவழகையும் ஶீலத்தையும் எங்களுக்கு தூ4ளிதா3னம் பண்ணின அன்று.

(இவ்வுலகம்) திருவடிகளின் மார்த்த3வத்தையும், காடுமோடையுமான பூ4மியினுடைய காடி2ந்யத்தையும், இங்கு வர்த்திக்கிறவர்களுடைய வன்மையையும் அநுஸந்தி4த்து, ''இவ்வுலகம்'' என்கிறார்கள். ஶீலவயோவ்ருத்தாதி3களால் துல்யரென்று கவிபாட்டுண்டார் கடக்க நிற்கவேண்டும்படி வடிவுக்கு இணையில்லாத பெரியபிராட்டியாரும், எடுத்துக்கழிக்கைக்குமொப்பில்லாத ஸ்ரீபூ4மிப்பிராட்டியும், ''நாம் பிடிக்கை ஸாஹஸம்'' என்னும்படியாய், பூத்தொடுமாபோலே கூசிப் பிடிக்கும் மெல்லடிகளைக்கொண்டு இவ்வெவ்விய நிலத்திலே வ்யாபரிப்பதே! (அளந்தாய்) A ''பிரமாணித்தார் பெற்ற பேறு'' என்று — உபகாரஸ்ம்ருதி பண்ணாதவளவேயன்றிக்கே உகக்கவுமறியாத பூ4மியைத் திருவடிகளின் கிழே இட்டுக்கொள்வதே!

(அடிபோற்றி) 'அக்காலத்தில் சிலர் இழவோடே போனார்கள்; சிலர் B ''அப்பனறிந்திலன்'' என்று ஆணையிடத் தொடங்கினார்கள்; சிலர் ப்ரயோஜநங்கொண்டு போனார்கள்; அப்போது பரிந்து காப்பிட்டாரில்லை' என்கிற இழவு தீர்க்கிறார்கள் (அடிபோற்றி) C ''திசை வாழியெழ'' என்கிற அப்போதைப் பல்லாண்டிசைக்கை. D போற்றியென்றேற்றெழுவாரோபாதியிறே ப்ரயோஜநாந்தரபரராகையாலே. (அடிபோற்றி) E ''மன்னன்றன் தேவிமார்கண்டுமகிழ்வெய்த'' என்று — கூத்துக்கண்டு சிரிப்பாரைப்போலே F மாயக்கூத்துக்கண்டு மகிழ்ந்து போனார்கள். G ''செவ்வடிசெவ்வி திருக்காப்பு'' என்னும் குடிப்பிறப்பாலே ''அடிபோற்றி'' என்கிறார்கள். திருவுலகளந்தருளினவிடத்தில் H சிவந்த தன் கையனைத்துமார I ''சென்னி மேலேறக் கழுவினான்'' என்று ப்3ரஹ்மருத்3ராதி3கள் அநுவர்த்திக்கும்படி ஐஶ்வரமான செயல்களைச்செய்த அவதாரமாகையாலும், J ''அங்கேநின்று'' என்னும்படி நின்று, K இரண்டாமடியிலே தாவடியிட்டு வருத்தமறச்செய்ததாகையாலும் அத்தனைவயிறெரிதலில்லையிறே. ராமாவதாரத்தில் தே3வத்வம் கலசாதபடி ப்3ரஹ்மருத்3ரர்கள் ''நாராயணன்'' என்றாலும் மனிசுக்கு இசையுமிடமாகையாலும், L ''கானமருங்கல்லதர்போய்'' என்னும்படி து3ஷ்டஸத்வ பூ4யிஷ்ட2மான வெங்கானத்தூடே ஶஸ்த்ராஸ்த்ரங்கள்பட வ்யாபரித்த விடமாகையாலும் ராமாவதாரத்தில் செய்த செயலுக்கு வயிறெரிகிறார்கள்.

A இர-திருவ 61, B பெரியாழ் திரு 1-8-8, C திருவாய் 7-4-1 D திருவாய் 9-1-3 E பெரியாழ் திரு 2-5-9, F திருவாய் 8-5-1, G திருப்பல் 1, H இர-திருவ 78 I நான் திருவ 9, J திருவாய் 5-10-9, K பெரியாழ்திரு 2-10-7, L பெரியதிரு 11-5-9.

(சென்று) A ''இசையவோர் மூவடிவேண்டிச்சென்ற' என்று ஒருசெல்லுகை யுண்டிறே; அவ்விடம் அழகாலே நெஞ்சு உருக்கலாமிறே; அழகுக்கு இலக்காகாத B தீமனத்தரக்கரை அம்புக்கிலக்காக்கின பராபி₄ப₄வநஸாமர்த்₂யத்துக்குப் பரிகிறுர்கள். (சென்றங்கு) அங்கே சென்று, நின்றவிடத்திலே நின்று பூ அலர்ந்தாற்போலே இரண்டடியாக இடமாட்டாது, கொடிய காட்டிலே C பரற்பாய மெல்லடிக்கள் குருதி சோர நடப்பதே! என்று வயிறு பிடிக்கிறுர்கள். C ''எவ்வாறுநடந்தனை எம்மிராமா! ஓ!'' என்று சக்ரவர்த்தியுள்பட நின்று கூப்பிட்டான்.

(சென்றங்கு) புலிகிடந்த தூற்றிலே சென்று தட்டி எழுப்பிக் கொல்லு வாரைப்போலே, லங்கைக்கு அரணாகவைத்த க₂ரதூ₃ஷண கப₃ந்த₄விராத₄ாதி₃கள், ஜலது₃ர்க்க₃மாக வைத்த கடல், காடுகள், மலைகள் தொடக்கமானவையெல்லாம் நடவாநிற்கச் செய்தே மணல் கொட்டகம்போலே கால்கீழே அழித்துக்கொண்டு நடந்தபடியை நினைத்து (அங்கு-சென்று) என்கிறுர்கள். (தென்னிலங்கைசெற்ருய்) எல்லாவற்றிலும் ஊரரண் விஞ்சினபடியாலே D ''இலங்கைசெற்றவனே'' என்கிறது.

(திறல்) அரண்களொன்றும் வேண்டாதபடி எத்தனையேனும் தரமுடைய தே₃வஜாதி தந்தாமுடைய வருத்தங்களாலே ஸாதி₄த்த அஸ்த்ரங்களையெல்லாம் ஒருமிடருக நின்று ஒருகாலே ஓரிலக்காக விட்டால் அவர்களுக்குத் தப்பவொண்ணு தென்றுவிட, நாலடி பிற்காலித்துவிடாதே நெஞ்சுகலங்காதே நிலையும் பேராதே மஹிஷிகளுந் தானும்கூட ஜலக்ரீடை₃ பண்ணும்போது அவர்கள் பூவையிட்டுத் தன்மேலே எறிந்தால் பிறக்கும் விகாரம் பிறவாதபடி இருக்குமவன், 'நான் கடவேன்' என்று நோக்குகிற ஊராய், அழகிதான அரணையுடைத்தாய், குளவிக்கூடு கொண்டாற்போலே ஹிம்ஸகரடையத் திரண்ட நிலமாயிருந்த லங்கையை, அரண் சிதற அடைமதிள்படுத்தி, சதுரங்க₃ப₃லத்தையும் துவளவென்று, E சேனைத் தொகையைச்சாடி ப்₄ராத்ருபுத்ராதி₃களைத் தலையழித்து, தான்சிலரை ஆஶ்ரயித்துக் கதிர் பொறுக்கிக் கூடினவையல்லாத அம்புகளைக்கொண்டு, இடியேறுண்டிடச் சுற்றும் வேமாபோலே, பையலைப் பக்கவேரறுத்து, நெஞ்சழிந்து நிலைதள்ளும்படிபண்ணி, ஸத்தையழிந்து பட்டுவிழும்போதும் வில்பிடித்தபிடி நெகிழாதே விழக்கடவ அவனை, எதிரி வீரமறியாதே கோழையாய்ப்பட்டானென்று தரக்கேடனுகாதே ''வீரன்'' என்று விருதுபிடிக்கும்படிவில்லைப் பொகடுவித்து, ஸ்த்ரீப்ராயனுக்கிக்கொன்று வென்றி கொண்ட பராபி₄ப₄வநஸாமர்த்₂யத்தையெல்லாம் நினைத்து ''திறல்'' என்கிறுர்கள். (திறல்போற்றி) B ''தீமனத்தரக்கர்திறலழித்தவனே'' என்று-இம்மிடுக்குத் தங்கள் து₃:க்க₂நிவ்ருத்திக்கு உடலன்றிக்கே அரணுக்கு அரணிடுவாரைப்போலே திறலுக்குப் பரிகிறுர்கள், F ''இலங்கை பாழாளாகப்படைபொருதானுக்கு'' என்று-பரியுமது

---

A திருவிருத்தம் 91. B பெரியதிரு 4-3-5. C பெரு-திரு 9-5, 2. D திருவாய் 2-4-4. E பெரியதிரு 6-5-3. F திருப்பல் 3.

ஐந்மலித்₃த₃மிறே. A உலகமளந்த பொன்னடிக்குக் காப்பிட்டவோபாதி B காடுறைந்த பொன்னடிக்குக் காப்பிடத் தேடுகிறவர்களுக்கு அஞ்சாமைக்குத் திறலைக்காட்டினான்; அத்திறல்தனக்கும் அஞ்சத்தொடங்கினார்கள். தோளிலழகுக்கு காப்பிடப்புக, மல்லடர்த்த திண்மையைக்காட்ட, அதுதனக்கு வயிறெரிந்தாற்போலே. (திறல்போற்றி) C ''கல்லாதவரிலங்கை கட்டழித்த'' D ''தேவனே தேவனாவான்'' என்று மண்டோதரியுள்ளிட்டாரைப்போலே தத்வநிர்ணயம் பண்ணுதல், E ''தன்வில் அங்கை வைத்தான்'' F ''எந்தன் தனிச்சரண்'' G ''கூரம்பனல்லால்'' H ''மற்றிலேன் தஞ்சமாகவே'' என்று ரக்ஷகத்வபு₃த்₃தி₄நடத்தல், I ''தென்னிலங்கையீடழித்த தேவர்க்கு'' J ''என்னையும் உளள் என்மின்கள்'' என்று பே₄ாக்₃யதாபு₃த்₃தி₄ நடையாடி இழவுசொல்லிவிடுதல் செய்யாதே தங்களை ரக்ஷகராக நினைத்துப் பரிகிறார்கள். சக்ரவர்த்தித்திருமகன் த₃ஶரத₂னிலும் விஞ்சும்படி பா₃ல்யாவஸ்தை₂யிலே ஆயுத₄ஶ்ரமம்பண்ணி விஶ்வாமித்ராதி₃களோடே ஶஸ்த்ராஸ்த்ரமந்த்ரங்கள் ஶிக்ஷித்துச் சமையவளர்ந்தபின்பு செய்த செயலிறே லங்கையை அழித்த செயல்.

K ''பிறந்த எழுதிங்களில்'' என்கிறபடியே - பிறந்து மறுபத்துக்கழிந்த வளவிலே எதிரிகளுண்டென்று அறிகைக்குடலான ஜ்ஞானமுமின்றிக்கே, ஆயுத₄ம் பிடிக்கவுமறியாத தொட்டில் பருவத்தில் செய்த செயலிறே ஶகடப₄ங்க₃ம். ராவணன் நேரே ஶத்ருவாய்த் தோற்றினானிறே; அப்படியன்றிக்கே ப்ரச்ச₂ந்நஶத்ருவாகையாலே ''கள்ளச்சகடம்'' (6) என்றத்தை அறிந்து முற்பட்டபடிக்கு வயிறெரிந்து பரிகிறார்கள். (பொன்றச்சகட முதைத்தாய்) ஶகடம் பொன்ற-முடிய. ஶூர்ப்பணகை₂யையும் மாரீசனையும்போலே குற்றுயிரோடே விட்டு, பின்பு அநர்த்த₂ம்விளையும்படி இளிம்புபடாதே, தோற்றரவிலே ஶகடாஸுரனை முடித்துவிட்டபடி. (உதைத்தாய்) முலைவரவு தாழ்த்துத் தொட்டிலை உதைத்த திருவடிகளுக்கு இலக்காய் முடியும்படி பண்ணின அநாயாஸம். (உதைத்தாய்) பெருமாள்கைக்கு வில்பிடித்த தழும்பு போலே க்ருஷ்ணன் திருவடிகளுக்குச் L சாடுதைத்த தழும்பு; M ''தழும்பிருந்த''.

(புகழ்) பெற்ற தாயுங்கூட உதவாத ஸமயத்திலே, பெரும்படையாண்டு செய்த செயல்களைக் காற்கூறுக்கிவிட்டபடி, N ''திருக்காலாண்ட பெருமானே'' என்கிறபடியே. (புகழ்போற்றி) O ''நின்சிறுச் சேவகமும்'' என்று. *காரைமூரிருகிக் கன்னிப்போருக்குக் காப்பிடவேணுமிறே. P ''அருளின் பெருநசையால்'' என்று ஆண் பிள்ளையென்று ஆசைப்படுவார், Q ''என்னை நிறைகொண்டான்'' என்று அடக்கங் கெட்டு மடலெடுக்கத் தேடுவார், R ''உறக்கில் நிமிர்த்தீர்'' என்று ஊடுதலாய்ப் போனார்கள் பெண்கள்; இவர்கள் அச்செயலுக்கு வயிறெரிந்து பரிகிறார்கள்.

---

A பெரிய திரு 5-8-9. B பெரியதிரு 11-5-1. C நான்-திருவ 53. D திருமாலை-7. E முதல் திருவ 59. F பெரியதிரு 3-10-6. G நான்-திருவ. H திருவாய் 3-6-8. I பெரியதிரு 11-3-1. J திருவாய் 6-1-10. K பெரியதிரு 10-7-9. L முதல் திருவ 100. M முதல் திருவ 23. N. திருவாய் 6-9-4. O திருவாய் 5-10-3. P திருவாய் 2-1-8. Q திருவாய் 5-3-3. R பெரியதிரு 10-8-3. *(பா) காலை முரித்திருகின.

"பசலைத்தனத்தில்செய்த செயல் என்று விடலாம் அது; பருவம் நிரப்பிச் செய்தசெயலோதான் கணக்குவழக்குப் பட்டிருக்கிறது?" என்று அதுக்குவயிறெரிகிறார்கள. (கன்று குணிலாவெறிந்தாய்) ஶகடாஸுர நிரஸநம் பண்ணின வயிறெரித்தல் அல்லகிடாய்; கன்றாய் நின்ற அஸுரனைக்கொன்ற தீம்பு பூ₄மியெல்லாம் ப்ரகாசிக்கும்படி செய்தாயென்று வயிறெரியும் செயலிறே. A "வழக்கன்றுகண்டாய் வலி சகடஞ்செற்றாய் - குழக்கன்றுதீவிளவின் காய்க்கெறிந்த தீமைதிருமாலே பார்விளங்கச் செய்தாய்பழி" — மார்பிலிருக்கிறவர்களோடு மண்ணில் கிடக்கிறவர்களோடு வாசியற "பழிகேடன்" என்று சொல்லும்படியிறே செய்த தீம்பும்; ஶகடாஸுரப₄ங்க₃ம் பண்ணிச்செய்த தீம்பு. B [திரிகாற்சகடம் சினமழித்துக் கன்றால் விளங்காயெறிந்தான்] "ஓரஸுரன் விளாவாய் நிற்க, ஓரஸுரன் கன்றாய் நிற்க, ஶத்ருவையிட்டு ஶத்ருவை எறிந்தால் ஸங்கேதித்து இருவருமொக்க மேல்விழுந்தார்களாகில் என் படக்கடவோம" என்று வயிறுபிடிக்கிறார்கள், C "என்றுமென்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனமாவர்கள்" என்று தாயாருட்பட வயிறுபிடிக்குமதிறே. (குணில்) எறிகருவி, (குணிலாவெறிந்தாய்) எதிரிகளையிட்டு எதிரிகளை முடித்தபடி.

(கழல்போற்றி) விளாவை இலக்காகக்குறித்துக் கன்றை எறிகருவியாகக் கொண்டு எறிவதாக இச்சி₂த்து நடந்தபோதைக் குஞ்சித்த திருவடிகளில் வீரக்கழலையும் அகவாயில் சிவப்பையுங்கண்டு காப்பிடுகிறார்கள். (கழல்போற்றி) D "கன்றினால் விழ்த்தவனே" என்று ப₄க்திபண்ணுதல், E "காயுதிர்த்தார்தாள்பணிந்தோம்" என்று - விரோதி₄ நிவர்த்தகமாகப் பற்றுதல், F "கனைகழல்காண்பதற்கு" என்று - யமவஶ்யதைக்கு நிவர்த்தகமென்றிருத்தல் செய்யாதே மங்கு₃ளாஶாஸனம் பண்ணுகிறார்கள். (அடிபோற்றி, கழல்போற்றி) நீட்டினதிருவ₄களுக்கும் குஞ்சித்த திருவடிகளுக்கும் G சூழ்ந்திருந்து பரிவாரைப்போலே பரிகிறார்கள்.

"விரோதி₄நிரஸநம் பண்ணித் தன்னை நோக்குகைக்கு அடைவுகெட்டிருந்தால் அநுகூலர் விரோதி₄களாக ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணுமதோ சால அடைவுண்டாயிருக்கிறது?" என்று அதுக்குப் பரிகிறார்கள் — (குன்று குடையாவெடுத்தாய்) விரோதி₄களுக்குக் கன்றெடுத்த மாத்ரம்போலேகாணும் கன்று நோக்குகைக்குக் குன்றெடுத்தது. H "கன்றுகொண்டு விளங்கனியெறிந்து ஆனிரைக்கழிவென்று மாமழை நின்று காத்துகந்தான்" என்னக்கடவதிறே. கீழெல்லாம் இந்த்₃ரனுக்கு ஶத்ருவானவர்கள் நலிந்த நலிவு பரிஹரித்தபடிக்கு வயிறெரிந்தார்கள்; இப்போது அவன்றான் நலிந்த நலிவு பரிஹரித்தபடிக்கு வயிறெரிகிறார்கள். அஸுரர்களோடு தே₃வர்களோடு வாசியில்லையிறே ப₄க₃வச்சே₂ஷமான வஸ்துவைத் தங்களதாக நினைத்திருக்கைக்கு. ஸர்வயஜ்ஞபோ₄க்தாவாகத் தன்னை அருளிச்செய்தானே. தனக்கிட்டசோற்றை அமுது செய்தால் ஸ்வதந்த்ரபு₃த்₃தி₄பண்ணி, பண்டு பூ₄ஜித்தவிடமுள்பட ஆத்மாபஹாரத்தோடொவ்வாநிற்க, ததீ₃யபு₃த்₃தி₄ பண்ணாதே ஸ்வதந்த்ரபு₃த்₃தி₄பண்ணி நலியத் தேட மலையைக்குடையாகவெடுத்து, பசுக்களுக்கும் இடையருக்கும் வந்த ஆபத்தைப் பரிஹரித்தபடி.

---

A இர-திருவ 19. B பெரியதிரு 8-6-9. C பெரியாழ் திரு 3-3-7. D இர-திருவ 100. E பெரியதிருவ 54. F முதல்திருவ 87. G திருப்பல் 12. H பெரியதிரு 9-10-7.

(குணம்) ''அநுகூலனானவனுக்கு ப்ராமாதிகமாகப் புகுந்ததன்றே? அநந்தரத்திலே வந்து கோவிந்தாபிஷேகம் பண்ணவன்றோ புகுகிறான்; பெரும்பசியாலே வந்த கோபத்தாலே வர்ஷித்தானாகில் கைநொந்தவாறே விடுகிறான், பெரும்பசியிலே இவனை நலிந்தால் நாமே உண்பதுகொண்டார் உயிர்கொண்டு தலைநய அறுக்கவோ? அவன் கைசலிக்குந்தனையும் கடகிட்டுக்காப்போம்'' என்று அவனைத் தலையழியாதே மலையையெடுத்து ரக்ஷித்தது ஆந்ருஶம்ஸ்யத்தாலே. அந்த குணத்துக்குப் போற்றி, A ''பாயும் பனிமறுத்தபண்பாளா'' B ''சீர்கற்பன்வைகல்'' என்று அறிவுடையார் நாள்தோறும் கற்பதொரு குணமிறே. (குணம்போற்றி) C கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமழிந்ததோ வாடிற்றோ என்று பார்த்துப் பரியத்தேட, அவ்வளவு போகவொட்டிற்றில்லை மலையெடுத்த குணந்தான். (குணம் போற்றி) D ''என்றனக்கோர் துணையாளனாகாயே'' என்று நொய்யதொருமலையைப் பொகடுவித்து, கனவிது இரண்டு மலையைக் கையிலே கொடாதே மலையையெடுத்த க்ஷமாகுணத்துக்குக் காப்பிடுகிறார்கள்.

வர்ஷம் விட்டவாறே மலையைப்பொகட்டு வேலைப்பிடிக்குமித்தனையிறே. க்ருஷ்ணன் பசுக்களின்பின்னே திரியாநின்றால் ஸிம்ஹம் வந்தாலும் வேலாலே குத்தியெடுத்துப் போக்குமித்தனையிறே. அதுக்கெடுத்த வேலுக்குப் பரிகிறார்கள். ''எல்லா குணங்களையும் ஒருவ்யக்தியிலே சொன்னால் கண்ணேறாம்'' என்று வேலிலே அசலிட்டுச் சொல்லுகிறார்கள் வெற்றியை. (வென்று பகைகெடுக்கும்) ஶத்ருக்களை வென்று ஓட்டக்கடவதாயிருக்கும். (நின்கையில்வேல்) சக்ரவர்த்தியும் வில்பிடித்து, பரிகரமும் வில்பிடித்து, பிள்ளைகளும் வில்பிடித்தாற்போலே, ஸ்ரீநந்தகோபரும் இடையரும் பிள்ளைகளும் வேல்பிடித்தாய்த்துத் திரிவது. ''கூர்வேல் கொடுந்தொழிலன்'' (1) E ''வேலைப்பிடித்தென்னைமார்கள்''. (நின்கையில்வேல்) வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டியிருக்க, அவ்வழகுக்குமேலே வேலைப்பிடித்த அழகு. (கையில்வேல்) எதிரிகள்மேலே படவேண்டா, பிடித்தபிடியிலே உகவாதாரை முடிக்கும். (நின்கையில்வேல்) தன்னை உணராதே அஸத்யப்ரதிஜ்ஞனாய்ச் சீறின போது காணும் ஐந்மாந்தரம் மேலிட்டுத் திருவாழியை எடுப்பது. (வேல்போற்றி) ஈஶ்வரனைக்காணிலிறே F ''ஆழியும்பல்லாண்டு'' என்பது. பெருமாளைக்காணிலிறே G ''சார்ங்கமென்னும் வில்லாண்டான் தன்னை-பல்லாண்டு'' என்பது. (நின் கையில்வேல் போற்றி) H வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த வேள்முதலாக வென்றவன் கையில்வேலிறே; ஆகையாலே பரிகிறார்கள். (என்றென்று) ப்ரயோஜநம் பெறுமளவுஞ்சொல்லி பின்னை அது மாறுகிறதன்றே; ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநம் வேணுமோ? என்று இதுதானே பலமாக இருக்குமவர்களிறே.

---

A முதல்-திருவ 86, B திருவாய் 1-8-4, C பெரியாழ் திரு 3-5-10, D பெரியதிரு 3-6-5
E நாச் திரு 3-5, F திருப்பல் 2, G திருப்பல் 12, H திருநெடு 7.

(என்றென்று) A ''பல்லாண்டு'' என்றால் பின்னையும் A ''பல்லாண்டு'' என்னுமித்தனையிறே; போற்றியென்று ப்ரேமமடியாக வந்த கலக்கத்துக்குத் தெளிவுண்டாகிலிறே இச்சொல்லு மாறுவது; அங்குப்போனாலும் B சூழ்ந்திருந்திறே. C ''வெம்மாவிளந் தான்றன்னைப்போற்றி'' என்னக்கடவதிறே. ''அடிபோற்றி, திறல் போற்றி, புகழ்போற்றி, கழல்போற்றி, குணம்போற்றி, வேல்போற்றி'' என்று இவர்கள் நாக்குக்கு இடும் ஷட்₃ரஸமிருக்கிறபடி. (உன்சேவகம்) வீர கு₃ணத்துக்குப்போலே காணும் இவர்கள் தோற்பது. ப₃ந்து₄நிரோத₄த்தாலே தளர்ந்த அப₃லைகளுக்கு அவனுடைய விஜயமிறே ப₃லஹேது. (என்றென்றுன் சேவகம்) D ''உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாமலெல்லாம்'' என்னும்படியே. (உன்சேவகமே யேத்தி) வேறொருவருடைய சேவகம் கலந்தேத்தோம், திரிவிக்கிரமனையும் பெருமாளையும் கலந்தன்றோ ஏத்திற்று. அது அவதாராந்தரத்தின் செயலென்றிருக்கிறார்கள். இவன் பா₃ல்யத்தில் செய்ததோபாதி பூர்வாவஸ்தை₂யும்என்றிருப்பர்கள். E ''சிலையொன்றிறுத்தாய்திரிவிக்கிரமா திருவாயர்பாடிப்பிரானே'' F ''வருகவருகவருகவிங்கே வாமனநம்பீவருக இங்கே கரியகுழல் செய்யவாய் முகத்துக் காகுத்தநம்பீ வருகவிங்கே'' என்றுதாயாருட்பட க்ருஷ்ணனையழைப்பது இப்படியேயிறே. இவனுக்கு நாள் ஸ்ரீவாமனன்பிறந்தநாளாக்கினாள்; எட்டுமாஸம் வயிற்றிலேயிருந்த இவனை G ''பன்னிரு திங்கள் வயிற்றில்கொண்ட'' என்றாள். ''என்மகன் பா₃ல்யத்தை மஹாப₃லி பக்கலில் சென்று கேட்டுக்கொள்'' என்றாள்; H ''சார்ங்கபாணி தளர்நடை நடவானோ'' என்றாள்; I ''மாணிக்குறளனே தாலேலோ வையமளந்தானே'' என்று தாலாட்டினாள்; இவர்கள் ''ஓங்கி யுலகளந்த'' (3) என்றார்கள்; ''சார்ங்கமுதைத்த'' (4) என்றார்கள்; அநந்தரம் ''ஆயர்குலத்தினில் தோன்றும்'' (5) என்றார்கள்; ''போற்றப்பறை தரும் புண்ணியன்'' (10) என்றார்கள்; எழுப்புகிறபோது ''உலகளந்த உம்பர் கோமானே'' (17) என்றார்கள்; அவன்தான் பிறந்தபோதே ''மூன்றுபிறவியுண்டே உங்களுக்குப் பிறக்கிறது'' என்றான்! 'வில்பிடித்தாரில் சக்ரவர்த்திபிள்ளை நான்' என்றான்; ஆகையாலே அவதாராந்தரம் என்றிருப்பாரொருவருமில்லை. (ஏத்திப் பறைகொள்வான்) எங்கள் ப₂லம் முன்னாக நாட்டார் ப₂லம் பெறுவதாக. ப₂லம்—ஏத்துகை; பின்பு அபி₄மதம் ஊரார் ஸம்ருத்₃தி₄; உத்₃தே₃ஶ்யப₂லமும் ஆநுஷங்கிகப₂லமும்.

(இன்று) இசைவுபிறந்த இன்று. நென்னேற்று வந்தோமோ? நாளைக்கு இங்கே நிற்கவொட்டுவர்களோ? (யாம்) பெருமிடுக்கரான வ்ருத்₃தை₄களெல்லாங் கிடந்துறங்க. குளிர் பொறாத பா₃லைகளான நாங்கள். (வந்தோம்) நீ வர ப்ராப்தமாயிருக்க விரஹதௌர்ப₃ல்யத்தாலே ஆற்றாமை இழுக்க வந்தோம். (யாம்வந்தோம்) நாங்களும் எங்களை அறியாமற் செய்தோம்; நீயும் உன்னை அறியாமற் செய்வதுண்டாய்த்திறே. (இரங்கு) எல்லா வ்யஸநங்கள் பட்டாலும் கீழ் ப்ரவர்த்தித்ததெல்லாம் பேற்றுக்குடலன்று, அவனிரக்கமே கார்யகரமாவது. அவனுக்கென் வருகிறதோ! என்று இரங்கி மங்க₃ளாஶாஸநம் பண்ணுகை இவர்களுக்கு ஸ்வரூபம்; இத்தலைக்கு இரங்குகை அவனுக்கு ஸ்வரூபம்.

A திருப்பல் 1, B திருப்பல் 12, C திருவாய் 4-5-1, D பெரியாழ் திரு 5-4-6
E பெரியாழ் திரு 2-3-7, F பெரியாழ் திரு 2-9-2, G பெரியாழ் திரு 3-2-8
H பெரியாழ் திரு 1-7-1, I பெரியாழ் திரு 1-7-1.

(வந்தோம் இரங்கு) இரங்காமைக்கு வேண்டுவது செய்தோமேயாகிலும் இரங்கவேணும். 'இத்தலையில் பரப₄க்தியும் பேற்றுக்குடலன்று; அவனுடைய இரக்கமே அவ்யவஹிதோபாயம்' என்றிருக்கிறார்கள். (அன்றிவ்வுலகமளந்தாய்—இன்று யாம்வந்தோம்) நீ எங்களைத் தேடி A எல்லாவுலகும் தடவந்தாய் அன்று; இன்று உன்னைத்தேடி நாங்கள் வந்தோம். (யாம் வந்தோம்) B வையந்தாய மலரடிக்கீழ் முந்திவந்து நீ நிற்க நாங்கள் பெற்றோம்; (அளந்தாய், தென்னிலங்கை செற்றாய், சகடமுதைத்தாய். யாம் வந்தோம்) C "மண்ணளந்த கண் பெரிய செவ்வாயெங்காரேறுவாரானால்" D "காகுத்தன்வாரானால்" E "கண்ணனும்வாரானால்" என்றிருந்த உன்னுடைய ப்ரத₄ாநமஹிஷிகளில் எங்களுக்குண்டான வாசிபாராய். (அன்றிவ்வுலகமளந்தாய, இரங்கு) F உவந்த வுள்ளத்தனாய் எங்களோடணைந்திலையாகிலும் ஸத்தாப்ரயுக்தமான க்ருபையையாகிலும் பண்ணு. (அளந்தாய்—இரங்கு) G "நீரேற்றளந்த நெடிய பிரானருளாவிடுமே" என்றன்றோ நாங்களிருப்பது. (தென்னிலங்கை செற்றாய் — இரங்கு) சிறிது தாழ்க்கில் H "இரக்கமெழிர்" என்று உன்னை வசைபாடுவர்கள் கிடாய் என்று தாய்கள் சொல்லுமளவேயோ. I "இரக்கமேல் ஒன்றுமிலாதாய்" என்று நாங்கள்தான் சொல்லோமோ? (சகடமுதைத்தாய்—இரங்கு) J உருளுஞ்சகடமுதைத்த பெருமானாருளின் பெருநசையாலன்றோ நாங்கள் வந்தது. (குன்றுகுடையாவெடுத்தாய் — இரங்கு) K "குன்று குடையாக ஆகாத்த கோவலனார் ஒன்றுமிரங்கார்" என்னுமே இரங்கு. 24.

## ஈராயிரப்படி — இருபத்துநாலாம் பாட்டு

அவ: இருபத்துநாலாம்பாட்டு. — நப்பின்னைப் பிராட்டியோடேகூடி திவ்யஸிம்ஹாஸநத்திலேயிருந்த இருப்பிலே சாத்தியருளின அத்தவாளந்தலைமேலே பறக்க, திருவடிகளைக் கண்டு, அத்திருவடிகளைத் திருமுலைத்தடங்களிலும், திருக்கண்களிலும் ஒற்றிக்கொண்டு L "உன்சேவடி செவ்விதிருக்காப்பு—நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்கிறார்கள்.

வ்யா: (அன்றிவ்வுலகமித்யாதி₃) இவ்வழகிய திருவடிகளைக் கொண்டே காடும் மலையும் அளந்துகொண்டது? M மலர்மகள் பிடிக்கும் மெல்லடியிறே. (அடிபோற்றி) L "உன் சேவடி செவ்வி திருக்காப்பு". (சென்றங்குத் தென்னிலங்கையித்யாதி₃) பிராட்டியைப் பிரித்த ராவணனிருந்தவிடத்தே நடந்து கொல்லுவதே! புலியிருந்த தூற்றிலே சென்று கொல்லுமாபோலே. N "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்குப் பல்லாண்டு" என்றவர் மகளிறே. (பொன்றச்சகடமுதைத்தாய்) ஒருத்தரோடும் விசாரியாதே முடித்தபடி. மாரீசனைப் போலே குற்றுயிராக்கி மேலே அனர்த்த₂த்தை விளைக்க வையாதே முடித்தபடி. (புகழ்போற்றி) ஸ்ரீப்₃ருந்த₃ாவனத்தில் முளைத்த பூண்டகப்பட ராக்ஷஸராகை

A திருவாய்6-9-6. B திருவாய் 8-5-7. C திருவாய் 5-4-4. D ஷை 5-4-3. E ஷை 5-4-2. F அமல 2. G திருவிருத்தம்-69. H திருவாய் 2-4-3. I நாச் திரு 3-4. J திருவாய் 2-1-8. K பெரிய திருவ 74. L திருப்பல் 1, 2. M திருவாய் 9-2-10. N திருப்பல் 3.

(வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி) ஒரு வ்யக்தியிலே எல்லா அபதாநங்களையும் சொன்னால் த்ருஷ்டிதோஷமாம் என்று பிடித்து வேலுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள். சக்ரவர்த்தி வில்பிடிக்க, பிள்ளைகள் வில்பிடித்தாற்போலே; "கூர்வேல்கொடுந்தொழிலன்"(1) மகனிறே. பசுக்களின் பின்பே திரியாநின்றால் ஸிம்ஹம் வராநின்றாலும் வேலாலே குத்திப் பொகட்டுப்போமத்தனை. (நின் கையில் வேல் போற்றி) வெறும் புறமே ஆலத்திவழிக்க வேண்டியிருக்க, அவ்வழகுக்கு மேல் வில்லைப்பிடித்த அழகு; A "வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு".

(என்றென்று) ப்ரயோஜநம் பெறுமளவும் சொல்லி, பின்னை 1. "தேஹி மே ததாமி தே" என்னுமவர்களன்று; இதுதானே ப்ரயோஜநமாயிருக்கும். ஸம்ஸாரிகள் புறம்பும் கொள்ளுவர்கள்; அவன்பக்கலிலும் கொள்ளுவர்கள். இவள் புறம்பும் கொள்ளாள்; இவன் பக்கலிலும் கொள்ளாள். B "ஒன்று நூறாயிரமாக் கொடுத்து", "ஆந்தனையும் கைகாட்டி"(2)புறம்புத்தைக்கும் தானே கொடுக்குமித்தனை. (உன் சேவகமே ஏத்தி) C "உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாமல் எல்லாம் என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழியெழுதிக் கொண்டேன்" என்னுமவர் மகளிறே.

(இன்று) இசைவு பிறந்த இன்று. நீயுறங்க, நாங்கள் உறங்காதேயிருந்த இன்று. வ்ருத்தைகளுறங்க நாங்கள் வந்தோம். "நென்னேற்று வந்தோமோ? ஊராரிசைந்த இன்று வந்தோம்" என்றுமாம். (யாம்) பந்துக்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள். (யாம் வந்தோம்) "நீ வர ப்ராப்தமாயிருக்க, எங்களாற்றாமையாலே வந்தோம்" என்றுமாம். (வந்தோம்) எங்களாற்றாமையால் வந்த இழவெல்லாம் தீர வந்தோம். (இரங்கு) எல்லாம் பட்டுவந்தாலும் அவனிரங்கியல்லது கார்யமாகாது. வ்யபிசாரமில்லாத உபாயமிதுவே என்கை. இத்தலைக்கு இரங்குகை அவனுக்கு ஸ்வரூபம். 'அவனுக்கு என்வருகிறதோ' என்று இரங்குகை இத்தலைக்கு ஸ்வரூபம். 24.

## ஸ்வாபதேஶவ்யாக்யாநம் — இருபத்து நாலாம்பாட்டு

அவ:— இருபத்துநான்காம்பாட்டு. (அன்று இத்யாதி) இப்பாட்டில் — இவர்கள் ப்ரார்த்தித்தபடியே அவன் திருப்பள்ளியறையில் நின்றும் திவ்யாஸ்தாநமண்டபத்துக்கு எழுந்தருள, அந்நடையழகிலே ஈடுபட்டு, வந்த கார்யத்தை மறந்து மங்களாஶாஸநம் பண்ணுகிறார்கள்.

வ்யா:— (அன்று இத்யாதி) ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமான அஹங்காரம் ஜகத்தை ஆக்ரமித்த அன்று, அஹங்கார க்ரஸ்தமான இந்த லோகத்தை அஹங்காரத்தினின்றும் மீட்டுத் தன் திருவடிகளாலே அளந்து தனக்காக்கிக் கொண்டவனே! உன் திருவடிகளுக்கு மங்களாஶாஸநம். (சென்று அங்கு இத்யாதி) இந்த லோகத்தை அஹங்காரத்தினின்றும் மீட்டவளவன்றிக்கே, அந்த அஹங்காரத்துக்குப் பிறப்பிடமான இடத்தே சென்று துர்தர்ஶநீயமான ப்ரக்ருதி ஸம்பந்த நிர்வாஹகமான அஹங்காரத்தை அழித்தவனே! உன்னுடைய பராபி

A திருப்பல் 2. B நாச்-திரு 9-7. C பெரியாழ்-திரு 5-4-6.

## இருபத்தைந்தாம் பாட்டு

ஒருத்தி மகனாய்ப் பிறந்தோ ரிரவில்
ஒருத்தி மகனா யொளித்து வளரத்
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே யுன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமுஞ் சேவகமும் யாம்பாடி
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

பதவுரை:— ஒருத்தி—தேவகிப்பிராட்டியாகிற ஒருத்திக்கு, மகன் ஆய்—பிள்ளையாய், பிறந்து—தோன்றி, ஓர் இரவில்—(அவதரித்த அந்த) ஒப்பற்ற இரவிலேயே, ஒருத்தி—யசோதைப்பிராட்டியாகிய ஒருத்தியுடைய, மகன் ஆய்—பிள்ளையாக ஆகி, ஒளித்து வளர—ஒளிந்திருந்து வளரும் காலத்தில், தான்—(கம்ஸனாகிற) தானே, தரிக்கிலான் ஆகி—(ஒளிந்து வளருவதையும்) பொறுக்கமாட்டாதவனாய், தீங்கு நினைந்த—(இவனைக் கொல்ல வேணும் என்னும்) தீச்செயலை நினைத்த, கஞ்சன்—கம்ஸனுடைய, கருத்தை—எண்ணத்தை, பிழைப்பித்து—வீணாக்கி, (கஞ்சன்) வயிற்றில்—அக்கம்ஸனுடைய வயிற்றில், நெருப்பு

---

ஸ்வா:- பு4வநஸாமர்த்2யத்துக்குப் பல்லாண்டு. (பொன்றச்சகடம் இத்யாதி3) காம க்ரோத4ங்களை ஸ்வரூபேண நஶிக்கும்படி உன் திருவடிகளாலே உதைத்தவனே! உன்னுடைய யஶஸ்ஸுக்குப் பல்லாண்டு. (கன்று குணில் இத்யாதி3) லோப4த்தைஎறிதடியாக எறிந்து (மோஹத்தை)? நஶிப்பித்தவனே! உன்னுடைய குஞ்சிதமான திருவடிகளுக்குப் பல்லாண்டு. இவ்வளவில் ப்ரதிகூலர் விஷயத்தில் செய்யும் அம்ஶத்தைச் சொல்லிற்று: இனி அநுகூலர் ப்ரதிகூலித்தால் செய்யும் அம்ஶத்தைச் சொல்லுகிறது—(குன்று இத்யாதி3) இந்த்3ரன் ஶிலாவர்ஷம் வர்ஷித்தபோது பர்வதத்தைக் குடையாகக்கொண்டு கோ3கோ3பரக்ஷணம் பண்ணினாற்போலே, அஜ்ஞாந கார்யமான அஹங்காரம் இவ்வதி4காரிக்கு விஷயப்ராவண்யத்தை உண்டாக்குவதற்கு ப்ரதிக்ரியையாக வைதி3கமாய்க் கைங்கர்யரூபமான விஷயப்ராவண்யத்தை உண்டாக்கி, ஸ்வப்ரபந்நஜந ரக்ஷகனாம்படியைச் சொல்லுகிறது. ஆக, இப்படி ஆஶ்ரிதரக்ஷகனானவனே! உன்னுடைய ஶீலகு3ணத்துக்குப் பல்லாண்டு. (வென்று பகை கெடுக்கும் இத்யாதி3) அஹங்காரத்தை ஜயித்து தத்2விஷய வைமுக்2யத்தை மாற்றும் நின்திருக்கையில் திருவாழியாழ்வானுக்குப் பல்லாண்டு. (என்று என்று இத்யாதி3) இப்படிப் பல்லாண்டு பாடுகையே யாத்ரையாய், உன்னுடைய வீரசரிதத்தையேத்திப் புருஷார்த்த2த்தை லபி4க்கைக்காக ஸத்வம் தலையெடுத்த இன்று உன்னை பார்த்திருக்கும் நாங்கள் வந்தோம்; நீ க்ருபை செய்தருளவேணும். ''ஏத்திப் பறைகொள்வான்'' என்கிற இடத்தில், ஏத்துகைக்கு அநந்தரம் புருஷார்த்த2லாப4மாகையாலும், ஏத்தாதபோது புருஷார்த்த2லாப4ம் இல்லாமையாலும் ஏத்துகையே புருஷார்த்த2மென்கிறது. ''இரங்கு'' என்று க்ருபையே ஸாத4நமென்கையாலே, ''வந்தோம்'' என்று - ருசிகார்யத்தைச் சொல்லுகிறது.

என்ன நின்ற — 'நெருப்பு' என்னும்படி நின்ற, நெடுமாலே — ஸர்வாதிகனே! உன்னை — உன்னிடத்தில், அருத்தித்து வந்தோம்—(எங்களுக்கு வேண்டியவற்றை) யாசித்துக்கொண்டு வந்தோம்; பறை தருதி ஆகில் — எங்களுடைய விருப்பதை நிறைவேற்றுவாயாகில், திருத்தக்க செல்வமும் — பிராட்டியும் ஆசைப்படத்தக்க (உன்) செல்வத்தையும், சேவகமும் — வீர்ய குணத்தையும், யாம் பாடி — நாங்கள் பாடி, வருத்தமும் தீர்ந்து — (உன்னைப் பிரிந்து படும்) துக்கமும் நீங்கி, மகிழ்ந்து — மகிழ்ந்திடுவோம்.

---

## மூவாயிரப்படி — இருபத்தைந்தாம் பாட்டு

அவ:— இருபத்தைந்தாம் பாட்டு. a 'உங்களுக்கு வேண்டுவது என்?' என்ன, ''ஏதேனும் ப்ரதிபந்தகம் $a_2$ உண்டேயாகிலும், நீயேபோக்கி எங்கள் துக்கமெல்லாம் கெட விஷயீகரிக்கவேணும்'' என்கிறார்கள்.

வ்யா:— b (ஒருத்தி) c 1. ''அந்த:ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' என்கிறபடியே $c_2$ ஸர்வலோகங்களுக்கும் நியாமகனானவனையுங்கூட $c_3$ நியமிக்குமவளாகையாலே நாட்டில் தனக்கு ஒப்பற்றிருக்குமவள். (ஒருத்தி மகனாய்) d 2. ''பூதாநாம் யோऽவ்யய: பிதா'' என்று ஸர்வலோகங்களுக்கும் பிதாவானவன் ஒருத்திமகனாவதே! e சக்ரவர்த்தி தபஸ்ஸுபண்ணி மாணிக்கம் போலே நாலுபிள்ளைகளைப் பெற்றாற்போலே $e_2$ நால்வருங்கூடித் தபஸ்ஸு பண்ணி ஒரு மகனைப் பெற்றபடி. f (மகனாய்ப்பிறந்து) g பிறந்தபோதே

---

பெ. அ. இருபத்தைந்தாம்பாட்டு. (ஒருத்தி இத்யாதி) a ''கஞ்சன் வயிற்றில் நெருப்பென்னநின்ற'' என்றத்தையும், ''வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து'' என்றத்தையும் கடாக்ஷித்து ''மாரிமலை முழைஞ்சில்'' என்கிறபாட்டோடே ஸங்கதிதோன்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் (உங்களுக்கு இத்யாதி) (உங்களுக்கு வேண்டுவதென்னென்ன) என்றது — ''யாம் வந்தகாரியமாராய்ந்தருள்' (23) என்று தாங்கள் ப்ரார்த்தித்ததை மறந்து மங்களாஶாஸனத்திலே மூண்டு இதுக்காக வந்தோமென்றார்களென்று ஸர்வஜ்ஞனானவன் நினைத்திருக்கையாலே, நீங்கள் வந்த காரியமென்னென்று கேட்டானென்கை. $a_2$ (உண்டேயாகிலும்) என்றது—பகவத்விஷயத்திலொழியவே ப்ரதிபந்தகங்களெல்லாம் ''தீயினில் தூசாகும்''(5) என்றிருக்குமவர்களாகையாலே என்று கருத்து.

$c_2$ அத்விதீயையானவளென்று விவக்ஷித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி) $c_3$ (நியமிக்குமவளாகையாலே) என்றது — 3 ''உபஸம்ஹர ஸர்வாத்மந்'' 2. ''பூதாநாம் யோऽவ்யய: பிதா'' என்று நியமிக்கையைப்பற்ற. d ''ஒருத்திக்குப்பிறந்து'' என்னலாயிருக்க, ''மகனாய்'' என்றத்தாலே—மகனாகத்தக்கவனல்லாதவன் மகனானென்று தோன்றுகையால் வந்த ஈடுபாட்டைக்காட்டுகிறார் (பூதாநாம் இத்யாதி) e எல்லார்க்கும்பிதாவானவன் மகனாகைக்கு ஹேதுவென்? என்ன, அருளிச்செய்கிறார் (சக்ரவர்த்தி இத்யாதி) f, g, h, i ''மகனாய்'' என்றதுக்கு—மகன் செய்யும் கார்யம்செய்துகொண்டு பிறந்தானென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பிறந்தபோதே இத்யாதி

---

**சி. அ.** இருபத்தஞ்சாம்பாட்டு. (ஒருத்தி) b, c, d, ''ஒருத்தி'' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்; அல்பத்திலேயாதல்; அதிகத்திலேயாதல். f ஆய்-பரதந்த்ரனாய். e ''ஒருத்திமகனாய்ப் பிறந்து ஒருத்திமகனாய் ஒளித்து வளர'' என்கையாலே, நால்வரையும் சொல்லுகிறது; இத்தால் க்ருஷ்ணனுக்கு அதிஶயம் சொல்லிற்றாய்த்து. f, g ''மகனாய்ப் பிறந்து'' என்றதற்குக்

சொல்லிற்றுச் செய்கை. h சக்ரவர்த்தித்திருமகன் பக்வனன பின்பு பித்ருவசந பரிபாலநம் பண்ணினான்: i இவன் பிறந்தபோதே 1. ''உபஸம்ஹர ஸர்வாத்மந்'' என்று சொல்ல, ஆழ்வார்களையும் தோள்களையும் மறைத்தானிறே. j (பிறந்து) k கர்மவஶ்யர் படுவதெல்லாம் க்ருபாவஶ்யனாய்க்கொண்டு பட்டபடி. l (பிறந்து) m ஆவிர்ப்ப4விக்கலாகாதோ? n பத்து மாஸம் வயிற்றிலே இருப்பார்களாகில், பன்னிரண்டு மாஸம் வயிற்றிலேயிருந்து பிறக்கவேணுமோ? o A ''பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட'' இறே. p 2. ''தே3வகீ பூர்வஸந்த்4யாயாமாவிர்ப் பூ4தம் மஹாத்மநா'' என்று — 'பிறந்தானென்கை அவத்3யம்' என்று பரிஹ ரித்தான் ரிஷி; q அதுதான் அவத்3யமென்று 'பிறந்தான்' என்கிறார்கள். r நம்முடைய கர்மம் நம்மோடே அவனை ஸஜாதீயனாக்கும்; s அவனுடைய க்ருபை நம்மை அவனோடே ஸஜாதீயமாக்கும்; t 3. ''பரமம் ஸாம்யமுபைதி'' என்னக் கடவதிறே. u ''அவன்பிறவி u2 நமக்கென்று கோல, நம்பிறவி அவன் மாதாபிதாக்கள் காலில் விலங்குபட்டது படும். v நம் பிறவி— நம்மையும் அவனையும் அகற்றுகைக்கு உடலாயிருக்கும்; w அவன் பிறவி இருவரும் அணுகுகைக்கு உடலாயிருக்கும்.

---

பெ. அ. வாக்யத்ரயத்தாலே) j, k''அவதரித்து'' என்னாதே, ''பிறந்து'' என்றத்துக்கு உட் கருத்தை அருளிச்செய்கிறார் (கர்மவஶ்யர் இத்யாதி3) l,m,n,o ''மகனாய்'' என்றத்தாலே பிறப்பு அர்த்த2ஸித்3த4மாயிருக்கவும், ''பிறந்து'' என்று விஶேஷித்தது, லோகத்தார் பிறவியிலும் வ்யா வ்ருத்தமென்று தோற்ற என்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆவிர்ப்ப4விக்கல் இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே) p, q ரிஷி 2. ''ஆவிர்ப்பூ4தம்'' என்று சொல்லியிருக்க, இவர்கள் ''பிறந்து'' என்னக் கூடுமோ? என்ன, அருளிச்செய்கிறார் (தே3வகீ இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) q (அதுதான் அவத்3யம்) என்றது—ஸௌஶீல்யாதி3 களுக்கு அது பூர்த்திகரமல்லாமையாலே என்று கருத்து. r பிறப்புக்குக் கர்மம் அடியாகை யாலே அதில்லாதவனுக்குப் பிறப்பு சொல்லக்கூடுமோ? என்னும் ஶங்கையைப் பரிஹரி யாநின்றுகொண்டு ஸௌஶீல்யம் தோற்றும்படியை உபபாதி3க்கிறார் (நம்முடைய இத்யாதி3) நம்முடைய கர்மத்தாலே நாம் ஸம்ஸரிக்கையாலே நம்மை எடுக்கைக்காக அவன் ஸஜா தீயனாய் வந்து பிறந்து புரையறக் கலக்கையாலே ஸௌஶீல்யம் விளங்குமென்று கருத்து. s, t இதுக்கு த்3ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார் (அவனுடைய இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) u 'நம்மோடு ஸஜாதீயனாய்ப் பிறந்தானாகில், அத்தாலே அவனெடுக்கும்படி எங்ஙனே?' என்ன, 4. ''ஜந்ம கர்ம ச'' இத்யாதி3 வசநத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் (அவன் பிறவி இத்யாதி3) u2 (நமக்கென்றுகோல) என்றது—நமக்காக வந்தானென்று அறிய என்ற படி. v, w உக்தார்த்த2த்தை வைத4ர்ம்யத்3ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறார் (நம்பிறவி இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே)

---

ஸி. அ. தாத்பர்யம் (பிறந்தபோதே இத்யாதி3) h, i அவன் செய்ததென்? என்ன அருளிச் செய் கிறார் (சக்ரவர்த்தித்திருமகனரித்யாதி3) p,q 2. ''ஆவிர்ப்பூ4தம்'' என்னாநிற்க ''பிறந்து'' என்ன லாமோ? என்ன, அருளிச்செய்கிறார் (தே3வகீ இத்யாதி3) r,s ''அவனுடைய பிறவிக்கும் நம்முடைய

---

A பெரியாழ் திரு 3-2-8.

x (ஓரிரவில்) y அவ்விரவிலே யசோதைப்பிராட்டிக்கும் $y_2$ பிள்ளையாக வேண்டுகையாலே திருவாய்ப்பாடியிலே புக்கு. z நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாப்போலே, கம்ஸாதி3கள் தண்மை ஸூதிகாக்3ருஹத்திலே ஓரிராத் தங்கவொட்டிற்றில்லை என்கை. (ஓரிரவு) a அவ்விரவை ஒக்கும் இரவு முன்பும் இல்லை, பின்பும் இல்லை. (ஓரிரவில்) b காலக்ருதபரிணாமமில்லாத தே3ஶத்தில் வஸ்து காலாதீ4நமான தே3ஶத்திலே பிறப்பதே! c அவர்கள் தங்களோபாதியும் பெற்றிலனென்கை. d (ஒருத்திமகனாய்) e ஒருத்தி ''இவனை மகனாகப் பெறவேணும்'' என்று ஆஶ்ரயிக்க, அவளுக்கு அவதாரரஸத்தைக் கொடுத்து, இவளுக்கு லீலாரஸத்தை அநுப4விப்பித்தபடி; ஓரவதாரத்திலே யாத3வஸஜாதீயனுமாய் கோ3பஜாதீயனுமானபடி; 1. ''அம்ஶாவதாரோ ப்3ரஹ்மர்ஷே யோSயம் யது3குலோத்3ப4வ:'' என்ற ரிஷிதானே, 2. ''கோ3பாலோ யாத3வம் வம்ஶம் மக்3நமப்4யுத்3த4ரிஷ்யதி'' என்றானிறே. f (மகனாய்) g பிறப்பில் புரையில்லாதாப்போலே, இவள் மகனானவிடத்திலும் புரையற்றிருக்கை. h (ஒளித்து வளர) i கம்ஸனுடைய விஷத்3ருஷ்டி படாமே வளர்ந்தபடி.

---

பெ. அ. x.y ஓரிரவிலே—ஒருத்திமகனாய்ப் பிறந்து ஆய்ப்பாடியிலேபுக்கு, ஒருத்தி மகனாய் என்று அந்வயாத்4யாஹாரங்களைத் திருவுள்ளம்பற்றி, அவ்விரவில் தானே அங்குப்போகைக்கு ஹேதுவைக்காட்டாநின்றுகொண்டு, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்விரவிலே இத்யாதி3) $y_2$ (பிள்ளையாகவேண்டுகையாலே) என்றது—அவ்விரவில்தானே பிள்ளையாக வேண்டும்படி தபஸ்ஸைப்பண்ணுகையாலே என்றபடி. z திருவாய்ப்பாடியில் புகுகைக்கு யஶோதா3தி3களுடைய பா4க்3யத்தை ஹேதுவாகக் கீழ் அருளிச்செய்து, கம்ஸாதி3களுடைய தௌ3ர்பா4க்3யம் ஹேதுவென்று அருளிச்செய்கிறார் (நாய் இத்யாதி3) a, b, c ''ஓர்'' என்றத்துக்கு — ஏகத்வஸங்க்2யாபரமாகக் கீழ் அருளிச்செய்து, அத்3விதீயத்வவிவக்ஷயா அவதார ஹேதுவாகையாலே அதிஶ்லாக்4யமென்றும், பிறந்தவிடத்திலிருக்கவொட்டாதபடியாலே அதிக்ரூரமானதென்றும், இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அவ்விரவை இத்யாதி3 வாக்யத்ரயத்தாலே) இப்போது, ''ஓர்'' என்றதுக்கு க்ரமேண அந்வயமென்று கண்டு கொள்வது. d, e 'இரண்டு தாய்மார்க்கு ஒருவன் பிள்ளையாம்படி எங்ஙனே சேருவது?' என்ன, அருளிச்செய்கிறார் (ஒருத்தி இத்யாதி3) பிள்ளையாகையால் வந்த ரஸம் இருவர்க்கும் துல்யமாகையாலே பிள்ளையாகைக்குத் தட்டில்லையென்று கருத்து. h, i ஒளித்து வளரு

---

சீ. அ. பிறவிக்கும் வாசி ஏது?'' என்) னநம்முடைய கர்மம் இத்யாதி3) x, y, z, a ''ஓரிரவில்'' என்கிற இடத்தில் 'ஓர்' என்ற ஶப்3த3த்துக்கு இரண்டு பொருள்; இவர்களுடைய பாபாதிஶயம் ஒருராத்ரியாகிலும் தங்கவொட்டிற்றில்லை என்னுதல்; அன்றிக்கே ஈஶ்வரேச்ச2யா அத்3விதீயமானராத்ரியென்னுதல், y,z ஒரு ராத்ரியிலே போகைக்கு ஹேது இரண்டு — பிள்ளையாகைக்காதல், தண்மையாலேயாதல்; இத்தை அருளிச்செய்கிறார் (அவ்விரவில் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) c (அவர்கள்) ஸம்ஸாரிகள்; (அவர்கள் தங்களோபாதியும் பெற்றிலன் என்கை) என்றதுக்குத் தாத்பர்யம்—ஸூதகம் பத்துநாளாகிலும் பிறந்த க்3ருஹத்திலே கிடப்பார்கள் லௌகிகபுருஷர்கள் என்றபடி, f, g 'ஆய்' என்றதுக்குத் தாத்பர்யம்

j நாட்டார் செய்வன செய்யப்பெருதே கள்ளர்பட்டது படுவதே! k திருவவதரித்திருக்கச் செய்தே அந்தர்யாமிபட்டது படுவதே! l உள்ளேயிருக்கச்செய்தேயும் இவனில்லை என்று $l_2$ எழுத்திடுமவன், முகங்காண ஸம்மதிக்குமோ? என்கை. m அந்தர்யாமியாய் மறையநிற்கிறது — பிச்சேறின ப்ரஜை தாய் முன்னேநிற்கில் தாயைக் கொல்லும்;— அவள் பேரநிற்கில் தன்னை முடித்துக் கொள்ளும் ;— அதுக்காக முகந்தோற்ருதே நின்று, இரண்டுதலையையும் நோக்கும் மாதாவைப்போலே, இசைந்து 'அம்மே!' என்ருல் ஏன் என்கைக்குக் கிட்டவிருக்கிறபடி என்றுமாம். n பேர்சொல்லாதே ''ஒருத்தி'' என்றது— $n_2$ A ''அத்தத்தின் பத்தாநாள்'' என்றவர்மகளாகையாலே ப$_4$யத்தாலே ஒளிக்கிருள். $n_3$ அபி$_4$சரிக்கிலும் அதுவோ இதுவோ என்று ஸந்தே$_3$ஹிக்கைக்காக.

o (தரிக்கிலானாகி) p 'க்ருஷ்ணன் வளராநின்ருன்' என்று கேட்ட பின்பு அவன் த$_4$ரிக்கமாட்டிற்றிலன். q ஈஶ்வரஸத்தையையும் பொருத ஆஶ்ரயமிறே. r (தான் தீங்கு நினைந்த) s ப$_4$யத்தாலே பரிந்து மங்க$_3$ளாஶாஸநம் பண்ணும் விஷயத்திலே தீங்கு நினைத்தது, து$_3$ஷ்ப்ரக்ருதியாகையாலே. (தான்) t உத்தரக்ஷணத்திலே படப் புகுகிற பாடறியாத தான். (தீங்கு நினைந்த) தங்கள் வாயாலே சொல்லமாட்டாமையாலே'' தீங்கு'' என்கிருர்கள். அதாவது— பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும், வில்விழவுக்கு என்று அழைத்தும்

பெ.அ. கைக்கு ஹேது அருளிச்செய்கிருர்(கம்ஸன் இத்யாதி$_3$)j, k இவன் அவதரிக்குமிடத்தில் விஷத்$_3$ருஷ்டி ப்ரஸக்தமாய் ஒளிக்கவேண்டிற்றே என்று கோ$_3$பிமாருடைய ஈடுபாடாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (நாட்டார் இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே ) h, l, m ''ஒளித்து வளர'' என்றதுக்கு ஸ்வாபதே$_3$ஶம் அருளிச்செய்கிருர் (உள்ளே இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) n கீழே ''ஒருத்தி'' என்றதுக்கு அஸத்$_3$ருஶையென்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து, நாமக்$_3$ரஹணம் பண்ணுதே, ''ஒருத்தி'' என்று ஸாமாந்ய ஶப்$_3$த$_3$ம் ப்ரயோகி$_3$க்கிருர்களென்று அதுக்கு ஹேதுபூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (பேர்சொல்லாதே இத்யாதி$_3$) தே$_3$வகிமகனுயென்றும் யசோதைமகனுயென்றும் சொல்லுமிடத்தில், இவனுடைய ஏற்றமெல்லாம் அறிந்து உகவாதார் ஏதேனும் தீங்கு நினைப்பரென்னும் ப்ரேமாதிஶயத்தாலே அஞ்சி மறைத்து அநாத$_3$ரம் தோற்றச் சொன்னுர்கள் என்று கருத்து.

o, p 'திருவாய்ப்பாடியிலே ஒளித்துவளர, இவன் த$_4$ரியாதிருக்கை எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிருர் (க்ருஷ்ணன் இத்யாதி$_3$) q ஸ்வாபதே$_3$ஶத்திலே தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (ஈஶ்வரஸத்தை இத்யாதி$_3$) உன் ஹ்ருத$_3$யத்தில் அந்தர்யாமியிருக்கிருனென்ருல் 1. ''ஈஶ்வரோSஹம்'' என்றிருக்குமவன் ஸஹியானென்று ஒரு தாத்பர்யம். r, s, t ''தான்'' என்றதுக்கு — து$_3$ஷ்ப்ரக்ருதியென்று ஒரு தாத்பர்யம் அருளிச்செய்து,

சி.அ. (பிறப்பில் புரையித்யாதி$_3$) $l_2$ (எழுத்திடுமவன் )க்ருமிகண்ட$_2$ாதி$_3$கள். $n_2$ A ''அத்தத்தின் பத்தாநாள்'' என்ற பாசுரத்துக்குத் தாத்பர்யம் ஹஸ்தநக்ஷத்ரத்துக்குப் பத்தாவதுநாள் என்றபடி. $n_3$ பரிவராகையாலே, கீழுக்குப்பத்தாநாளோ, மேலுக்குப்பத்தாநாளோ என்று ஸந்தே$_3$ஹிக்க அருளிச்செய்தாரென்கிருர் (அபி$_4$சரிக்கிலுமித்யாதி$_3$) நாள்-நக்ஷத்திரம், r, s, t ''தான்'' என்றதுக்கு இரண்டு பொருள் ஆஸுரப்ரக்ருதியான தான் என்னுதல்;

A பெரியாழ் திரு 1-2-6.

நலியத் தேடினபடி. u (கருத்தைப் பிழைப்பித்து) v பூதனை முதலானார் நலிவுகளைப் பண்ணப்புக, அத்தைத் தப்பித் தன்னை நமக்குத் தந்தபடி; w அவன் நினைவை அவன்தன்னோடே போம்படி பண்ணி என்றுமாம். (கஞ்சன் இத்யாதி3) கம்ஸன் அநாதி3காலம் ஸஞ்சிதமான பாபமித்தனையும் கண்ட காட்சியிலே அநுப4வித்து அறும்படி நின்றவன். x ஆஶ்ரிதர் வயிற்றில் நெருப்பைக் கம்ஸன்வயிற்றில் கொளுத்தினவனென்கை. அதாவது — ப4யாக்3நி கொளுத்துகை. y (நெடுமாலே) z இதெல்லாம் படவேண்டிற்று ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தாலே யென்கை. a அப்போது ஸ்ரீவஸுதே3வர்பக்கலிலும் ஸ்ரீதே3வகியார்பக்கலிலும் திருவுள்ளம் மண்டினபடி என்றுமாம்.

(உன்னை) b அர்த்தி2த்வத்தில் நிரபேக்ஷனான உன்னை; c ஸ்ரீவைகுண்ட2த்தில் நின்றும் இரப்பாளனாய் இவ்வளவும் வந்தது ஆர் அபேக்ஷித்து? d (நெடுமாலே உன்னை அருத்தித்து வந்தோம்) e பண்டே வ்யாமுக்3த4னான உன்னை $e_2$ அர்த்தி2க்கையாலே பிச்சின்மேலே பிச்சேற்ற வந்தோம். f அர்த்தி2த்வத்தின் $f_2$ அளவு $f_3$ எங்கள் வடிவைப் பார்க்க அமையும்.

(பறை தருதியாகில்) எங்களுக்கு உத்3தே3ஶ்யம் செய்குதியாகில். "ஆகில்" என்றது — நம்முடைய அர்த்தி2த்வாதி3கள் அப்ரயோஜகம்; அவன் நினைவாலே ப2லமென்கை. g உன்னழகாலே பிழைப்பியாதே செய்தருளப் பார்ப்பாயாகில் என்னவுமாம்.

---

பெ. அ. தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (உத்தரேத்யாதி3) u, v, w "கருத்தை—மநஸ்ஸை, பிழைப்பித்து — பிழையாக்கி — பொய்யாக்கி" என்று ஶப்3த3ார்த்த2மாய், இரண்டுவித4மாகத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (பூதனை இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) w (அவன் நினைவை அவனோடே போக்கினபடி) என்றது — அவன் நினைவு அவனிடத்தில் ப2லத்தைக் கொடுக்கும்படி தான் ஸங்கல்பித்து என்றபடி.

b, c அர்த்தி2த்வ நிரபேக்ஷனாகையை உபபாதி3க்கிறார் (ஸ்ரீவைகுண்டே2த்யாதி3) d, e, f "நெடுமாலே வந்தோம்" என்று சொல்லவே, இவர்களாசை ஸித்3த4மாயிருக்கவும் "அருத்தித்து" என்று சொன்னது — பேராசையாக வந்தோமென்று விவக்ஷித்து, ஆசையினுடைய பெருமை எவ்வளவு என்னும் ஶங்கையை அருளிச்செய்கிறார் (அர்த்தி2த்வத்தின் இத்யாதி3)

---

சி. அ. அஸ்தி2ரனான தான் என்னுதல். u, v, w "கருத்தைப்பிழைப்பித்து" என்றதுக்கு இரண்டு பொருள் - பூதனை முதலானார் தன்னை நலிகைக்கு நினைத்த நினைவில்நின்று தன்னைத் தப்புவித்து என்னுதல்; அன்றிக்கே, கம்ஸனுடைய நினைவை மாறுடப்பண்ணி என்னுதல். x (ஆஶ்ரிதர் வயிற்றில்) என்றது தே3வகீவஸுதே3வாதி3கள், y. z, a "நெடுமாலே" என்றது பூர்வப4ாவியாதல். அபரப4ாவியாதல். $e_2$, f "அர்த்தி2க்கையாலே" என்றதுக்கு உங்களுக்கு அர்த்தி2த்வமுண்டென்கிறது நானறியும்படியென்? என்ன அருளிச்செய்கிறார் (அர்த்தி2த்வத்தின் அளவு இத்யாதி3) $f_2$ அளவு-ப்ரகாரம். $f_3$ (எங்கள் வடிவை) என்றதுக்குத் தாத்பர்யம் 1. "ஏஹி பஶ்ய" என்னுமாபோலே அபேக்ஷையின் மிகுதி வடிவிலே தொடைகொள்ளும்படியிருக்கை, g அழகாலே பிழைப்பிக்கையாவது—ஸௌந்த3ர்யமும்

h (திருத்தக்கசெல்வமும்) i 1. "யஸ்ய ஸா ஜநகாத்மஜா—அப்ரமேயம் ஹி தத்தேஜ:" என்று ஸ்ரிய:பதித்வத்தால் வந்த ஸம்பத்தையும்; j பிராட்டி ஆசைப்படும் ஸம்பத்தென்னவுமாம். (சேவகமும்) அத்தைக் k காத்தூட்ட வல்ல வீர்யம். (யாம்பாடி) உன் பேர் சொல்லப்பெருத நாங்கள் உகப்போடே அத்தைச்சொல்லி. l (வருத்தமும் தீர்ந்து) m உன்னைப்பிரிந்து படும் து₃:க்க₂மும் தீர்ந்து; n பிரிந்தார்படும் பாடறிய உன்னை நீ பிரிந்தறியாயே? o (மகிழ்ந்து) p கைவல்யம்போலே து₃:க்க₂நிவ்ருத்திமாத்ரமேயன்று, ப்ரீதிக்குப் போக்கு விடும்படியாகவேணும். 25.

---

பெ. அ. h, i 'திருவாலே தக்க செல்வத்தை' என்று ஶப்₃த₃ார்த்த₂ம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (யஸ்யேத்யாதி₃) 'தத்தேஜ:' என்றது — ஸமஸ்தமாய், தஸ்ய தேஜ: என்று கொள்வது. h, j 'திருவுக்குத் தக்க செல்வம்' என்று விவக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (பிராட்டி இத்யாதி₃) k 'காத்தூட்ட' என்றது — ரக்ஷித்து அநுப₄விப்பிக்க என்றபடி.

l, m, n "வருத்தமும்" என்ற சகாரத்தால் — மிகவும் துஸ்ஸஹதை தோற்றுகையால் அதின்படி எங்ஙனே? என்னும் ப்ரஶ்நத்திலே, அது சொல்லத்தரமன்று, அநுப₄வித்தே அறியவேணும்; அது உன்னால் அறியப்போகாதென்று உத்தரம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிருர் (பிரிந்தார் இத்யாதி₃) 25.

---

சி. அ. அந்தராயம் என்கை. h, i திருத்தக்கசெல்வம் — திருவாலேதக்கது — உள்ளதென்னுதல்; ஶ்ரிய:பதித்வத்தால் வந்த ஸம்பத் என்றபடி. h, j திருவுக்குத் தகுதி என்னுதல்; A "திருவுக்கும் திருவாகிய", 2. "க: ஸ்ரீ: ஶ்ரிய:" இத்யாதி₃ப்படியே. m, n நம்முடைய விஶ்லேஷத்தில் து₃:க்க₂ம் அதிஶயித்திருக்குமோ? என்ன அருளிச்செய்கிருர் (பிரிந்தார்படும்பாடித்யாதி₃) o, p ஆனல் கேவலனைப்போலே 3. 'ஜராமரண மோக்ஷாய' என்று து₃:க்க₂நிவ்ருத்தி மாத்ரம் போருமோ? என்ன, அருளிச்செய்கிருர் (மகிழ்ந்து—கைவல்யம்போலே இத்யாதி₃) "பறைதருதியாகில், அருத்தித்துவந்தோம் — மகிழும்படி பண்ணவேணும்" என்று அந்வயம். 25.

---

## ஆருயிரப்படி — இருபத்தைந்தாம்பாட்டு

அவ:— இருபத்தஞ்சாம்பாட்டு. "பெண்காள்! உங்களுக்குப் பிறப்பாலே நம் விஜயத்துக்கு மங்களாஶாஸநம் பண்ணுகை ஸ்வரூபமிறே; இக்குளிரிலே உங்களைப்பேணுதே க்லேஶித்து வந்திகோளே; உங்கள் நெஞ்சிலோடுகிறது வெறும்பறையேயோ, வேறேதேனுமுண்டோ?" என்ன; "உன்னுடைய கு₃ண கீர்த்தநம் பண்ணிக்கொண்டு வருகையாலே ஒரு க்லேஶங்களும் படாதே ஸுக₂மே வந்தோம்; 'பறை' என்று ஒரு வ்யாஜத்தையிட்டு நாங்கள் உன்னை யிறே அர்த்தி₂த்து வந்தது என்கிருர்கள். "'பறைகொள்ளவந்தோம் இரங்கு' என்று நம்மை வடிம்பிடாநின்றிகோள்; நீங்கள் சொன்னபோதாகச் செய்யப் போமோ? ப்ரதிப₃ந்த₄கங்கள் உண்டாயிருக்குமே" என்ன; "ப்ரதிப₃ந்த₄கங்களைப் போக்கி அரியது செய்த உனக்கு எளியது செய்யத் தட்டுண்டோ? எங்களோடு ஸஜாதீயரிலே சிலர் நோற்றுப் பெற்றது எங்கள் நோன்பு ப₂லித்தபடியன்றோ" என்கிருர்கள்.

---

A பெரிய திரு 7-7-1.

வ்யா:— (ஒருத்திமகனாய்) ஒருவன் ஸாத₄நாநுஷ்டா₂நம் பண்ணி மாணிக்கம்போலே நாலுபிள்ளைகளைப் பெற்றாற்போலே, நால்வருங்கூட தபஸ்ஸு பண்ணி ஒருவனைப் பெருநிற்கச்செய்தே, பேறு ஒருத்தியதாகையாலே "ஒருத்தி" என்கிறார்கள். காரணவாக்யங்கள் A "ஊழிமுதல்வன் ஒருவனே" என்கிற வஸ்துவை, வயிற்றிலே அடக்கப்பெற்றாள் ஒருத்தியிறே. (ஒருத்தி மகனாய்) ஸர்வலோகங்களுக்கும் ஸர்வபூ₄தங்களுக்கும், B முந்தைத்தாய்தந்தையாயிருப்பா னொருவனைத் தனக்குப் பிள்ளையாகப் பெறுகைக்கு நோன்பு நோற்க, ஜக₃த்துக்கு ஶேஷியுமாய், ஸர்வ வ்யாபகனுமாய், நித்யனுமாயிருக்கிற C மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன். சிலர் அபேக்ஷித்ததுக்காக மகனானென்னுமளவன்றிக்கே, "தே₃வகீ புத்ரன்" என்றே தன்னை நினைக்கும்படி அவவருகு தனக்கொரு ஏற்றமுண்டென்று அறியாதபடி பிள்ளையானான்.

(பிறந்து) சிலர் "மகனாகவேணும்" என்று ஆசைப்பட்டால் தூணிலே தோற்றினாற்போலேயாதல், ஆனைக்குதவினாற்போலேயாதல் வந்து உதவ அமைந்திருக்க ஈஶ்வரனே வந்து பிறக்கவேணுமென்று நோற்றபடியாலே, பூர்வவ்ருத்தாநுஸந்தா₄நமின்றியே க₃ர்ப்ப₄வாஸம் பண்ணிப் பிறந்து; 'உம்முடைய வயிற்றினின்றும் நாம் பிறந்தோமே' என்று ஶோப₄நஞ் சொல்லிக்கொண்டு பிறந்தான். (பிறந்து) கர்மவஶ்யர் படுவதெல்லாம் க்ருபாபரதந்த்ரனாய்ப் படுவதே! என்று, தீ₄மதாம் அக்₃ரேஸரர், D "பிறந்தவாறும்!" என்று — ஆழங் கால் படும்படியாய்த்துப் பிறந்தது. "ஆவிர்ப்ப₄வித்தான்" என்கிறது க₃ர்ப்ப₄த்தில் தோ₃ஷஸ்பர்ஶமில்லை என்கைக்காக. நித்யஸூரிகள் ஸேவிக்கவிருக்கிறவன் ஸம்ஸாரத்திலே பிறந்த இக்குணம் இழக்கவொண்ணாதென்று ரிஷிகளைப்போலே ஆவிர்ப்ப₄வித்தானென்று அவத்₃யஞ்சொல்லாதே 'நிறம்பெறும்படி பிறந்தான்' என்பர்கள் ஆழ்வார்கள். (மகனாய்ப்பிறந்து) மகனாகையாவது — மாதாபித்ருபர தந்த்ரனாகையிறே. பெருமாள் பக்வரானபின்பு மாதாபித்ருவசநபரிபாலநம் பண்ணினார்; இவன், பிறந்தபோதே, "ஆழ்வார்களையும் திருத்தோள்களையும் மறைக்கவேணும்" என்ன, உபஸம்ஹரித்தான்.

(ஓரிரவில்) பிறந்தவிடத்தில் ஓரிரவும் வஸிக்கப்பெற்றதில்லையிறே ஸம்ஸாரிகள் கீழ். நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாற்போலே, ஸம்ஸாரிகள் தண்மை க₃ர்ப்ப₄க்₃ருஹத்தில் ஓரிராத் தங்கவொட்டிற்றில்லை. ஸம்ஸாரிகள் பிறந்தால் பெறுவதும் பெறப்பெற்றதில்லை. நால்வர் இருவர் அறிந்து ஶோப₄நஞ் சொல்லித் தூரியங்கொட்டி, கண்கண்டு நெய்யாடல் போற்றப்பெற்றதில்லை. ஸர்வேஶ்வரன் இங்கே வந்தால், நம்முடைய கர்மம் நம்மோடு அவனுக்கு

A திருவாய் 10-7-9 B திருவாய் 5-7-7 C மூன். திருவ. 92 D திருவாய் 5-10-1

ஸாம்யத்தைக் கொடுக்கும்; நாம் அங்கே சென்றால் அவனுடைய க்ருபை அவனோடு பரமஸாம்யத்தைத் தரும். A "இணைவனா மெப்பொருட்கும்" B "தம்மையே ஒக்க அருள்செய்வர்". நம்பிறவி அவனை அகற்றும்; அவன் பிறவி அணுகுகைக்கு உடலாம். அவன் பிறவி நமக்கென்றுகோல, நம்பிறவி அவனைப் பெற்றவர்கள் காலில் விலங்கு பட்டது படும். (ஓரிரவில்) காலக்ருத பரிணாமமில்லாத தே₃ஶத்தில் வஸ்து காலாதீ₄நமான தே₃ஶத்திலே பிறந்து ஓரிரவிற்பட்டபாடு என்தான்! C [வீங்கிருள் வாய் பூண்டு] — அவ்விரவோடொத்த இரவு முன்புமில்லை, பின்புமில்லை. (ஒருத்திமகனாய்) அங்கேபிறந்து இங்கே வளர்ந்தானாயிருக்கையன்றிக்கே, இங்கே பிறந்தானாயிருக்கிறபடி. (ஓரிரவில் ஒருத்தி மகனாய்) அவ்விரவிலே யஶோதைப்பிராட்டிக்குப் பிள்ளையாக வேண்டுகையாலே, ஒருத்திக்கு அவதாரரஸத்தைக் கொடுத்து, ஒருத்திக்கு லீலாரஸத்தை அநுப₄விப்பித்தான். (ஒருத்திமகனாய்) அவ்விடத்தில் முலைச்சுவடறியாமல் போந்த படியாலே, அழுது முலைப்பால் குடித்தவிடமிறே பிறந்தவிடமாவது. திருப்ரதிஷ்டை₂ பண்ணினவர்களிலும் காட்டில் ஜீர்ணோத்₃த₄ாரணம் பண்ணின வர்களிறே முக்₂யர். யாத₃வத்வத்தையும் கோ₃பத்வத்தையும் ஏககாலத்திலே ஆக்கினான். 1. "யது₃குலோத்₃ப₄வ"னென்ற ரிஷிதானே, 2. "கோ₃பாலன்—யாத₃வ குலத்தை எடுக்கக்கடவன்" என்றானிறே. "அவளுக்கு முலைசுரவாநின்றதாகில் இவன் அழுது முலையுண்ணாநின்றானாகில் உமக்குச் சேதமென்?" என்று ப₄ட்டர். யஶோதை₃ப்பிராட்டியாக பூதனை ப₄ாவித்து, இவனுண்ணாதபோது முலைவிரியும்படியான து₃ஶையையுடையளாய், பிள்ளையாகக்கொண்டெடுத்து முலை கொடுக்க, அதுபெறாவிடில் வயிறூராதபடியாய் இவனும் முலையுண்ண, இவனை "பிள்ளை" என்று அவள் விஶ்வஸிக்க வொண்ணாதே துணுக்குத் துணுக்கென் னும்படி இவளாக ப₄ாவித்து அவள்பக்கல் பரிமாறுமவன் இவள்பக்கல் பிள்ளைத்தனத்தில் தப்ப நில்லானே. D "மகனைக் கொண்டெடுத்தாள்" இத்யாதி₃. (ஒருத்திமகனாய்) அவள் இங்கேற நியமித்துப்போகவிட்டமாத்ரம்; இவள் "காடே றப்போ" என்னலாம்படியிருக்கை. E "கன்றின்பின் எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேன்". அஶேஷஜக₃த்துக்கும் ஶாஸிதாவான வஸ்து இவள் கட்டவு மடிக்கவுமாம்படி நியமிக்கலாய்த்திறே.

(மகனாய்) அங்கு பிள்ளையாகப் பெற்றவளுக்காய்த்து இழவுள்ளது. F [நந்தன் பெற்றனன்] யஶோதை₃ப்பிராட்டி கைப்பிடித்த ப₄ாக்₃யாதி₄கர் பெற்றார்; என்னைக் கைப்பிடித்த முஹூர்த்தத்தாலே ஸ்ரீவஸுதே₃வர் இழந்தார். G [மருவுநின் திருநெற்றி] திருப்பவளத்திலே முலையைக் கொடுக்கப் புக்க வாறே, திருநெற்றியில் சாத்தின சுட்டியிலசைவையும் முறுவலையுங் கண்டு

A திருவாய் 2-8-1, B பெரிய திரு 11-3-5, C திருவாய் 6-4-5, D இர-திருவ 29. E பெரியாழ்-திரு 3-2-2. F பெரு-திரு 7-3. G பெரு-திரு 7-5.

தமப்பனுரைக் கொண்டானென்று அகவாய் பணிக்கும்; அந்த ப்ரீதியாலே தனக்கும் வாசி தெரிக்கவொண்ணுத விரலை வாயிலே இட்டுக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லும்போது பெரிய ஏற்றத்தோடே தொடங்கின மழலைச் சொல்லும் பாக்யஹீநையான நானிழந்தேன்; பாக்யவதியான அவள் பெற்றுப் பூர்ணையானுள். (ஒருத்திமகனுய்) கம்ஸன் முடிந்து பழைநாள் பட்டிருக்கச் செய்தேயும், 'இன்னுள்' என்னுதே மறைத்துப் போருகிறுர்கள் பொல்லாங்கு விளையுமென்னும் அச்சத்தாலே. A "பத்தாநாள்" என்னுமாபோலே. (ஒருத்தி) B "என்னநோன்பு நோற்றுள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" C "ஞாலத்தில் புத்திரனைப் பெற்றுர் நங்கைமீர் நானே மற்றுருமில்லை".

(ஒளித்துவளர) பிறந்தவிடத்திலே தோன்றப்பெருவிட்டால் போந்தவிடத்திலே வெளியிலே வளரப்பெற்றதோ? விஷத்ருஷ்டிகளான பூதநாதிகள் கண்பட வொண்ணுதென்று நாட்டார் செய்வன செய்யப்பெருதே, நிலவறைகளிலேயிறே வளர்ந்தது. D "வானிடைத் தெய்வங்கள் காண" என்று — அநுகூலர்கண்ணுட் படப் படவொட்டாதவள் ப்ரதிகூலர் கண்படவொட்டுவளோ? E "கன்றின் பின் போகேல்" என்று புறப்படவொட்டாள். (ஒளித்துவளர) உகப்பார் ஸதாதர்ஶநம் பண்ணி அநுபவிக்கக்கடவ வஸ்து, கண்ணுக்குத்தோற்றுதபடி மறைக்க வேண்டும்படி கள்ளர்பட்டது படுவதே! அவதரித்திருக்கச்செய்தே அந்தர்யாமி பட்டது பட்டான். (ஒளித்துவளர) உள்ளேயிருக்கச்செய்தேயும் "இவனில்லை" என்று எழுதி எழுத்திடுமவன் முகங்காட்ட ஸம்வதிக்குமோ? பிச்சேறின ப்ரஜை முன்னே தாய் நிற்கிலும் கொல்லும்; இவள் பேரநிற்கில் தன்னை முடித்துக் கொள்ளும்; அப்படியே அவதரிக்கில் எதிரிடுவார்கள். பரமபதத்தி லிருக்கில் அஸத்கல்பராவர்கள், அந்தர்யாமியாய் முகந்தோற்றுதே நின்று இரண்டுதலையையும் நோக்கித் தெளிவுபிறந்து, "அம்மே!" என்றுல் "ஏன்" என்கைக்குப் பதிக்கிடை கிடக்கிறபடி.

(ஒளித்துவளரத்தரிக்கிலானுகி) நாரதாதிகள் சென்று உன்னுடைய ஶத்ரு திருவாய்ப்பாடியில் வளராநின்றுனென்று சொல்லக் கேட்ட மாத்ரத்திலே "நம் கண்வட்டத்திலில்லையாகில் அவன் என்செய்யிலென்?" என்றிராதே, 'சதுரங்கபலோபேதனுய் ஐஶ்வர்யத்துக்கு ஹாநியின்றிக்கேயிருந்தோமாகில் வந்தவன்று பொருகிறேம்' என்று ஆறியிராதே தரிக்கமாட்டிற்றிலன். அஸஹ்யாபசாரமாவது— பகவத்பாகவத விஷயமாக அவர்கள்ஸத்தையும் பொறுதொழிகையிறே.

---

A பெரியாழ் திரு 1-2-6, B பெரியாழ் திரு 2-2-6, C பெரியாழ் திரு 3-3-1,
D பெரிய திரு 10-4-8, E பெரியாழ் திரு 3-3-9.

கம்ஸவத,த்தளவும் அநுஸந்தி,த்தவர்களாகையாலே மேலே படப்புகுகிற பாட்டை அநுஸந்தி,த்து க்ஷுத்,ரனான பையல்தானே ஸிம்ஹத்தோடே நரி எதிரிடுமாபோலே எதிரிட்டவன் சிறுமையைச் சொல்லுகிறார்கள் - (தீங்கு) பரியவேண்டும் விஷயத்திலே பொல்லாங்கை நினைப்பதே! என்ன துஷ்ப்ரக்ருதி தான்! இன்னதென்று தன்வாயால் சொல்லமாட்டாமையாலே ''தீங்கு'' என்கிறார்கள். அதாவது— பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும், ''வில்விழவுக்கு'' என்றழைத்தும் நலியத்தேடினவை எல்லாவற்றையும் நினைத்து. (நினைந்த) இதுக்கு மநஸ்ஸஹகாரமுண்டாவதே! A ''சிந்தையினலிகழ்ந்த'' என்கிறபடியே உக்திமாத்ரமானவளவில் நலியாதே நெஞ்சில் பொல்லாங்கு ஶோதி,த்தாலாய்த்துக் கைவிடுவது. கைக்கொள்ளுமிடத்தில் கழுத்துக்கு மேலும்அமையும்: கைவிடுமிடத்தில் அகவாயிலுமுண்டென்றறிந்தாலல்லது விடான். (தீங்கு நினைந்த) B தீயபுந்திக்கஞ்சனிறே. (கருத்தை) அம்மானாய், கண்ணநீர் விழவிட்டிருக்க நினைத்த அபி,ப்ராயத்தை. (பிழைப்பித்து) அவன் நினைவை அவன்றன்னோடே போம்படிபண்ணி.

(கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற) ''க்ருஷ்ணன்'' என்றால் வயிறெரித்தலோடேயிருக்கக்கடவ பெண்களுடைய ப,யத்தையெல்லாம் அவன் வயிற்றிலேயாக்கினபடி. (கஞ்சன் வயிற்றில்) கம்ஸனுடைய தப்புக்களை நினைத்து, C ''என்செய்யவென்னை வயிறு மறுக்கினாய்'' B ''வாழகில்லேன் வாசுதேவா'' D ''ஊடுறவென்னுடையாவி வேமால்'' என்கிற — ஆஶ்ரிதருடைய ப,யாதி,களையெல்லாம் கம்ஸன் வயிற்றில் கொ(ளு)த்தினான். (கஞ்சன்வயிற்றில்) தே,வகியார் வயிற்றில் பிள்ளை,—கம்ஸன் வயிற்றில் நெருப்பு. (நெருப்பென்ன) E [கஞ்சன் நாள்கவர் கருமுகிலெந்தாய்] — தே,வகியார் வயிற்றில் நீரைச்சொரிகிறவன் காணும், கம்ஸன் வயிற்றில் நெருப்பைச் சொரிகிறான். (நெருப்பென்னநின்ற) F ''கஞ்சனைக்காய்ந்த காளமேகத்திருவுருவன்''. (நெருப்பென்னநின்ற) கம்ஸன் அநாதி,காலம் ஸஞ்சிதமான பாபமித்தனையும் கண்ட காட்சியிலே அநுப,வித்துறும்படி நின்ற நிலை. (நெடுமாலே) இதெல்லாம் படவேண்டிற்று ஆஶ்ரிதர் பக்கல் வ்யாமோஹத்தாலே. (நெடுமாலே) அப்போது ஸ்ரீவஸுதே,வர்பக்கலிலும் ஸ்ரீதே,வகியார்பக்கலிலும் திருவுள்ளம் மண்டி, G ''ஒன்றுங் கண்டிடப் பெற்றிலேன் — காணுமாறினி யுண்டெனிலருளே'' என்று — அவள்பட்ட இழவுகளெல்லாம் தீர முலைப்பால் திருமேனியிலே பாய அவளுக்கு நின்று பா,லசேஷ்டிதங்களைக் காட்டின வ்யாமோஹத்தை அவள்தான் காண்பதற்கு முன்னே மஞ்சங்களில் பெண்கள் கண்டு வாழும்படி பண்ணின வ்யாமோஹாதிஶயத்தை ''நெடுமாலே'' என்கிறது. H ''கஞ்சனையஞ்சமுன் கால் விசைத்த காளையராவர் — அச்சோவொரு வரழகியவா'' என்றிறே பெண்கள் பார்த்துக்கொடு நின்றது.

---

A திருவாய் 2-6-6 B பெரியாழ்-திரு 2-2-5 C பெரியாழ்-திரு 3-3-6 D திருவாய் 10-3-10 E பெரு-திரு 7-10 F பெரிய திரு 4-10-4 G பெரு-திரு 7-9 H பெரியதிரு 9-2-6.

''நாம் அவ்விடத்தில் அப்படி செய்த தீமையுண்டு, உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்?'' என்ன — (உன்னையருத்தித்து) எங்களுக்குப் பிறந்து காட்டவும் வேண்டா, வளர்ந்து காட்டவும் வேண்டா, கொன்று காட்டவும் வேண்டா, உன்னைக் காட்டவமையும். (உன்னையருத்தித்து) உன் பக்கலிலே ஒன்று வேண்டி வந்தோமல்லோம், உன்னை வேண்டி வந்தோம். (உன்னையருத்தித்து) A ''என்னையாக்கிக் கொண்டெனக்கே தன்னைத்தந்த'' என்று அர்த்தித்வ நிரபேக்ஷமாக அர்த்திகளையுமுண்டாக்கி உன்னையுங் கொடுப்புதியிறே; உன்னுடைய ஔதார்யமெல்லாம் அஸத்கல்பமாக்கி ஸ்ரீவைகுண்டத்தில் நின்றும் இரப்பாளனய் வந்தது ஆரபேக்ஷித்து? (நெடுமாலே உன்னையருத்தித்து) பண்டே வ்யாமுக்தனனவுன்னை அர்த்திக்கையாலே பெரும்பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம். (வந்தோம்) எங்கள் மிகைச்செயல் கண்டாயே. உன் வ்யாமோஹமெல்லாம் அத்வேஷமென்னும்படிக்கீடாய் நாங்கள் வந்தது. (வந்தோம்) B ''எதிர் சூழல்புக்கு'', C ''ஆள்பார்த்துழிதந்து'', D ''ஆயர்குலத்தினில்'' தோன்றின உன் வ்யாமோஹமெல்லாம் நாலடியிட்டு அஸத்கல்பமாக்கினேம்.

''பறைகொள்வான் இன்று யாம் வந்தோம்'' என்று சொல்லுவது, ''உன்னை அருத்தித்து வந்தோம்'' என்பதாய் வ்யாஹதமாக வார்த்தை சொன்னிகோளேயென்ன; (பறை தருதியாகில்) எங்களுக்கு உத்தேஶ்யம் செய்ய நினைவாகில். (உன்னை யருத்தித்து வந்தோம்) பறைக்குப் பொருள் மேலே சொல்லவிறே யிருக்கிறது. (தருதியாகில்) அவர்கள் அர்த்தித்வம் அப்ரயோஜகம், அவன் நினைவாலே பலமென்கைக்காக ''ஆகில்'' என்கிறது. இவன் எல்லாஞ் செய்தாலும் அவன் ''அல்லேன்'' என்றவன்று ஸ்வதந்த்ரனை விளைப்பிட வொண்ணாதே. இவர்களர்த்தித்வம் அவன் ஸ்வாதந்த்ரியத்தைப் போக்க மாட்டாதே. ஆகையாலே ''தருதியாகில்'' என்கிறார்கள். எத்தனையேனும் மேலானவர்களை எத்தனையேனுந் தாழ்ந்தவர்கள் ''திருவுள்ளமாகில் செய்தருள வேணும்'' என்றிறே சொல்லுவது.

''ஆகிறது; நினைவுசுருக்கமொழிய அறிந்தோம்; வந்தபடிதான் என்? வருகிறபோது க்லேஶித்திகோளே'' என்ன; ''ஒரு க்லேஶமுமின்றியிலே உகப்போடே வந்தோம்'' என்ன; ''பிரிந்திருக்கிற நீங்கள் உகப்போடே வந்தபடியென்?'' என்ன — (திருத்தக்க) ஶ்ரிய:பதித்வத்தால் வந்த ஸம்பத்தையும். பிராட்டியை எனக்கு என்னும் பெருமையுண்டாம்போது அவளாசைப்பட்டு மேல் விழும்படி அதுக்கீடான ஸம்பத்துண்டாக வேணுமிறே. (திருத்தக்க செல்வமும்) ''செல்வச்சிறுமிய''(ர்)ான இவர்களுக்குச் செல்வு தக்காப்போலே, E ''போதமர்

A திருவாய் 2-7-11, B திருவாய் 2-7-6, C நான்-திருவ 60, D பெரியாழ் திரு 1-7-11
E பெரியாழ் திரு 2-8-10.

செல்வக்கொழுந்தான'' பெரியபிராட்டியாருக்குத் தகுதியாயிருக்கும் A செல்வத் திறல் வளர்பிள்ளையுடைய செல்வு. (சேவகமும்) அவ்வைஶ்வர்யத்தைக் காத்தூட்டவல்ல ஆண்பிள்ளைத்தனமும். பிராட்டியுடைய விரோதிகளையும், பெண்களுடைய விரோதிகளையும் போக்கி, உபயவிபூத்யைஶ்வர்யத்தையும் காத்தூட்ட வல்ல வீர்யம். ''என்றென்றுன் சேவகமே யேத்தி'' (24) என்கிறவிடத்தில் இரண்டு முண்டிறே. (செல்வமும் சேவகமும்) ''ஆற்றப்படைத்தான்மகனே'' (21) என்றதுவும், ''கப்பந்தவிர்க்கும் கலியே'' (20) என்றதுவும்.

(யாம்பாடி) உன்பேர் சொல்லப்பெறாத நாங்கள் உன் பேர் சொல்ல வொட்டாதார் முன்னே உகப்போடே பாடி. ''புள்ளின்வாய்கீண்டானை'' (13) என்று — ஊரெல்லாம் பாடிக் கொண்டு திரிகிறார்களிறே. (வருத்தமும் தீர்ந்து) உன்னைப் பிரிந்து நெடுநாள்பட்ட க்லேஶமெல்லாம் தீர்ந்து. (மகிழ்ந்து) கேவலரைப் போலே து:க்கநிவ்ருத்திமாத்ரமேயன்றே இவர்களுக்கு ப்ரயோஜநம்; பாடுகிறபோது ப்ரீதிக்குப் போக்குவீடாகையாலே அநுபவகாலத்தில் ஆநந்தம்போலே அநுஸந்தாநஸமயத்தில் ஹர்ஷம் கனக்கவுடையோமாய். (வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து) B ''நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன்'', C ''உகந்தேயுன்னை யுள்ளுமென்னுள்ளம்'' என்கிறபடியே -- அநுஸந்தாந காலத்தில் அநுபவகாலம் போலேயிறேயிருப்பது. D [தூயவமுதைப் பருகிப்பருகி] க்ருஷ்ணாநுஸந்தாநம் தித்திக்குமிறே. ''வருத்தம்'' தீருகைக்குச் சேவகம் பாடினார்கள். மகிழ்ச்சி பிறக்கைக்குச் செல்வம் பாடினார்கள். ஶௌர்யவீர்யாதிகள் க்லேஶநிவ்ருத்திக்குடல்; ஐஶ்வர்யம் ஆநந்தஹேது. (பாடி வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்து) E ''இசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன் வெய்ய நோய்கள் முழுதும் வியன்ஞாலத்துவீய'', F ''வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்த''. நம் விரோதி நிவ்ருத்தியுமுண்டாய்த்து; அபிமதஸித்தியுமுண்டாய்த்து. ''பாடி வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்து, தருதியாகில், உன்னை யருத்தித்து வந்தோம்'' 25.

---

## ஈராயிரப்படி — இருபத்தைந்தாம் பாட்டு

அவ:— இருபத்தஞ்சாம்பாட்டு. ''பெண்காள்! நோன்பொழிய உங்கள் நெஞ்சிலே ஒன்றுண்டு போலே'' என்ன, ''நாங்கள் உன்னை அர்த்திதது வந்தோம்'' என்ன, ''என்னை அர்த்திதுப் பெற்றாருண்டோ?'' என்ன; ''எங்களோட்டையார் பெற்றாருண்டு'' என்கிறார்கள்.

வ்யா:— (ஒருத்தி மகனாய்) ஸர்வலோகத்துக்கும் பிதாவானவன் ஒருத்தி மகனாகப் பெறுவதே! G ''மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனிறே''. 1.''ஸ்துதோSஹம் யத் த்வயா பூர்வம் புத்ரார்த்திந்யா ததத்ய தே| ஸபலம் தேவி ஸஞ்ஜாதம் ஜாதோSஹம் யத்தவோதராத்||''. பித்ருவசன பரிபாலனம்போலே திருவாய்ப்பாடிக்கு வருகை. நம் பிறவி — நம்மையுமவனையும் அகற்றுகைக்குடலா

---

A பெரியாழ் திரு 2-8-8 B பெரியாழ் திரு 5-4-8 C திருவாய் 9-4-7 D திருவாய் 1-7-3 E திருவாய் 4-5-2, F திருவாய் 4-5-3, G மூன்-திருவ 92.

யிருக்கும்; அவன் பிறவி இருவரையும் அணுகவைக்கைக்குடலாயிருக்கும். A "ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த"வனிறே. (பிறந்து) 1. "தேவகீ பூர்வஸந்த்யாயாம் ஆவிர்பூதம் மஹாத்மநா" B "பிறந்தவாறும்". C(ஓரிரவில்) ஸம்ஸாரிகளின் பொல்லாங்கு ஓரிராத் தங்கவொட்டிற்றில்லையென்கை. அவ்விரவையொத்த இரவுமில்லை. மாதா பிதாக்கள் கைவிட்ட வளவிலே காத்த ராத்ரியிறே. (ஒருத்தி மகனாயித்யாதி) இருவரும் அவனைப்பெறவேணுமென்று அபேக்ஷித்ததுக்கு அவளுக்கு அவதாரரஸத்தைக் கொடுத்து, இவளுக்கு லீலா ரஸத்தை அனுபவிப்பிக்கிறபடி. (ஒளித்து வளர) விஷத்ருஷ்டிகள் படாமே, நாட்டார் செய்வன செய்யப் பெறாதே கள்ளர் பட்டது படுவதே! அந்தர்யாமி பட்டது படுவதே! (ஒளித்து வளரத்தரிக்கிலாளாகி) ஈஶ்வரஸத்தையும் பொறுதொழிகை. (தான் தீங்கு நினைந்த) C "பத்திறம்" என்று மோஹிக்க வேண்டும் விஷயத்திலேயிறே தீங்கு நினைத்தது, துஷ்ப்ரக்ருதியாகையாலே.

(கருத்தைப் பிழைப்பித்து) அவன் நினைத்ததைப் பிழைக்கும்படி பண்ணி. அவன் நினைவை அவனோடே போம்படி பண்ணினான். (கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற) ஆஶ்ரிதர் வயிற்றில் நெருப்பை, கம்ஸன் வயிற்றிலே புகும்படி பண்ணி. (நெடுமாலே) இதெல்லாம் படவேண்டிற்று ஆஶ்ரிதர் பக்கல் வ்யாமோஹாதிஶயத்தாலே என்கை. (உன்னையருத்தித்து வந்தோம்) அர்த்தித்வாதி நிரபேக்ஷனான உன்னை, பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம். ஸ்ரீவைகுண்டத்தில் நின்றும் வந்தவனிறே. எங்கள் வடிவைப் பாராய். (பறை தருதியாகில்) உன் அழகாலே எங்களை மயக்காதே செய்தருளப் பார்த்தாயாகில்: செருக்கடியாதே செய்தருளப் பார்த்தாயாகில்.

(திருத்தக்க செல்வமும்) 2 "யஸ்ய ஸா ஜநகாத்மஜா". (சேவகமும்) இத்தைக் காத்தூட்டவல்ல வீர்யம். (வருத்தமும் தீர்ந்து) உன்னை நீ கண்டறியாயே; பிரிந்தார் படும்பாடு அறியாயே. (பாடி வருத்தமும் தீர்ந்து) சொல்லப் பெறாத நம் வருத்தமும் தீர்ந்து. (மகிழ்ந்து) கைவல்யம் போலே துக்கநிவ்ருத்தியன்று தேட்டம். ப்ரீதிக்குப் போக்குவிட வேண்டும்படியாகை. 25.

---

## நாலாயிரப்படி—இருபத்தைந்தாம்பாட்டு

அவ:- இருபத்தஞ்சாம்பாட்டு. "பெண்காள்! நோன்பொழிய உங்கள் நெஞ்சிலே ஒன்றுண்டிறே" என்ன; "'பறை' என்றொரு பேர்; நாங்கள் உன்னை அர்த்தித்துவந்தோம்" என்ன, "என்னை அர்த்தித்துப் பெற்றாருண்டோ?" என்ன, "எங்களோட்டையார் பெற்றாருண்டு" என்கிறார்கள்.

வ்யா:— (ஒருத்தி மகனாய்) ஸர்வலோகத்துக்கும் பிதாவான உன்னை ஒருத்தி மகனாகப் பெறுவதே! D"மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்" (ஒருத்தி). 3. "அந்த: ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" என்கிறபடியே ஸர்வலோகங்களுக்

---

A திருவாய் 3-5-5; B திருவாய் 5-10-1, C திருவாய் 1-3-1, D மூன்-திருவ 92.

தும் நியாமகனானவனையுங்கூட நியமிக்குமவளென்கையாலே, நாட்டில் தனக்கு ஒப்பின்றிக்கேயிருக்குமவள். (மகனாய்) பிறந்தபோதே சொல்லிற்றுச்செய்கை 1. "ஸ்துதோஷி யத் த்வயா பூர்வம் புத்ரார்த்தி2ந்யா தத3த்3ய தே| ஸப2லம் தே3வி ஸஞ்ஜாதம் ஜாதோSஹம் யத்தவோத3ராத் ||" சக்ரவர்த்தித் திருமகன் வளர்ந்தபின்பு பித்ருவசந பரிபாலநம் பண்ணினான். இவன், பிறந்தபோதே தோள்களை மறைத்துத் திருவாய்ப்பாடியில் போகச்சொல்லப்போனான். லோபநம் கூறுகைக்கும் வேறுளில்லை; தானே. (பிறந்து) கர்மவஶ்யர் படுமவற்றை அகர்மவஶ்யன் க்ருபாவஶ்யனாய்ப் பிறந்து படுவதே! 2. "உபஸம்ஹர இத்யாதி3" 3. "அஜோSபி ஸந்நவ்யயாத்மா" கர்மவஶ்யர் கூறுன ஜந்மாதி3 தோ3ஷங்களின்றிக்கேயிருக்கை. என் பிறவாமைக்குத் தட்டு வாராதபடியும், எனக்கு நிறமுண்டாம்படியுங்காண் நான் பிறப்பது. 4. "ஸ உ ஶ்ரேயாந் ப4வதி ஜாயமாந:" 3. [பூ4தாநாமீஶ்வரோSபி ஸந்] பிறக்கையும் பிறவாமையும் கிடக்கப் பிறக்கும் பிறப்பு நித்யர்க்குமுண்டாகையாலே அவ்வளவேயல்ல; அல்லாதார் பிறப்பையும் நீக்கவல்ல ஸ்வதந்த்ரன் பிறப்பன்றோ என்கை. சிறையர் சிறைக்கூட்டத்தில் பிணையுண்கைக்குப்புகும்; நியாமகன் சிறைக்கூட்டத்தை விடுவிக்கப்புகும். புகுகையிலே இத்தனை நெடுவாசியுண்டு. அவன் பிறந்தால் இவன் பிறவி தனக்குத் தட்டாமையல்ல. நம்பிறவியைப் போக்கி நம்மைத் தன்போலேயாக்க வல்லனாயிருக்கும். 5. "ஜந்ம கர்ம ச மே தி3வ்யம் இத்யாதி3" — நம்பிறவி நம்மையும் அவனையும் உறவறுக்கைக்கு உடலாயிருக்கும்; இப்படியல்லனாகைக்கடி சாவுதல் பிறத்தல் செய்யவேண்டாத நித்யமான உடம்புடையனாகை. A "ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப்பிறந்த. 6. "யத்ராவதீர்ணம் க்ருஷ்ணாக்2யம் பரம் ப்3ரஹ்ம ,ராக்ருதி". அவனுக்குப் பிறக்கையாகிறது—அத்தை நாம் பிறவாதபடி ஸஜாதீயமாக்கிக்கொண்டு தோன்றுகை. 7. "புந்நாம்நோ நரகாத் த்ராயத இதி புத்ர:" என்கிறபடியே இவர்கள் தாளில் B தளைகழலப்பிறந்தபடி, என்றும் பிறவி நமக்கென்றுகோல நம்பிறவியாக விலக்கப்படும். C "அறுவர்தம் பிறவி அஞ்சிறையே". அவன் பிறப்புகூட்டும்; நீங்க நம்பிறப்பு. ப்ரபத்தியாவது இந்த ஜ்ஞாநமே. நம்முடைய கர்மம் அவனை நம்மோடே ஸஜாதீயனாக்கும்; அவனுடைய க்ருபை நம்மை அவனோடே 8. "பரமம் ஸாம்ய முபைதி" என்று ஸஜாதீயராக்கும்; D "பிறந்தவாறும்". (மகனாய் பிறந்து) பிறக்கை தவிராதாகில் தமப்பனானலோவென்னில்; தன்னுடைய பிறவி விஸஜாதீயத்துக்குப் போராதபின்பு ஆராய்ப் பிறக்கிலென் என்றுமாம்.

(ஒருத்தி) இன்னாளென்னாதே தங்கள் ப4யத்தாலே மறைத்துச் சொல்லுகிறார்கள். E "அத்தத்தின் பத்தாநாள்" என்னுமவர்மகளிறே. (பிறந்து) ஆவிர்ப்ப4வித்தாலாகாதோ? பன்னிரண்டுமாஸம் வயிற்றிலேயிருந்து பிறக்கவேணுமோ? 9. "தே3வகீபூர்வஸந்த்4யாயாமாவிர்ப்பூ4தம் மஹாத்மநா" என்று, பிறந்தானென்கை அவத்3யமென்று பரிஹரித்தான் ருஷி. அதுதான் அவத்3யமென்று D "பிறந்தவாறும்" என்று "பிறக்கவல்லன்" என்று சொல்லுகிறார்கள். (ஓரிரவில்) நாய்க்குடலுக்கு

---

A திருவாய் 3-5-5, B பெரிய திரு 11-5-2, C திருவாய் 1-3-11, D திருவாய் 5-10-1, E பெரியாழ் திரு 1-2-6.

நறுநெய் வகுக்குமோ? ஸம்ஸாரிகள் பொல்லாங்கு அவனை ஓரிராத் தங்கிப் போகவொட்டிற்றில்லையென்கை. அவ்விரவோடொக்குமிரவில்லை, பகலுமில்லை. மாதாபிதாக்கள் கைவிட்டவளவிலே கைதந்த ராத்ரி. பிறவாநின்றால் கண்காணவந்து பிறந்து தூர்யம் கொட்டப்பெறுதொழிவதே! (இரவு) காலக்ருத பரிணாமமில்லாத தேசத்திலே வர்த்தித்த இவன் காலக்ருதபரிணாமமான தேசத்திலே பிறந்தால் பெறுவதும் பெறுதொழியவேணுமோ?

(ஒருத்திமகனுய்) இருவருமிவனைப் பெறவேணுமென்று ஆஶ்ரயிக்க, அவளுக்கு அவதாரரஸத்தைக் காட்டிக்கொடுத்து, இவளுக்கு லீலாரஸத்தை அனுப₄விப்பிக்கிறபடி. 1. "அம்ஶாவதாரோ ப்₃ரஹ்மர்ஷே யோSயம் யது₃குலோத்₃ப₄வ:" என்றருஷிதானே 2. "கோபாலோ யாத₃வம் வம்ஶம் மக்₃நமப்₄யுத்₃த₄ரிஷ்யதி". அவள் கரும்பின் கேழைக்கொண்டவோபாதி, இவளும் கரும்பின் நடுவைக் கொண்டாற்போலேயிருக்கிறது. A "ஆப்புண்டு" B "தீங்கரும்பு". அங்கு ஈஶ்வரத்வலக்ஷணத்தோடே பிறந்தது பிறப்பில் புரையற்றாற்போலே, இவள் மகனானவளவிலும் பிறப்பில் புரையற்றிருக்கை. (ஒளித்துவளர) கம்ஸாதி₃களுடைய விஷத்₃ருஷ்டிகள் படாமே நாட்டார் செய்வன செய்யப்பெறாதே கள்ளர்பட்டது படுவதே! அந்தர்யாமியாய்ப் பட்டது பட்டான். உள்ளேயிருக்கச்செய்தே இவனில்லையென்று எழுதி எழுத்திடுமவன் முகங்காண ஸம்மதிக்குமோ? பிச்சேறின ப்ரஜை தாய்முன்பே நிற்கில் தாயைக்கொல்லும்; அவள் பேரநிற்கில் தன்னை முடித்துக்கொள்ளும். அதுக்காக முகம் தோற்றாதே நின்று நோக்குமாபோலே இவனும் முகம் தோற்றாதே நின்று இரண்டு தலையையும் நோக்குகிறான். இசைந்து 'அம்மே' என்றால் 'அடியேன்' என்கைக்குக் கிட்ட பிருக்கிறான்.

(தரிக்கிலானுகி) நாரதா₃தி₃கள் 'க்ருஷ்ணன் வளரா நின்றான்' என்று சொல்லக் கேட்ட பின்பு த₄ரிக்கமாட்டிற்றிலன். C "திண்கொளசுரரைத்தேயவளர்கின்றான்" ஈஶ்வரஸத்தையும் பொறுதொழிகை. (தான் தீங்கு நினைந்த) D "எத்திறம்" என்று அங்குத்தைக்குப் பரியவேண்டும் விஷயத்திலே தீங்கு நினைத்தது துஷ்ப்ரக்ருதியாகையிறே' (தான் தீங்கு நினைந்த) உத்தரக்ஷணத்திலே படப்புகுகிறதான்; 'தீங்கு' என்கிறது அப்பொல்லாங்கு தன்வாயால் சொல்லமாட்டாமை. 3. "அஸ்மாந் ஹந்தும் ந ஸம்ஶய:" E "மாய்த்தலெண்ணி" தங்களை நலிந்ததாயிருக்கை. பூதனையுள்ளிட்டாரை வரக்காட்டியும் வில்விழவுக்கென்றழைத்தும் நலியத்தேடினபடியும்.

(கருத்தைப் பிழைப்பித்த) அவன் நினைத்ததைப் பிழைக்கப்பண்ணுவித்து அந்நினைவை அவனோடே போக்கினபடி. (கஞ்சன்வயிற்றில் நெருப்பென்ன நின்ற) ஆஶ்ரிதர் வயிற்றில் நெருப்பை அவன் வயிற்றில் புகவிட்டபடி. (நெடுமாலே) இதெல்லாம் படவேண்டிற்று ஆஶ்ரிதர் பக்கல் வ்யாமோஹத்தாலேயென்கை. வஸுதேவதேவகிப் பிராட்டிகள் பக்கல் திருவுள்ளமன்றே. தாயார்க்கும் தமப்பனார்க்கும் செய்தன இவை. அவர்களையுமொளித்துச் செய்யுமவர்களன்றோ நாங்கள் என்கை.

---

A பெரிய திரு 10-6-1, B பெரிய திரு 2-5-1, C பெரியாழ் திரு 1-2-16
D திருவாய் 1-3-1, E திருவாய் 4-3-4-

(உன்னை) அர்த்தி₂த்வத்தால் நிரபேக்ஷனான உன்னை. (உன்னை அருத்தித்து வந்தோம்) உன்னைப் பெறவிருக்கிறோம். பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம். ஸ்ரீவைகுண்ட₂த்தில்நின்றும் இரப்பாளனாய் இவ்வளவும் வந்தவனிறே. எங்கள்வடிவைப் பாராய். A "மாசுடையுடம்பித்யாதி₃". (பறைதருதியாகில்) தாழ்ந்தார் உயர்ந்தாரை 'திருவுள்ளமாகில் செய்' என்னுமாபோலே, 'உன் அழகாலே எங்களை மயக்கத்தைப் பண்ணாதே செய்தருளப்பார்த்தாயாகில்' என்றுமாம்.

(திருத்தக்க செல்வமும்) திருவுக்குத்தக்க செல்வம். 1. "யஸ்ய ஸா ஜநகாத்மஜா அப்ரமேயம் ஹி தத்தேஜ:" என்கிறபடியே. (திருத்தக்க செல்வமும்) பிராட்டி ஆசைப்படும் ஸம்பத்து. B "திருவுக்கும் திருவாகிய". 2. "ஶ்ரிய: ஶ்ரியம்" (சேவகமும்) இத்தைக்காத்தூட்டவல்ல வீர்யம். (பாடி வருத்தமும் தீர்ந்து) வருத்தம் உன்னை நீ கண்டறியாயே. பிரிந்தார் படும்பாடு பாராயென்கை. (பாடி வருத்தமும் தீர்ந்து) கைவல்யம் போலே து₃:க்க₂நிவ்ருத்தியன்று தேட்டம், ப்ரீதிக்குப் போக்குவிடும்படியாகை. "பறை தருதியாகில் உன்னையருத்தித்து வந்தோம்". 25.

## ஸ்வாபதே₃ஶவ்யாக்₂யாநம்—இருபத்தைந்தாம்பாட்டு

அவ:— இருபத்தைந்தாம்பாட்டு. (ஒருத்திமகனாய் இத்யாதி₃) இப்பாட்டில்— கீழ்ப்பாட்டில் "எத்திப் பறைகொள்வான் இன்று யாம் வந்தோம் இரங்கு" (24) என்று இவர்கள் அபேக்ஷிக்கையாலே, 'உங்களுக்குச் செய்யவேண்டுவது என்?' என்ன,—"நெடுமாலே! நீ புருஷார்த்த₂த்தைக் கொடுத்தாயாகில், நாமும் உன்னையும் உன் கு₃ணங்களையும் ப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடி, பட்ட வ்யஸநமெல்லாம் தீர்ந்து மகிழக்கடவோம் என்கிறார்கள்.

வ்யா:—(ஒருத்தி இத்யாதி₃) அஷ்டாக்ஷரீ ப்ரதிபாத்₃யனாய், கு₃ணவிக்₃ரஹ விபூ₄திவிஶிஷ்டனாய் அவதரித்து. (ஓரிரவு இத்யாதி₃) லௌகிகர் அறியாத அத்₃விதீயகாலத்திலே வாஸுதே₃வ த்₃வாத₃ஶாக்ஷரீ ப்ரதிபாத்₃யனாய். (ஒளித்து வளர) கு₃ணவிக்₃ரஹவிபூ₄திகளாலே ஸங்குசித்து ஸ்வரூபமாத்ரேண வளராநிற்க.

(தரிக்கிலானாகி) ஸ்வரூபமாத்ரேண ஈஶ்வரஸத்தையையும் பொறுதவனாய். (தானித்யாதி₃) அநவரதம் மங்க₃ளாஶாஸநம்பண்ணக்கடவ விஷயத்திலே அவனால் ஒரு உபத்₃ரவமுண்டாய்ப் பொல்லாமையை நினைக்கையன்றிக்கே, தானே த்₃வேஷத்தை நினைந்த அபி₄ப்ராயத்தை வ்யர்த்த₂மாக்கி, அஹங்காரத்தினுடைய வயிற்றிலே நெருப்பைக் கொளுத்தினாற்போலே ஜ்வலித்து, அதனருகே நின்ற ஸ்வஶேஷபூ₄த சேதநவிஷய வ்யா மோஹாதிஶயத்தையுடையவனே! (உன்னை அருத்தித்து வந்தோம்) உன்னை அபேக்ஷித்துவந்தோம்.

(பறை தருதியாகில்) நீ புருஷார்த்த₂த்தைக் கொடுப்புதியாகில். (திருத்தக்க செல்வமும் சேவகமும்) பெரிய பிராட்டியாருக்குத் தகுதியான ஸ்வரூபரூபகு₃ணவிக்₃ரஹ விபூ₄தி விஶிஷ்டனாயிருக்கிற செல்வத்தையும், வீரசரிதத்தையும். (யாம்பாடி) அதுவே த₄ாரகமான நாம் பாடி. (வருத்தம் இத்யாதி₃) உன்னைப் பிரிந்து பட்ட வ்யஸநமெல்லாம் நிஶ்ஶேஷமாகத் தீர்ந்து ஆநந்தி₃க்கக் கடவோம். 25.

A நாச்-திரு 1-8, B பெரிய திரு 7-7-1.

## இருபத்தாரும் பாட்டு

மாலே மணிவண்ணு மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையா யருளேலோ ரெம்பாவாய்.

பதவுரை :— மாலே — (அடியாரிடத்தில்) அன்புடையவனே! மணி வண்ணு — நீல ரத்னம் போன்ற வடிவையுடையவனே! ஆலின் இலையாய் — (ப்ரளயகாலத்தில்) ஆலந் தளிரில் கண்வளர்ந்தவனே! மார்கழி நீராடுவான் — மார்கழி நீராட்டத்திற்காக, மேலையார் — முன்னோர்கள், செய்வனகள் — செய்யும் கிரியைகளுக்கு, வேண்டுவன — வேண்டும் உபகரணங்களை, கேட்டியேல் — கேட்டாயாகில், (அவற்றைச் சொல்லுகிறோம்;) ஞாலத்தை எல்லாம் — பூமி முழுவதும், நடுங்க — நடுங்கும்படி, முரல்வன — ஒலிக்கக்கூடிய, பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்சசன்னியமே போல்வன — பால் போன்ற நிறமுடையதான உன்னுடைய ஸ்ரீபாஞ்சஜந்யம் போன்ற, சங்கங்கள் — சங்கங்களையும், போய் பாடு உடையன — மிகவும் இடமுடையனவாய், சால பெரு — மிகவும் பெரியனவான, பறை — பறைகளையும், பல்லாண்டு இசைப்பார் — திருப்பல்லாண்டு பாடுமவர்களையும், கோலம் விளக்கு — மங்கள தீபங்களையும், கொடி — த்வஜங்களையும், விதானம் — மேற்கட்டிகளையும், அருள் — அளித்தருள, வேண்டும்.

---

## மூவாயிரப்படி — இருபத்தாரும்பாட்டு

அவ:— இருபத்தாரும்பாட்டு. a ‘உங்களுக்கு அபேக்ஷிதம் என்?’ என்ன; நோன்புக்கு வேண்டும் உபகரணங்களையும் அபேக்ஷிக்கிறார்கள்; ‘க்ருஷ்ண ஸம்ஶ்லேஷரஸோத்ஸுகரான இவர்கள் இவற்றை அபேக்ஷிக்கைக்கு அடியென்?’ என்னில்:— அந்த ஸம்ஶ்லேஷத்துக்கு ஏகாந்தமான நோன்பை a$_2$ ப்ரஸ்தாவிக்கையாலும், க்ருஷ்ணன் முகத்தை a$_3$ வெளியிலே காண்கைக்கு ஹேதுவாகையாலும், அவனுடைய திருநாமங்களை வாயாரச் சொல்லுகைக்கு ஹேதுவாகையாலும், இடையர் பக்கல் உபகாரஸ்ம்ருதியாலும் நோன்புக்கு அங்கங்களை வேண்டிக் கொள்ளுகிறார்கள்.

---

**பெ. அ.** இருபத்தாரும்பாட்டு. (மாலே இத்யாதி$_3$) a கீழ்ப்பாட்டில் — உங்களுக்கு வேண்டுவதென்னென்று அவன் கேட்க, அதுக்கு, “பறைதருதியாகில்” (25) என்று தங்களுக்கு உத்$_3$தே$_3$ஶ்யத்தைச் சொல்லியிருக்கவும், அவன், முலைமுதலானவற்றிலே ஸக்தனாகையாலே மறந்து மீளவும் கேட்கிறானென்று திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார் (உங்களுக்கு இத்யாதி$_3$) a$_2$ (ப்ரஸ்தாவிக்கையாலும்) என்றது — கோ$_3$பவ்ருத்$_3$த$_4$ர் “நீங்கள் நோன்பு நோலுங்கள்” என்று அநுமதி பண்ணியிடுகையாலும் என்றபடி. a$_3$ (வெளியிலே காண்கைக்கு ஹேதுவாகையாலும்) என்றது — நிலவறையிலே கிடந்த தங்களை நோன்புக்காக க்ருஷ்ணனோடே சேரவிடுகையாலும் என்று கருத்து.

---

**சி. அ.** இருபத்தாரும் பாட்டு. (மாலே) b, c அறுதியிடுகிறவிடத்திலே “நாராயணனே” (1) என்று சொல்லிவைத்து அபேக்ஷிக்கிறவிடத்திலே “மாலே” என்பானென்?

வ்யா:— b (மாலே) c முன்பு "நாராயணனே - நமக்கே பறை தருவான்" (1) என்று $c_2$ அபரிச்சே2த்3யமான $c_3$ மேன்மையையும் நினைத்திருந்தார்கள்; இப்போது இத்தலைக்கு வாத்ஸல்யமே ஸ்வரூபம் என்று நிலையிட்டார்கள். d 1. "ஶரணாக3த வத்ஸல:" என்று — ஶ்ரீராமாயணத்துக்கு உள்ளீடான ப்ரதா4நகு3ணத்தைப் பிராட்டி நிலையிட்டாள்; e மஹாபா4ரதத்துக்கு உள்ளீடான வ்யாமோஹ கு3ணத்தை "மாலே" என்கிற ஸம்போ3த4நத்தாலே இவர்கள் நிலையிட்டார்கள். f இவர்கள் $f_2$ பேச்சுக்கேட்டபின்பு பண்டையிலும் $f_3$ பெரும்பித்தனானபடி. g (மணிவண்ணா) h அபரிச்சே2த்3யனாயிருக்கச்செய்தேயும் முன்தானையிலே முடிந்து ஆளலாம்படியிருக்கை. i கீழ்ச்சொன்ன வ்யாமோஹம் வடிவிலே நிழலிடுகை.

---

பெ அ. b, c ப்ராப்ய ப்ராபகங்களை நிஷ்கர்ஷிக்கும்போது, "நாராயணனே நமக்கே பறை தருவான்" (1) என்று — நாராயணத்வத்தைப் புரஸ்கரித்திருக்கையால் அபேக்ஷித்த விடத்திலும், "நாராயணா! மணிவண்ணா" என்ன வேண்டியிருக்க, "மாலே" என்று வ்யாமோஹகு3ணத்தையிட்டு ஸம்போ3தி4க்கிறது எங்ஙனே கூடும்? என்ன, அருளிச்செய்கிறார் (முன்பு இத்யாதி3) $c_3$ (மேன்மையையும்) என்ற சகாரத்தாலே — "கார்மேனிச் செங்கண்" (1) என்று — வாத்ஸல்யத்தையும் நினைத்தார்களென்கை. இவர்கள் "யாம் வந்தகாரியம் ஆராய்ந்தருள்" (23) என்று சொன்னபோதே திருமுகத்தில் அலர்த்தியையும், வாவென்றவாறே ஸிம்ஹாஸநத்தேற வருகையையும் கண்டு, வ்யாமோஹமே இவனுக்கு ஸ்வரூபமென்று நிஶ்சயித்தார்களென்று கருத்து. d, e இவனுக்கு வாத்ஸல்யமே நிரூபகமென்னுமதுக்கு த்3ருஷ்டாந்தபூர்வகம் ப்ரமாணம் காட்டுகிறார் (ஶரணாக3தேத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) e (மஹாபா4ரதத்துக்கு உள்ளீடான) என்றது — அதுக்கு உப நிஷத்தான ஶ்ரீகீ3தையில் சரமத்தில், 2. "மாம்" என்றதற்குத் தாத்பர்யமான என்றபடி. இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்4யங்களாகிற கு3ணவிஶேஷங்கள் நேராக ப்ரகாஶிக்கிறதென்னக்கடவதிறே. f இப்போது மாலாகைக்கு ஹேது ஏது? என்ன; அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி3) $f_2$ (பேச்சு) என்றது — "யாம் வந்த காரியமாராய்ந்தருள்" (23) என்ற பேச்சு என்றபடி. $f_3$ 'மாலுடையவன்' என்னாதே "மாலே" என்று அத்தையே நிரூபகமாகச் சொல்லுகையாலே (பெரும்பித்தன்) என்றது. g, h "மாலே" என்றதுக்கு — ஸர்வாதி4கனாயென்று அர்த்தா2ந்தரம் திருவுள்ளம் பற்றி. 'மணியினுடைய வண்ணம்போலேயிருக்கும் வண்ணத்தை — ஸ்வபா4வத்தையுடையவனே!' என்று ஶப்3த3ார்த்த2மாய், அதிஸௌலப்4ய ஸ்வபா4வத்தை விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (அபரிச்சே2த்3யனாய் இத்யாதி3) i, j "மால்" என்றதன் முந்தின அர்த்த2த்தையே

---

ஸ்ரீ. அ. என்னில் (முன்பு நாராயணனித்யாதி3) b "மாலே" என்று வாத்ஸல்யம் சொல்லுகிறது. அன்றிக்கே வ்யாமோஹமாகவுமாம். அன்றிக்கே ஸர்வாதி4க்யமென்னவுமாம். $c_2$ அதுக்கு ஸூசகம் (அபரிச்சே2த்3யமான) என்றதும், $c_3$ (மேன்மையையும்) என்கையாலே வாத்ஸல்யமும் ப3ஹுவ்ரீஹி ஸமாஸத்தாலே ஸித்3த4ம். f மாலாகைக்கு ஹேதுவென்? என்ன அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி3) $f_3$ மாலுடையவன் என்னாமல் "மாலே" என்று நிரூபிக்கையாலே (பெரும்பித்தன்) என்கிறது. g "மணிவண்ணா" என்றதுக்கு நாலு தாத்பர்யம் — ஸௌலப்4யமாதல், வ்யாமோஹாதி3கு3ணப்ரகாஶமாதல், வடிவழகாதல், பெண்களுடைய வ்யாமோஹத்துக்கு நிதா3னமாதல், h, i "மாலே" என்றதுக்குப் பெருமையை விவக்ஷித்து மணியினுடைய ஸௌலப்4யத்தையும் ப்ரகாஶத்தையும் பற்ற

j இந்நீர்மையின்றிக்கே கௌதுகனானாலும் விடவொண்ணாத வடிவழகு. k பெண்கள் பிச்சுக்கு நிதா₃நமான வடிவென்னவுமாம்; lA "மாலாய்ப்பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்னக்கடவதிறே.

'நீங்கள் வந்தது என்?' என்ன; — வந்த காரியத்தைச் சொல்லுகிறார்கள்; (மார்கழிநீராடுவான்) மார்கழிநீராடுங்கைக்கு உபகரணங்கள் வேண்டிவந்தோம். m ஆஸ்திக்யாதிரேகத்தாலே m₂ அங்கி₃ கைப்பட்டிருக்கச்செய்தேயும் m₃ அங்க₃த்தை விடாதொழிகிறார்கள். n 'மார்கழி நீராட்டமாவது என்?' என்ன, — 'இது ப்ரஸித்₃த₄மன்றோ' என்ன; '1. "ஸ்வர்க்க₃காமோ யஜேத" என்னுமாபோலவும், 2. "நித்₃த்₄யாஸிதவ்ய:" என்னுமாபோலவும் n₂ ப்ரஸித்₃த₄மாயிருந்ததோ?' என்ன, (மேலையார் செய்வனகள்) அவைபோலும் அல்லகாண்இது; ப்ரஸித்₃த₄தமங்காண்இது.

---

பெ. அ. திருவுள்ளம் பற்றி, நைர்மல்யத்தையும் அழகையும் விவக்ஷித்து இரண்டாம் தாத்பர்யம்அருளிச்செய்கிறார் (கீழ்ச் சொன்ன இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே) k 'அழகு விடவொண்ணாமைக்கு ஹேதுவோ?' என்ன; அருளிச்செய்கிறார் (பெண்கள் இத்யாதி₃)

m "மார்கழிநீராட்டம்" என்கிற நோன்புநோற்கைக்கு வேண்டும் உபகரணங்களை இவர்கள் அபேக்ஷித்திலர்களாகிலும் வ்ருஷ்டிரூபமான ப₂லம் வரத்தட்டில்லை; க்ருஷ்ணன் ஸர்வஶக்தனாகையாலே இவர்களுக்கு உபகாரகரான கோ₃பவ்ருத்₃த₄ர் அபேக்ஷித்த வர்ஷத்தை வர்ஷிப்பிக்கக்கடவனன்றோ என்னும் ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (ஆஸ்திக்யேத்யாதி₃) அதாவது — நோன்பாகிற அங்கி₃ஸ்த₂நீயனான க்ருஷ்ணன் தங்களுக்குச் சொல்லிற்றுச் செய்கிறவனேயாகிலும், நோன்புக்கு வேண்டும் அங்க₃ங்களையும் விடாதொழிகிறது — வேறே சில அதி₄காரிகளுக்கு; அங்ஙனன்றிக்கே, தங்களைப் போலே நோன்பையே அநுஷ்டி₂த்தார்களாகில் வ்ருஷ்டிரூபப₂லம் ஸித்₃தி₄யாமல் போம்; அப்படியன்றிக்கே அவர்களுக்கும் ப₂லம் ஸித்₃தி₄க்கவேணுமென்னும் ஆஸ்திக்யாதிஶயத்தாலே என்கை. n "கோ₃பவ்ருத்₃த₄ரெல்லாரும் கூடி, 'வர்ஷார்த்த₂மாகப் பெண்கள் நோன்பு நோற்கக்கடவர்கள், க்ருஷ்ணன் அதுக்கு நிர்வாஹகனாகக்கடவன்' என்று க்ருஷ்ணனையும் பார்த்துச் சொல்லியிருக்கவும் அறியாதவனைப்போலே இங்கே ஏதென்று ப்ரஶ்நம் பண்ணுகை, வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகையே பரம ப்ரயோஜநமாகையாலே" என்று திருவுள்ளம் பற்றி, ப்ரஶ்நோத்தர பரம்பரையைக் காட்டுகிறார் (மார்கழி இத்யாதி₃) o த₄ர்மஜிஜ்ஞாஸமயத்தை வேதா₃திகளுக்கு முந்துறவெடுக்கையாலும்,

---

சி. அ. அருளிச்செய்கிறார் (அபரிச்சே₂த்₃யனாயித்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே) k "மாலே" என்றது மாலுண்டாக்குமவன் என்று பொருளாக்கி அருளிச்செய்கிறார் (பெண்கள் பிச்சுக் கித்யாதி₃) l (மாலாய்ப்பிறந்த) என்றது க்ருஷ்ணனாய்ப் பிறந்த என்றபடி. மால் — கறுப்பு. இவ்விடத்தில் வேண்டுவது "மாலே செய்யும் மணாளனை" என்ற மாத்ரம். m₂ (அங்கி₃) க்ருஷ்ணன். m₃ (அங்க₃ம்) என்றது தத்ஸம்ஶ்லேஷோபயுக்தமான உபகரணங்கள் என்றபடி. அதாவது நோன்பு. m₂, m₃ (அங்கி₃ கைப்பட்டிருக்கச் செய்தேயும் அங்க₃த்தை விடாதொழிகிறார்கள்) என்றது — ஸாத்₄யம் கைப்பட்டிருக்கவும் ஸாத₄னத்தை விடாதொழிகிறார்கள் என்று கருத்து. n₂ (ப்ரஸித்₃த₄மாயிருந்ததோவென்ன) என்றதுக்கு அப்ர

---

A நாச்-திரு 14-3

o "ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும் 1. "த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத3ாஶ்ச" என்றும், 2. "யத்3யதா3சரதி ஶ்ரேஷ்ட2:" என்றும் ஶிஷ்டாசாரமேயிறே. ப்ரஸித்3த4ப்ரமாணம். 'ஆகில் வேண்டுவது சொல்லுங்கோள்' என்ன; (வேண்டுவன கேட்டியேல்) p 'கேட்புதியாகில்' என்கிறது அந்யபரதையாலே; அந்யபரதையென்? என்னில்?—பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே, இவர்கள் முலையிலும் இடையிலும் கண்ணிலும் முகத்திலும் துவண்டு q ஆனைக்குப்பாடுவாரைப்போலேயிருக்கையாலே தட்டி q2 எழுப்புகிறார்கள். இத்தால்—ஸ்வாபதே3ஶத்தில், ஜ்ஞான ப4க்தி வைராக்3யங்களைச் சொல்லுகிறது. இவையிறே ஓரதி4காரிக்கு அழகாகிறது. காண்கைக்கு ஹேதுவாகையாலே, "கண்" என்று—ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது; போ4கோ3பகரணமாகையாலே, "முலை" என்று-ப4க்தியைச் சொல்லுகிறது; கார்ஶ்யத்தாலே, "இடை" என்று - வைராக்3யத்தைச் சொல்லுகிறது; 'கார்ஶ்யத்தாலே வைராக்3யம் தோற்றுமோ?' என்னில்,—கார்ஶ்யத்தாலே † விரக்தியைச் சொல்லிற்றாய், அத்தால்—விஷயாந்தரஸ்பர்ஶ ராஹித்யத்தைச் சொல்லுகிறது. 'r 3. "மது4ரா மது4ராலாபா" என்கிறபடியே, s உங்கள் வடிவு கண்ணுக்கு போ4க்3யமானவோபாதி, உங்கள் வார்த்தை செவிக்கு போ4க்3யமன்றோ? சொல்லுங்கோள்' என்ன; சொல்லுகிறார்கள்: — t (ஞாலத்தை இத்யாதி3) u 4. "ஸ கோ4ஷோ தா4ர்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத3யாநி வ்யதா3ரயத்" என்னுமளவன்றிக்கே, ஜக3த்தெல்லாம் வாழும்படி த்4வநிக்கைக்கு இடமுடைத்தானவை.

---

பெ. அ. 2. "தத்ததே3வேதரே ஜநா:" என்று — 'ஶிஷ்டாசாரமே கர்த்தவ்யமென்று தோற்றுகைவாலும், அதுவே அதிஶயித ப்ரமாணமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (ஶ்ருதிஸ்ம்ருதீத்யாதி3)

p ப்ரஶ்நம் பண்ணுகிறவனைக் குறித்து எங்கள் வார்த்தையைக் காது கொண்டு கேட்டாயாகில் என்னக்கூடுமோ? என்ன; அருளிச்செய்கிறார் (கேட்புதியாகில் இத்யாதி3) q ஆனைக்குப்பு — சதுரங்க3ம். q2, r 3. "மது4ராலாபா" என்கிறபடியே சொல்லப்பட்ட மது4ரமான தங்கள் ஆலாபத்தாலே எழுப்புகிறார்களென்று அந்வயித்து அர்த்த2ம் கண்டுகொள்வது.

t, u "ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன, பேரய்ப்பாடுடையன" என்று அந்வயித்து, "ஞாலத்தையெல்லாம்" என்றவிடத்தில் அத்தும் ஐகாரமும் அவ்யயமாய் "ஞாலம்" என்று — ப்ரதிகூலரைச் சொல்லுகிறதாய், ப்ரதிகூலரெல்லாரும் நடுங்கும்படி

---

சி. அ. ஶித்3த4மாயிருந்தது என்றபடி, q (ஆனைக்குப்பாடுவாரைப்போலே) என்றது — ஆனை மதித்திருக்கையாலே பாட்டுக்கேளாதென்றபடி. q ஆனைக்குப்பு — சதுரங்க3மாய் அவற்றிலே துவக்குண்டிருப்பார்கள் என்றுமாம்; "ஆனைக்குப்பாடுவாரைப்போலே தட்டி எழுப்புகிறார்கள்" என்றந்வயிப்பது. r அவயவங்கள் போ4க்3யம் என்றதுக்கு ப்ரமாணம் (மது4ரேத்யாதி3) s இத்தை விவரிக்கிறார் மேலே (உங்கள் வடிவு கண்ணுக்கு போ4க்3யமானவோபாதி) என்று. r அந்யபரனுயிருக்கிறவன் கேட்குமோ? என்ன, பேச்சினினிமையாலே கேட்குமென்கிறார் (மது4ராமது4ராலாபா இத்யாதி3) என்றுமாம். r, s அன்றியே, இந்த ஶ்லோகத்தை "ஞாலத்தை" என்கிறபத3த்தின் அவதாரிகையோடே கூட்டவுமாம். t, u "நடுங்க" என்றது ப4யத்தைச் சொல்லுகிறதன்று; எல்லாரும் கேட்டு ஆனந்த3த்தாலே ஈடுபடும்படி என்ற

---

† (பா) நிராத4ாரதையைச்

v A ''பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி''யிறே தாரகம். w அப்படியே நாடெல்லாம் இந்த த்வநி கேட்டு வாழவேணும். x இவர்கள் தாங்களும் ''வலம் புரிபோல நின்று அதிரவேணும்'' (4) என்றிறே சொல்லிற்று. y (பாலன்ன) z பாலைத் திரட்டினாற்போலேயிருக்கை. இப்படி இருப்பன a பல சங்கு வேணும். b (போய்ப்பாடு) c பேரிடமாயிருக்கை; இடமுண்டாகிலிறே த்வநி முழங்கியிருப்பது. d புகழ் என்றுமாம்; ருக்மிணிப்பிராட்டி போல்வாருக்கு உதவினானென்கிற புகழ்.

பின்னையோவென்ன, e (சாலப்பெரும்பறையே) f ஒரு f2 மன்றிலே த்வநிக்கை யன்றியே எங்குமொக்க த்வனிப்பதொரு பறைவேணும். 1. ''யயௌ தூர்யப்ரணாதேந பேரீணாஞ்ச g மஹாஸ்வநை:'' என்னுமாபோலே. பின்னையோவென்ன;— (பல்லாண்டிசைப்பாரே) திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு போருவார் வேணும். பின்னையோ வென்ன:— (கோல விளக்கே) அழகிய விளக்கு. அதாகிறது மங்களதீபம். (கொடி) திருக்கொடி ஆடவேணும். (விதானம்) மேல்கட்டி வேணும்.

---

பெ. அ. த்வநிக்க இடமுடைத்தாயென்று ஶப்தார்த்தமும் திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்ய பூர்வகம் பலித்த தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸ கோஷ இத்யாதி) ப்ரதிகூலர் நடுங்கும்போது அநுகூலமான ஜகத்தெல்லாம் வாழுகை அர்த்தஸித்தமென்று கருத்து. அன்றிக்கே, ''ஞாலம்'' என்றது — அநுகூலர்பரமாய், ''நடுங்க'' என்றது — இவற்றின் த்வநி செவி வழியே புகுந்து அம்ருதரஸம் போலே குளிர்ந்து வவ்வலிடப்பண்ணுகை என்று தாத்பர்யம் அருளிச்செய்கிறாரென்னவுமாம். v, w சங்குகளை இங்ஙனே விஶேஷித்ததுக்கு உட்கருத்தை த்ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறார் (பூங்கொள் இத்யாதி வாக்யத்வயத்தாலே) x நாடெல்லாம் வாழவேணுமென்னுமிவர்கள் பரஸம்ருத்திபரதைக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (இவர்கள் இத்யாதி) b, c, d ''போய்ப்பாடு'' என்றதுக்கு — இடமுடைத்தாகையைக் கீழ் ஒரு அர்த்தமாக அருளிச்செய்து, அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (புகழென்றுமாம் இத்யாதி)

e, f ''சாலப் பெரும்பறை'' என்றதுக்கு— மிகவும் பெரிதான வாத்யமென்று ஶப்தார்த்தமாய், அத்தால் பலிதத்தை வ்யாவர்த்ய பூர்வகம் அருளிச்செய்கிறார் (ஒரு மன்றிலே இத்யாதி) f2 மன்று — பொதுச்சாவடி. ஸ்ரீபாஞ்சராத்ரக்ரியாபாதே ஷோடஶாத்யாயே 2. ''ஜாம்பவந்தஞ்ச பித்தௌ து பேரீதாடநதத்பரம்'' இதி ஸ்திதம் வசநம் அத்ர அநுஸந்தேயம்.

---

சீ, அ. படி; முரலுகை—ஶப்திக்கை, v ஶங்கத்வநி தாரகமாயிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (பூங்கொள் திருமுகத்து இயாதி) y, z அன்ன — ஒத்த. b, c, d போய்ப்பாடு என்றதுக்கு இரண்டு பொருள்: பாடென்று இடமாய், ''போய்'' என்று மிகுதியாய், மிகவும் இடமுடைத்தான என்னுதல். அன்றிக்கே ''போய்ப்பாடு'' என்று கீர்த்தியாய், கீர்த்தியை உடைத்தான என்னுதல். e 'சால' என்றதும் 'பெரும்'' என்றதும் பெருமையாய் ''சாலப் பெரும்'' என்று மீமிசைச் சொல்லாலே மிகவும் பெரிய பறை என்றபடி. f2 (மன்றிலே) என்றது ஊர்ச்சந்தியிலே; விஶ்ரமார்த்தமாகத் திரளாகப் பலர் கூடியிருக்குமிடம். அவர்கள் கேட்கும்படி த்வநிக்கை என்றபடி. g ''மஹாஸ்வநை:'' என்கிற பதமும் இங்குத்தைக்கு

h என்று இவற்றை அபேக்ஷிக்க:— ‘சங்கும் பல கிடையாது, ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கொள்ளுங்கோள்’ என்றான்; தன்னைப்போலே இருப்பார் சிலருண்டாகிலிறே புறம்பு ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே இருக்கும் சங்கு உண்டாவது; i பறைக்குப் “பாரோர்களெல்லாம் மகிழப் பறை i$_2$ கறங்கக்” குடக்கூத்தாடினபோது திருவரையிற்கட்டின பறையையும், திருப்பல்லாண்டு பாடுகைக்குப் பெரியாழ்வாரையும் விளக்குக்கு i$_3$ நப்பின்னைப் பிராட்டியையும், கொடிக்குப் பெரிய திருவடியையும், மேல்கட்டிக்கு i$_4$ அத்தவாளத்தையும் கொள்ளுங்கோளென்றான். j ‘விதானத்துக்குத் திருவவதரித்த அன்று பணத்தையிட்டுக் கவித்துக்கொண்டு போந்த திருவனந்தாழ்வானைக் கொடாதொழிவானென்?’ என்னில்:— எல்லாரையும் போகச்சொன்னாலும் தன்னையொழிய j$_2$ ஓரடியிடமாட்டாதவனாகையாலே, அத்தவாளத்தைக் கொடுத்தான். k B “பெருமானரையில் பீதகவண்ணவாடை கொண்டிறே வாட்டந்தணியச் சொல்லிற்று. l ‘ஒரொன்று போராது, இப்படியிருப்பன பலவேணும்’ என்ன:— ‘இல்லாதத்தைத் தேடப்போமோ?’ என்ன, — ‘உனக்கு அரியது உண்டோ?’ என்ன;— ‘எனக்கு எளியதா யிருந்ததோ?’ என்ன,— (ஆலினிலையாய்) ‘சிறியதொரு வடிவைக்கொண்டு ஸர்வலோகத்தையும் சிறுவயிற்றிலேவைத்துப் பவனாயிருப்பதொரு ஆலந்தளிரிலே கண்வளர்ந்த உனக்கு முடியாதது உண்டோ? லோகத்தில் இல்லாததும் எங்களுக்காக உண்டாக்கவல்லை’ என்று கருத்து. (அருள்) வேண்டாதொழியில் செய்யலாவதில்லை; ஶக்தியில்லாமையில்லை; இத்தலையில் பேற்றுக்கு எல்லாம் ஹேது அவன் ப்ரஸாத$_3$மெனகை.

---

**பெ. அ.** h “ஆலினிலையாய்” என்று ஸம்போ$_3$தி$_4$த்ததுக்கு ப்ரஸக்திமுகே$_2$ந தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (என்று இவற்றை அபேக்ஷிக்க இத்யாதி$_3$) i “ஆலினிலையாய்” என்று வடபெருங்கோயிலுடையானைக்குறித்து இவர்கள் அபேக்ஷித்தபோது க்ருஷ்ணாவதாரத்தில் பறையைக்கொள்ளுங்களென்றும், நப்பின்னையைக் கொள்ளுங்களென்றும் சொன்னது, நாய்ச்சியாருடைய பா$_4$வநாப்ரகர்ஷத்தாலே அதீதகாலத்திலுள்ளதும் வர்த்தமானகாலத்தோடு ஒத்துத் தோன்றுகையாலே சேருமென்று கண்டுகொள்வது. j$_2$ (ஓரடியிடமாட்டாதவன்) என்றது — அவதாரத்திலுமுட்பட, 1. “ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக$_4$வ” என்றும், 2. “அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்$_3$ரத: ஸ்வபதஶ்ச தே” என்றும் சொல்லுகையாலே — ஸர்வதே$_3$ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை$_2$களிலும் தன்னைப் பிரியமாட்டாதவன் என்கை. k அத்யந்தம் இஷ்டமாகையாலே கொடுத்தானென்று பரிஹாராந்தரம் அருளிச்செய்கிறார் (பெருமான் இத்யாதி$_3$) a, l “சங்கங்கள்” என்று ப$_3$ஹுவசந

---

**சி. அ.** வேண்டுவது. i$_2$ (கறங்க)கோ$_4$ஷிக்க. i$_4$ (அத்தவாளம்) உத்தரீயம், i, k திருவநந்தாழ்வான் தன்னைப்பிரியமாட்டாமையாலே இத்தைக் கொடுத்தானென்னுதல்; அவர்களுக்கு அபேக்ஷிதமாகையாலே கொடுத்தானென்னுதல். k இது அபேக்ஷிதமாயிருக்குமோ? என்ன, அருளிச்செய்கிறார் (பெருமானரையில் இத்யாதி$_3$) மற்றுண்டான புடைவையாகாதோ, இவர்களுக்கு அத்தவாளமே என்கிற நிர்ப$_3$ந்த$_4$மென்? என்ன (பெருமானரையில் இத்யாதி$_3$) என்னவுமாம். i$_3$ நப்பின்னைப்பிராட்டியைக் கொடுக்கலாமோ? என்ன, அவளுக்கு விதே$_4$யராய் ஸத்$_3$ருஶைகளாகையாலும், மாத்ருத்வ ப்ரயுக்தமான புருஷகாரபா$_4$வத்தைப் பற்றவும்

"மாலே மணிவண்ணு" என்கிற இத்தால் 1."மாம்" என்கிற இடத்தில் ஸௌலப்யத்தைச் சொல்லிற்று; "ஆலினிலையாய்" என்கிற விசேஷணத்தால் 1."அஹம்" என்கிற இடத்தில் ஸஹாயாந்தரநிரபேக்ஷமான உபாயவேஷத்தைச் சொல்லிற்று; இப்பாட்டிற் சொல்லுகிறது — m 2. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்ய முபைதி" என்கிற ஶ்ருத்யர்த்தமும். 26.

---

மிருக்கையாலே, "பறை" இத்யாத்யேகவசநம் ஸமஷ்டிவாசகம் என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (ஓரொன்று இத்யாதி) 26.

---

கொடுக்கானென்கை, m இப்பாட்டால் ஸ்ரீபாஞ்சஜந்யம் தொடக்கமானவற்றை எல்லார்க்கும் கொடுக்கையாலே 2. "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம்" என்கிற ஶ்ருத்யர்த்தமும் சொல்லுகிறது என்கிறார் (நிரஞ்ஜந:) என்று. 26.

## ஆறாயிரப்படி இருபத்தாறும்பாட்டு

அவ:— இருபத்தாறும்பாட்டு. "பெண்காள்! 'உன்னையருத்தித்து வந்தோம் பறைதருதியாகில்' என்று சொன்னிகோள்; நம்முடைய ஸம்ஶ்லேஷ ரஸோத்ஸாஹமுடையவர்கள் வேறென்றை அபேக்ஷிக்கக்கூடாமையாலே, அதென் சொன்னிகோளென்று அதிலே ஒரு ஸம்ஶயம் வர்த்தியாநின்றது; அதாகிறது எது, அதுக்கு மூலம் எது; அதுக்கு வேண்டுவன எவை, அவற்றுக்கு ஸங்க்யை எத்தனை, அவற்றைச் சொல்லுங்கோள்" என்ன; "உன் முகத்தை வெளியிலே கண்டு உன் திருநாமங்களை வாயாலே சொல்லுகைக்கு ஹேதுவாயிருப்பதொரு நோன்பை இடையர் ப்ரஸ்தாபிக்கை யாலே, உன்னோட்டைக் கலவிக்கு அது அவிருத்தமாயிருக்கிறபடியைக்கண்டு, இடையர் பக்கல் உபகாரஸ்ம்ருதியாலே அந்நோன்பிலேயிழிந்தோம்; அதுக்கு முன்புள்ளார் செய்து போருவதொன்றுண்டு, அதுதனக்கு வேண்டும் உபகரணங்களான அங்கங்களுமிவை; அவற்றையுந் தந்தருளவேணும்" என்று வேண்டிக்கொள்ளுகிறார்கள். தாங்கள் இதுக்கு முன்பெல்லாம் அவனை ஆசைப்பட்டார்களாகச் சொல்லிக் கொண்டு போந்தார்கள்; இப்போது அவனைக் கண்டவாறே தங்களுடைய வ்யாமோஹம் குளப்படியாய், அத்வேஷகோடியிலே எல்லையாயிருந்தது; அவனுடைய வ்யாமோஹம் கடல்போலே எட்டப்போகாதே பிச்சு வடிவுகொண்டாற்போலே யிருந்தது; "இதுகொண்டுஇத்தனைநாளும் நாங்கள் வருந்தனையும் பாடாற்றினபடிதான் எங்ஙனே?" என்று "மாலே" என்கிறார்கள்.

வ்யா:— (மாலே) நாங்கள் தெளிந்து நோன்பு நோற்கவாகிலும் வல்லோமானோம்; நோற்கவும் க்ஷமனன்றிக்கே நாங்கள் வந்தெழுப்புமளவும் எழுந்திருக்கவும் மாட்டாத வ்யாமோஹமிருந்தபடியென்! (மாலே) "நாராயணன்" (1) "பையத்துயின்றபரமன்" (2) "தேவாதிதேவன்" (8) என்று-முன்பு அபரிச்சேத்யமான மேன்மை உனக்குள்ளதென்றிருந்தோம்; இப்போது, மேன்மை இடுசிவப்பு

வாத்ஸல்யமே உனக்கு ப்ரக்ருதியென்று நிலையிட்டோங்காண் உன்னைக் கண்டவாறே. பெருமாளுக்கு ப்ரதா₄நமான கு₃ணத்தை 1. "ஶரணாக₃த வத்ஸலர்" என்று ஸ்ரீராமா பணத்துக்குள்ளிடாக நிலையிட்டாள் பிராட்டி; அப்படியே க்ருஷ்ணனுக்கு ப்ரதா₄ந கு₃ணமாய் மஹாபா₄ரதத்துக்குள்ளிடான ஆஶ்ரிதவ்யாமோஹத்தை "மாலே" என்கிற ஸம்பு₃த்₃தி₄யாலே வெளியிடுகிறார்கள் இடைப்பெண்கள். "ராவணன் பின்னே பிறந்த நம்மை ரகு₄குலத்திலே பிறந்தார் கைக்கொள்ளுவர்களோ?" என்றிருந்தான் விபீ₄ஷணன்; "ராவணன் பின்னே பிறந்தவனை ராவணனை ஆசைப்படுகிற நமக்கு ஸித்₃தி₄க்கப் புகுகிறதோ?" என்றிருந்தார் பெருமாள்; இதிறே இரண்டுதலைக்கும் வாசி. இத்தலை ஒருமாஸம் ஜீவியேனென்னில், ஒருக்ஷணம் ஜீவியேனென்றிறே அத்தலை. A "வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணில்" என்கிற அளவேயிறே இவர்களது; A "என்னில் முன்னம் பாரித்துப் பருகினு"னிறே அவனது. B "எனைத் தோர் பலநாளழைத்தே"னிறே இவர்களது; B "என்றன் கருத்தையுற விற்றிருந்தா"னிறே அவனது. C "அதனில் பெரிய என்னவா"விறே இவர்களது; C "அவா வறச் சூழ்ந்தாயே"யிறே அவனது. "நாராயணனை நமக்குக் கிடைக்குமோ" என்று பெண்கள் நினைவு; "யது₃குலத்திற் பிறந்தார்க்குக் கிடைக்கப் புகுகிறதோ" என்று அவன் நினைவு. ஒருத்தி மகனானத்தை விட்டு ஒருத்தி மகனாய்த்து இவர்களுக்கிறே; ஒளித்து வளர்ந்தது கம்ஸனுக்கன்றே; பெண்களைப் பிரியாமைக்கிறே. D "நெஞ்சு துக்கஞ்செய்யப்போந்தாய்" E "நாமறிய ஆய்ப்பாடி வளர்ந்த". (மாலே) இவர்கள்பக்கல் பிச்சிறே ஒருபிறவியிலே இருபிறவியாய்த்து. F [மாலாய்ப்பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை] பிச்சாய்ப்பிறந்து பெண்களையும் பிச்சேற்றித் தன்னோடொரு கோவையாக்கும். G "மன்றில்குரவை பிணைந்தமால் என்னை மால் செய்தான்". தெளிவுடையார் பெண்களைச் சந்தியிலே வைப்பர்களோ?

"நம்முடைய வ்யாமோஹம் நீங்களறிந்தபடியென்?" என்ன: அகவாயில் வ்யாமோஹம் வடிவிலே நிழலிட்டுக் காட்டுகையாலே தெரிந்ததென்கிறார்கள்— (மணிவண்ணா) பெண்கள் பிச்சுக்கு நிதா₃னமிருக்கிறபடி. (மணிவண்ணா) தாமரையிலிருக்கிறவள்—அத்தைவிட்டு வருகிறது இவ்வடிவைக்கண்டிறே. H "பனிமலராள் வந்திருக்கும் மார்வன் நீலமேனி மணிவண்ணன்". (மணிவண்ணா) வ்யாமோஹ மின்றிக்கே கா₄துகனானாலும் விடவொண்ணாத வடிவழகு. (மாலே மணிவண்ணா) இப்படி வடிவுபடைத்தாரும் பிறரத்தை ஆசைப்படுவார்களோ? பிச்சர்கையில் மாணிக்கமாய் உன்னுடம்பு உன்னதாமோ? அன்றிக்கே, "மால்" என்று — பெரியோனென்றபடியாய், I "சூட்டுநன்மாலைகள்" எடுத்து ஸூரிகள் ஸேவிக்கவிருக்கும் ஈஶ்வரத்வஞ்சொல்லுகிறது. "மணிவண்ணா" என்று — I "வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து" அபரிச்சே₂த்₃யனாயிருக்கச்செய்தே, முன்றானையிலே முடிந்து

A திருவாய் 9-6-10, B திருவாய் 8-7-1, C திருவாய் 10-10-10, D நாச்-திரு 3-9
E பெரியதிரு 5-5-5, F நாச்-திரு 14-3, G பெரியதிரு 11-2-2, H பெரியதிரு 2-2-9
I திருவிருத்தம் 21.

பெண்களுக்கு அடக்கியாளலாம்படியிருக்கிற ஸௌலப்₄யத்தைச் சொல்லுகிறதாகவுமாம். ''மணிவண்ணா'' என்று — மணியினுடைய ஸ்வபா₄வத்தைச் சொல்லுகிறது. அதாவது ''உண்டு'' என்ன உயிர்நிற்கையும், உடையவன்காலிலே ஸர்வரும் விழும்படியிருக்கையும், இழந்தார் பிழையாதொழிகையும், கைப்பட்டார்க்குப் பூணலாயிருக்கையும், பூணுதார்க்கு அழித்து உண்ணலாயிருக்கையும், கிழிச்சீரையிலே அடக்கலாயிருக்கையும், பிறர்க்கேயாயிருக்கையும், அளவுபடாமல் உபகரிக்கையும், ''கொடுத்தோம்'' என்று நினைத்திராதொழிகையும், வேறொன்றில் கண்வைக்கவொட்டாதொழிகையும் தொடக்கமான ஸ்வபா₄வங்கள்.

'A ''என்று மெனக்கினியானையென் மணி வண்ணனை'' என்று நம்மை ஆச்சி பலகாலுஞ் சொல்லும்; தாய்க்கு மணிவண்ணனித்தனையன்றோ; B ''மணிமாமை'' குறைவில்லாதே C ''அழகியாரிவ்வுலகமூன்றுக்கும்'' என்கிற உங்களுக்கேற உடம்பு படைக்கப்போமோ? இத்தனை மிகை நம்மைச் சொல்லுகிறதென்? போந்தகார்யத்தைச் சொல்லுங்கோள்' என்ன-(மார்கழிநீராடுவான்) ''மகிழ்ந்து-மார்கழிநீராட'' (4) என்று ஊராக ஸங்கல்பித்த காரியம் தலைக்கட்டுகைக்காக. ஸாத்₄யம் கைப்பட்டிருக்கச் செய்தே, ஆந்ருஶம்ஸ்யத்தாலும், ஆஸ்திக்யாதிஶயத்தாலும் க்ருத்யாம்ஶம் விடார்களிறே; மார்கழிநீராடுகைக்கு உபகரணங்கள் வேண்டிவந்தோம்.

இவர்கள் சொல்லுமது கேட்கைக்காக, இத்தை க்ஷேபித்து ''இது எங்கேயுள்ளதொன்றுதான்?'' என்றான்; 'இது இங்ஙனே அப்ரஸித்₃த₄மாயிருந்ததோ?' என்றார்கள்; ''காமநாதி₄காரிகளுடைய ஜ்யோதிஷ்டோமாதி₃ விதி₄போலே ப்ரஸித்₃த₄மே'' என்ன; ''அநந்யப்ரயோஜநைகளான எங்கள் முன்னே ப்ரயோஜநாந்தரபரருடைய விதி₄யைக் காட்டினாயே'' என்று இவர்கள் சொல்ல; ''முமுக்ஷுக்களுடைய த்₄யாந விதி₄போலே ப்ரஸித்₃த₄மாயிருந்ததோ?'' என்று அவன் சொல்ல; ''நாஸ்திகரைப்போலே நீ சொல்லுகிறதென்? ஆளறிந்து வார்த்தை சொல்லாய், 'நாராயணனே நமக்கே பறைதருவான்' (1) என்பாருடைய அநுஷ்டா₂நம் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லுகிறவைபோலல்லகாண், ப்ரப₃லப்ரமாணஸித்₃த₄ங்காண்'' என்கிறார்கள்—(மேலையார் செய்வனகள்) ''விதி₄ப்ரவ்ருத்தமானால் ப₂லவ்யாப்தமாந்தனையும் ஸம்ஶயத்துக்கு விஷயமுண்டு; அநுஷ்டி₂த்துப் ப₂லஸித்₃தி₄யுண்டானதுக்கு ஸம்ஶயமில்லையே; 'விச்வாமித்ரன் சொன்னான்; கண்டு₃ சொன்னான்' என்றுப்போலேயோ கபோதமநுஷ்டி₂த்தது?'' என்றார்கள். (மேலையார் செய்வனகள்) நிர்த்தோ₃ஷப்ரமாண ஶாஸ்த்ரந்தானும், 'வ்யாஸன் சொன்னான்' 'மநு சொன்னான்' 'ப்₃ரஹ்மவாதி₃கள் சொல்லுவர்கள்' 'யாதொருபடி அவர்கள் அவ்விடத்திலே வர்த்தித்தார்கள் அப்படி வர்த்தி' என்று, ஜ்ஞானவான்களுடைய வசநத்தையும் அனுஷ்டா₂னத்தையுமன்றோ ப்ரமாணமாகச் சொல்லுகிறது; வேத₃ங்

---

A பெரியாழ் திரு 3-2-10, B திருவாய் 4-8-1, C திருவாய் 6-2-6.

களுக்கு முன்னேயன்றே தர்மஜ்ஞருடைய ப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. (மேலையார் செய்வனகள்) "யாதொன்றை யாதொன்றை ஶ்ரேஷ்டர்கள் ஆசரித்தார்கள், யாதொரு அளவு செய்தார்கள் அவ்வளவு லோகமநுவர்த்திக்கும்" என்று 'ஶிஷ்டாசாரமே ஸ்திரப்ரமாணம்' என்று தேர்த்தட்டிலே நின்று சொன்ன நீ, எங்களைக் கண்டவாறே மறந்தாயோ? ஶாஸ்த்ரம் விதித்ததேயாகிலும் ஶ்ரேஷ்டர் அநுஷ்டாநமில்லாதவிடத்தில் தவிரக் கண்டறியாயோ? "அஷ்டகையில் பஶுவிஶஸநம் கர்த்தவ்யம்" என்னுமிடம் பசுமேய்ப்பார்க்குத் தெரியாதே; உன்னைப் பரதேவதையென்றும், உனக்கு வாசகஶப்தம் நாராயணன் என்றும் நாங்கள் ஆதரிக்கிறது வேதஶாஸ்த்ரஸித்தமென்றன்றே; A "விட்டு சித்தர் தங்கள் தேவரை" என்றும் B "விட்டு சித்தன் விரும்பிய சொல்" என்றுமன்றே? வைதிகவிதிகளுமெல்லாம் உன்னுடை யாருடைய கம்பீரமான மநஸ்ஸை அநுவர்த்தித்திறே ப்ரமாணமாகிறது, ஒக்க ஓதாநிற்கச் செய்தே ஒருமந்த்ரத்தை ஸ்வீகரித்து, இதரமந்த்ரங்களைக் கைவிட்டது ஶிஷ்டாஶிஷ்ட பரிக்ரஹங்களாகையாலேயிறே; அப்படி பரிக்ரஹித்த மந்த்ரந் தன்னில் மந்த்ரரத்நத்துக்கு உத்கர்ஷம் ஆசார்யருசி பரிக்ருஹீதமென்றிறே. C "திருமால் திருநாமம் நானுஞ்சொன்னேன் நமருமுரைமின்" என்னக் கடவதிறே.

(வேண்டுவன) "லோகஸங்க்ரஹதயா அநபேக்ஷிதங்களும் செய்யாநிற்பர்கள். அவர்கள் செய்யுமாபோலே அவையெல்லாஞ் செய்யப்போகாதே" என்ன— (வேண்டுவன) அவர்கள் செய்து போருமவற்றில் இப்போது அதிகரித்த காரியத்துக்கு அபேக்ஷிதமுமாய் ஸ்வரூபவிரோதமும் பிறவாதேயிருக்குமவை. இவர்கள் "மணிவண்ணா" என்று அவன் வடிவிலே கண்வைத்துக்கொண்டிருக்கிற மாத்ரம்; அஞ்சுலக்ஷம் குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே, அவர்கள் கண்ணிலும் முலையிலும் இடையிலும் துவக்குண்டு அந்யபரனாயிருந்தான். தட்டியுணர்த்தி (கேட்டி) என்கிறார்கள். இவர்களாலும், புறம்புள்ள அந்யபரதையிறே தவிர்க்கலாவது; தங்கள் பக்கல் அந்யபரதை தவிர்க்கப்போகாதிறே. ஊரார் இசையாதபோதிறே D ஓடியகம்புகவேண்டுவது; இப்போது வைத்தகண்வாங்காதே அநுபவிக்கலாமே; ஆகையாலே பார்த்துக்கொண்டிருந்தான். "சிலர் பட்டினி கிடக்கச் சிலருண்டு ஸுகிக்குமாபோலே, கெடுவாய்! நீ என் செய்கிறாய். கேட்கிறாயீ!" என்கிறார்கள்.

'உங்களுடைய ஜ்ஞாந பக்தி வைராக்யங்களினுடைய நிழலீடாகையாலே கண்ணும் முலையும் இடையும் போக்யமாகையாலே உங்கள் வடிவைப் பார்த்துக் கொண்டிருந்தோம்; உங்களுடைய E "மழறு தேன் மொழிகள்" செவிக்கு போக்யமாம்படி கேட்கிறோம்; திருவுள்ளமாகலாகாதோ வேண்டுவதெல்லாம்' என்றான்; — (ஞாலத்தையெல்லாம் — போய்ப்பாடுடையனவே) என்கிறார்கள். ஜகத்தெல்லாம் அதிரும்படியான த்வனியையுடைத்துமாய், இடமுடைத்துமாய்,

A நாச்-திரு 10-10, B திருப்பல் 12, C பெரியதிரு 6-10-6, D பெரியாழ்திரு 2-9-4
E திருவாய் 6-2-5

பாலேத்திரட்டினுற்போலே அழகிய நிறத்தையுடைத்தாய், பல சொல்லுகிறதென். உன்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யம் போலேயிருக்கும் அநேக ஶங்க₂ங்கள் வேணும். (ஞாலத்தையெல்லாம் நடுங்க) ப₄ாரத ஸமரத்திலே முழக்கம் து₃ர்யோத₄நாதி₃களே நடுங்கப்பண்ணினவளவிறே: இச்சேர்த்திக்கு ப்ரதிகூலராயிருப்பார் யாவர் சிலர், அவர்களெல்லாம் நடுங்கவேணும். A ''பற்ருர் நடுங்க'' B ''பூங்கொள் திருமுகத்து''. சிலரை வாழ்விக்கும்; சிலரைக்கெடுக்கும். வர்ஷார்த்த₂மாகப் பெண்கள் புறப்படும் போதை ஶங்க₂த்₄வநி கேட்டு, ''வலம்புரி போல் நின்றதிர்ந்து'' (4) என்னும்படி மேக₄ங்களுட்பட முழங்கும்படி ஶப்₃தி₃க்கவேணும். (பாலன்னவண்ணம்) ''மணி வண்ணு'' என்று — இவன் நிறம் உத்₃தே₃ஶ்யமானுல் இவனேடு ஸ்பர்ஶமுடையார் நிறமும உத்₃தே₃ஶ்யமாகச் சொல்லவேணுமோ?

(உன் பாஞ்சசன்னியம்) C''தாமோதரன் கையில்'' என்கிறபடியே. (போய்ப்பாடுடையன) பேரிடமாயிருக்கை. இடமுண்டாகிலிறே த்₄வநி முழங்கியிருப்பது. ''போய்ப்பாடு'' என்று—புகழுடைமையாகவுமாம். அதாவது—ருக்மிணிப் பிராட்டி போல்வார்க்கு உதவினதன்றிக்கே. D ''சங்கரையா உன் செல்வம்'' என்றும், E 'பொதுவாகவுண்பதனே'' என்றும்-நாய்ச்சிமாருங்கூட ஊடும்படியான வேண்டற்பாட்டையுடையனுகையாலே வந்த புகழ்; அல்லாதவை வேண்டுவதுக்கு முன்னே ப்ரத₄ாநம் மங்க₃ளஶப்₃த₃மாகையாலே வேண்டுகிருர்கள். (உன்பாஞ்சசன்னியம்) என்கிருர்கள் இயலறிவாஞெருவனுகையாலே தானே அறியுமென்று; தன்னுடைய பாஞ்சஜந்யம்போலேயிருக்கும் சங்கில்லே; F ''உன்னேடுடனே''. அதுக்கீடாகத்G''தானுகக்கு''மாகையாலே அது கூடாமைக்காகத் தானே கூட வருமென்று நினேத்து, ''ஒன்று கண்டோம், பின்னேயோ?'' என்ருன்; (சாலப்பெரும்பறையே) எழுச்சிக்குச் சங்கு ஊதினுல் புறப்பாட்டுக்குக் கொட்ட வேண்டாவோ? பாஞ்சஜந்ய த்₄வநியோடின திக்கெல்லாம் முழங்கவல்ல மிகவும் பெருத்ததொரு பறைவேணும்.

''பின்னேயோ?'' என்ருன்; (பல்லாண்டிசைப்பாரே) கொட்டிக்கொண்டு புறப்படும்போதே எதிரே நின்று காப்பிடுவார் வேணும். (கோலவிளக்கே) பாடுவார் எங்கள் முகத்திலே விழித்து நாங்கள் அவர்கள் முகத்திலே விழித்துக்கொண்டு போம்படி த₃ர்ஶநீயாயிருப்பதொரு மங்க₃ளதீ₃பம் வேணும்.

(கொடியே) கிட்டினுர்க்கிறே விளக்கு ப்ரகாஶிப்பது; எங்களேக்கண்டு தூ₃ரத்திலே வாழும்படி முன்னே பிடித்துக்கொண்டுபோம்படி ஒரு கொடி வேணும். (விதானமே) புறப்படும்போதே பனி தலேயில் விழாதபடி ஒரு மேற்கட்டி வேணும். குளிக்கப்போம்போதைக்கு வேண்டுமளவு இது என்கிருர்கள். ''பெண்காள்! இப்

---

A பெரியாழ் திரு 3-3-5, B நாச்-திரு 9-9, C நாச்-திரு 7-4,
D நாச்-திரு 7-7, E நாச்-திரு 7-9, F நாச்-திரு 7-5,
G நாச்-திரு 11-1.

படியிருப்பன தேடப்போமோ? துர்க்கடங்களைச் சொன்னிகோளே'' என்ன; ''உனக்கு அரியதுண்டோ'' என்றார்கள்; ''எனக்கு எளிதாயிருந்ததோ?'' என்றான்; (ஆலினிலையாய்) உன்னுடைய சிறிய வயிற்றிலே பெரிய லோகங்களெல்லாவற்றையும் வைத்து ஒரு பவனான ஆலிலையிலே கிடந்து அகடிதங்களைச் செய்யவல்ல உனக்கு அரியதுண்டோ? லோகத்தில் இல்லாததெல்லாம் எங்களுக்காக உண்டாக்க வல்லவனன்றே. (ஆலினிலையாய்) A [பாலன் தனதுருவாய்] — வடதளஶாயியுடைய வ்ருத்தாந்தம் க்ருஷ்ணன்பக்கலிலேயிறே காண்பது. B ''பண்டொரு நாளாலினிலை வளர்ந்த சிறுக்கனவனிவன்'' C 'வையமேழுங்கண்டாள்' D ''அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும் அனைவர்க்குங்காட்டிற்றிலையே''.

''மாலே மணிவண்ணா'' என்கிறவிடத்தில்-ஸௌலப்யஞ்சொல்லுகிறது; ''ஆலினிலையாய்'' என்கிறவிடத்தில் ஸர்வஶக்தியோகஞ்சொல்லுகிறது. அது 1. ''மாம்'' என்கிறத்தின் அர்த்தம்; இது 1. ''அஹம்'' என்கிறத்தின் அர்த்தம். E ''மாலாயாலிலை வளர்ந்து'' என்னக்கடவதிறே.

(அருள்) ஶக்தியிராமையில்லை; வேண்டியிராதொழியில் செய்யலாவதில்லை; தரில் அரியதில்லை; தாராதொழியில் வளைப்பிடவொண்ணாது. (ஆலினிலையாய் அருள்) F ''என்றுமுன்றனக்கெங்கள்மேலிரக்கமெழாதது'' என்னக்கடவதிறே. இப்போது அகடிதமிறே என்று கண்ணழியாதே க்ருபைபண்ணவேணும். (ஆலினிலையாயருள்) G ''அருளாதொழியுமே ஆலிலைமேலன்று தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்'' என்று—வடதளஶாயியருளிறே ப்ரஸித்தமாயிருப்பது. 26.

## ஈராயிரப்படி — இருபத்தாறும் பாட்டு

அவ— இருபத்தாறும்பாட்டு. 'பெண்காள்! H ''எளிவருமியல்வினன்'' என்கிறபடி நம்மை உள்ளபடி அறிந்தீர்கள். உங்களுக்குச் செய்ய வேண்டுவதென்?' என்ன; தங்களுக்குச் செய்ய வேண்டுவது சொல்லுகிறார்கள்.

வ்யா:- (மாலே) வாத்ஸல்யமே ஸ்வரூபமானவனே! (மணிவண்ணா) அபரிச்சேத்யனுயிருக்கச்செய்தே முன்தானையிலே முடிந்தாளலாம்படியிருக்கை. கதாசனுலும் விடவொண்ணாத அழகையுடையவனே! (மார்கழிநீராடுவான்) மார்கழி நீராடுகைக்கு உபகரணம் வேண்டிவந்தோம். அங்கி கைப்பட்டவிடத்திலும் அங்கம் கைப்படாதொழிவதே! நாஸ்திகரைப்போலே 'மார்கழி நீராட்டாவதென்?' என்ன; 'இதறியாயோ?' என்ன; 'ஜ்யோதிஷ்டோமம்போலே ப்ரஸித்தமாயிருக்க

A முதல்-திருவ 69, B பெரியாழ் திரு 1-4-7, C பெரியாழ் திரு 1-1-6,
D பெரியாழ் திரு 2-3-8, E பெரிய திரு 5-7-9, F நாச்-திரு 2-2,
G மூன்-திருவ 19, H திருவாய் 1-3-2.

வந்தீர்களோ?' என்ன, 'எங்களுக்குஸ்வர்க்காதிகளில் ஶ்ரத்தையுண்டோ?'என்ன, 1."ஸித்தஸ்யாஸிதவ்ய:" என்கிறப்போலேதான் உண்டோ? என்ன, ப்ரமாணங்களை விஶ்வஸித்தால் பலிக்கிலும் பலிக்கும், தவிரிலும் தவிரும். 2."யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:" என்று பூர்வர்கள் அனுஷ்டித்ததாகையாலே பலத்துக்கு இழவில்லை அதுவே அமையும்; நீ இடையிலறிவதொன்றன்று.

(மேலையார் செய்வனகள்) "என்ன தப்பைச் சொன்னோம்? நம்மைக் கோபியாதே வேண்டுவன சொல்லலாகாதோ?" என்றான். (வேண்டுவன கேட்டியேல்) 'உன் அந்யபரதை கெட்டால் சொல்ல வேணுமே' என்ன, அந்யபரதை என்னென்னில்; பஞ்சலக்ஷம் குடியில் பெண்கள் முன்னே வந்து நிற்கையாலே இவர்கள் வார்த்தை கேளாதே இவர்கள் வடிவழகிலே மண்டினானென்கை. இவர்கள் 'உன்கார்யத்துக்கு வந்தோமோ?' என்ன, 'உங்கள் வடிவழகு கண்ணுக்கிலக்கானவோபாதி உங்கள் வார்த்தை என் செவிக்கிலக்கன்றோ; அதுவும் என் கார்யமன்றோ; சொல்லுங்கோள்' என்ன;

(ஞாலத்தையித்யாதி) 'இடமுடைத்தாய், உன் திருமேனிக்குப் பகைத்தொடையாம்படி பாலைத்திரட்டினாற்போலே இருக்கிற நிறத்தையுடைத்தாய் 3."ஸகோஷோ தார்த்த ராஷ்ட்ராணாம்" என்கிறபடியன்றிக்கே நின்று முழங்கக் கடவதுமாய், பல சொல்லி என்? உன்கையில் பாஞ்சஜந்யம் போலிருப்பன பல சங்கங்கள் வேணும்' என்கிறார்கள்.

(போய்ப்பாடு) புகழ் என்றுமாம். 'இதுவாயிற்று; இனியோ?' என்ன (சாலப் பெரும்பறையே) ஒரு மன்றளவில் த்வனிக்கையன்றிக்கே எங்கும் கேட்க த்வனிக்கிறதொரு பறை வேணும். 4."யயௌ தூர்யப்ரணாதேந பேரீணாம் ச மஹாஸ்வந:". 'இதுவாய்த்து; பின்னையோ?' என்ன,—(பல்லாண்டிசைப்பாரே)திருப்பல்லாண்டு பாடுவாரும் வேணுமென்கை. (கோலவிளக்கே) மங்களதீபம்.(கொடி) திருக்கொடியாடவேணும். (விதானமே) திருமேல்கட்டு. இவைவேணுமென்ன;

'பெண்காள்! இவை நம்மால் செய்யலாயிருந்ததில்லை' என்ன, (ஆலினிலையாய் அருள்) "ஸர்வலோகத்தையும் உன் திருவயிற்றிலே வைத்து ஓராலிலையிலே கண்வளர்ந்த உனக்கு முடியாததுண்டோ? தந்தோமென்னுமத்தனையன்றோ?" என்ன, "அப்படியாகிறது?" என்று புறம்பு தன்னைப்போலேயொரு தத்வமுண்டாகிலிறே தன்கையில் சங்குபோலேயிருக்கும் சங்குண்டாவது. A 'தாமுகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ" என்று இவர்களுகந்த சங்குதன்னைக் கொடுத்தான். B 'பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க' என்று கூத்தாடுகிறபோது அரையில் கட்டின பறையையும் பறையடிக்கைக்கு ஸ்ரீஜாம்பவான் மஹாராஜரையும் கொடுத்தான். திருப்பல்லாண்டு பாடுகைக்குப் பெரியாழ்வாரையும் நம்மாழ்வாரையும் கொடுத்தான். மங்களதீபத்துக்கு நப்பின்னைப் பிராட்டியையும் கொடுத்தான். கொடிக்குப் பெரிய திருவடியையும், விதானத்துக்குத் திருவனந்தாழ்வானையும் கொடுத்தான். 26.

---

A நாச்-திரு 11-1, B சிறிய திருமடல் 12.

## நாலாயிரப்படி — இருபத்தாறும்பாட்டு

அவ:— இருபத்தாறும்பாட்டு.— "பெண்காள்! உங்களுக்கு அபேக்ஷிதமென்?" என்று க்ருஷ்ணன் கேட்க, நோன்புக்கு வேண்டும் உபகரணத்தைச் சொல்லி, அவற்றைத் தரவேணும் என்கிருர்கள்.

வ்யா:— (மாலே) தங்கள் பக்கலிலே பண்ணின வ்யாமோஹமிருக்கிறபடி. இவர்கள் பேச்சுக் கேட்டபின்பு பண்டையிலும் பிச்சின்மேலே பிச்சாயிற்று. பண்டு 'ஸர்வேஶ்வரன் நிர்வாஹகன் ஸர்வஜ்ஞன் ஸர்வஶக்தி' என்றிருப்பர்கள். இப்போது இத்தத்வத்தை அழகிதாக நிலையிட்டாள்; வாத்ஸல்யமே ஸ்வரூபம் என்றபடி. பிராட்டி சக்ரவர்த்தித் திருமகனை, 1. "ஶரணாக₃தவத்ஸல:" என்று ஸ்வரூபத்தை நிலையிட்டாள். அதுவே ஸ்ரீராமாயணத்துக்குள்ளீடான ப்ரதா₄நகு₃ணம்; இங்கு இவர்கள் 'ஶரணாக₃தபக்ஷபாதி' என்று நிலையிட்டார்கள். இதுவே மஹாபா₄ரதத்துக்குள்ளீடான ப்ரதா₄நகு₃ணம். (மணிவண்ணா) அபரிச்சே₂த்₃யனுயிருக்கச்செய்தே முன்றானையிலே முடியலாம்படியிருக்கும்; (மணிவண்ணா) பிச்சு வடிவிலே தெரிந்திருக்கும் என்றுமாம். (மணிவண்ணா) பெண்கள் பிச்சுக்கு நிதா₃நம். A "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" நீர்மையின்றிக்கே க₄ாதுகனானாலும் விடவொண்ணாத வடிவழகென்று. (மாலே) ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் 2. "விபீ₄ஷணோ மஹாப்ராஜ்ஞோ பூ₄மிம் ஸமவலோகயந்" என்று பெருமாளைக் கிட்டின பின்பு, 'நம்மைக் கைக்கொண்டு நம்மை உளோமாகப் பண்ண வல்லரே' என்று தானிருந்த இருப்பைப் பெருமாள் நினைத்திருந்தமை முகத்திலே தோற்றியிருந்தது. முற்பட்ட நினைவுக்கு ரிஷி 3. "உவாச ச மஹாப்ராஜ்ஞ:" என்றான்; பிற்பட்ட பெருமாள் ப்ரக்ருதியை அறிந்தபடிச், 2. "விபீ₄ஷணோ மஹாப்ராஜ்ஞோ பூ₄மிம் ஸமவலோகயந்" என்றபடியே நிலையிட்டார்கள் இவர்களும். "நாராயணனே நமக்கே பறைதருவான்" (1) என்றிருந்தார்கள். 'பெண்கள் நம்மைக் கடாக்ஷிப்பது காண்!' என்று இருந்த இருப்பைக்கண்டு தலை சீய்க்கிருர்கள். 'நீங்கள் வந்ததென்?' என்ன, வந்த காரியத்தை இருவரும் மறந்தார்கள். இருவர் நெஞ்சையும் கல்லாலேயன்றோ பண்ணிற்று; ஆகிலும் இவர்கள் விடார்களிறே. இவர்கள் அவனுக்கு வரிசை கொடுக்கிருர்கள். 4. "வைதே₃ஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயாஸஹ". அவை மாறிநிற்கிறபடி.

(மார்கழி நீராடுவான்) 'மார்கழி நீராடுகைக்கு உபகரணம் வேண்டிவந்தோம்' என்ன, அங்கி₃ கைப்பட்டவிடத்திலும் அங்க₃ம் கைப்படாதொழிவதே! நாஸ்திகரைப்போலே, 'மார்கழி நீராட்டாவதென்?' என்ன, 'நீ இதறியாயோ?'என்ன, '5."ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்க₃காமோ யஜேத" என்கிறபடியே ஸித்₃த₄மாயிருந்ததோ?' என்ன, 'எங்களுக்கு ஸ்வர்க்கா₃தி₃களில் ஶ்ரத்₃தை₄யுண்டோ?' என்ன, 6. "நிதி₃த்₄யாஸிதவ்ய:" என்கிறப்போலேதானுண்டோவென்ன, 'ப்ரமாணங்கள் ப₂லத்தில் ப₂லிக்கிலும் ப₂லிக்கும், தவிரிலும் தவிரும்; 7. "யத்₃யதா₃சரதி ஶ்ரேஷ்ட₂:" என்று பூர்வர்கள் அனுஷ்டி₂த்துப்போந்தார்களாகையாலே ப₂லத்துக்கு அழிவில்லை. அதுவேயுமன்று; நீ இறையிறை அறிவதொன்றன்று — (மேலையார் செய்வனகள்) என்ன; 'தப்பச்சொன்னோம் நம்மைக் கோபியாதே வேண்டுவன சொல்லலாகாதோ?' என்றான்.

A நாச்-திரு 14-3

(வேண்டுவன கேட்டியேல்) 'உன் அர்ப்பரதை கெட்டால் சொல்லவேணுமே' என்ன; அஞ்சுலக்ஷம் குடியில் பெண்கள் உன்முன்னே புகுந்து நிற்கையாலே ஆனைக்குப்பாடுவாரைப்போலே எங்கள் வார்த்தை கேளாதே இவர்கள் கண்ணிலும் முலையிலும் இடையிலும் வடிவழகிலே மண்டினனென்கை. இவர்கள் 'உன் காரியத்துக்கு வந்தோமோ? எங்கள் காரியத்துக்கு வந்தோம்' என்ன; 'உங்கள் வடிவழகு கண்ணுக்கிலக்கானவோபாதி, உங்கள் வார்த்தை என்செவிக்கு இலக்கன்றோ; அது என்கார்யமன்றோ; சொல்லிகோள்' என்ன;

(ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமே போல்வன சங்கங்கள்) 'இடமுடைத்தாய் உன் திருமேனிக்குப் பகைத்தொடையாய்படியாய், பாலைத்திரட்டினாற்போலேயிருக்கிற நிறத்தையுடைத்தாய், 1. "ஸ கோஷோ தா₄ர்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத₃யாநி வ்யதா₃ரயத்" என்கிறபடியன்றிக்கே நின்று முழங்கக்கடவதுமாய், பல சொல்லுகிறதென், உன் கையில் ஸ்ரீ பாஞ்சஜந்யம் போலேயிருப்பன பல சங்கங்கள் வேணும்' என்கிறார்கள்.

(போய்ப்பாடு) இடமுடைமை; பெருமை, புகழென்றுமாம். ருக்மிணிப்பிராட்டி மற்றையார்க்கு உதவினதென்கிற புகழ். A "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்" இத்யாதி₃. 'இதொன்று; இனியோ?' என்ன, — (சாலப்பெரும்பறையே) ஒரு யண்ணளவில் த்₄வனிக்கையன்றிக்கே எங்கும் கேட்க த்₄வனிப்பதொரு பறை வேணும். 2. 'யயௌ தூர்யநிநாதே₃ந பே₄ரீணாஞ்ச மஹாஸ்வநை:" 'பின்னையோ?' என்ன, (பல்லாண்டிசைப்பாரே) திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு போவார் வேணுமென்ன;

'பின்னையோ?' என்ன; (கோலவிளக்கே) மங்க₃ளதீ₃பம் வேணுமென்ன; 'பின்னையோ?' என்ன,—(கொடியே) 'திருக்கொடி ஆடவேணும்' என்ன; 'பின்னையோ?' என்ன,— (விதானமே) மேல்கட்டு வேணுமென்ன; "பெண்காள்! நீங்களிட்ட தினவை நம்மால் செய்யலாயிருந்ததில்லை" என்ன; — (ஆலினிலையாயருள்) "ஸர்வலோகத்தையும் தன் சிறுவயிற்றிலேவைத்துப் பவனாயிருப்பதோராலிலையிலே கண்வளர்ந்திருக்கிற உனக்கு முடியாததுண்டோ? பெண்காள்! தந்தோமென்னுமித்தனையன்றோ" என்கிறார்கள். புறம்பு தன்னைப்போலே இருப்பதொரு தத்த்வமுண்டாகிலிறே தன் கையில் சங்குபோலேயிருப்பதொரு சங்குண்டாவது; B "தாமுகக்கும் தம்கையில் சங்கமேபோலாவோ" என்று இவளுகந்த சங்குதன்னைக் கொடுத்தான். C "பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க" D "கன்றப்பறைகறங்க" என்று மரக்கால் கூத்தாடுகிறபோது அரையில் கட்டின பறையையும் பறையடிக்கைக்கு ஸ்ரீஜாம்ப₃வான் மஹாராஜரையும் கொடுத்தான். திருப்பல்லாண்டு பாடுகைக்கு E "அடியோமோடும் நின்னோடும்" என்று திருப்பல்லாண்டு பாடும் பெரியாழ்வாரையும், பா₄க₃வத ஸம்ருத்₃தி₄க்கு F 'பொலிகபொலிக' என்னும் நம்மாழ்வாரையும்கொடுத்தான். மங்க₃ளதீ₃பத்

A நாச்-திரு 9-9. B நாச்-திரு 11-1. C சிறிய திருமடல் 12. D பெரிய திரு 11-5-6. E திருப்பல்-2. F திருவாய் 5-2-1.

துக்கு உப₄யப்ரகாஶகையான நப்பின்னைப் பிராட்டியைக் கொடுத்தான். கொடிக்குப் பெரிய திருவடியைக் கொடுத்தான். விதாநத்துக்குத் திருவவதரித்தவன்று தன் ப₂ணத்தையிட்டுக் கவித்துக்கொண்டு போந்த திருவநந்தாழ்வானைக் கொடுத்தான்.

(ஆலினிலையாய்) எல்லாம் கொடுத்தாலும் தன்னைக்கொடுத்ததாகாமையாலே அத்தவாளத்தையும் கொடுத்தான்; எல்லாத்தையும் கொடுத்தாலும் தன்னையொழிய ஓரடியிடாத பெண்களாசையாலே. 1. "நயாமி பரமாம் க₃திம்" என்கிறபடியே அத்தவாளத்தலையைக் கவித்துக்கொண்டு போனான் என்றும், A "கள்வன் கொல்"லிற் பிராட்டியைப்போலே ஒளித்துக்கொண்டு போகவேண்டாவோ? அதுவேண்டாவே; ஊர் இசைந்ததே. 2. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்கிறபடி ஒருவனே எல்லா அடிமையும் செய்வானையுடையனாய் நின்றால் B "சென்றால் குடையாம்" என்கிறபடியே எல்லாவடிமையும் செய்யவல்ல ஒருவனையும் கொடுத்துவிடாதே நித்யவிபூ₄தியிலுள்ளாரையும் கொடுக்கிறதென்னென்னில்; எல்லாரும் ஸ்வரூபலாப₄ம் பெறுகைக்காக. 26.

## ஸ்வாபதே₃ஶவ்யாக்₂யாநம்—இருபத்தாறும்பாட்டு

அவ:— இருபத்தாறும்பாட்டு. (மாலே இத்யாதி₃) இப்பாட்டில், ப₄க₃வத் ஸம்ஶ்லேஷத்துக்கு வேண்டும் உபகரணங்களை வேண்டிக்கொள்ளுகிறார்கள்.

வ்யா:— (மாலே மணிவண்ணா) ஸர்வாதி₄கனாய் ஸர்வஸுலப₄னானவனே! என்னுதல்; ஆஶ்ரிதவ்யாமோஹமே ஸ்வரூபமாய் அதிமநோஹரமான விக்₃ரஹத்தை உடையவனே! என்னுதல்; இப்படி ஸம்போ₃தி₄த்தவாறே, 'நீங்கள் வந்தகாரியம் என்?' என்ன,— (மார்கழி நீராடுவான்) மார்கழி மாஸத்தில் நோன்புக்கு அங்க₃மாகக் குளிக்கை, இந்நோன்புதானே காம்யார்த்தி₂களுக்கு ஸாத₄நமாயும், நிஷ்காமருக்கு நித்யமாயும், ப்ரபந்நாதி₄காரிகளுக்கு ப₄க₃வத் கைங்கர்யமாயும் இருக்கும்; ஆகையாலே, ப்ரபந்நாதி₄காரிகளுக்குச் சொல்லுகிற கர்மத்யாக₃ம் — ஶாஸ்த்ரோக்தமான ஆகாரத்தாலே அநுஷ்டி₂யாதொழிகையொழிய, கேவலம் அநநுஷ்டா₂நரூபத்யாக₃மன்றென்றதாய்த்து.

'அதில் ப்ரமாணமென்?' என்ன; — (மேலையார் செய்வனகள்) 'ப்ரமாணங்களில் தலையான ஶிஷ்டாசாரம்' என்ன;

'அதுக்கு வேண்டுவதென்?' என்ன; — 'பராக்கில்லாமல் கேட்டாயாகில் சொல்லுகிறோம்' என்ன; 'ஆகில் இதுவும் உங்கள் பேச்சன்றோ? கேட்கிறேன். சொல்லுங்கோள்' என்ன; சொல்லுகிறார்கள்;— (ஞாலமித்யாதி₃யால்) பூ₄மிப் பரப்பிலுள்ள அஹங்காரிசேதநரடைய நடுங்கும்படி த்₄வனிக்குமதாய், அதுக்குத் தக்க குடைகையை உடைத்தாய், அதிபே₄ாக்₃யமாய், அதிபரிஶுத்₃த₄மாய், உன்

A பெரிய திரு - 3-7. B முதல் திருவ - 53.

## இருபத்தேழாம் பாட்டு

**கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்றன்னைப்**
**பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்**
**நாடு புகழும் பரிசினால் நன்றாகச்**
**சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே**
**பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்**
**ஆடை யுடுப்போ மதன்பின்னே பாற்சோறு**
**மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்**
**கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.**

பதவுரை:— கூடாரை — தன் அடிபணியாதாரை, வெல்லும் சீர் — ஜயிக்கின்ற குணங்களையுடைய, கோவிந்தா — கோவிந்தனே! உன் தன்னை — உன்னை, பாடி — வாயாரப்பாடி, பறை கொண்டு — பறையைப் பெற்று, யாம் பெறுசம்மானம் — (மேலும்) நாங்கள் அடையவிருக்கும் பரிசாவது :— நாடு புகழும் பரிசினால்— ஊரார் புகழும்படியாக, சூடகம் — (கைக்கு ஆப₄ரணமான) சூடகங்களும், தோள்வளை — தோள்வளைகளும், தோடு — (காதுக்கு ஆப₄ரணமான) தோடுகளும், செவிப்பூ—கர்ண புஷ்பமும், பாடகம்— (காலுக்கு ஆப₄ரணமான) பாத₃கடகமும், என்று அனைய பல் கலனும் — என்று சொல்லப்படும் இவ்வாப₄ரணங்கள் போன்ற மற்றும் பல ஆப₄ரணங்களையும், யாம் நன்றாக அணிவோம்—(உன்னாலும் நப்பின்னையாலும் அணிவிக்கப்பட்ட) நாங்கள் நன்றாக அணிந்து கொள்வோம்; ஆடை — (உங்களால் அணிவிக்கப்பட்ட) ஆடைகளை, உடுப்போம் — உடுத்துக்கொள்வோம்; அதன் பின்னே — அதற்குப் பிறகு, பால் சோறு — பாலாலே சமைக்கப்பட்ட சோறு, மூட — மறையும்படியாக, நெய் பெய்து — நெய்யை இட்டு, முழங்கை வழி வார — முழங்கையால் வழியும்படியாக, கூடி இருந்து — (நாம்) ஒன்றாக இருந்து (உண்டு), குளிர்ந்து — குளிரவேணும்.

---

ஸ்வா:—திருக்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யம்போலேயிருக்கிற பலசங்கங்கள்வேணும். இத்தால் அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநம் வேணுமென்கிறது. ஶங்க₂த்₄வநி ஓங்காரமென்று ஜக₃த்திலே ப்ரஸித்₃த₄மாயிருக்கையாலே, ஓங்காரார்த்த₂ம் அநந்யார்ஹஶேஷத்வமாகையாலே லக்ஷணயா ஶேஷத்வ ஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது.

(சாலப் பெரும்பறையே) 'மிகவும் த்₄வனிக்கிற மத்₄யத்திலேயிருக்கிற பறை' என்கையாலே — ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷத்வவிரோதி₄யான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தையும், ஶேஷத்வசிஹ்நமான கைங்கர்யத்தில் ஸ்வாதீ₄நகர்த்ருத்வ போ₄க்த்ருத்வங்களையும் நிவர்த்திப்பிக்குமதாய், மத்₄யேயிருக்கிற நமஶ்ஶப்₃த₃ார்த்த₂மான பாரதந்த்ர்யஜ்ஞாநமும் வேணுமென்னுமிடம் சொல்லுகிறது. (பல்லாண்டிசைப்பாரே) ஸத்ஸஹவாஸம் வேணும்.

(கோல விளக்கே) ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷத்வத்தை அவனுக்கு அத்யந்தம் மநோஹரமாக்குகிற ப₄ாக₃வதஶேஷத்வஜ்ஞாநமும் வேணும். (கொடியே) கீழ்ச்சொன்ன ஶேஷத்வலக்ஷணமான கைங்கர்யமும் வேணும். (விதாநமே) அக்கைங்கர்யத்தில் போ₄க்த்ருத்வநிவ்ருத்தியும் வேணுமென்ன;

'இல்லாதத்தை யுண்டாக்கலாமோ?' என்ன, -(ஆலினிலையாய்) முன்பு இல்லாதத்தை உண்டாக்கினவனல்லேயோ? (அருள்) க்ருபையுண்டாகில் செய்யத் தட்டில்லை.

அவ:— இருபத்தேழாம்பாட்டு. a நோற்றல், அவன்பக்கல் பெறக்கடவ பேறு சொல்லுகிறார்கள்.

வ்யா:— b (கூடாரை வெல்லும்) c ஆந்தனையும் பார்த்தால் 1. "ந நமேயம்" என்பாரை வெல்லுமித்தனை. d அவர்களை வெல்லுமாபோலே, $d_2$ கூடினார்க்குத் தான் தோற்குமித்தனை. e (சீர்) f எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே; g 2. "சசால சாபஞ்ச முமோச வீர:" என்று விற்பிடித்தபடியைக் காட்டி விரோதிகளைத் தோற்பிக்கும்; h அநுகூலரை அழகாலும் நீர்மையாலும் தோற்பிக்கும்; i ஸர்வஜ்ஞரை A "எத்திறம்" என்னப் பண்ணும் குணமிறே. j அம்புவாய் மருந்தூட்டித் தீர்க்கலாம்; $j_2$ நீர் கொன்றாற்போலே இதுக்குப் பரிஹாரமில்லை. k (கோவிந்தா) l கூடுவோமல்லோமென்னும் அபிஸந்தியில்லாத மாத்ரத்திலே ரக்ஷித்தபடி.

---

பெ. அ. இருபத்தேழாம்பாட்டு. (கூடாரை இத்யாதி) a எம்பெருமானோட்டை ஸம்ஶ்லேஷத்துக்காகத் தங்களுக்கு வேண்டும் பூஷணாதிகளெல்லாம் உத்தேஶ்யமாகத் தோற்றுமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (நோற்றல் இத்யாதி) நோற்றல்— நோன்பென்று வ்யாஜித்தால்.

b, c கூடாரை வெல்லுமதான, சீரை — கல்யாணகுணத்தை உடையவனென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஆந்தனையும் இத்யாதி) b, d "கூடாரை வெல்லும்" என்னுமதத்தால் — கூடுமவர்க்குத் தோற்குமென்று பலித்த தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (அவர்களை இத்யாதி) $d_2$ (தோற்குமித்தனை) என்றது— ஶீலாதிகுணங்களாலே அநுகூலரை வென்று தான் தோற்றிருக்குமென்றபடி. e...i கூடாதாரை பலாயாதிகளாலும், கூடினாரை ஶீலாதிகளாலும் வெல்லும் ப்ரகாரத்தை ப்ரதீக க்ரஹணபூர்வகம் உபபாதிக்கிறார் (எல்லாரையும் இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே) j 'அம்பாலே தோற்பிக்கையும் குணத்தாலே தோற்பிக்கையும் துல்யமாமோ?' என்ன அருளிச்செய்கிறார் (அம்புவாய் இத்யாதி) $j_2$ தாஹார்த்தனானவன் தீர்த்தபாநம் பண்ணும்போது ஸாத்மிக்க ஸாத்மிக்கப் பாநம் பண்ணாதே ஆர்த்தியாலே அதிகமாகப் பாநம் பண்ண, அத்தாலே பாதை வந்தால் அதுக்கும், ஈஶ்வரனுடைய தாரகமான குணங்களை அபிநிவேஶத்தாலே அநுபவிக்கையால் வந்த ஈடுபாட்டுக்கும் பரிஹாரமில்லை என்று கருத்து. k, l கோபத்வத்தாலே ஹிதாஹிதஜ்ஞானமில்லாமை தோற்றுகையால் அதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கூடுவோமல்லோம் இத்யாதி)

---

சி. அ. இருபத்தேழாம் பாட்டு. (கூடாரை) b, $d_2$ "கூடாரைவெல்லும்" என்கையாலே தத்ப்ரதிகோடியாக, கூடினார்க்குத் தான் தோற்கும் என்றபடி. e, f, g, h குணங்கள் அனுகூல ப்ரதிகூல விபாகமறத் தோற்பிக்கும் ஸ்வபாவத்தைப் பற்றத் தாத்பர்யம் (எல்லாரையுமித்யாதி) h, i குணங்கள் அனுகூலரை ஈடுபடுத்துமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஸர்வஜ்ஞரையுமித்யாதி) j ஶத்ருக்களுக்குப்போலே குணம் அனுகூலர்க்கு பாதகமன்றே என்ன அருளிச்செய்கிறார் (அம்புவாயித்யாதி) அதாவது:— அம்புக்கு பாதகத்வமே ஸ்வரூபமாகையாலே தப்பலாம். 3. "கிம் குர்ம:" என்னுமாபோலே தாரகமே பாதகமானால் தப்ப விரகில்லை என்றபடி. k, n, o "கோவிந்தன்" என்றது

---

A திருவாய் 3-1-1.

m (உன்தன்னைப்பாடி) n "ஹிரண்யாய நம:" என்கை தவிர்ந்து, வகுத்த உன்னுடைய பேரை ஸ்வயம்ப்ரயோஜநமாகச் சொல்லப்பெறுவதே! என்கை. o கோ3பீஜந வல்லப4னை உன்னைப் பாடுகையே எங்களுக்கு ப்ரயோஜனம் போருமென்னவுமாம். p (பறைகொண்டு) q ப்ராப்யத்திலே $q_2$ ப்ராபக வ்யவஹாரம்; $q_3$ ஊருக்குப் "பறை" என்கிறது — தங்களுக்கு ப்ராப்யம். r (யாம் பெறு $r_2$ சம்மானம்) s தோளில் மாலையை வாங்கியிடுகை இவர்க்குப் பெருப்பேறென்கை. t 1. "பதிஸம்மாநிதா ஸீதா" என்று—"பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார்" என்று ஆழ்வான் பணிக்கும்; ப4ட்டரும் பணிக்கும். u 'அநாதி3 காலம் எல்லாராலும் பட்ட பரிப4வம் மறக்கும்படி கொண்டாடுகை.

v (நாடு இத்யாதி3) w 'ஒருவன் கொடுக்கும்படியே! சிலர் பெறும்படியே!' என்று நாட்டார் கொண்டாடவேணும். x (நன்றாக) y 2. "ப்ரதே3ஹி ஸுப4கே3 ஹாரம் யஸ்ய துஷ்டாஸி ப4ாமிநி" என்று இந்த்3ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பெருமாளும் பிராட்டியும் கூடவிருந்து திருவடிக்குப் பூட்டினாற்போலே பூண

---

**பெ. அ.** m, n "உன்தன்னை" என்றவிடத்தில், "தன்னை" என்றத்தாலே தோற்றின தானான தன்மை வகுத்தசேஷியாகையென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஹிரண்யாயேத்யாதி3) k, m, o "கோவிந்தா" என்ற பத3த்தைக் கடாக்ஷித்து, "உன்தன்னை" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கோ3பீஜநேத்யாதி3) q ப்ராப்யத்திலே — தங்களுக்கு உத்3தேஶ்யமான கைங்கர்யத்திலே. p, $q_2$ 'ப்ராபக வ்யவஹாரம்' என்றது — நோன்புக்கு அங்கமாகையால் ப்ராபகவாசகமான "பறை" என்கிற ஶப்3த3ப்ரயோகமுமென்கை. r, s, t இதுக்கு மேற்படத் தங்களுக்குப் பேறில்லாமையால் திருத்தோள்மாலையிடுகையே ஸந்மாநமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தோளில் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) $r_2$, u 'சம்மானம்' என்றது — கொண்டாடுகையாய், அர்த்தா2ந்தரம் அருளிச்செய்கிறார் (அநாதீ3த்யாதி3)

v, w 'நாடுபுகழும் பரிசினால் — நாட்டார் கொண்டாடும் ப்ரகாரத்தாலே' என்று ஶப்3தா2ர்த்த2மாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஒருவன் இத்யாதி3) x, y நன்மையாவது — க்ருஷ்ணனும் நப்பின்னையும் கூட இருந்து பூட்டுகையென்று விவக்ஷித்து, த்3ருஷ்டாந்த

---

**சி. அ.** ப்ராப்தசேஷி என்னுதல், கோ3பீஜநவல்லப4ன் என்னுதல். n (ஹிரண்யாய) ஹிரண்யன் பொருட்டு. இது ப்ரஹ்லாத3னைக் கடாக்ஷித்துச் சொன்னது. m 'உன்னை' என்னாதே "உன் தன்னை" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்:— n "ப்ராப்த சேஷியான உன்னை" o "கோ3பீஜநவல்லப4னை உன்னை" என்னுதல். $r_2$, s, u சம்மானம் — மாலை என்னுதல்; $r_2$, s, t 'சம்மானம்' என்றால் தோளில் மாலையிடுகை கொடுத்தல்; தான் கொண்டாடுதல். (பதிஸம்மாநிதேத்யாதி3) q, $q_3$ கீழ் யென்று சொல்லுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஊருக்குப் பறை என்கிறது தங்களுக்கு ப்ராப்யம்) என்று; வாக்யத்தை விவரிக்கிறார் v, w, y பரிசு — கொடையாதல், ப்ரகார அதாவது — மறைத்துச் சொல்லுகிற வார்த்தை. "இருவரும் பூட்டப்பூண்டு" என்னுதல், "அவன் ஸந்நிதி4யிலே யாதல். x நன்றாக —

வேணும்; y2 1. "தம் ப்3ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி" என்று, சிலரையிட்டு ஒப்பிக்கையன்றிக்கே, தானும் பிராட்டியும் கூட இருந்து ஒப்பித்த தன்னேற்றம். z ஆப4ரணத்தைப் பூண்டு அவன் வரவுபார்த்திராதொழிகை என்றுமாம்.

a (சூடகமே) b ப்ரத2மத்திலே ஸ்பர்ஶிக்கும் கைக்கிடும் ஆப4ரணம். c பரம ப்ரணயியாகையாலே தன் தலையிலே வைத்துக்கொள்ளும் கை. d A "அடிச்சியோந் தலைமிசை நீயணியாய்" என்று இவர்கள் அவனுக்குச் சொல்லுமாபோலே சொல்லி, மார்பிலும் தலையிலும் வைத்துக்கொள்ளும் கைக்கு இடும் சூடகம். (தோள்வளை) அந்த ஸ்பர்ஶத்தாலே அணைக்கவேண்டும் தோளுக்கு இடும் ஆப4ரணம். (தோடே) B "பொற்றோடு பெய்து" என்று - பண்டே தோடிட்டாலும் அவனிட்டாற்போலே இராதிறே. (செவிப்பூவே) 2. "ப்ரியாவதம்ஸ" இத்யாதி3யிற் சொல்லுகிறபடியே e அணைத்த திருக்கையிலே உறுத்தும் ஆப4ரணங்கள் போலன்றிக்கே, அணைத்த அநந்தரம் ஆக்4ராணத்துக்கு விஷயமான இடம். (பாடகம்) அணைத்தால் தோற்றுப்பிடிக்கும் காலுக்கு இடும் ஆப4ரணம். (என்று அனைய பல்கலன்) f பருப்பருத்தன சில சொன்னோமித்தனை; நீ அறியுமவையெல்லாமென்கை. C பலபலவேயாபரணமிறே. g (யாம் அணிவோம்) h வ்யதிரேகத்தில் "மலரிட்டு நாமுடியோம்" என்கிறவர்கள் h2 "பூண்போம்" என்கிறார்கள். i அவனுக்கு இவர்களநுமதியைப் பண்ணுகையே அமையுமென்கை.

---

பெ. அ. பூர்வகம் விவரிக்கிறார் (ப்ரதே3ஹீத்யாதி3) x, z 'நன்மையாவது—க்ருஷ்ணன் ஸந்நிதி4யிலே தானே பூண்டிடுகையென்று விவக்ஷித்து வ்யாவர்த்யபூர்வகம் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆப4ரணத்தை இத்யாதி3)

a, b, c, d "சூடகம்" என்றது — முன்கைச்சரியாய், அத்தை த4ரிக்கவேணுமென்றதுக்கு ஹேது அருளிச்செய்கிறார் (அடிச்சியோம் இத்யாதி3) e (அணைத்த திருக்கையிலே) என்றது — அணைத்து உபத4ாநமாகக்கொடுத்த திருக்கையிலே என்றபடி. g, h, i "பலகலனும் தரவேணும்" என்ன வேண்டியிருக்க, "அணிவோம்" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (வ்யதிரேகத்தில் இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) i அநுமதியைப் பண்ணுகையே அமையும் அவன் கொடுக்கைக்கென்று கருத்து.

---

சி. அ. தாங்கள்பூண்டு" என்னுதல். y, z "இவ்விரண்டையுமருளிச் செய்கிறார் (ப்ரதே3ஹீ இத்யாதி3வாக்யத்3வயத்தாலே) x "நன்றாகப்புகழும்படி" என்று ஶப்3த3ார்த்த2மாகவுமாம்; புகழுகிறது க்ருஷ்ணனையாதல் தங்களையாதல். a சூடகம் — முன்கைவளை. f (பருப்பருத்தன) ஸ்தூ2லமான. h2, i (பூண்போம்) என்கைக்கு அவன் பூட்டுமோ? என்ன அருளிச்செய்கிறார் (அவனுக்கு இவர்கள் இத்யாதி3) அதாவது ப்ரணயித்வத்திலேயாதல், ஸ்வரூபத்திலேயாதல் நோக்கு.

---

A திருவாய் 10-3-5, B பெரியாழ்-திரு 3-7-6. C திருவாய் 2-5-6.

j (ஆடை யுடுப்போம்) k ‘பண்டு உடார்களோ?’ என்னில்:— அவனுடுத்து உடாதது உடையன்றென்றிறே இருப்பது. l அவன் திருப்பரியட்டம் இவர்களரையிலேயாம்படி கூறை மாறவேணுமென்றுமாம். m நோன்பைமுடிக்கையாலே நல்ல பரியட்டம் உடுக்கவென்றுமாம். n A ‘‘உடுத்துக்களைந்த’’ n2 என்னுமவர்களிறே இவர்கள்: ஸ்வேத3க3ந்த4யுக்தமாய் n3 அவனுடுத்து முசிந்த ஆடை என்னவுமாம். (அதன் பின்னே இத்யாதி3) அதுக்குமேலே பால்சோறு மூடும்படியாக நெய் o பெய்து; இத்தால் — ப4க3வத்ஸம்ப3ந்த4முள்ள திருவாய்ப்பாடியில் ஸம்ருத்3தி4யெல்லாம் ப்ரியமாயிருக்கிறபடி. (முழங்கை வழிவார) நம்பி திருவழுதிவளநாடு தா3ஸர் p ‘‘நெய்படாதோ?’’ என்ன; ‘‘க்ருஷ்ணஸந்நிதி4யாலே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்குச் சோறு வாயில் தொங்கிலன்றோ நெய் வாயில் தொங்குவது’’ என்று ப4ட்டர் அருளிச்செய்தார். வ்யதிரேகத்தில் ‘‘நெய்யுண்ணோம் பாலுண்ணோம்’’ (2) என்று சொன்னவர்கள் இன்று ஆசைப்படுகிறார்கள். q (கூடியிருந்து) r பிரிந்துபட்ட க்லேஶம் தீரக் r2 கூடித்தொட்டுக்கொண்டிருக்கையே ப்ரயோஜநம்; பு4ஜிக்கை ப்ரயோஜநமன்று. (குளிர்ந்து) பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் குளிரும்படி. s ‘‘நம்பெருமாள் திருநாள்’’ என்று ஒருபேரையிட்டு ஸ்ரீவைஷ்ணவர்களைத் திரட்டிக்காணுமாப்போலே. t 1. ‘‘அஹமந்நம் — அஹமந்நாத3:’’ என்று ஒரு

---

பெ. ஆ. n2 ‘என்னுமவர்களிறே’ என்ற அநந்தரம் ‘‘ஆகையாலே’’ என்று ஶேஷம். p (நெய்படாதோவென்ன) என்றது — முழங்கையில் தானே வழிகையித்தனை போக்கி, வாயில் புகாதோவென்ன என்றபடி. q, r, s க்ருஷ்ணனோடே கூடியிருக்கையே ப்ரயோஜநமென்னுமதுக்கு, இவர்களோடே கூடுகை அவனுக்கு ஸ்வயம்ப்ரயோஜநமானாற்போலே, இவர்களுக்கும் அவனோடு கூடுகை பரமப்ரயோஜநமென்னும் அர்த்த2த்தை த்3ருஷ்டாந்தமுகே2ந அருளிச்செய்கிறார் (நம்பெருமாள் இத்யாதி3) t இவ்வர்த்த2த்துக்கு ஸம்வாத3ம் அருளிச்செய்கிறார் (அஹமந்நம் இத்யாதி3) 1. ‘‘அஹமந்நம்’’ என்றது — ப்3ரஹ்மத்துக்குத்தான் போ4க்3யமென்றபடி. 1. ‘‘அஹம் அந்நாத3:’’ — நான் ப்3ரஹ்மமாகிற போ4க்3

---

சி. ஆ. j, k, l, m, n ‘‘ஆடையுடுப்போம்’’ என்றதுக்கு நாலு தாத்பர்யம். n3 (அவன் உடுத்து முசிந்த ஆடை) என்றது ராஜாக்களுக்கு இரட்டை பிடித்துக் கொடுக்குமவர்கள் வாக்காக வேண்டித் தங்களரையிலே உடுத்திருந்து யோக்3யயாம்படி பண்ணிக்கொடுப்பார்கள். அப்படியே ஈஶ்வரன் ஆஶ்ரிதர்க்குக் கொடுக்கும் என்றபடி. o பெய்கை — கொடுக்கை. q, r2 ‘‘கூடியிருந்து’’ என்றவிடத்தில் (கூடத் தொட்டுக்கொண்டிருக்கையே ப்ரயோஜனம்) என்ற அதுக்குக்கருத்து— 2. ‘‘புத்ரேண ஸஹ ஓத3நம் பு4ங்க்தே’’ என்னுமாபோலே, போ4க்த்ரு ஸாஹசர்யம் சொல்லுகிறது. q, r2, s அனுப4விக்கை ப்ரயோஜனமாக இருக்கக் (கூடத் தொட்டுக் கொண்டிருக்கை ப்ரயோஜனம்) என்றபடி என்? என்ன (நம்பெருமாளித்யாதி3) அதாவது — நோன்பென்றொரு வ்யாஜத்தையிட்டுப் பெண்களும் தானும் கூடியிருக்கை என்றபடி. t ‘‘தங்களுக்கு அவனன்றோ போ4க்3யம்; தாங்களும் அவனுக்கு போ4க்3யமோ பின்னை?’’ என்ன அருளிச்செய்கிறார் (அஹமந்நமித்யாதி3)

---

A திருப்பல்-9.

வர்க்கொருவர் பே₄ாக்₃யமிறே. ப ''ஸோऽஶ்நுதே ஸர்வாந் பு₃ காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா'' என்கிற ஶ்ருத்யர்த்த₂ம் இப்பாட்டிற் சொல்லுகிறது. 27.

---

பெ. அ. யத்தை பு₄ஜிக்கிறவனென்று முக்தனுடைய அநுஸந்த₄ாநம இருக்கிறபடி. ப இப்பாட்டில் க்ருஷ்ணனோடே கூறை சோறு முதலான இஷ்டங்களை பு₄ஜிக்கையைச் சொல்லுகையாலே இதுக்கு ஸம்வாத₃ம் அருளிச்செய்கிறார் (ஸோऽஶ்நுதேத்யாதி₃) பு₂ 'காமாந்' என்றது — இஷ்டங்களை என்றபடி.

''கூடாரை இத்யாதி₃ பாடிப்பறைகொண்டு யாம் சம்மானம் பெறக்கடவோம்; நாடுபுகழும் இத்யாதி₃ யாம் அணிவோம்; ஆடையுடுப்போம்; அதன் பின்னே நெய் சோறுமூடப் பெய்து முழங்கைவழிவாரப் பாற்சோறு உண்ணக்கடவோம்; இப்படி உன்னோடு கூடியிருக்கக் கடவோம்'' என்று அந்வயம். ''சூடகம்'' இத்யாதி₃யில் ஏகாரம் ஸமுச்சயம். 27.

---

சி. அ. ''சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூப்போலே பாடகமேயென்றனைய பல்கலனும் யாமணிவோம்; ஆடையுடுப்போம்; அதன் பின்னே பால் சோறு மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக்கூடியிருந்து குளிரும்படி உண்போம்; இது கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா! உன்றன்னைப் பாடிப்பறைகொண்டு நன்றாக நாடு புகழும்படி யாம் பெறு சம்மானம்'' என்று அந்வயம். 27.

## ஆறுயிரப்படி — இருபத்தேழாம்பாட்டு

அவ:- இருபத்தேழாம்பாட்டு. 'பெண்காள்! நம்மோடொத்தாரொரு ஈஶ்வரனுண்டாகிலிறே நம்பாஞ்சஜந்யத்தோடொத்த சங்கு உண்டாவது; இனித்தான், ''சங்கங்கள்'' என்று-பலவேணுமென்றிகோள்; ஒன்றைத்தேடினோமாகிலும் அத்தோடொத்த பல சங்கு கிடையாதே; நம்பாஞ்சசந்நியத்தையும், ''புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கையும்''(6). A ''ஆநிரையினம் மீளப்பசுமேய்க்கும்போது குறிக்குஞ் சங்கையுங் கொள்ளுங்கோள்; ''பறை'' என்றிகோளாகில், நாம் உலகளந்தபோதுஜாம்பவாந் நம் ஜயஞ்சாற்றின பறையைத் தரலாய்த்து; ''பெரும்பறை'' என்றிகோளாகில், நாம் லங்கையையழித்தபோது நம்ஜயம் சாற்றிற்றொரு பறையுண்டு, அத்தைத்தரலாய்த்து; ''சாலப்பெரும்பறை'' என்றிகோளாகில், அறவிஞ்சின பறையாவது, B ''பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்கக்'' குடமாடுகிறபோது நம்மரையிலே கட்டியாடிற்றொரு பறையுண்டு, அத்தைக்கொள்ளுங்கோள்; பல்லாண்டு பாடுகைக்கு உங்களுக்குப் பெரியாழ்வாருண்டு; அவரைப்போல உங்களுக்கும் நமக்கும் சேரக்காப்பிடுகையன்றிக்கே உங்களுக்கே காப்பிடும் நம்மாழ்வாரையுங் கொண்டுபோங்கோள்; கோலவிளக்குக்கு உப₄யப்ரகாஶகையான நப்பின்னை நில்லாநின்றாளிறே; கொடிக்கு C ''கருளக்கொடி யொன்றுடையீர்'' என்று நீங்கள் சொல்லும் பெரிய திருவடியைக் கொண்டு போரிகோள்; விதானத்துக்கு அன்றே நாம் மது₄ரையில்நின்றும் இவ் வூருக்கு வருகிறபோது நம்மேல் மழைத்துளிபடாதபடி D தொடுத்து மேல்விதானமாய் வந்த நம்மநந்தனைக் கொண்டு போங்கோள்; உங்களுக்குச் செய்யவேண்டுவது இத்தனையே?' என்றான்;

---

A பெரியாழ் திரு 3-4-3. B சிறியதிருமடல்-12. C பெரியதிரு 10-8-3. D திருச்சந்த-18.

''மார்கழி நீராடப் போம்போதைக்கு வேண்டுமவை இவை, நோற்ற அநந்தரம் நாங்கள் உன்பக்கலில் பெறக்கடவ இன்னஞ் சில ஸத்காரவிசேஷங்களுண்டு, இவற்றிலும் அவை அந்தரங்கமாயிருப்பன சில; அவையும் நாங்கள் பெறுவோமாக வேணும்'' என்று வேண்டிக்கொள்ளுகிறார்கள்.

வ்யா:— ''பெண்காள்! நம்மை A 'எளிவருமியல்வினன்' என்று அழகிதாக அறிந்துகொண்டிகோளெங்ஙனே! அபேக்ஷித்தது தருகிறோம் என்கிற அளவைக் கொண்டு, நம்மையும் நம்முடைய ஸர்வஸ்வத்தையும் உங்களதாக்கிக்கொண்டு, உங்களை வெல்லவிருந்த நம்மைத் தோற்பித்துக்கொண்டிகோளெங்ஙனே! ஜயாபஜயங்கள் நாம் நினைத்தபடியன்றிக்கேயிருந்ததீ!'' என்ன! — (கூடாரை வெல்லுஞ்சீர்) கூடோமென்பாரை வெல்லும்த்தனை போக்கி, கூடுவோமென்பாரை வெல்லலாமோ உன்னால்? (கூடாரை வெல்லும்) பரசுராமன், ''இருபத்தொரு படிகால் க்ஷத்ரியரை வென்ற எனக்கு ஒரு க்ஷத்ரியபுத்ரன் எதிரோ?'' என்று பெருமாளை வெல்ல நினைத்து வந்து, தன்கையில் வில்லை அவர் கையிலே கொடுத்து, நான் ப்ராஹ்மணன் என்று நமஸ்கரித்துப்போனான்; வில்லோடே நமஸ்கரித்தானாகில் இவராய்த்துத் தோற்பது. ராவணன், ''இந்த்ராதிகளை வென்ற எனக்கு ஒரு மநுஷ்யன் எதிரோ?'' என்றிருக்க, திருவடியையிட்டும், அங்கதனையிட்டும், பின்பு வில் பொகட்டவளவில் 'இன்று போய் நாளைவா'' என்றும் இத்தனையும் சொன்னவிடத்திலே B வணங்கலிலரக்கனான பின்பு 'ஆந்தனையும் பார்த்தோம், என்செய்வோம்' என்றுய்த்துக் கொன்றது; பின்னை வில்லெடுத்திலனாகில் பெருமாளை வென்றானாய்விடும்; லோகம் பண்ணின பாக்யத்தாலே பின்பு வில்லெடுத்தான்; பெருமாள் அவனுக்குத் தோற்கைக்கு பாக்யம் பண்ணிற்றிலர். (கூடாரை வெல்லும்) C ''சேராக் குலைகொண்ட ஈரைந்தலையான்'' என்று ஒருபடியாலும் கூடேன் என்றவனையிறே வென்றது; கூடுவேன் என்ற விபீஷணனுக்கு வில்வெட்டியிறே செய்தது. 1, ''ஸுக்ரீவவசநாத்'' 2. ''ஹநூமத்வசநாத்'' என்று கூடினாருடைய குற்றேவல் கொண்டு அபிஷேக ப்ரதாநமும் ப்ராணஹரணமும் பண்ணும்படியிறே தோற்றபடி! ''அர்ஜுநனோடு உறவுபண்ணும் க்ருஷ்ணன் காலிலே வணங்கோம்'' என்ற துர்யோதநனை வெல்லவல்லனானான்; ''நீ சொல்லிற்றுச் செய்வேன்'' என்ற பாண்டவர்களுக்கு, D ''எல்லிபகலென்னாது எப்போதும்'' - ஸர்வகாலமும் தூத்ய ஸாரத்யாதிகளைப் பண்ணித் திரிந்தான்.

(வெல்லுஞ்சீர்) எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே; கூடுவாரை சீலத்தாலே வெல்லும்; கூடாதாரை ஶௌர்யத்தாலே வெல்லும். (சீர்) ஶௌர்ய சீலத்தாலே... அம்புக்கிலக்காயம் அம்புக்கு இலக்காக்கும்; சீலம் அழகுக்கு இலக்காக்கும்.

---

A திருவாய் 1-3-2. B பெரிய திரு 9-8-5. C நான் திருவ 8. D பெரிய திருவ 19.

ஞர்க்கு மருந்திட்டு ஆற்றலாம்; சிலமும் அழகும் நின்று ஈராநிற்கும், A ''ஈர்கின்ற குணங்கள்'' B 'தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ''. அம்புதோல்புரையே போம்; அழகு உயிர்க்கொலையாக்கும். (வெல்லும் சீர்) ஸ்வரூபாநுஸந்தாநம் பண்ணி ''வாரோம்'' என்றிருப்பார் ப்ரதிஜ்ஞையை அழித்து வரப்பண்ணிக்கொள்ள வற்றுய், ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே ''வாசல்விட்டுப் புறப்படோம்'' என்றிருப்பாருடைய அபிமாநத்தை முறித்துத் தன் வாசலிலே வரப்பண்ணின குணம், தேஹாத்மாபிமாநிகளைத் தலைசாய்ப்பிக்கச் சொல்லவேணுமோ? C ''நலமுடையவன்'' என்று C ''தொழுதெழு'' என்றுரிறே குணங்களினுடைய எடுப்புக்கண்டு. (வெல்லும் சீர்) அஜ்ஞரை ஸர்வஜ்ஞராக்கும்: ஸர்வஜ்ஞரை D ''எத்திறம்!'' என்னப்பண்ணும்.

(கோவிந்தா) ''கூடுவோமல்லோம்'' என்கிற அபிஸந்தியில்லாத மாத்ரத்திலே, கூடுவோமென்ன அறியாதாரையும் ரக்ஷிக்குமவனன்றே. (கோவிந்தா) ''பொருந்தோம்'' என்னும் துரபிமாநமுமின்றிக்கே, ரக்ஷித்தாலும் உபகார ஸ்ம்ருதியுமின்றிக்கேயிருக்கும் பசுக்களோடு பொருந்துமவனே! E ''இட்டமான பசுக்கள்''. நாலிரண்டுநாள் தீம்பிலே வளர்ந்து நடந்து பெண்களோடே கலந்துவந்தால், மாதாபிதாக்கள் 'தாழ்த்துவந்ததென்?' என்றால், 'பசுமேய்க்கப்போனேன்' என்று கண்ணழிவு சொல்லலாம்படி ஒதுங்க நிழலாயிறேயிருப்பது. காமுகராயிருப்பார் உகந்த விஷயங்களிலுங்காட்டில் கடகரையிறே உகப்பது. F ''திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி'' G ''கன்றுமேய்த்தினிதுகந்த'' H ''காலிமேய்க்கவல்லாய்'' I ''கன்றுமேய்த்து விளையாடவல்லானை''. ஸாமான்யரக்ஷணமும், விசேஷரக்ஷணமும்; தன் வாயாலே பறித்து மேய்வாருடைய ரக்ஷணமும், தான் பறித்துக் கொடுப்பாருடைய ரக்ஷணமும். (கோவிந்தா) ''சேரோம்'' என்னும் அத்யவஸாயமில்லாத திர்யக்குக்களோடும் பொருந்தும்படியான நீர்மையையுடையவனே!

(உன்றன்னைப்பாடி) ஹிரண்யபுரம்போலே இவன்பேர் சொல்லவொட்டுவாரில்லைபோலே காணும் பண்டு; அநந்தரத்திலே இவர்கள் கோபிப்பார்களென்று தவிர்ந்த இழவெல்லாம் ஸந்நிதியிலே பாடப்பெறுகையாலே தீரப்பெற்றது. (உன்றன்னைப்பாடி) வகுத்த உன்னுடைய பேரை ஸ்வயம்ப்ரயோஜநமாகப் பாடப்பெறுகையாலே ''வாயினால்பாடி'' (5) என்று உபக்ரமித்தபடியே நாட்படைத்த ப்ரயோஜநம் கொள்ளப்பெற்றோம். ''உன்னைப்பாடி'' என்னுதே, ''உன்றன்னைபபாடி'' என்கிறது—அத்தலை இத்தலையாவதே! உன்பணியை நாங்களேறிட்டுக்கொள்வதே! (கோவிந்தாவுன்றன்னைப்பாடி) J ''கோவிந்தன் குழல்கொடுதினபோது'' என்று-நீ பாடும்போது K ''கேயத்தீங்குழலூதிற்றும்'' என்னும்படி பெண்கள் புணர்ப்பைக் குழலிலேயிட்டுப் பாடி எங்களைத் தோற்பிக்கையன்றிக்கே, எங்கள் வாசல்களிலே பாடி திராதே உன்வாசலிலேவந்து ''கோவிந்தா'' என்றுபாடும்படியாவதே! L ஆவிகாத் (பறைகொண்டு)

A திருவாய் 8-1-8. B திருவாய் 10-3-1. C திருவாய் 1-1-1. D திருவாய் 1-3-1. E நாச்-திரு 14-1. F திருவாய் 10-3-10. G திருநெடு 16. H திருவாய் 6-2-4. I பெரிய திரு 2-5-3. J பெரியாழ்திரு 3-6-2. K திருவாய் 6-4-2. L நாச்-திரு 8-3.

''பாடிப்பறைகொண்டு'' (8) என்று அடியிற்சொன்னபடியே ஊராரிசைந்த பறையைக் கொண்டு. ப்ராப்யத்திலே ப்ராபக வ்யவஹாரம் பண்ணுகிறுர்கள் ஆற்றுமையாலே, ஊருக்கிறே பறை; தங்களுக்கு ப்ராப்யமிறே.

(யாம்) தே₃வகீபுத்ர ரத்நமான உன்வாசி அறிந்து பற்றி, ''உன்னை ஆஶ்ரயித்தார்க்குப் பேறுதப்பாது'' என்கிற வ்யவஸாயமுடையோமான நாங்கள். (பெறு சம்மானம்) வெறும் ஊரார்கார்யமேயாகவொண்ணுது; எங்களுடைய அபி₄மதமும் பெறவேணும். (யாம் பெறு சம்மானம்) பெருமாள் பிராட்டிக்குப் பண்ணின ஸம்மானம்போலே 1. ''ஆத்₃வாரம்'' தொடர்ந்தேத்தின பிராட்டிக்குத் தன்தோளில் மாலையை வாங்கி இட்டுக் காலைப்பிடித்து, ''நில்'' என்று போன ஸத்காரமிறே இவர்களுக்குப் பண்ணப் புகுகிறது. அவள் இவர் திருவடிகளைப் பிடிப்பது - கைப்பிடித்த முறையாலே; இவர் அவள் காலைப் பிடிப்பது ப்ரணயித்வத்தாலே. அவனுக்குச் சொல்லுமேற்றமெல்லாம் ஸ்வரூப நிப₃ந்த₄நம்; இவளுக்குச் சொல்லுமேற்றமெல்லாம் ப்ரணயித்வ நிப₃ந்த₄நம். அவனுடைய வ்யாபாரம் வைத₄ம்; இது ராக₃ப்ராப்தம், ஸ்வயம்ப்ரவ்ருத்தனுமிடத்தில் விதி₄விஷயமாகமாட்டாதே; அவ்விடத்தில் விதி₄ நுழையுமாகில் போகமாட்டாதே. வெளித்திருமுற்றத்திலே ப்ரஸாத₃மும் அவ்வளவிலே வர, ''யாம் பெறு சம்மானம் வந்தது'' என்றுர் ப₄ட்டர்.

(நாடுபுகழும் பரிசினுல்) அநாதி₃காலம் எல்லாராலும் பட்ட அவமாநம் மறக்கும்படியாக; 'ஒருவன் கொடுத்தபடியே! சிலர் பெறும்படியே!' என்று நாட்டார் கொண்டாடும்படியாகவேணும். ''பாரோர்புகழ'' (1) என்னும்படியே தலைக்கட்டவேணும். க்ருஷ்ணனும் ஸ்ரீஸத்யபா₄மைப் பிராட்டியும், அர்ஜுநனும் த்₃ரௌபதி₃யுமாகக் கால்மேல் காலேறிட்டுக்கொண்டிருக்க, ஸஞ்ஜயன் திருவாசலிலே வந்தானென்றறிவிக்க, க்ருஷ்ணன் அருளிச்செய்கிறுன்;—''நம்முடைய இருப்புக்கண்டால் உகப்பானும், உகவாதார் மண்ணுண்ணும்படி இவ்விருப்பைச் சொல்லவல்லானுமொருவன்! புகுர விடுங்கோள்'' என்ன; அவனும் புகுந்து கண்டு அப்படியேபோய் துர்யோத₄நனுக்கு, ''கெடுவாய்; அவர்களிருப்புக் கண்டேனுக்கு உன் காரியங் கெட்டதுகிடாய்'' என்றுனிறே; ஶுகஸாரணர்கள் சென்று ராவணனுக்கு, ''அவருடைய ஓலக்கத்தில் மதிப்பும் அவருடைய வீரப்பாடும் கண்டோமுக்கு உனக்கு ஒரு குடியிருப்புத் தேடிக்கொள்ளவேண்டியிருந்தது; ஊற்றுமாறுதே நித்யமாய் நடக்கிற ஐஶ்வர்யத்தையுடையராய், உனக்கு வரம் தந்து உன்கையாலே தகர்ப்புண்ணுமவர்களைப்போலன்றிக்கே, உனக்கு முடிதந்தார்க்கும் முடிகொடுத்த ராஜா உன்தம்பிக்கு லங்கையைக்கொடுத்தான், வாநரங்களும் ஆர்த்துக்கொண்டது'' என்று சொன்னுர்களிறே. இப்படி ஆஶ்ரயித்தாரை நாடு புகழும்படியிறே வாழ்விப்பது; A ''வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழ'' என்கிறபடியே. நாடு புகழவென்று யஶ:பரராய்ச் சொல்லுகிறுர்களென்று, புகழ்ந்து நாட்டார் உஜ்ஜீவிக்கை ஸ்வலாப₄மாக நினைக்கையாலே,

A திருவாய் 3-3-11.

க்ஷுத்₃ரனை ஒளித்துவேண்டிப் பெறுமதிறே லோகமிகழ்வது; ஸர்வ ஸமாஸ்ரய ணீயன்றானே மேல்விழுந்து ஸத்காரபூர்வகமாகக் கொடுக்கிறதாகையாலே புகழுமிறே.

(நன்றாக) இவனையொழிந்தாரைப் பாடவேண்டிப் பெறுமது பரிமித ப₂லமாகையாலே, படிவைக்க உண்பார்பாடே பிச்சை புக்குண்ணும் மாத்ரம்; காலன் கொண்ட பொன்னிட்டு ஆப₄ரணம் பண்ணிப் பூண்பார் மாத்ரம்; நாடு புகழுமள வன்றிக்கே அவன்தானும் ஸத்தை பெற்று நாமும் ஸத்தை பெறவேணும். இவர்களை ஒப்பிக்கை - அவனுக்கு ஸ்வரூபம்; அவன் ஒப்பிக்க இசைகை - இவர்களுக்கு ஸ்வரூபம். (நன்றாக) இந்த்₃ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பெருமாள் பிராட்டிக்குக் கொடுத்தருள, திருக்கையில் பிடித்துக்கொண்டிருந்து, பெருமாளை ஒருகண்ணாலும் திருவடியை ஒருகண்ணாலும் பார்க்க, பெருமாள் பிராட்டி திருவுள்ளத்திலோடு கிறத்தை அறிந்து, 'அடியார்தரமறிந்துகொண்டாடும் வீறுடைமைக்குப் பர்யவஸாநபூ₄மியான நீ கொடு' என்ன, திருவடியை ஒப்பித்தாற்போலே, க்ருஷ்ணன் நப்பின்னைப் பிராட்டியையிடுவித்து ஒப்பிக்கையாய்த்து நன்றாக ஒப்பிக்கையாவது.

இவர்கள் "நோக்குதியேல்" என்னப்பண்ணிற்றொரு பூர்ணகடாக்ஷமுண்டிறே. அப்பார்வைபட்ட இடமிருக்கும்படியை மேலே சொல்லுகிறார்கள்—(சூடகமே) A "அணிமிகுதாமரைக்கையை" என்று தன் கையை இவர்களாசைப்படுமாபோலே இவர்களாப₄ரணம் பூண்ட கையை அவன் மார்விலும் தோளிலும் தலையிலும் வைத்துக்கொள்ளவிறே அவனுமாசைப்படுவது. அக்கைக்கு இடக்கடவ ஆப₄ரணம் சூடகம். B "வெள்ளிவளைக் கைபற்ற" என்கிறபடியே-அநந்யார்ஹைகளாகப் பிடித்த கைகளையிறே முதல் ஆப₄ரணம் பூட்டுவது. (தோள்வளையே) கையைப்பிடித்த அநந்தரம் அணைக்குந்தோள்களிலே கிடந்து அவன் கழுத்திலே உறுத்துமாப₄ரணம். அவன் நாண்தழும்பின் சரசரப்பு முலைகளுக்கு உத்₃தே₃ஶ்யமானவோபாதி, இவர்களுடைய வளைத்தழும்பும் அவன்தோளுக்கு ஆஸைபாயிருக்குமிறே. C "வேயிருந் தடந்தோளினார்" என்று D "சுந்தரத்தோளுடையான்" தோற்கும்படி தோள் படைத்த தோளுக்கிடுமாப₄ரணம். E "வேய்மருதோளிணை" மெலியுங் காலத்திலிறே வளைபொருதொழிவது; இப்போது அணைக்கிற காலமிறே.

(தோடே) தங்கள் கைக்கும் தங்கள் தோளுக்குமாப₄ரணம் போலன்றே; அவன் தோளுக்குப் பூணுமாப₄ரணமும் பூணவேணும். இவர்களுடைய காதுப்பணியும் செவிப்பூவும் பட்ட விமர்த்த₃த்தாலே வந்த ஶோபை₄யைக் கேட்சொல்லுமிறே அவன் தோள்கள். F "கண்டேன் கனமகரக் குழையிரண்டும் நான்குதோளும்" என்று-அவனுடைய கர்ணபூ₄ஷணம் அவன் தோள்களுக்கு அலங்காரமானாற்போலே, இவர்களுடைய காதுப்பணியும் செவிப்பூவும் தோள்களுக்கு அலங்காரமாயிறேயிருப்பது. (தோடே) G "பொற்றோடு பெய்து"

A திருவாய் 10-3-5. B பெரியதிரு 3-7-1. C திருவாய் 6-2-3. D நாச்-திரு 9-1. E திருவாய் 10-3-1. F திருநெடு 22. G பெரியாழ்திரு 3-7-6.

என்று பண்டே தோடிட்டாலும் இவன் இட்டாற் போலேயிராதே. (செவிப்பூவே) அணைத்தவநந்தரம் ஆக்₄ராணத்துக்கு விஷயமானவிடம். (பாடகம்) அணைத்துத் தோற்றவர்கள் விழுந்து பிடிக்கும் காலுக்கு ஆப₄ரணம். (சூடகமே இத்யாதி₃) பிடித்த கைக்கும் அணைத்த தோளுக்கும் அணைத்தவிடத்தே உறுத்துமதுக்கும் ஸ்பர்ஶத்துக்குத் தோற்றுவிழும் துறைக்கும். (சூடகமே-பாடகமே) A ''கைத்தலம்பற்ற'' B ''திருக்கையால் தாள்பற்றி''. கையைக் காலைப் பிடித்திறே நடுவுள்ளதெல்லாம் நடத்துவது.

(என்றனைய பல்கலனும்) இவ்வளவிலிருந்தெண்ணுமதன்றே. பருப்பருத்தன சிலவற்றைச் சொன்னோம், நீயறியுமவையெல்லாம் என்கிறார்கள். C ''பலபலவே யாபரணம்'' என்னக்கடவதிறே அவன்றனக்குட்பட. (யாமணிவோம்) ஆப₄ரணங் களுக்கு அழகு கொடுக்கவல்ல அவயவங்களிலே கிடந்து தானும் நிறம் பெற்று, பூட்டின தானும் நிறம்பெற்றுப் போம்படி வடிவுபடைத்த நாங்கள். இவ்வெல்லை வருமளவிறே ''மலரிட்டு நாம்முடியோம்'' (2) என்றது. ''நாம்முடியோம்'' (2) என்றால் பூட்டமாட்டான்; ''அணிவோம்'' என்றால் பூட்டாதிருக்கமாட்டான்; அவன் அலங்கரிக்கைக்கு இவர்களநுமதியேயமையும். (யாமணிவோம்) ஒருவரை யொருவர் மாறி மாறி ஒப்பிக்கக் கணிசிக்கிறார்கள். (நாடு புகழும் பரிசினால் — யாமணி வோம்) D ''நிறைபுகழாய்ச்சியர்'' E ''அணியிழையாய்ச்சியர்'' என்கிற இரண்டும் பெறவேணும்.

(ஆடையுடுப்போம்) F''புனையிழைகளணிவும்'' என்றால் F ''ஆடையுடையும்'' என்று அடைவு. G ''காறைபூணும் கண்ணாடிகாணும் தன்கையில் வளைகுலுக்கும்'' என்றால் பின்னை G கூறையுடுக்கையிறே அடைவு.

(நாடுபுகழும் பரிசினால் — ஆடையுடுப்போம்) G ''கூறையுடுக்குமயர்க்கும்'' என்று வசைசொல்லாதபடி அரையிலே தொங்கும்படி உடுக்கை. (கோவிந்தா உன்றன்னைப்பாடி — ஆடையுடுப்போம்) இவன் தூ₃ரவாஸியானபோது ''கோவிந்தன்'' என்று புடவை பெறுகிறவள், இவன் ஸந்நிதி₄யிலே சொன்னால் புடவை பெறக் கேட்கவேணுமோ? (ஆடையுடுப்போம்) முன்பு உடாதேயிருந்து இப்போது உடுப்போமென்கிறார்களன்று; அவனுடுத்த உடுக்குமதிறே — உடை யாவது. இவர்களுடுக்கவுபக்ரமிக்க, 'உடுத்தபடிபொல்லாது' என்று அவன் அழிக்கை

A நாச்-திரு 6 — 6. B நாச்-திரு 6 - 8. C திருவாய் 2 — 5 — 6.
D நாச்-திரு 4—11. E திருவாய் 9 —10—11. F திருவாய் 8—9—5.
G பெரியாழ் திரு 3—7—8,

யிறே நன்றாக உடுக்கையாவது. (நன்றாக — ஆடையுடுப்போம்) A ''அரையில்பீதக வண்ணவாடைகொண்டு'' என்கிறபடியே அவனைப்போலே வெளுப்போடேவாங்கி உடுத்ததன்றிக்கே, உடுத்து முசித்து வேர்ப்புமணத்தோடே கூடின கூறைமாறுப் பட்ட உடையாயிருக்கை. (அணிவோம் — உடுப்போம்) பிரிந்திருக்கிலிறே. B ''வரி வளையால் குறைவிலமே'' C ''மேகலையால் குறைவிலமே'' என்னவேண்டுவது. (பல்கலனும் யாமணிவோம் ஆடையுடுப்போம்) D ''எண்ணில் பல்கலன்களும் ஏலு மாடையும்'' என்னக்கடவதிறே.

(அதன்பின்னே) E ''பீதகவாடை''யுடுத்தால் E கலத்ததுண்ணுமத்தனையிறே. (அதன்பின்னே) புறம்பேயொன்றைப்பற்றினால் அவையுமில்லை, அவனையுங்கிடையாது; அவனைப்பற்றினார்க்கு ஸர்வலாப₄முமுண்டு. (பாற்சோறுமூட நெய்பெய்து) ''நெய் யுண்ணோம் பாலுண்ணோம்'' (2) என்கிற வ்ரதங்கள் ஸமாபித்து; இவர்கள் வ்ரதத்துக்காகத் தவிர்ந்து, இவர்கள் தவிருகையாலே அவன்தவிர்ந்து ஊரில் நெய்க்கும் பாலுக்கும் போக்கில்லையே. நெய்ப்பெருமையாலும் பால்பெருமை யாலும் நீரிலாக்காதே பாலிலேயாக்கி நெய்யை நிரம்பவிட்டு, நெய்யிடையிலே 'சோறுண்டோ' என்று தடவி எடுக்கவேண்டும்படியிருக்கை. (முழங்கைவழிவார) க்ருஷ்ணன் ஸந்நிதி₄யில் த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்கு உள்ளுத்தொங்குகிற தன்றே; கைவழியே வழிய.

(கூடியிருந்து) பசிகெடவுண்கிறார்களன்றே; எல்லாருங்கூடத்தொட்டுக்கொண்டி ருக்கையிறே உத்₃தே₃ஶ்யம். (கூடி) பிரிந்துபட்ட வ்யஸநமெல்லாந் தீரக் கூடி F ''எனைநாள் வந்து கூடுவன்'' என்ற இழவும் தீர்ந்தபடி. (இருந்து) வாசல்கள் தோறும் அலமந்து எழுப்பிக்கொண்டு திரிந்த க்லேஶமெல்லாம் தீர இருந்து. (குளிர்ந்து) பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் வவ்வலிடும்படி குளிர்ந்து.

(கோவிந்தா உன்றன்னைப்பாடி — கூடியிருந்து குளிர்ந்து) G ''கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்து'' H ''காமத்தீயுள் புகுந்து கதுவாநிற்க'' இராதே, I ''குளிர்ந்துறைகின்ற கோவிந்தனோடு'' ஸாம்யாபந்நைகளாயிருக்கை. ஆக, இந்த இரண்டு பாட்டாலும் — ஸாம்யாபத்தியும் கு₃ணாநுப₄வமுமென்கிற இரண்டு அர்த்த₂முஞ் சொல்லப்பட்டது. விரஜாஸ்நாநத்திலே உத்₃யுக்தனாய்ப்போருமவனுக்கு J ''காளங்கள் வலம்புரிகள், தூர்யகோ₄ஷம்'', J ''ஆண்மின்கள் வானகம்'' என்கிற மங்க₃ளாஶாஸநம், K ''நிறைகுடவிளக்கம்'', L ''கொடியணி நெடுமதில்'' என்னும்படி கட்டின கொடியும் மேல்கட்டியுமாய் ஆதிவாஹிகர் தொடக்கமான வர்கள் ஸத்கரிக்கப்போய், விரஜாஸ்நாநம் பண்ணினவநந்தரம் ஸ்ரீவைகுண்ட₂

A நாச்-திரு 13-1. B திருவாய் 4-8-7. C திருவாய் 4-8-8. D திருவாய் 4-3-5. E திருப்பல் 9. F திருவாய் 10-10-9. G நாச்-திரு 8-3. H நாச்-திரு 8-2. I பெரியாழ் திரு 4-4-8. J திருவாய் 10-9-6. K திருவாய் 10-9-10. L திருவாய் 10-9-8.

நாதனை ஒப்பிக்கக் கடவராயிருக்கும் திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் பூலஹஸ்தைகளுமாய் வாஸோஹஸ்தைகளுமாய் வந்து ப்ரஹ்மாலங்காரம்பண்ண ஸ்ரீவைகுண்டநாதனோடே கூடி ஸூரிகளோடே சேர்ந்திருந்து ஸம்ஸாரதாப ஸ்பர்ஶமின்றிக்கே நிரதிஶய போக்யமாய், A''உண்ணுஞ்சோறு'' என்று சொல்லப்பட்ட போக்ய விஷயத்தை B''பாலேபோல்சீர்'' என்கிற குணங்களோடே கைகழியப் போருகிற ஸ்நேஹத்தோடே பூஜித்துக் களிக்கக்கடவ பரிமாற்றத்தை ஒருமுகத்தாலே ஸூசிப்பிக்கிறார்கள். முக்தரானவர்களுக்கு இஸ்ஸத்காரமும் இவ்வநுபவமும் ஸித்திக்கிறது— C''கோவிந்தன்றனக்குக் குடியடியார்'' என்றிறே. (கோவிந்தா வுன்றன்னைப்பாடி) தேஹாந்தரே தேஶாந்தரே பெறக்கடவ பேற்றை எங்களுக்கு நீ ஸம்மானமாகப் பண்ணித்தரவேணுமென்று ஸாம்யாபத்தியையும் குணாநுபவத்தையும் அபேக்ஷித்தார்களாயிருக்கிறது. திருவடி, திருவநந்தாழ்வான், திவ்யாயுதாழ்வார்கள் தொடக்கமான ஸூரிவர்க்கமும், திவ்யமஹிஷிகள், முமுக்ஷுக்கள், அஸாதாரணமான நாடு, ஈஶ்வரன்தானே எல்லாரும் ஸம்மானம் பண்ணும்படியான விஷயம், முமுக்ஷுவாய் முக்தனும் என்கிற ஶ்ருத்யர்த்தமும் ஸூசிதமாகிறது.

(கூடியிருந்து குளிர்ந்து — பல்கலனும் யாமணிவோம்) பிரிந்தபோது பரியட்டங்களையும் ஆபரணங்களையும் கட்டி எங்கேனும் பொகட்டு, 'ராக்ஷஸிகள் நடுவிருக்கிற எனக்கு என்செய்ய?' என்றிருந்த பிராட்டியைப்போலே இருந்தார் களிவர்கள்; ''ஸ்நாநமும் வஸ்த்ரங்களும் ஆபரணங்களும் பரதனையொழிய நமக்கென்றிய?'' என்றிருந்த பெருமாளைப் போலேயிருந்தான் க்ருஷ்ணன். D நீராட்டமைத்துக் குளிக்க அழைத்தாலும் வாராதே, E''நப்பின்னை காணிற் சிரிக்கும்'' என்றுலுமிசையாதே, இவன் குளியாதிருக்கிறமை அவர்களும் அறிகையாலே ''உன்மணாளனை எம்மை நீராட்டு'' (20) என்றது இவர்கள். இவர்களோடே கூடின பின்பு, விஶோதிதஜடராய் ஸ்நாநம் பண்ணி, சித்ரமால்யாநுலேபநராய், மஹார்ஹ வஸநமுமுடுத்து விளங்கி நின்றாற்போலே, இவனும் இவர்களோடே கூடிக்குளித்து ஒப்பித்து விளங்கவேண்டுகையாலே, கூடியிருந்து இப்படி செய்யக் கடவோமென்கிறார்கள். (நன்றாக — கூடியிருந்து குளிர்ந்து) இனி விஶ்லேஷ வ்யஸநம் பிறவாத கூட்டரவாகவேணும். நன்றாளிலே வருகிற கூட்டரவாகையாலே நன்றாகக் கூட வேணுமிறே. ''உன்றன்னைப்பாடி — கூடி — குளிர்ந்து வாய் பாட, உடம்புகூட, நெஞ்சுகுளிர. கூடி — குளிர்ந்து குள்ளக்குளிர நீரிலே தோயாதே நீர்வண்ணன் மார்வத்திலே தோயவேணும்''. 27.

A திருவாய் 6-7-1, B பெரியதிருவ 58, C திருவாய் 10-9-8, D பெரியாழ்திரு 3-3-3. E பெரியாழ் திரு 2-4-9.

## ஈராயிரப்படி — இருபத்தேழாம் பாட்டு

அவ:— இருபத்தேழாம் பாட்டு. கீழில் தன் ஸ்வரூபஸித்₃தி₄ சொல்லிற்று; இப்போது அவர்களை அலங்கரிக்கிறபடி சொல்லுகிறது.

வ்யா:— (கூடாரை வெல்லும்) "எங்களைத் தோற்பித்த நீ யாரை வெல்ல மாட்டாய்?" என்கிறார்கள். அதாவது — நாங்கள் முன்னே வந்து நின்று வார்த்தை சொல்லும்படி பண்ணினாயே; ஆந்தனையும் பார்த்தால் கூடாரை வெல்லுமித்தனை; கூடினால் தான் தோற்குமித்தனை; (சீர்) எல்லாரையும் வெல்லுவது கு₃ணத்தாலே; அஜ்ஞரை ஸர்வஜ்ஞராக்கும்; ஸர்வஜ்ஞரை A "எந்திறம்" என்னப்பண்ணும். 1. "ஸத்யேந லோகாந் ஜயதி" இத்யாதிவத். (கோவிந்தா) பசுக்களுக்கும் தோற்குமவனே!

(உன்தன்னைப்பாடி) விலக்கினவது பெற்றபடி. "ஹிரண்யாய" என்கை தவிர்ந்து உன்னைச் சொல்லப் பெறுவதே என்கை. (பாடியுன்தன்னை) பெண்கள் புணர்ப்பே த₄ாரகமாகப் பாடித் திரியுமென்கை. பாடுகையே ப்ரயோஜன மென்றுமாம். (சீர்) சீலவத்தையின் மிகுதியே என்னவுமாம். (பறைகொண்டு) ப்ராப்யத்தில் ப்ராபக வ்யவஹாரம்; ஊருக்குப் பறையென்கிறது. (யாம் பெறு சம்மானம்) தங்கள் பேறு. அநாதி₃காலம் எல்லாராலும் பட்ட பரிப₄வம் மறக்கும்படி அவள் கொண்டாடும்படி சொல்லுகிறது.

(நாடு புகழும் பரிசு) "பாரோர் புகழ" (1) என்னும்படியே 'ஒருவர் கொடுக்கும்படியே! சிலர் பெறும்படியே!' என்று கொண்டாடவேணும். (நன்றாக) நாடு சிரிக்கும்படியன்றிக்கே. 2. "ப்ரதே₃ஹி ஸுப₄கே₃ ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பா₄மிநி" என்று இந்த்₃ரன் வரக்காட்டின ஹாரத்தைக் கையிலே பிடித்துப் பிராட்டியும் தானும் திருவடியை அலங்கரிப்பித்தாற் போலே. (நன்றாக) 3. "தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி" போலே. (சூடகமே) B "அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய்" என்னுமாபோல. அவன் சொல்லி மார்விலும், தலையிலும் வைத்துக்கொள்ளும் கைக்கு இடும் சூடகம். 4. "தம் மணிம் ஹ்ருத₃யே க்ருத்வா" இத்யாதி₃வத். முந்துறக் காணுமிடம். (தோள் வளையே) அத்தலையில் ஸ்பர்ஶம் அணைக்க வேண்டியிருக்கையாலே, அணைத்த தோளுக்குத் தோள்வளையுமென்கை. (தோடே) அணைத்தாலும் உறுத்துமவை. C "கண்டேன் கனமகரக்குழையிரண்டும் நான்கு தோளும்" என்னுமாபோலே. (செவிப்பூவே) ஆக்₄ராணம் பண்ணுமிடம். கண்ணாகவுமாம். (பாடகம்) அணைத்தால் துவண்டு விழுமிடம். (அனைய பல்கலனும்) பருப் பருத்தன சில சொன்னவித்தனை. நீயறியுமவையெல்லாமென்கை. D "பலபல வேயாபரணம்" இத்யாதி₃ இத்த₃சையிலே எண்ணப்போமோ? (யாமணிவோம்) "மலரிட்டு நாம் முடியோம்" (2) என்ற இவர்கள் அனுமதிபண்ண அமையுமென்கை.

(ஆடையுடுப்போம்) "பண்டு உடார்களோ?" என்னில்: அவனுடுத்தது உடை; உடாதது உடையன்றென்கை. அதாவது — கூறைமாறுகை. E "புனை

A திருவாய் 1-3-1. B திருவாய் 10-3-5. C திருநெடு 22. D திருவாய் 2-5-6. E திருவாய் 8-9-5.

யிழை" இத்யாதி₃. A "அப்பன் திருவருள் மூழ்கினள்" என்கிறபடியே அவனோட்டை ஸம்ப₃ந்த₄மே இவர்கள் நன்மைக்கெல்லாம் அடி என்கை. A புதுக்கணிப்பும் — அவனுகப்பொழிய, தங்களுகப்பு பொகட்டபடி. (அதன் பின்னே பாற்சோறு இத்யாதி₃) ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄முண்டான திருவாய்ப்பாடியில் ஸம்ருத்₃தி₄களெல்லாம் இவளுக்கு ப்ரியமாயிருக்கிறபடி. (கூடியிருந்து) பு₄ஜிக்கக் கடவதன்று; பிரிந்து பட்ட க்லேஶம் தீர, கூடித் தொட்டுக் கொண்டிருக்கை ப்ரயோஜநம். 1. "அஹமந்நம்" இத்யாதி₃ப்படியே ஒருவர்க்கொருவர் போ₄க்₃யமென்கை. (குளிர்ந்து) பிரிந்து கமர் பிளந்த நெஞ்சங்கள் வவ்வலிடும்படி. 27.

## நாலாயிரப்படி — இருபத்தேழாம் பாட்டு

அவ:— இருபத்தேழாம் பாட்டு. கீழ் தன் ஸ்வரூபஸித்₃தி₄யைச் சொல்லிற்று; இப்போது அவர்களை அலங்கரிக்கும்படி சொல்லுகிறது.

வ்யா:— (கூடாரை வெல்லும்) தாங்கள் பட்ட இடரை அறிவித்து அத்தலையைத் தோற்பிக்க நினைத்தார்கள். அவன் தன் தோல்வியைக் காட்டி அவர்களைத் தோற்பித்தபடியைச் சொல்லுகிறது. 'எங்களைத் தோற்பித்த நீ யாரை வெல்ல மாட்டாய்?' என்கிறார்கள்; அதாவது — நாங்கள்வந்து உன் முன்னே நின்று வார்த்தை சொல்லும்படி பண்ணினாய். ஆந்தனையும் பார்த்தால் 1. "ந நமேயம்" என்ற கூடாரை வெல்லுமத்தனை; கூடினார்க்குத் தான் தோற்குமித்தனை. (சீர்) எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. கூடுவாரை ஶீலத்தாலே வெல்லும்; கூடாதாரை ஶௌர்யத்தாலே வெல்லும். அழகுக்கும் அம்புக்கும் இலக்காக்கும்; அஜ்ஞரை ஸர்வஜ்ஞராக்கும். ஸர்வஜ்ஞரை B 'எத்திறம்' என்னப் பண்ணும். 2. "ஸத்யேந லோகாந் ஜயதி" இத்யாதி₃. அம்பு வாய் மருந்தூட்டித் தீர்க்கலாம். இதுக்குப் பரிஹாரமில்லை. நீர் கொன்றாற் போலே. C "நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து" என்னக்கடவதிறே. ஶத்ருக்களை வில்லைக்காட்டிக் கொல்லுமத்தனை. 3. "சசால சாபம் ச முமோச வீர:" என்று விற்பிடித்த பிடியைக்கண்டு வில்லை ராவணன் பொகட்டான். பின்னை வில்லெடாதேயொழிந்தானாகில் பெருமாளை வென்றே போகலாயிற்று. 'விற்கைவீரன் பெருமாள்; வெறுங்கைவீரன் ராவணன்' என்றான் ருஷி. (கோவிந்தா) பசுக்களுக்கும் தோற்குமவன்; கூடுவோமென்னும் அபி₄ஸந்தி₄ இல்லாதாரையும் ரக்ஷித்தபடி.

(உன்தன்னைப் பாடி) விலக்கினவது பெற்றபடி. "ஹிரண்யாய நம:" என்கை தவிர்ந்து உன்பேர் சொல்லப்பெறுவதே! என்கை. (உன்தன்னைப்பாடி) பெண்கள் புணர்ப்பே த்₄வாரகமாகப் பாடித்திரியும் உன்னைப் பாடுகையே ப்ரயோஜநம் போரும் என்றுமாம். (சீர்) ஶீலவத்தையின் மிகுதியாகவுமாம். (பறைகொண்டு) ப்ராப்யத்திலே ப்ராபகவ்யவஹாரம்; உங்களுக்குப் பறையென்கிறது. (யாம் பெறு சம்மானம்) தங்கள் பேறு. இவ்வளவிலே வெளித்திருமுற்றத்தில் நின்றும்

---

A திருவாய் 8-9-5, B திருவாய் 1-3-1 C திருவாய் 9-6-3.

ப்ரஸாதமும் கொண்டு ஒருவன்வர, 'இது யாம்பெறு சம்மானம் வந்தது' என்று பட்டர் அருளிச்செய்தார். 1. "பதிஸம்மாநிதா ஸீதா" என்று 'தோளில் மாலையை வாங்கியிட்டார்' என்று ஆழ்வான் பணிக்கும். பட்டர் 'ப்ரணயித்வத்தாலே காலைப் பிடித்து நில் என்றார்' என்பர். 2. "தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம்ச்ரயணாந் நிராஹு:" என்று கொடுத்தால் தட்டென் என்கை. (யாம் பெறு சம்மானம்) அநாதிகாலம் எல்லாராலும் பட்ட பரிபவம் மறக்கும்படி அவன் கொண்டாடும்படி சொல்லுகிறது.

(நாடு புகழும் பரிசு) "பாரோர் புகழ" (1) என்னும்படியே 'ஒருவன் கொடுக்கும்படியே! சிலர் பெறும்படியே!' என்று கொண்டாட; ஸஞ்ஜயனும் ஶுகஸாரணர்களும் இவனுடைய ஆஶ்ரிதபக்ஷபாதத்தைப் புகழ்ந்து போனாற்போலே. (நன்றாக) நாடு சிரிக்கும்படி காலன் கொண்ட பொன்னையிட்டு ஆபரணம் பூண்கையன்றிக்கே, 3. "ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பாமிநி" என்று இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பெருமாள் பிராட்டிக்குக் கொடுக்க, அத்தை ஒருகையிலே பிடித்து, பெருமாளை ஒரு கண்ணாலும் 'இத்தை இவனுக்குக் கொடுப்பது' என்று திருவடியை ஒரு கண்ணாலும் பார்க்க, பெருமாள் அத்தையறிந்தருளி, 'ஆஶ்ரிதரையறிவாய் நீயன்றோ; கொடுக்கலாகாதோ' என்றருளிச்செய்யக் கொடுத்தாற்போலே இருவரும் கூடிக்கொடுக்கும் ஆபரணமென்கை. 4. "தம் ப்ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி" என்று விரஜைக்கு அக்கரைப்பட்டாரை எம்பெருமான் தன்னை ஒப்பிப்பாரையிட்டு ஒப்பிக்கக்கடவது. இங்கு அங்ஙனன்றியே தானும் பிராட்டியுங்கூட ஒப்பித்த தன்னேற்றம் சொல்லுகிறது. (நன்றாக) ஆபரணத்தைப்பூண்டு அவர் வரவு பார்த்திராதொழிகை என்றுமாம்.

(சூடகமே) A "வெள்ளி வளைக்கைபற்ற" என்கிறபடியே அநந்யார்ஹைகளாகப் பிடித்த கைகளிலேயிறே முதலாபரணம் பூட்டுவது. B "அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்" என்னுமாபோலே அவனும் சொல்லி மார்பிலும் தலையிலும் வைத்துக் கொள்ளும் கைக்கு இடும் சூடகம். முந்துறத்தான் உறவுபண்ணுமிடம். C "கைத்தலம் பற்ற". (தோள்வளையே) அத்தலையில் ஸ்பர்ஶமே அணைக்கவேண்டியிருக்கையாலே அணைத்த தோளுக்குத் தோள்வளையுமென்கை. (தோடு) அணைத்தாலுறுத்துமவை. 5. "ப்ரியாவதம்ஸோத்பல" D "கண்டேன் கனமகரக் குழையிரண்டும் நான்கு தோளும்" என்னும்படியே. (தோள் வளையே தோடே செவிப்பூவே) செவிப்பூ — ஆக்ராணம் பண்ணுமிடம்; கண்ணாகவுமாம்.

(பாடகமே) அணைத்தால் துவண்டுவிழுமிடம். 6. "அஸிதேக்ஷணே"யாகையாலே, 7. "ஜிதம் தே புண்டரீகாக்ஷ" என்று அவன் தோற்று விழுமிடம். (அனைய பல்கலன்) பருப்பருத்தன சிலசொன்னவித்தனை. நீ அறியுமவையெல்லாம் வேணுமென்கை. E "பலபலவேயாபரண"மிறே. இத்துசையிலேயிருந்து எண்ணப் போமோ? (யாமணிவோம்) "மலரிட்டுநாம்முடியோம்" (2) என்னுமிவர்கள் அநுமதி பண்ணவும் அமையுமென்கை.

---

A பெரிய திரு 3-7-1, B திருவாய் 10-3-5, C நாச்-திரு 6-6, D திருநெடு 22. E திருவாய் 2-5-6.

(ஆடையுடுப்போம்) 'பண்டு உடார்களோ?' என்னில்: (கோவிந்தா உன்தன்னைப் பாடி ஆடையுடுப்போம்) ஒருத்திக்குப் புடவை கொடுத்தது இவர்களுக்குச் செய்யச் சொல்லவேணுமோ? அவன் உடுத்த உடாதது உடையன்றென்றிருக்கை. அதாவது கூறைமாறுடுகை. A "புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று" A "அப்பன் திருவருள் மூழ்கினள்" என்னும்படியே அவனோட்டை ஸம்ப₃ந்த₄மே இவர்கள் நன்மைக்கெல்லாம் அடி. A [புதுக்கணிப்பும்] அவனுகப்பொழிய, தங்களுகப்புப் பொகடடபடி. நோன்பு முடிக்கையாலே நல்ல பரியட்டமுடுக்க என்றுமாம். B "உடுத்துக்களைந்த" என்னுமவர்களிறே. (அதன் பின்னே பாற்சோறு மூட நெய் பெய்து முழங்கை வழிவார) ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄முண்டான திருவாய்ப்பாடியில் ஸம்ருத்₃தி₄களெல்லாம் இவர்களுக்கு ப்ரியமாயிருக்கிறபடி. நம்பிதிருவழுதிவளநாடுதாஸர், "நெய்வாயில் படாதோ?" என்ன, 'ஒர விழ் வாயில் தொங்கிலன்றோ நெய் வாயில்படுவது" என்று ப₄ட்டர் அருளிச் செய்தார். க்ருஷ்ணஸந்நிதி₄யாலே த்ருப்தைகளாயிருக்கிறார்கள். பால்தொங்கிலன்றோ நெய்தொங்குவது. 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' (2) என்றது தனியாகை.

(கூடியிருந்து) தனியே பு₄ஜிக்கக்கடவதன்று. உண்கை உத்₃தே₃ஶ்யமன்று. பிரிந்துபட்ட க்லேஶம்தீரக் கூடத் தொட்டுக் கொண்டிருக்கையே ப்ரயோஜனம். 'நம்பெருமாள் திருநாள்' என்று ஒருபேரையிட்டு ஸ்ரீவைஷ்ணவர்களையடையத் திரட்டிக் காணுமாபோலே. 1. "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா" 2. "அஹமந்ந"மித்யாதி₃. ஒருவர்க்கொருவர் பே₄ாக்₃யமாகை. (குளிர்ந்து) பிரிந்து கமர் பிளந்த நெஞ்சுகள் வவ்வலிடும்படி. 27.

## ஸ்வாபதே₃ஶவ்யாக்₂யாநம் — இருபத்தேழாம்பாட்டு

அவ,— இருபத்தேழாம்பாட்டு. (கூடாரை இத்யாதி₃) இப்பாட்டில், நோற்றால், அவன்பக்கல் பெறுமவற்றைச் சொல்லுகிறார்கள்.

வ்யா:— (கூடாரை வெல்லுஞ் சீர்) கரணகளேப₃ரப்ரதா₃நம் முதலாக ஸாங்க₃ஶாஸ்த்ரப்ரதா₃நம் பண்ணின இடத்திலும் 3 "ந நமேயம்" என்றிருப்பாரைத் தன்னுடைய ஸௌர்யாதி₃ கு₃ணங்களாலும் ஶீலாதி₃கு₃ணங்களாலும் வெல்லுமித்தனை, விற்பிடியைக் காட்டி ராவணனை ஜயித்தான்; இது ப்ரத₂மயுத்₃த₄த்திலே; 4 "க₃ச்சா₂நுஜாநாமி" என்று இவனும் அதுக்கு எதிர்பார்த்துப் போனவன்; தோலாமை இல்லையிறே. 'ஆனால் மறுபடியும் யுத்₃த₄முண்டானபடி எங்ஙனே?' என்னில்:—பெருமாளுடைய நிரதிஶயஸௌர்யத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக மறுபடியும் யுத்₃த₄ம்பண்ணினானித்தனை. 5. "ஶத்ரோ: ப்ரக்₂யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" 6."ஸ்வவிக்ரமை: ரஞ்ஜநீயஸ்ய" என்னக்கடவதிறே என்று நம்முடைய ஆசார்யர் அருளிச்செய்வர். தன்னுடைய வடிவழகைக்காட்டி கோபிமார்களை ஜயித்தான்; ஸ்வரூப ரூப கு₃ண விபூ₄திகளாலே ஸர்வஸ்மாத்பரனை

A திருவாய் 8-9-5. B திருப்பல் 9.

தன்னுடைய வைலக்ஷண்யத்தைக் காட்டி ஆழ்வார்களை ஜயித்தான்; இவை ஒன்றிலும் ஈடுபடாத நம்போல்வாரை ஆழ்வார் ஸம்ப₃ந்த₄த்தை வ்யாஜீகரித்து ஜயிக்குமித்தனை. (கோவிந்தா) ஸர்வ ஸுலப₄னானவனே! (உன்தன்னைப்பாடி) ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸுலப₄னான உன்னை த்வத₃நுப₄வ ஜநித ப்ரீதிக்குப் போக்கு வீடாகப் பாடி. (பறை கொண்டு) புருஷார்த்த₂த்தை லபி₄த்து. (யாம் பெறு சம்மானம் நாடு புகழும் பரிசினால் நன்றாக) நாடு ஸ்வாபி₄ப்ராயமாகக் கொண்டாடும் ப்ரகாரத்தாலே உன்பக்கல் கைபார்த்திருக்கும் நாங்கள் லபி₄க்கிற ப₃ஹுமாநம்; உன்பக்கல் நன்றாக யாம் பெறுசம்மாநமென்றுமாம். (சூடகமே) காப்பே. (தோள்வளையே) திருவிலச்சினையே. (தோடே) திருமந்த்ரமே. (செவிப்பூவே) த்₃வயமே. (பாடகமே) சரமஶ்லோகமே. இவை ஸ்வரூபஜ்ஞனாய் முமுக்ஷுவான அதி₄காரிக்கு அவஶ்யாபேக்ஷிதங்களாய் ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄த்₃யோதகங்களாயிருப்பன. இதில் தோடு, மண்ட₃லாகாரமாய் மந்த்ரஶேஷவிவரணியான ப்ரணவாகாரத்துக்கு த்₃யோதகமாயிருக்கையாலே திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. (செவிப்பூ) ஸ்வயம் போ₄க₃ரூபமாகையாலே போ₄க₃ப்ரதா₄னமான த்₃வயத்தைச் சொல்லுகிறது. (பாடகம்) பாடகம் ப₃த்₃த₄ரூபமாகையாலே, உபாயாந்தரநிவ்ருத்திபரமான சரமஶ்லோகத்தைச் சொல்லுகிறது இம்மூன்று ரஹஸ்யத்தாலும் ஜ்ஞாநப₄க்திவைராக்₃யங்களைச் சொல்லுகிறது. அது எங்ஙனே? என்னில்: — திருமந்த்ரம் ஆத்ம ஸ்வரூப யாதா₂ர்ம்யஜ்ஞாநபரமாகையாலும், த்₃வயம் உத்தரக₂ண்ட₃த்திற் சொல்லுகிற கைங்கர்யத்துக்குப் பூர்வபா₄வியான ப₄க்தி ப்ரதா₄நமாகையாலும், சரமஶ்லோகம் — த்யாஜ்யாம்ஶத்தில் வைராக்₃ய ப்ரதா₄நமாகையாலும், ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்களைச் சொல்லுகிறது. (என்று அனைய) என்று சொல்லப்படுகிற, (பல்கலனும்)— ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்கள் மூன்றும்; ஒரோன்றே விஷயபே₄த₃த்தாலே அநேகமாயிருக்குமிறே; ஆகையாலே 'பல்கலனும்' என்கிறார்கள். (யாம் அணிவோம்) உன்னோடே கூடாத அன்று இவையொன்றும் வேண்டாத நாம் இன்று அணியக்கடவோம். ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄மின்றியிலே ஜ்ஞாநப₄க்திவைராக்₃யங்களுண்டானாலும் அபாயமேயிறே ப₂லிப்பது. பௌத்₃த₄னுக்கும் ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்கள் உண்டிறே.

(ஆடையுடுப்போம்) ஶேஷத்வஜ்ஞாநமாகிற வஸ்த்ரத்தை உடுப்போம். (அதன் பின்னே) அதுக்குமேலே. (பாற்சோறு) கைங்கர்யமானது. (மூடநெய் பெய்து) மறையும்படி பாரதந்த்ர்யத்தை வெளியிட்டு. (கூடியிருந்து குளிர்ந்து) போ₄க்தாவான உன்னோடு போ₄க்₃யரான நாம் ஸம்ப₃ந்தி₄த்திருந்து விஶ்லேஷவ்யஸநமெல்லாம் தீரப்பெற்றோம். இதுவன்றோ நாம் உன்பக்கல் பெறும் ஸம்மாநம்.

# இருபத்தெட்டாம் பாட்டு

**கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்**
**அறிவொன்று மில்லாத ஆய்க்குலத் துன்றன்னைப்**
**பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்**
**குறைவொன்று மில்லாத கோவிந்தா வுன்றன்னோ**
**டுறவேல் நமக்கிங் கொழிக்க வொழியா(து)**
**அறியாத பிள்ளைகளோ மன்பினா லுன்றன்னைச்**
**சிறுபே ரழைத்தனவுஞ் சீறி யருளாதே**
**இறைவாநீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.**

பதவுரை:— குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா — ஒருதுறையும் இல்லாதவனான கோவிந்தனே! யாம் — நாங்கள், கறவைகள் பின்சென்று — பசுக்களின் பின்னே போய், கானம் சேர்ந்து — காடு சேர்ந்து, உண்போம் — உண்டு திரிவோம்; அறிவு ஒன்றும் இல்லாத — சிறிதும் அறிவற்ற, ஆய்க் குலத்து — இடைக் குலத்தில், உன் தன்னை — உன்னை, பிறவி பெறும் தனை புண்ணியம் உடையோம் — பிறக்கப் பெறுவதற்குத்தக்க புண்ணியமுடையவர்களாய் இராநின்றோம்; இறைவா — எம்பிரானே! உன்தன்னோடு உறவு — உன்னோடு (எங்களுக்குள்ள) உறவானது, இங்கு நமக்கு ஒழிக்க ஒழியாது— இங்கு உன்னாலும் எங்களாலும் ஒழிக்க ஒழியமாட்டாது; அறியாத பிள்ளைகளோம் — (உலக ழைக்கொன்றும்) அறியாத சிறுபெண்களான நாங்கள், உன்றன்னை — உன்னை, அன்பினால் — பிரீதியினாலே, சிறுபேர் அழைத்தனவும் — சிறிய பேராலே அழைத்ததைக் குறித்தும், நீ — (ஆஶ்ரிதவத்ஸலனான)நீ, சீறி அருளாதே — கோபித்தருளாமல், பறை தாராய் — (நாங்கள் விருமபும்) ப்ரயோஜனத்தைத் தரவேணும்.

---

## மூவாயிரப்படி — இருபத்தெட்டாம்பாட்டு

அவ:— இருபத்தெட்டாம்பாட்டு. a முதற்பாட்டில் ''நாராயணனே நமக்கே பறை தருவான்'' (1) என்று ஸங்க்3ரஹேண சொன்ன ப்ராப்ய ப்ராபகங்களை,

---

பெ. அ. இருபத்தெட்டாம் பாட்டு. (கறவைகள் இத்யாதி3) a முதல் பாட்டில் ''நாராயணனே'' (1) என்றத்தால் — ப்ராபகத்தையும், ''பறை'' (1) என்றத்தால் — ப்ராப் யத்தையும் சொல்லியிருக்க, ''இறைவா நீதாராய்'' என்று இப்பாட்டில் சொல்லுமளவில் பௌநருக்த்யமும், 'இற்றைப்பறைகொள்வான் அன்றுகாண்' (29) என்று - மேற்பாட்டிலே பறையை நிஷேதி4க்கையால் அந்தப்பறை ப்ராப்யமென்று சொல்லுமளவில் விரோத4மும் ப்ரஸங்கி3க்குமென்னும் ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (முதற்பாட்டில் இத்யாதி3) ''நாராயணனே நமக்கே பறை தருவான்'' (1) என்றது—அபராத4'மாய், அதுக்கு க்ஷாம ணத்தையும், தங்களாகிஞ்சந்யம் முதலான உபயுக்தார்த்த2த்தையும் இப்பாட்டில் சொல்லுகையால் இது விவரணமாய்த்து; மேலிற் பாட்டில் அந்யாபதே3ஶமான அர்த் த2த்தை நிஷேதி4த்து, ''பறை'' என்றதின் உட்கருத்தான அர்த்த2த்தை விவரிக்கையால்.

இந்த இரண்டுபாட்டாலே விவரிக்கிறது. b அதில் இப்பாட்டிலே b₂ 'நாட்டார் இசைகைக்காக "நோன்பு" என்று ஒருவ்யாஜத்தையிட்டுப் புகுந்தோமித்தனை; எங்களுக்கு உத்₃தே₃ஶ்யம் அதுவன்று; உன்திருவடிகளில் கைங்கர்யமே' என்று தங்களுக்கு உத்₃தே₃ஶ்யமான புருஷார்த்த₂ ஸித்₃தி₄க்குத் தங்கள் ஆகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு, 'நீயே உபாயமாகவேணும்' என்று அபேக்ஷித்து, இதுக்கு க்ஷாமணம் பண்ணிக்கொண்டு, ப்ராப்ய ப்ரார்த்த₂நம் பண்ணித் தலைக் கட்டுகிறது. c மேலிற்பாட்டிலே — ப்ராப்ய ப்ரார்த்த₂நம் பண்ணுநின்றதாகில், இங்குப் பண்ணுகிற தென்னென்னில்: — c₂ ப்ராபகம் ப்ராப்யஸாபேக்ஷம் ஆகையாலே சொல்லுகிறார்கள்.

வ்யா:— d (கறவைகள்) e 1. "ஜ்ஞாநேந ஹீந: பஶுபி₄: ஸமாந:" என்று— அறிவுகேட்டுக்கு நித₃ர்ஶநமான பசுக்கள். f (பின்சென்று) g நாங்கள் தேவரைப் பெறுகைக்கு கு₃ருகுலவாஸம்பண்ணினபடி— இவற்றை அநுவர்த்தித்தோமித்தனை. h எங்களைப் பார்த்தால், பசுக்கள் வஸிஷ்ட₂ாதி₃களுக்கு ஸத்₃ருஶமாகப் போரும். i 2. "க்ருதாநுகாராநிவ கோ₃பி₄ரார்ஜவே" என்று— பசுக்கள் i₂ அசுக்காட்டும்

---

பெ. அ. அதுவும் விவரணமென்று கருத்து. b விவரணரூபத்வத்தை உப்பாதி₃க்கிறார் (அதில் இத்யாதி₃) b₂ "இற்றைப் பறைகொள்வானன்று காண்" இத்யாதி₃யைக் கடாக்ஷித்து, இப்பாட்டில் "பறை" என்றதின் அர்த்த₂த்தை உபாயஶேஷமாக அருளிச்செய்கிறார் (நாட்டார் இத்யாதி₃) c₂ ப்ராபகம் ப்ராப்ய ஸாபேக்ஷமாகையாவது — "இறைவா நீ தாராய்" என்று இவர்கள் ப்ராபகத்தைக் குறித்து அர்த்தி₂க்கும்போது "எத்தைத்தர?" என்று கர்மாகாங்க்ஷையுண்டாயிருக்கை.

d, f, e ஆகிஞ்சந்யத்தைச் சொல்லவேண்டித் தங்கள் நிகர்ஷத்தைச் சொல்லும் போது கறவைகளைப் பின்செல்லுகை நிகர்ஷமென்று தோற்றும்படி ஸம்வாத₃ பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஜ்ஞாநேந இத்யாதி₃) f, g "சென்று" என்று சொல்ல அமைந்திருக்க "பின்" என்றத்தால் — ஆசார்யாநுவர்த்தநம் போலே இதுவேயொழிய வேறொன்றுமில்லையென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி₃) h, i ஜ்ஞாந ஹீநர்க்கு நித₃ர்ஶநமாகை ப்ரஸித்₃த₄மேயாகிலும் பசுக்கள் மநுஷ்யரில் ஜ்ஞாநாதி₄க்யம் தோற்றும்படி உங்களுக்கு கு₃ருஸ்த₂ாநமாகத் தோற்றிச் சொல்லுகை எங்ஙனேயென்ன, அருளிச்செய்கிறார் (எங்களை இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே) i₂ அசுக்காட்டுகை —

---

சி. அ. இருபத்தெட்டாம் பாட்டு. (கறவைகள்) c ("மேலிற் பாட்டில் ப்ராப்ய ப்ரார்த்த₂னம் பண்ணுகிறதாகில் இங்குப் பண்ணுகிறது என்?" என்னில்) என்றது: "இப்பாட்டில் "இறைவா நீதாராய்பறை" என்கிறதென்? என்னில் என்றபடி. e 1. "ஆஹார நித்₃ராப₄யமைது₂நாநி ஸாமாந்யமேதத் பஶுபி₄ர் நராணாம் | ஜ்ஞாநம் நராணாமதி₄கோ விஶேஷ: ஜ்ஞாநேந ஹீந: பஶுபி₄ஸ்ஸமாந:||"; i 2 "க₃தாந் பஶூநாம் ஸஹஜந்மப₃ந்து₄- தாம் க்ருஹாஶ்ரயம் ப்ரேம வநேஷு பி₃ப்₄ரத: | த₃த₃ர்ஶ கோ₃பாந் உபதே₄நு- பாண்ட₃வ: க்ருதாநுகாராநிவ கோ₃பி₄ரார்ஜவே ||". f, h "பின்சென்று" என்கிற பத₃த்துக்குத் தாத்பர்யம் (எங்களைப்பார்த்தால் இத்யாதி₃) i₂ (அசுக்காட்டும்) ஹாஸ்யத்தைப்பண்ணும்

i₃ ஆர்ஜவம். j (கானம் சேர்ந்து) k தந்தாமுடைய வ்ருத்திகளாலே ஒரு நன்மைக்கு உடலாம் மநுஷ்யர் திரியும் நாட்டிலே வர்த்தித்திலோம்; புல்லுள்ள காட்டிலே வர்த்தித்தோமித்தனை ; l இருப்பாலே நன்மையை விளைக்கும் தேஶத்திலே வர்த்தித்திலோம்; காட்டிலே வர்த்தித்தோமென்றுமாம். (சேர்ந்து) ஊரில் கால் பொருந்தாதபடியிறே காட்டிலே பொருந்தினபடி. m (உண்போம்) வைஶ்யருக்கு கோ₃ரக்ஷணம் த₄ர்மமானால் தத₃நுரூபமாகக் காட்டிலே வர்த்திக்கையும் வாநப்ரஸ்த₂ாஶ்ரமிகளோபாதி n த₄ர்மஹேதுவாகிறதென்ன; காட்டில் வர்த்தித்தாலும் வீதராக₃ராய் வாநப்ரஸ்த₂ாஶ்ரமிகளோபாதி ஶரீரத்தை n₂ ஒறுத்துஅவ்வருகே ஒரு ப₂லத்துக்காக வர்த்தித்தோமல்லோம்; கேவலம் ஶரீரபோஷணபரராய் வர்த்தித்தோமித்தனை. இத்தால்—வ்ருத்தியில் குறை சொல்லிற்று. o இதிறே உன்னைப் பெறுகைக்கு நாங்கள் அநுஷ்டி₂த்த கர்மயோக₃மென்கிறார்கள்.

p (அறிவொன்றும் இல்லாத) இப்போதில்லையாகில் விடுங்கோள்; q விது₃ராதி₃களைப்போலே ஜந்மாந்தர ஸுக்ருதத்தாலே பிறந்த ஜ்ஞாநந்தானுண்டோ? என்னில்:— அதுவுமில்லை. r (ஒன்றும்) s ப₄க₃வத்₃ஜ்ஞாநத்துக்கு அடியான ஆத்மஜ்ஞாநமுமில்லை; t தத்ஸாத்₄யமான ப₄க்தியுமில்லை என்கை; u ப₄க்தியில்லை எகிறது — 1. "ப₄க்திஶ்ச ஜ்ஞாநவிஶேஷ:" என்று ப₄க்தியாவது

---

பெ. அ. அநுகரிக்கை; அதாவது—நாப்புக்காட்டுகை. i₃ 'ஆர்ஜவம்'என்றது—இடையருடைய வ்யாபாரம் என்றபடி. n (த₄ர்ம ஹேது) என்றது — தே₃வதா ப்ரஸாத₃ஹேது என்றபடி. n₂ ஒறுத்து — க்லேஶப்படுத்தி. j, m, o "கானம் சேர்ந்துண்போம்" என்றத்தால்—ஆகிஞ்சந்யம் ப₂லித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் (இதிறே இத்யாதி₃)

p, q "கறவைகள் பின்சென்று" இத்யாதி₃யாலே — ஜ்ஞாநஹீநதை சொல்லியிருக்கவும், "அறிவொன்றுமில்லை" என்ன ப்ரஸக்தியுண்டோ? என்னும் ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (விது₃ராதி₃களைப்போலே இத்யாதி₃) இந்த ஜந்மத்திலே ஸம்பாதி₃த்த ஜ்ஞாநம் இல்லாவிட்டாலும் ஜந்மாந்தரார்ஜித ஜ்ஞாநம் உண்டாகலாமே, அதுவுமில்லை என்று கருத்து. r, s, t "ஒன்றும்" என்கைக்கு அநேகமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ப₄க₃வத்₃ஜ்ஞாநம் இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே) v 'ப₄க்தியன்றோ' என்றது—

---

சி. அ. i₃ (ஆர்ஜவம்) இடையருடைய வ்யாபாரம். j, k, l "கானம் சேர்ந்து"என்ற பத₃த்துக்கு இரண்டு தாத்பர்யம்:— k க்₃ராமங்களிலே வர்த்தித்தால் அவர்கள் ஸுக்ருதம் பண்ணினால் அவர்களைக் கண்டாகிலும் ஸுக்ருதம் பண்ண யோக்₃யதையுண்டு; அதுவுமில்லை என்னுதல்; l இரண்டாவது (இருப்பாலே நன்மை இத்யாதி₃) அதாவது — காடானாலும் த₃ண்ட₃காரண்யம் முதலான இடங்களிலே வர்த்தித்திலோம் என்றபடி. q கர்மயோக₃மில்லையென்றபோதே ஜ்ஞாநயோக₃முமில்லையென்று ஸித்₃த₄மன்றோ; தனித்துச் சொல்ல வேணுமோ? என்ன அருளிச்செய்கிறார் (விது₃ராதி₃களித்யாதி₃) d, f, m 'கோ₃ரக்ஷணம் ஜாத்யுசிதத₄ர்மமன்றோ; அது ஸாத₄னமாகாதோ?' என்ன ஸாமாந்யேந அநுஷ்டி₂தாதி₃ கோ₃ரக்ஷணம் பண்ணுகையன்றியே ஸ்வதே₃ஹ போஷணார்த்த₂மாகக் கேவலம் கறவைகளைப் பின்செல்லுகையாலே ஸாத₄னமாகாதென்று க்₃ரந்த₂ாத்₃ப₄ஹிஶ்ஶங்காபரிஹாரங்கள் கண்டுகொள்வது. p "அறிவொன்றும்" என்கிற 'ச' ஶப்₃த₃த்தாலே ப₄க்தியைக்காட்டுகிறது. u "கர்மத்தைப்போலே ஜ்ஞாநம் ஜந்மாந்தரத்தேயுண்டாய், இப்போது ப₄க்தியுண்டாகக் கூடாதோ? ப₄க்தியில்லை என்பானென்? என்ன அருளிச்செய்கிறார் (ப₄க்தியில்லையித்யாதி₃)

ஜ்ஞாநவிஶேஷமாகையாலே. இவர்களலமாப்பு v ப$_4$க்தியன்றே? என்னில்:— அது ஸ்வரூபமாகையாலே உபாயமாக நினையார்கள். ஆக, இத்தால்—கர்ம ஜ்ஞாந ப$_4$க்திகளில்லை என்கை. w 1. ‘அஹமஸ்ம்யபராத$_4$நாமாலய:’’ A ‘‘நோற்ற நோன்பிலேன்’’ இத்யாதி$_3$. B ‘‘குளித்து மூன்று’’ 2. ‘‘ந த$_4$ர்மநிஷ்டோ$_2$ஸ்மி’’ இத்யாதி$_3$. இவையன்றே அறிவுடையார் வார்த்தை; அவர்களோடு ஒத்திருந்திகோ ளென்ன — x (ஆய்க்குலம்) y அறிவுண்டென்று ஶங்கிக்கவொண்ணாத குலம். z கீழ்ச் சொன்ன உபாயஹாநி தோ$_3$ஷமாகாதே கு$_3$ணமாம்படியான ஜந்மம்; a எங்கள் ஜந் மத்தைக் கண்டுவைத்து அறிவுண்டு என்று சொல்லுகிற நீ அறிவுகேடனித்தனை.

b ‘ஆனால் b$_2$ விடுமத்தனையோ?’ என்ன, c (உன்தன்னை இத்யாதி$_3$) d ‘பேற்றுக்கு உடலான புண்யமில்லாதார் இழக்குமத்தனையன்றோ?’ என்ன, e அங்ஙன் சொல்லலாமோ எங்களை? f புண்யத்துக்குச் f$_2$ சோறிட்டு வளர்க்கிறவர்களன்றோ. g (உன்தன்னை) h 3. ‘க்ருஷ்ணம் த$_4$ர்மம் h$_2$ ஸநாதநம்’’ இறே; i 4. ‘‘உபாயோபே யத்வே ததி$_3$ஹ தவ தத்த்வம்’’ என்னும்படியான உன்னை. j (பிறவி பெறுந்தனை)

---

பெ. அ. ப$_4$க்திகார்யமன்றோ என்றபடி. w, x மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (அஹ மஸ்மி இத்யாதி$_3$) z தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்ன இத்யாதி$_3$) y, a ‘‘பூர்வ தாத்பர்ய விவரணம் (எங்கள் இத்யாதி$_3$) இத்தால் — நாங்கள் சொன்னது ஸ்வாப$_4$ாவிகம்! 1. ‘‘அஹமஸ்மி’’ இத்யாதி$_3$யால் பெரியோர்கள் சொன்னது நைச்யாநுஸந்தா$_4$நமாத்ரமென்றபடி.

b ‘ஆனல்’ என்றது—த$_4$ர்மார்ஜநாதி$_3$களில்லாமே ஸ்வாப$_4$ாவிகமானலென்றபடி. b$_2$ விடு மத்தனை — ப்ராப்யத்தில் ஆசை விடுமத்தனை. b, d ‘‘ஆனல்’’ இத்யாதி$_3$யை விவரிக்கிறார் (பேற்றுக்கு இத்யாதி$_3$) பேற்றுக்கடியான ஸாத$_4$நம் ஒன்றுமில்லாதார் ப்ராப்யத்தை இழக்கு மித்தனையன்றோ? என்றபடி, c, e, f இந்த ப்ரஶ்நத்துக்கு உத்தரமாம்படி ப்ரதீகத்துக்கு பா$_4$வம் அருளிச்செய்கிறார் (அங்ஙன் இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) f ‘புண்யத்துக்கு’ என்றது ஸித்$_3$த$_4$த$_4$ர்மமான உனக்கு என்றபடி. f$_2$ ‘‘சோறு’’ என்று—இந்த ரக்ஷ்யாபேக்ஷையைச் சொல்லுகிறது. அதாவது:— ரக்ஷ்யனான சேதநனுடைய அபேக்ஷையில்லாதபோது தன் ரக்ஷகத்வஸ்வரூபஹாநி வருமென்று அவன் ரக்ஷகனுடைய அபேக்ஷையைப் பார்த்து அது பெற்றபோது த்ருப்தனாகையாலே தா$_4$ரகமென்கை; இது ஸ்வாப$_4$ாவிகார்த்த$_2$ம். உனக்கு நாங்கள் புண்யத்துக்குச் சோறிட்டுவளர்க்க எங்களை இங்ஙன் சொல்லலாமோ? என்னும் சாட்வர்த்த$_2$ம் கண்டுகொள்வது. g, h, i ‘‘தன்னை’’ என்றத்தால் தோற்றும் தானான தன்மை ஸநாதநத$_4$ர்மத்வமாய், இதுக்கு ஸம்வாத$_3$ம் காட்டுகிறார் (உபாயோபேயேத்யாதி$_3$)

---

சி. அ. கர்மமுண்டாய் ஜ்ஞானமுண்டாகவேணும் என்கிற ந்யாயமின்றியே ஜ்ஞானமுண்டான போதே ப$_4$க்தியும் ஸித்$_3$த$_4$மென்று தாத்பர்யம். w, x ‘‘ஆய்க்குலம்’’ என்றதுக்கு அவதாரிகை (அஹமஸ்மி இத்யாதி$_3$) x, y, z ‘‘ஆய்க்குலம்’’ என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். z இரண்டாவது (கீழ்ச்சொன்ன இத்யாதி$_3$) y, a முந்தினதினுடைய விவரணம் (எங்கள் ஜன்மத்தை இத்யாதி$_3$) b, d ‘‘ஆனல் விடுமத்தனையோவென்ன’’ என்கிற வாக்யத்தை விவரிக்கிறார் (பேற்றுக்குடலான இத்யாதி$_3$) f (புண்யத்துக்குச் சோறிட்டு) என்கையாலே, அசேதனமானல் சோறு தேவையில்லையே; ஆகையால் இவர்கள் புண்யம் ஒரு பரமசேதனமென்கை. h$_2$, i ‘‘ஸநாதனம்’’ என்னுமத்தைக் காட்டுகிறார் (உபாயோபேயத்வே இத்யாதி$_3$) g, j, l ‘‘உன்றன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம்

---

A திருவாய் 5-7-1. B திருமாலை 25.

k நாட்டார் ஆஶ்ரயணீயர் இருந்தவிடத்தே போய் ஆஶ்ரயிப்பர்கள்; அவர்களைப் போலேயோ நாங்கள்? ஆஶ்ரயணீயனை நீதான் நாங்களிருந்தவிடத்தே எங்களோடே ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும்படியன்றோ $k_2$ எங்களுடைய ஏற்றம்? l (புண்ணியம் நாமுடையோம்) m 1. "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்" 2. "புண்யாநாமபி புண்யோऽஸௌ" 3. "ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம:" என்கிற புண்யத்தைப் பற்றினவர்களன்றோ. n (நாம் $n_2$ உடையோம்) o ஸித்₃த₄ஸாத₄நத்தைப் பற்றினவர்களிலும் காட்டில் இருந்தவிடத்தே சென்று ஆஶ்ரயிக்கவேண்டாதபடியான ஏற்றத்தையுடையவர்கள் நாங்கள். p நினைத்தபடி விநியோகமுங் கொள்ளலாம்படி கைப்புகுந்த உன்னை உடையோமன்றோ?

q "அறிவொன்றுமில்லை" என்பது "புண்ணியம்நாமுடையோம்" என்பதாய்க் கொண்டு $q_2$ வ்யாஹதபா₄ஷணம் பண்ணி நின்றிகோளீ? என்ன, $q_3$ 'கண்டிலையோ!

---

பெ. அ. g, j, k, l உன்தன்னைப் பிறவி பிறப்பிக்கத்தக்க புண்ணியத்தை நாமுடையோம் என்று ஸப்₃த₃ார்த்த₂மாய், இப்படி புண்யத்தை விஶேஷித்ததுக்கு பா₄வம் அருளிச்செய்கிறார் (நாட்டார் இத்யாதி₃) $k_2$ (எங்களுடைய ஏற்றம்) என்றது—எங்கள்பக்கல் உனக்கு உண்டான வாத்ஸல்யமென்றபடி; l, m "புண்ணியம்" என்றது — அலௌகிக ஶ்ரேயஸ்ஸாத₄நமென்று சொல்லப்பட்டதாய், க்ருஷ்ணனைத்தவிர வேறேயொன்றென்று தோன்றுமைக்காக ஸம்வாத₃பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணம் இத்யாதி₃) இது வேறொன்றாகில் கர்மாதிகளொன்றுமில்லையென்றத்தோடு சேராதென்று கருத்து. n, o "நாம்" என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகம் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸித்₃தே₄த்யாதி₃) o இங்கு (ஸித்₃த₄ஸாத₄நத்தைப்பற்றினவர்கள்) என்றது — ஸ்வக₃தஸ்வீகார நிஷ்டை₂ரை. $n_2$, p "உடையோம்" என்று அவன் இவர்கள்ஸ்வம்மாகத் தோன்றுகையை விவரிக்கிறார் (நினைத்தபடி இத்யாதி₃)

$q_2$ 'வ்யாஹதபா₄ஷணம்' என்றதுக்குக் கருத்து — கர்மஜ்ஞாநாதி₃களில்லையென்று சொல்லிவைத்து, ஸித்₃தோ₄பாயமாகிற புண்ணியம் நாமுடையோமென்று சொல்லுகை. $q_2$, $q_3$ கைம்முதலில்லாவிடில் அது கார்யகரமல்லாமையாலே புண்ணியமல்லாமையால் விருத்₃த₄மென்று வ்யாஹதபா₄ஷணம் பண்ணினிகோளென்ற க்ருஷ்ணனுக்கு நித்துத் தாத்விகார்த்த₂த்தை நெஞ்சில் வைத்துக்கொண்டு வ்யாஹதபா₄ஷணத்துக்கு அடியான அறிவுகேட்டைத் தங்கள்மேலே ஆரோபித்துக்கொள்ளுகிறார்களென்று அருளிச்செய்கிறார் (கண்டிலையோ இத்யாதி₃) $q_4$ இவர்களுட்கருத்தை அறியாமல் நீங்கள் அறிவுகேடரானால்

---

சி. அ. நாமுடையோம்" உன்னுடைய ஜன்மத்தைப் பெறும்படியான புண்யத்தை நாங்கள் உடையோம் என்றபடி. o இங்கு (ஸித்₃த₄ஸாத₄னத்தைப்பற்றினவர்கள்) என்றது ஸ்வக₃த ஸ்வீகார நிஷ்டை₂ரை. g, h, m, p "உன்றன்னை" என்றது உபாயபூ₄தனை உன்னை என்னுதல்; "கோவிந்தா" என்றத்தைக் கடாக்ஷித்து (நினைத்தபடி விநியோக₃ம் கொள்ளும்படி கைப்புகுந்த உன்னை) என்னுதல்.

q, r "குறைவொன்றுமில்லாத" என்றது ஸாகாங்க்ஷமாய், உத்தரப்ரத்யுத்தரமாக அருளிச்செய்கிறார் (அறிவொன்றுமில்லை என்பது இத்யாதி₃) 479 p, r, w "அறிவொன்றுமில்லாத" "குறைவொன்றுமில்லாத" என்ற பத₃த்₃வயத்தையும் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (இப்பாதாளத்துக்கு இத்யாதி₃)

இது தானேயன்றே அறிவுகேடு'; q$_1$ 'ஆனால் விடுமத்தனையன்றோ' என்ன; r (குறை வொன்றுமில்லாத r$_1$கோவிந்தா) s எங்களுக்குக் குற்றம்சொன்னோமித்தனைபோக்கி உன்னுடைய பூர்த்திக்குக் குற்றஞ் சொன்னோமோ? t ஸர்வநிரபேக்ஷனென்கை. u எங்களுடைய அறிவொன்றுமில்லாமைக்குப் போராதோ உன்னுடைய குறை வொன்றுமில்லாமை? v எங்கள் குறையாலே எங்களுக்கு இழக்கவேண்டுவது — உன்னுடைய பூர்த்தியால் ஏதேனும் குறையுண்டாகிலன்றோ? என்கிறார்கள். w 'இப்பள்ளத்துக்கு அம்மேடு நிரப்பப்போராதோ? w$_1$ இப்பாதாளத்துக்கு அப்பர்வதம் நேர்' என்கை. x எங்கள்பக்கல் ஜ்ஞாநவ்ருத்தாதி$_3$கள் ஏதேனுமுண்டோ நாங்களிழக்கைக்கு? என்று கருத்து. இத்தால் — உபாயநைரபேக்ஷ்யம் சொல்லிற்று. y (கோவிந்தா) z நீங்கள் என்னைப் பூர்ணனாகப் பேசினபடியாலே வேண்டியிருந்தோமாகில் செய்தல், இல்லையாகில் தவிர்தலன்றோ? என்ன, a நிரபேக்ஷமான பரமபத$_3$த்திலே வந்தோமோ? b எங்களையொழியச் செல்லாமையாலே வந்து அவதரித்து எங்களுக்குக் கையாளாயிருக்கிற இடத்தேயன்றோ நாங்கள் அபேக்ஷிக்கிறது? c இத்தால் - ஸௌலப்$_4$யம் சொல்லுகிறது.

d 'குறைவாளர்க்குநிறைவாளர் கொடுக்கக்கடவர்களென்று ஒன்று உண்டாகிலன்றோ என் பூர்த்தியும் உங்கள் அபூர்த்தியும் சொல்லுவது?' என்ன, அதுவோ? (உன்தன்னோடு உறவு) 'நீ எங்களுக்கு உறவன்றோ? எங்கள் கார்யம் செய்ய வேண்டாவோ?' என்ன, — e 'அதுகொண்டோ? ஆனால், ஒரு குடநீரோடே போகி

---

பெ.அ. ப்ராப்யத்திலாசையை விடுங்கோளென்னும்க்ருஷ்ணாபி$_4$ப்ராயத்தை அருளிச்செய்கிறார் (ஆனால் இத்யாதி$_3$) r, s, t தான் கார்யம் செய்யும்போது ஸஹாயஸாபேக்ஷனும்படி ஜ்ஞாநஶக்த்யாதி$_3$களில் குறையில்லாதவனென்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் திருவுள்ளம்பற்றி, இத்தால் — உபாயாந்தர நைரபேக்ஷ்யம் ப$_2$லிக்கையால் வ்யாஹதமென்னும் ஶங்கை பரிஹ்ருதமென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (எங்களுக்கு இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) நாங்கள் எங்கள்பக்கல் அறிவொன்றுமில்லாமையையும் சொல்லி உன்தன்னை ஸஹாயஸாபேக்ஷமான புண்ணியமென்று சொல்லிலன்றோ இரண்டு வார்த்தையும் வ்யாஹதமாவது; நீதானேயன்றோ உங்கள்பக்கல் கைம்முதலில்லாமையாலே ஸித்$_3$தோ$_4$பாயம் கார்யகரமன்றென்று புண்யமாகாமையால் வ்யாஹதமென்றுயித்தனை; நாங்களானால் ஸர்வநிரபேக்ஷனென்றே சொன்னோமாகையாலே வ்யாஹதமன்றென்று கருத்து, u, v, w நான் பூர்ணனாய் எத்தனையேனும் நிரபேக்ஷனேயாகிலும் என்பக்கல் நின்று பேற்றுக்கு இழவில்லாமையை எத்தால் அத்$_4$யவஸித்திகோள் என்ன அருளிச்செய்கிறார் (எங்களுடைய இத்யாதி$_3$ வாக்யத்ரயத்தாலே) x பூர்த்தியில் குறையில்லாதரப்போலே தங்கள்பக்கல் அறிவில்லாமையிலும் குறையில்லையென்கிறார்கள் (எங்கள் இத்யாதி$_3$) y... c "கோவிந்தா" என்றதுக்கு ஶங்கா சதுஷ்டயத்தாலே பரிஹாரமுகே$_2$ந தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (நீங்கள் இத்யாதி$_3$ வாக்ய சதுஷ்டயத்தாலே)

d நான் ஸௌலப்$_4$யத்தால் உங்களுக்குக் கையாளாயிருந்தேனேயாகிலும் பூர்த்தியையும் அபூர்த்தியையுமிட்டு என்னுடனே வழக்குப்பேச நிமித்தமேதென்னும் ஶங்கையை அநுவதி$_3$க்கிறார் (குறைவாளர்க்கு இத்யாதி$_3$) e, f "ஒழிக்க ஒழியாது" என்றதுக்கு ப்ரஸக்தியைக் காட்டாநின்றுகொண்டு ப்ரஶ்நப்ரதிவசநரூபேண தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (அது

றது' என்ன, — f (உன்தன்னோடு $f_2$ உறவேல் $f_3$ நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது) உன்னோடு உண்டான ஸம்ப3ந்த4ம் உன்னாலும் விடவொண்ணாது, எங்களாலும் விடவொண்ணாது, $f_4$ இருவருங்கூட க்ருதஸங்கேதரானாலும் விடவொண்ணாது. g 'இப்படி சொல்லுகிறது என்ன உரப்பு?' என்ன; h A "நானுன்னையன்றி யிலேன் கண்டாய் நாரணனே! நீ என்னையன்றியிலை" என்ற ப்ரமாணத்தைக் கொண்டு' என்ன; i 'அவர்கள் உங்களைப் பெற்றவர்களன்றோ?' என்ன; 'ஆனால் $i_2$ நீ எங்கள் கையில் தந்த $i_3$ மூலப்ரமாணத்தில் $i_4$ முதலெழுத்தைப் பார்த்துக்கொள்ளாய்' என்கிறார்கள்; அதாவது - "நாராயணனே நமக்கே பறைதருவான்" (1) என்று அடியிலே சொன்னோம் என்றபடி. நீ ஸர்வப்ரகார பரிபூர்ணனாகையாலே நாங்கள் நித்யஸாந்நித்4யஸாபேக்ஷராயிருக்கிற உறவு என்றுமாம். j தூ3ஷாபூர்ணனான உன்னோடு தூ3யநீயதயா பூர்ணைகளான எங்களுக்கு உண்டான உறவு என்றுமாம்.

(அறியாத இத்யாதி3) k கீழ்த் தாங்கள் $k_2$ நெருக்கின அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்கள். l (அறியாத) m அநவதா4நத்தாலே வந்த அஜ்ஞாநம். n (பிள்ளைகள்) o பா3ல்யத்தாலே வந்த அஜ்ஞாநம். p (அன்பு) q ப்ரேமத்தாலே வந்த அஜ்ஞானம். இந்த ஹேதுக்களால் வந்த r அறியாத்தனம் பொறுக்கவேணும்.

---

பெ. அ. (கொண்டோ இத்யாதி3) $f_2$, g (உறவு" என்று ஸாமாந்யேந சொன்னத்தை, விஶேஷித்து ப்ரமாணமுகேந நிர்த்3தா4ரிக்கைக்காக ப்ரஶ்நத்தைக் கிளப்புகிறார் (இப்படி இத்யாதி3) h அப்ருத2க்ஸித்3த4 ப்ரகாரப்ரகாரிபா4வத்தைத்திருவுள்ளம்பற்றி ப்ரமாணமுகேந உத்தரம் காட்டுகிறார் (நானுன்னை இத்யாதி3) $i_2$ (நீ எங்கள் கையில் தந்த) என்றது - ஆசார்ய ரூபனாய்த் தந்த என்றபடி. j ரக்ஷ்யரக்ஷகபா4வ ஸம்ப3ந்தா4ந்தரத்தையிட்டுத் தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (தூ3ஷேத்யாதி3) $k_2$ (நெருக்கின அதுக்கு) என்றதுக்கு— "உறவேல் நமக்கிங் கொழிக்கவொழியாது" என்று அவிநாபா4வஸம்ப3ந்த4ம் சொல்லுகையால் அதுக்கு வாசகமான திருநாமம் ஸ்ம்ருதமாய், அத்தாலே பரத்வத்தைச் சொன்னதுக்கு என்று கருத்து. r (அறியாத்தனம்) என்றது — அத்தால் வந்த சிறுபேரழைக்கையைச் சொல்லுகிறது.

---

சி. அ. h (நானுன்னையன்றியிலேன்) ஶரீரம் ஶரீரியை விடாது; ஶரீரஶரீரிபா4வஸம்ப3ந்த4மாதல், ரக்ஷ்யரக்ஷகபா4வஸம்ப3ந்த4மாதல். j இத்தைப் பூ2லிதமாக அருளிச்செய்கிறார் மேலே (தூ3யாபூர்ணேத்யாதி3) $f_3$, $f_4$ "நமக்கு" என்ற த்3விவசனத்துக்குத் தாத்பர்யம் (இருவரும் கூட க்ருதஸங்கேதிகளானாலுமித்யாதி3) $f_4$, g, h இத்தால் ஹார்த்த3பா4வத்தை அருளிச்செய்கிறார் (இப்படி சொல்லுகிறதித்யாதி3) i (அவர்கள் உங்களைப்பெற்றவர்களன்றோ) என்றது — சூடிக்கொடுத்த நாச்சியார் ஆழ்வார்கள் என்றிவர்களைப்பற்ற என்ற $i_3$ (மூலப்ரமாணம்) திருமந்த்ரம். திருமந்த்ரமென்றது "உத்தமன் பேர் பாடி" (3) என்ற இடத்தில் ஸ்பு2டம். $i_4$ (முதலெழுத்து) ப்ரணவம். k (கீழ்த் தாங்கள் நெருக்கினதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்கள்) என்றது — "பிறவிபெறுந்தனை" என்று கீழ் தாங்கள் பண்ணின ப்ரபத்திக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்கள் என்றபடி. 1. "த்வமேவ மாதா ச பிதா த்வமேவ" என்று எம்பெருமானார் க்ஷாமணம் பண்ணினாப்போலே.

---

A நான்-திருவ 7

s 1. "மயா ப்ரமாத₃ாத் ப்ரணயேந வாபி" என்னக்கடவதிறே. ப்ரேமாந்த₄ரைக் குற்றங்கொள்ளுகையாவது — ஒருபடுக்கையிலேயிருந்து கால்தாக்கிற்று கைதாக்கிற்று என்கையிறே. t (உன்தன்னை இத்யாதி₃) u கோ₃விந்தா₃பி₄ஷேகம் பண்ணின பின்பு முதல்திருநாமஞ் சொல்லுகை குற்றமிறே. "நாராயணன்" (1) என்றுர்கள் கீழ்; நீர்மைஸம்பாதி₃க்கப் போந்தவிடத்தே மேன்மைசொல்லுகை குற்றமிறே.

v (இறைவா) w தன்கைகால் தப்புச்செய்ததென்று பொடிய விரகு உண்டோ? x உடைமையையிழக்கை உடையவனிழவன்றே? (இறைவா) y A "பிழைப்பராகிலும் தம்மடியார் சொற்பொறுப்பது பெரியோர் கடனன்றே". z ஐயர் தடுக்கின் கீழேயிருந்து கேட்டறியாயே? a நீ இறைவனுகைக்கும் சீறுகைக்கும் என்ன சேர்த்தியுண்டு? b (நீதாராய் பறை) c விலக்காமை பார்த்திருக்கும் நீ எங்கள் அபேக்ஷிதம் செய்யாய். 28.

---

வெ. அ. v "இறைவா" என்றத்துக்கு இரண்டு அர்த்த₂ம் — ஸ்வாமியென்றும் பெரியோனென்றும்; w, x முந்தினது — (தன்கை இத்யாதி₃ போக்யத்₃வம்.) y, z, a இரண்டாவது — (பிழைப்பர் இத்யாதி₃ ஸௌஸீ₂ல்யம்) y பிழை — தப்பு. z 'ஐயர் தடுக்கு' என்றது — பள்ளிக்கூடத்தில் வாத்யாரிருக்கும் தடுக்கு என்றபடி. இத்தால் — பெரியோர்கள் ஸௌஸீ₂ல்யமில்லையோ? என்று கருத்து. a இவ்வர்த்த₂த்₃வயத்துக்கும் சேரப் ப₂லித்த தாத்பர்யம் அருளிச்செய்கிறுர் (நீ இறைவனுகைக்கும் இத்யாதி₃) 482 y, b, c "கோவிந்தா" என்ற பத₃த்தைக் கடாக்ஷித்து "நீ" என்றதுக்கு ப₄ாவம் அருளிச்செய்கிறுர் (விலக்காமை இத்யாதி₃) இத்தால் — அத்₃வேஷமே வ்யாஜமாக ரக்ஷிக்கும் நீ எங்களாபி₄முக்₂யத்தை வ்யாஜமாக்கிக்கொண்டு தரவேணுமென்று கருத்து. 28.

---

சி. அ. 1, r, p, s "அறியாத பிள்ளைகளோம் அன்பினால்" என்ற மூன்றுக்கும் ப்ரமாணம் "மயா ப்ரமாதா₃த் ப்ரணயேந" என்று. u இளைச்சிகள் என்ற அந்யாபதே₃ஸத்துக்குச் சேர (கோ₃விந்தா₃பி₄ஷேகம் இத்யாதி₃) t "சிறு பேரழைத்தனவும்" என்கிற 'ச' ஸப்₃த₃த்தாலே தாங்கள் அவனை வெறுத்த வெறுப்புகளும் தோற்றுகிறது அவைகளுக்கும் க்ஷாமணம் பண்ணுகிறுர்கள் என்று கண்டுகொள்வது.

v, w, y "இறைவா" — ஸ்வாமி என்னுதல்; பெரியோன் என்னுதல்; ஆக "இறைவா" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். w ஸரீர ஸரீரி ப₄ாவத்தைப்பற்ற (தன்கைகாலித்யாதி₃) x ஸ்வஸ்வாமி ப₄ாவத்தைப்பற்ற (உடைமையையிழக்கையித்யாதி₃) z (ஐயர் தடுக்கின் கீழே) என்றது பெரியாழ்வார் தடுக்கின் கீழிருந்து என்றபடி. y, z இது A "பிழைப்பராகிலும்" என்றதுக்குந் தாத்பர்யம். பெரியாழ்வார் உன்கையிலே எழுந்தருளியிருக்க அவர் ஸன்னிதி₄யிலே கேட்டறியாயோ? என்கிறுர்கள். 28.

---

A பெரியாழ் திரு 5-1-2

# ஆருயிரப்படி — இருபத்தெட்டாம் பாட்டு

அவ: — இருபத்தெட்டாம்பாட்டு. ''மார்கழி நீராடுவான்'' (26) என்று நோன்பை ப்ரஸங்கித்து அதுக்கு உபகரணங்களாயிருப்பன ஶங்கா₂ங்கள் முதலானவற்றையும், ''சூடகமே தோள்வளையே'' (27) என்று வ்ரதம் தலைக்கட்டினால் அலங்கரிக்கைக்கும் உடுக்கைக்கும் உண்கைக்கும் வேண்டுவனவாயிருப்பன சில உபகரணங்களையும் அவனுக்கும் தங்களுக்கும் அகவாயிலே சில நிழலெழாநிற்க, நாட்டுக்கு மேலெழுந்தன சில அபேக்ஷித்தார்களாய் நின்றார்கள் — கீழிரண்டு பாட்டிலும். A ''அணியாய்ச்சியர் சிந்தையுள் குழகனார்'' என்று இவர்கள் நெஞ்சிலே கலக்குமவனாகையாலே, அவன் ''உங்கள் அபி₄ஸந்தி₄ இவ்வளவென்று தோற்றியிருந்ததில்லை; நீங்கள் சொன்னவையும் இன்னம் மேல் சொல்லுமவையுமுண்டாகிலும் நாம தம்மிடத்தில் நீங்கள் நின்ற நிலைதன்னை அறிந்துகொள்ளவேணும்; பேறு உங்களதான பின்பு நீங்களும் சிறிது யத்நித்துவைக்கவேணும்; அதுக்குடலாக நீங்களநுஷ்டித்த உபாயமேதேனுமுண்டோ?'' என்ன; ''எங்களளவு கண்டாய்க்கு 'சில ஸாத₄நங்களுண்டோ' என்று சொல்லும்படி இருந்ததோ?'' என்று தங்கள் ஸ்வரூபமிருந்தபடியை அறிவித்து, கேவலம் த₃யாவிஷயமென்னுமிடத்தைத் திருவுள்ளம்பற்றி, நீ எங்கள் காரியஞ்செய்யவேண்டுமென்று தங்கள் உபாய ஶூந்யதையை விண்ணப்பஞ்செய்கிறார்கள் இப்பாட்டில். ''போற்றியாம்வந்தோம்'' (21) ''எம்மேல் விழியாவோ'' (22) ''உன்னையருத்தித்து வந்தோம்'' (25) என்று தொடங்கி ப்ராப்யருசியை ஆவிஷ்கரித்தார்கள் கீழ்; அந்த ப்ராப்யத்தைப் பெறுகைக்கு உறுப்பாகத் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அவனுடைய உபாயபா₄வத்தையும் சொல்லுகிறார்கள் இதில். ''யாம் வந்த காரியமாராய்ந்தருள்'' (23) என்றபோதே வந்த வருத்தங்களை ஆராயாதே, அகவாயில் ஏதேனும் ஸாத₄நாம்ஶங்களைப் பண்ணிக்கொண்டு வந்தீர்களோ? என்று ஆராய இழிந்தான்; ''உன்றன்னருளே புரிந்திருக்கிற எங்களுக்கு எடுத்துக் கழிக்கலாம்படியும் சிலவுண்டென்றிருந்தாயோ? 'இரங்கு'' (2[illegible]) என்றும், ''அருள்'' (2[illegible]) என்றும் நாங்கள் அபேக்ஷித்த அருளுக்கு ப்ரதிப₃ந்த₄மாகச் சொல்லப்படுமவையொன்றுமில்லையே என்று ஸர்வஜ்ஞனறிய ஒன்றில்லாமையை யதா₂ர்த்த₂மே அறிவிக்கிறார்கள்.

விதி₃தோ₃பாயஸ்வீகாரம் பண்ணும் அதி₄காரிகளுக்குப் பேற்றுக்குக் கைம்முதலாயிருப்பதொரு ஸத்கர்மமில்லையென்கையும், மேலும் யோக்₃யதையில்லை என்கைக்காகத் தங்களுடைய நிகர்ஷாநுஸந்தா₄நமும், [illegible]மான ஈஶ்வரனுடைய கு₃ணபூர்த்தியை அநுஸந்திக்கையும், ஸம்ப₃ந்தா₄நுஸந்தா₄நமும், பூர்வாபராத₄ங்களுக்கு க்ஷாமணம் பண்ணுகையும், உபாயபூ₄தனான ஈஶ்வரன் பக்கலிலே ப்ராப்யத்தை அபேக்ஷிக்கையும், இவை ஆறும் அதி₄காரக்ருத்யங்களாகையாலே,

A நாச்-திரு 4-10, B பெரியாழ் திரு 5-4-1.

A ''நோற்றநோன்பிலேன்'' B ''குறிகொளந்தணமை தன்னை யொளித்திட்டேன்'' C ''குலங்களாய ஈரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்'' D ''நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறஞ் செய்துமிலேன்'' ''த₄ர்மநிஷ்டையில்லை'' என்று ஸத்கர்ம ராஹித்யத்தைச் சொல்லுவார்: 1 ''ராவணோ நாம''—''ஜக₃த்திலே பேர்படைக்கும்படி பரஹிம்ஸையிலே அதிரநடத்துவதொரு பேர்மாத்ரமாய்ப் போகாமே, ஸர்வ விஷயமாக வழிகெட நடந்து பரஹிம்ஸையே யாத்ரையாயிருப்பதொரு ஜந்மமாய், மேலும் திருத்தவொண்ணாதபடி நியாம்யனன்றிக்கேயிருப்பானொரு தண்ணியனுக்கு ஶேஷபூ₄தனாய், அவனாலே தூ₃ஷிதமான உத₃ரத்திலே சிரகாலம் வாஸநை பண்ணிப் பிறந்து முறுகல்தனத்தில் அவன் என்னைக்கொண்டு நடத்த அநீதிகளில் நடந்து, அதில் அவனிலுங் காட்டில் ப்ரகாஶமுடையனாயிருப்பானொருவன் என்று நிகர்ஷஞ் சொல்லுவார்; E ''பொறுத்தேன் புன்சொல் நெஞ்சில்'' என்றும், F ''எப்பாவம் பலவுமிவையேசெய்து'' என்றும், G ''மனத்திலோர் தூய்மையில்லை'' என்றும் நிந்தித₃ கர்மபூ₄யஸ்தைசொல்லி, மேலும் யோக்₃யதை இல்லையென்பார்; A ''அரவினணையம்மானே'' B ''நம்பீ கடல்வண்ணா'' H ''மாயனே எங்கள் மாதவனே'' என்றும் - 2. ''ஶரண்ய'' என்பாராய்க்கொண்டு ஈஶ்வரகு₃ணபூர்த்தியை அநுஸந்தி₄ப்பார்; I ''உன்னடியனேனும் வந்து'' என்றும், J ''புகலொன்றில்லா அடியேன்'' என்றும் - ஸம்ப₃ந்த₄ாநுஸந்தா₄நம் பண்ணுவார்; K ''நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவேகொள்'' என்றும், 3. ''மத்₃வ்ருத்தமசிந்தயித்வா ப்ரஸீத₃'' 4. ''ஸர்வாநஶேஷத: க்ஷமஸ்வ'' என்றும் - பூர்வாபராத₄த்துக்கு க்ஷாமணம் பண்ணுவார்; L ''சன்மம் களையாய்'' M ''உன்னடிசேர் வண்ணமருளாய்'' என்று - ப்ராப்யத்தை உபாயபூ₄தனை நீயே தரவேணுமென்று; அபேக்ஷிப்பாராயிறே அதி₄காரிகளிருப்பது; ஆகையாலே இவர்களும் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அயோக்₃யதையையும் ஆவிஷ்கரித்து, உபாயபூர்த்தியையும் தங்கள் ப்ராப்தியையும் முன்னிட்டு, கீழ்ச் சொன்னவற்றுக்கெல்லாம் அநுதபித்து க்ஷமைகொண்டு, எங்கள் ப்ராப்யஸித்₃தி₄க்கு நீயே உபாயமாகவேணும் என்று அபேக்ஷிக்கிறார்கள். கார்ய நிர்ணயவேளையாகையாலும் ஸர்வஜ்ஞன் ஸந்நிதி₄யாகையாலும் உள்ளபடி சொல்லித் தீர விட்டுக்கொள்ளாதபோது புரையறுதிறே.

நித₃ாநஜ்ஞனை பி₄ஷக்கின் முன்பு வ்யாதி₄க்₃ரஸ்தன் தான் பண்ணின அபத்₂யங்களைச் சொல்லி அந்த வ்யாதி₄யைத் தீர்த்துக்கொள்ளுமாபோலே, ஸ்வதோ₃ஷத்தை ஆவிஷ்கரித்து க்ஷாமணம் பண்ணவேண்டியிறே ப்ரபந்நர்க்கிருப்பது. புறம்பு, அந்த வ்யாதி₄க்கு நிமித்தமும், பரிஹாரமும், பரிஹாரம் பண்ணும் பி₄ஷக்கும், பே₄ஷ

---

A திருவாய் 5-7-1, B திருமாலை 25, C திருச்சந்த 90, D பெரிய திரு 1-9-4 E பெரிய திரு 6-2-1, F பெரிய திரு 1-9-5, G திருமாலை 30, H பெரிய திரு 1-9-9 I பெரிய திரு 5-8-3, J திருவாய் 6-10-10, K திருச்சந்த 111, L திருவாய் 5-8-7 M திருவாய் 6-10-2.

ஜமும், பத்₂யமும், வ்யாதி₄ ஶமித்தால் பு₄ஜிக்கும் போ₄ககு₃மும் பே₄தி₃த்திருக்கும்; இங்கு வந்தால் அப்படியன்று; A ''வேவாரா வேட்கைநோய்'' என்று — ப்ரேம வ்யாதி₄க்கு நிமித்தமும் தானுய், ''மாலே மணிவண்ணு'' (26) என்கிற க்ருஷ்ணன் தான் பரிஹாரம் பண்ணும் மருத்துவனுமாய், B ''ஆயர் ,கொழுந்து மருந்தாம்'' என்று பே₄ஷஜமும் தானுய், கொழுந்தில் கிழங்கு பத்₂யமுமாய், நோய்விட்டால் பு₄ஜிக்குமதுவும் C ''எங்களமுது'' என்கிறபடியே க்ருஷ்ணன் தானுயிறே இருப்பது. D ''மருந்தும் — அமுதமும்தானே'' என்று — அம்ருதம் ஔஷத₄மாம் படி இருக்கிறதிறே. வ்யாதி₄க்₃ரஸ்தர் ''மருந்து'' என்றிருப்பர்கள்; வ்யாதி₄ ரஹிதர் ''அமுதம்'' என்றிருப்பர்கள்; இங்குள்ளார் E ''நோய்களறுக்கும் மருந்து'' என்றிருப்பர்கள்; அங்குள்ளார் F ''போக மகிழ்ச்சிக்கு மருந்து'' என்றிருப்பர்கள். நோயில்லாதாளுெருவனுமே தன்னை மருந்து என்று அறியான்; G ''தேனிலினிய பிரானே - அருமருந்தாவதறியாய்'' என்னக்கடவதிறே. இப்படி ப்ரப₃லமாயிருப்பதொரு ஔஷத₄ம் பெற்றல் கடுகப் பரிக்₃ரஹித்துக்கொள்ள வேண்டு மாகையாலே, ''ஶாஸ்த்₃த₄ப₄ாவராய் உன்னுலல்லது செல்லாதாரைப்போலே எங்களை நிரூபியாதே திருமுன்பே நின்று சொன்ன வார்த்தையைப் பொறுத்தருள வேணும்'' என்று க்ஷாமணங் கொள்ளுகிறர்கள். உபசாரபு₃த்₃த்₄யா பண்ணும் அபசாரங்களையும் க்ஷமிப்பாளுெருவனுகையாலேயிறே அபத்₂யஸஹௌஷத₄மென்றது. H நச்சுமாமருந்தமிறே.

''இப்போதேயெம்மை நீராட்டு'' (20) என்று — ஆஶுகாரியான ஔஷத₄மாகையாலே அப்போதே குளித்து உண்ணப்பண்ணுமிறே. ஆகையாலே கண்ணழிவற்ற ப்ராபகஸ்வீகாரம் பண்ணுகிறர்கள். ப்ராபகஸ்வீகாரந்தான் ததி₃தரஸர்வோபாயத்யாக₃ பூர்வகமாயாய்த்திருப்பது; அவை நின்றநின்ற அளவுகளுக்கிடாயிருக்கும். அவற்றில் அதி₄கரிக்கைக்கு அஶக்தனுனவன் ''மாட்டேன்'' என்னும்; அதி₄கரித்தே அப்ராப்தியை உணர்ந்தவன் ''விட்டேன்'' என்னும்; அறிந்து அதி₄கரியாதவன் ''அவை எனக்கில்லை'' என்னும்; அவை அறியாதவன் ருசிவாஸனைகளும் இல்லாதவனுகையாலே தான் பூர்ணுதி₄காரி என்னுமிடத்தைக் காட்டினுனுகிறன். 1. ''ந ச ஸாமர்த்₂யவாந்'' என்பாருமுண்டு. 2. ''ஸந்த்யஜ்ய'' என்பாருமுண்டு. I ''நோற்றநோன்பிலேன்'' என்பாருமுண்டு. J ''மற்றேலொன்றறியேன்'' என்பாருமுண்டு. ஆகையாலிறே உபாயம் ஸர்வாதி₄காரமாகிறது உபாயாந்தரமுடையவனுக்கு அவற்றை விடவேண்டுவானென்னென்னில்; ப₄க₃வத்₃வ்யதிரிக்தமாயிருப்பதொன்று உபாயமாகமாட்டாமையாலே. அவையுண்டாலும் இவன்கை பார்த்திருக்கவேணுமிறே; அவை அஶக்யக்ரியையென்று மீளுதல், ஸ்வரூபத்தை உணர்ந்து மீளுதலித்தனை; அவை உடையவர்கள் விடுவதும், இல்லாதவர்கள் இல்லையென்று அறிவிக்கையுமாயிறேயிருப்பது. அதில்

A திருவாய் 2-1-10, B திருவாய் 1-7-2, C பெரியாழ் திரு 2-3-11, D மூன் திருவ 4
E திருவாய் 9-3-3, F திருவாய் 9-3-4, G பெரியாழ் திரு 2-7-1, H திருவாய் 3-4-5
I திருவாய் 5-7-1, J பெரிய திரு 1-9-9.

இவர்கள்தான் எங்களுக்கு த்யாஜ்யாந்தரமில்லை என்கிறார்கள். 'மஞ்சனக் கொட்டும், மேல் சங்கும், போற்றவும் புகழவும் பகல்விளக்குப்பிடிக்கையும், கொடி யெடுக்கையும் மேற்கட்டிகட்டுகையும், ஆப₄ரணங்கள் பூண்கையும், உடுக்கை உடுக்கையும் அடுகுவளமெடுக்கையும் இவையெல்லாம் அதிசயித புண்யருடைய வரிசையிறே; க்ஷுத்₃ரமான ராஜபோ₄க₃மன்றே நீங்கள் நினைக்கிறது; A "வானிளவரசு" நம்மோடே கூடியிருந்து குளிர்ந்து உப₄யவிபூ₄த்யைஶ்வர்யத்தையும் பு₄ஜிக்கும்போது ஜந்மாந்தர ஸஹஸ்ரங்களிலே தபோஜ்ஞாநஸமாதி₄களாலே விளைந்த புண்யப₂லமாய் வரவேணும். அப்படிக்கு நீங்கள் ஏதேனும் செய்ததுண்டோ?' என்ன; சொல்லு கிறார்கள்.

வ்யா:— (கறவைகள் பின்சென்று) ஸாங்க₃ாத்₄யயநம் பண்ணி, அர்த்த₂ ஜ்ஞாநம் பிறந்து, விஹிதகர்மங்களை அனுஷ்டி₂த்து, விரோதி₄பாபக்ஷயம் பிறந்து ஶுத்₃த₄பா₄வனாய், ஜிதேந்த்₃ரியனாய், விஷயங்களினின்றும் ப்ரத்யாஹ்ருதமான மநஸ்ஸை ஆத்மப்ரவணமாக்கி, ஆத்மயோக₃ம் கைவந்து, அந்தர்யாமியளவும் சென்று, அவனுடைய ஸ்வரூபாதி₃களை ஶ்ரவணமநநங்கள் பண்ணி, அர்ச்சந ப்ரணாமாதி₃ பூர்வகமான நிரந்தரத்₄யாநத்தைப் பண்ணி, இப்படி திரண்ட ஸுக்ரு தத்தாலே உன்னைப் பெறும் அந்த யோக₃த்தில் அந்வயிப்பதாகவிறே வேதா₃ந் தங்களில் சொல்லுகிறது; இந்த த₃ர்ஶநஸமாநாகாரமான நிரந்தர ஸ்ம்ருதிக்கு விஷயமான ப₄க₃வத்ஸ்வரூபஜ்ஞாநத்துக்குக் காரணமான ஆத்மாவலோகந ஹேது வான ஜிதேந்த்₃ரியத்வத்துக்கு மூலமான பாபக்ஷயஹேதுவான விஹிதகர்மாநுஷ் டா₂நத்துக்கு நிமித்தமான அர்த்த₂ஜ்ஞாநத்துக்கு ஸாத₄நமான ஸாங்க₃ாத்₄யயநம் கு₃ருகுலவாஸ ஸாபேக்ஷமாயிறே இருப்பது. அதுக்கடியாக நாங்கள் கு₃ருகுலவாஸம் பண்ணினபடியைக் கேட்டருளலாகாதோ? என்கிறார்கள் — (கறவைகள் பின்சென்று) இவர்கள் ஸேவித்த ஆசார்யர்களிருக்கிறபடி. அபி₄ஜந வித்₃யா வ்ருத்தங்கள் மூன்றும் அவத₃ாதமாயிருப்பாரையிறே ஸேவ்யராகச் சொல்லுகிறது. திர்யக்₃ஜந்ம மானபடியாலே பிறவியும் விபரீதமாய், ஜ்ஞாநஹீநரை பஶுப்ராயரென்னும்படி ஜ்ஞாநமுமின்றிக்கே, து₃ராசாரரை ந்ருபஶுக்களென்னும்படியாகவும், பஶுஸமரென் னும்படியாகவும் வ்ருத்தஹீநங்களுமானவற்றையிறே நாங்கள் ஆசார்யர்களாக ப்ரதிபத்தி பண்ணுவது. ப₃ஹுஶ்ருதராகையாலே ஜ்ஞாநவ்ருத்₃த₄ருமாய், ஜ்ஞாந வ்ருத்₃த₄ர் பலர் நெடுங்காலம் ஸேவிக்கைக்கும் வீதராக₃ராகைக்கும் வயோவ்ருத்₃த₄ ரூபமாய், ஜ்ஞாநாநுரூபமான ஶீலத்தாலும் பழுத்து ப்₃ரஹ்மவாதி₃களாம்படி தத்வ த₃ர்ஶிகளுமாய், விபரீதஞ்சொல்லும் பா₃ஹ்யகுத்₃ருஷ்டிகளாகிற பரரை ப்ரமாணஶா (த)ங்களாலே வென்று ப₄க₃வந்மநநபரராய், கர்த்தவ்யங்கள் சோராமல் அநுஷ்டி₂த்து ஒரு ப்₃ரஹ்ம நிஷ்டா₂ராயிருப்பாரை ஆசார்யாநுவர்த்தநத்தைச் சொல்லுகிற ஶாஸ் த்ரங்களில் சொன்ன ப்ரணிபாதாபி₄வாத₃ந பரிப்ரஶ்ந ஸேவைகளில் ஒன்றுங்

A பெரியாழ் திரு. 3-6-3

குறையாதபடி அநுஷ்டி₂த்துக் கொண்டிறே அறிவுடையார் போருவது; நாங்கள் கறவைகளை அநுவர்த்தித்தோம்; அதுக்குறுப்பாக A உண்ணும் நாளுமின்றிக்கே உறக்கமுமின்றிக்கே ப₄யாநாமபஹாரியை அண்டைகொண்டு அப₄யங்கொ₃டுராய் B இளையவர் கலவியின் திறத்தை நாணினவர்களையிறே அநுவர்த்தநீயராக ஶாஸ்த்ரம் சொல்லுவது; ஆஹார நித்₃ரா ப₄ய மைது₂நங்களில் அறியதங்களாயிருக்கும் பதா₃ர்த்த₂ங்களை ஆசார்யர்களாக வரித்தோம்; இது எங்களுடைய வ்ருத்₃த₄ஸேவையிருந்தபடி. (கறவைகள் பின்சென்று) அறிவுகேட்டுக்குத் தலையான கன்றுகாலிகள் முன்னே போக, அவற்றின் பின்னே சென்றுய்த்து இத்தனைகாலமும் திரிந்தது. எங்களைப் பார்த்தால் பசுக்களும் வஸிஷ்ட₂பராஶராதி₃கள் கோடியிலேயாய், எங்கள் இளிம்பு கண்டு சிரித்து, எங்களார்ஜவத்தை அநுகரித்து அவை வழிகாட்ட அவற்றின் பின்னே திரிந்தோம் சிலர். ''காலிகள்பின்சென்று'' என்னுதே, ''கறவைகள் பின்சென்று'' என்றது — த₄ர்மபு₃த்₃த்₄யா ரக்ஷித்ததன்று, ப்ரயோஜந பு₃த்₃த்₄யா செய்தது என்கைக்காக. எருதுகள், வத(ற)டுகள், ஈற்றுமறுத்தவை ரக்ஷித்தறியோம். (பின்சென்று) ப்ராப்ய ருசியுடையார் அது கைபுகுருமளவும், பெருவிடாயர் நீர்நசையுள்ளவிடமெங்கும் தட்டித்திரியுமோபாதி ருசிக்கு வர்த்த₄கராக இருப்பார்பின்னே, 1. ''கலஶம் பூர்ணமாதா₃ய ப்ருஷ்ட₂தோSநுஜகா₃ம ஹ'' என்கிறபடியே—பூர்ண கலஶாதி₃களுங்கொண்டு ஸமித்பாணிகளாய்த் திரிதல், ப்ராப்யம் கைபுகுந்தால், 2. ''ப்ருஷ்ட₂தஸ்து த₄நுஷ்பாணி:'' என்னும்படி C ''தாய்நாடுகன்றேபோல்'' பிரியில் நாக்கு ஒட்டும்படி D ''வாளும் வில்லுங்கொண்டு'' பின்தொடர்ந்து அநுவர்த்தித்துத் திரியக்கடவதாயிறேயிருப்பது; அதுக்குடலாக நாங்கள் உறியும் மழுவும் தடியுங்கொண்டு ஜ்ஞாநப்ரத₃ராகவும் ப்ராப்யவஸ்துவாகவும் நினைத்துப் பின்சென்றது பசுக்களை.

''கறவைகள் பின்சென்று பசுக்களை மேய்த்துப் பின்னே திரிந்தாலும், போய்த்தங்குவது ஸத்துக்களிருக்கும் புண்யக்ஷேத்ராதி₃களாகில் அழகியதிறே; கோவலூர், ஸாளக்₃ராமாதி₃கள், அயோத்₄யை, மது₄ரை, கோயில் தொடக்கமான ஊர்கள், க்₃ராமங்கள், ஆஶ்ரமங்கள் தொடக்கமான இவற்றிலே இராத்தங்கிலும் அழகியதிறே'' என்ன, (கானம் சேர்ந்து) என்கிறுர்கள். வஸ்துபூ₄தர் வர்த்தித்தல், நீ அபி₄மாநித்தல் செய்யும் ப்ரதே₃ஶங்களிலும் மழைக்கொதுங்கி ஓரிராத்தங்கியும் அறியோம். ஒரு கோ₃பாலரபி₄மாநத்திலே மழைக்கொதுங்கில் வாரிப்பிடியாக அகப்படுமிறே. (கானம்சேர்ந்து) பசுக்களுக்குப் புல்லும் நீருமுள்ள இடந்தேடி அவ்விடத்தே நெருங்கிப் போந்தோமித்தனை. (கானம்) ''காடுகளிலே, த₃ண்ட₃காரண்யம், நைமிஶாரண்யம், ப₃த₃ரிகாஶ்ரமம் தொடக்கமானவற்றிலே நம்முடைய அபி₄மாநமுண்டாய் ஸத்துக்களும் ஒதுங்கிப் போருவர்களே'' என்ன;

A பெரிய திரு 8-2-4, B பெரிய திரு 1-6-1, C முதல் திருவ 30, D திருவாய் 8-3-9

ஒருவிஶேஷணமிடாதே வெறும் (கானம்) என்கிறார்கள். இவர்கள் வர்த்திக்கும் காடு A "எவ்வுஞ்சிலையுடை வேடர்" காடிறே; அடியிடுவார்காலிலே அருவும் ப்₃ருந்த₃ாவநமாகையாலே ஸத்துக்கள் சேருமிடமன்றே. (சென்று — சேர்ந்து) B "பரவிச்சென்மின்கள்" C "சென்று வணங்குமினோ" என்னுமிடங்களில் சென்றறியோம், D "சேர்மினீரே" E "மணிமாடம் சேர்மின்கள்" என்கிறவிடங்களில் சேர்ந்துமறியோம்; F "பரன்சென்றுசேர்" என்று—உனக்கும் க₃ந்தவ்யமுமாய் ப்ராப்யமுமாயன்றோ அவையிருப்பது; அவற்றில் சென்றுமறியோம், சேர்ந்துமறியோம்; "சென்று, சேர்ந்து" என்கையாலே — அவற்றிலே பொருந்தியிருக்கை.

"ஸத்துக்கள் அநுவர்த்தநமும் புண்யக்ஷேத்ர வாஸமும் பெற்றிலோமென்கிற இழவுமில்லை; நீங்கள் வைஶ்யராகையாலே கோ₃ரக்ஷணத்தை வர்ணத₄ர்மத்திலே சில எழுதலாம்; காட்டில் தங்குகையை வாநப்ரஸ்த₂ாஶ்ரமத்திலே முதலிட்டு, ஆஶ்ரமத₄ர்மமாக்கலாம்; ஆசார்யார்த்த₂மாகப் பசுக்களை மேய்த்துக் காடுகளிலே தங்குகையும் த₄ர்மமாகச் சொல்லாநிற்கும்; தப:பரரான ரிஷிகளும் அரண்யவாஸம்பண்ணியன்றோ த₄ர்மார்ஜநம் பண்ணுவது; ஆகையாலே கர்மயோக₃த்திலே அடைக்கலாயிருப்பதொரு புடையுண்டே அவற்றுக்கு" என்ன— (உண்போம்) என்கிறார்கள். வர்ணாஶ்ரமங்கள் நடத்துகைக்காகவும் ஆசார்யார்த்த₂மாகவும் வீதராக₃ரைப் போலே அத்₃ருஷ்டார்த்த₂மாகவும் செய்ததல்ல; காயக்லேஶத்தைப் பிறப்பித்து அத்தாலே ஒரு புண்யமுண்டாகைக்காக த₄ர்மபு₃த்₃த்₄யா செய்தோமுமல்லோம்; உத₃ரபோஷணபரராய்ச்செய்தோமத்தனை. (உண்போம்) வயிறு வளர்க்கையே புருஷார்த்த₂ம். (கானம் சேர்ந்துண்போம்) காட்டில் போனால் புழுதியும் வேர்ப்பும் போகக் குளித்து உண்டறியோம். குளித்து உண்ணில் 1. "ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத" என்கிற விதி₄யை அநுவர்த்தித்தார்களென்று அவன் த₄ர்மம் ஏறிடுமே. (உண்போம்) அருகிருந்தார்கையிலே ஒருபிடி இட்டறியோம். அப்போது ஆதித்₂யம் பண்ணினார்களென்று த₄ர்மமெழுதும். (கானம் சேர்ந்துண்போம்) ஒருவந(ர்)வாஸபூ₄மியிலே புக்கு உண்ணில், அங்கே தே₃வதைகளிருக்கையாலே 'யஜ்ஞஶிஷ்டாஶநம் பண்ணினிகோளே' என்று பிடிக்கும். (பின்சென்றுண்போம்) ப்ராங்முக₂த்வாதி₃நியமமில்லை, (சென்று உண்போம்) இருந்துண்ணவேணுமென்கிற நிர்ப்ப₃ந்த₄மில்லை. (உண்போம்) பசுக்கள் அசையிடாதிருக்கிலும் நாங்கள் பு₄ஜியாதிருப்பதில்லை. (உண்போம்) உச்சி₂ஷ்டம், அபே₄ாஜ்யம், பர்யுஷிதம் தொடக்கமானவற்றில் ஒரு வரம்பில்லை; இது எங்களுடைய கர்மயோக₃த்தின் நிலையிருந்தபடி என்கிறார்கள்.

"நாம் Gகோலிப்பின்னேபோகிறிலோமோ? நாம் Hகாடுவாழ் சாதியாகிறிலோமோ? I வேண்டடிசிலுண்ணும்போதீதென்று பசித்திருந்து சோறுபெற்றால் J நின்றார்

A பெரியாழ் திரு 3-2-5, B திருவாய் 4-10-2 C நான் திருவ 42, D பெரியதிரு 3-4 E பெரிய திரு 6-6, F திருவாய் 3-3-8, G பெரியாழ்திரு 3-3-1, H நாச்-திரு 12-8 I நாச்-திரு 12-6, J பெரிய திரு 10-6-10.

முகப்புச்சிறிதும் நினையாதே. A 'ஆடியமுதுசெய்' என்றாலும் குளியாதே B மந்திரவிதியில் பூசனைகளையும் விலக்கித்திரியாநின்றோம். நமக்கேதேனும் தோ₃ஷமுண்டாகாநின்றதோ?'' என்ன, 'C ''உங்களுக்கேச்சுக் கொலோ'' என்று நாங்கள் செவி புதைக்கும்படி நிந்தி₃தமான வார்த்தையைச் சொன்னாயீ' என்ன; 'ஆகில், 1. ''தேஜோவிஶேஷேண ப்ரத்யவாயோ ந வித்₃யதே'' அன்றோ? ஜ்ஞாநாதி₄கரான உங்களுக்கு இவை தோ₃ஷாவஹமாகப் புகுகிறதோ?' என்ன; ''கேவலம் உத₃ரபோஷணபரராயிருக்கிற எங்களை 'ஜ்ஞாநமுடையவர்களன்றோ' என்னலாமோ'' என்றார்கள்; ''இப்போது இவையில்லையாகிலும் ஜந்மாந்தரங்களிலே ஸத்கர்மங்களுண்டாய், அத்தாலே பாபக்ஷயம் பிறந்து மநோநைர்மல்யமுண்டாய், இப்போது ஜ்ஞாநம் பிறக்கவுமாமே; உங்களைப்போலே கோ₃ரக்ஷணாதி பண்ணுகையுமின்றிக்கே கோ₃வத₄ம் பண்ணுகையே ப்ரயோஜநமாய், அது க்ரயித்து ஜீவியாநிற்கச் செய்தே த₄ர்மஸந்தே₃ஹ நிவர்த்தகனாயிருந்தான் வ்யாத₄னன்றோ; உங்களைப் போலே அரண்யவாஸம்பண்ணாதே நக₃ரவாஸம் பண்ணாநிற்கச்செய்தே விது₃ரன் ஜ்ஞாநாதி₄கனென்று ப்ரஸித்₃த₄னாயிருந்தான்; யதே₂ஷ்டாந்நபரனாய்த் திரியாநிற்கச் செய்தே ஆதி₃ப₄ரதன் அத்₄யாத்மோபதே₃ஷ்டாவாயிருந்தான்; இவர்களெல்லாங் கிடக்க உங்களோட்டைப் பெண்டாட்டி தான் ஶ்ரமணியன்றோ த₄ர்மநிபுணையாயிரா நின்றாள்; கர்மயோக₃மில்லையாகிலொழிகிறது; மோக்ஷஹேதுவான ஜ்ஞாநப₄க்தியுண்டாகில் குறையில்லையே; அவை வளரவளர 2. 'க்ஷிப்ரம் ப₄வதி த₄ர்மாத்மா' என்கிறபடியே அவை தன்னடையே குலைந்துவிடும்; ப₃ஹுமந்தவ்யைகளான உங்களை நாம் எளிதாக நினைத்திரோமே'' என்ன; (அறிவொன்றுமில்லாத) என்கிறார்கள். ''எங்களை அப்படியோ நினைத்திருக்கிறது. நீ நினைத்திருக்கிற ஜ்ஞாநத்தில் ப்ரஸங்க₃த்தில் ப்ரதிஷேத₄முமில்லைகாண்'' (அறிவில்லை) (அறிவொன்றில்லை) அறிவொன்றுமில்லை) ''கர்மயோக₃த்திலுண்டான ஆத்மயாத₂ாத்ம்யஜ்ஞாநமில்லை; ப₄க்தியாகிறது ஜ்ஞாநவிஶேஷமாகையாலே அந்த ஆத்மஜ்ஞாநமடியாக உன் பக்கலிலே ஜ்ஞாநம் பிறந்து, நீ உத்₃தே₃ஶ்யனென்று பு₃த்₃தி₄பண்ணி, உன் பக்கலிலே உண்டான அநவரதபா₄வநாரூபமாய் வரும் ப₄க்திரூபாபந்நஜ்ஞாநமில்லை; இவையிரண்டுக்குமடியான ப்ரக்ருத்யாத்மவிவேகாதி₃கள் ஶமத₃மாதி₃ ஸாத₄ந ஸம்பத்தி தொடக்கமானவை உண்டாய், முமுக்ஷுவாகைக்கு யோக்₃யமாயிருக்கும் அவற்றிலும் ஓரந்வயமில்லை; கர்மயோக₃ந்தானும் ஜீவபரயாதா₂த்ம்யஜ்ஞாநபூர்வகமாக இருப்பதன்றோ'' என்னில்; தே₃ஹாதிரிக்த ஆத்மஜ்ஞாநமும் ஈஶ்வரஜ்ஞாநமும் கர்மாங்க₃மாயிருக்கும்; இவ்வளவே அங்குள்ளது. இப்போது தனித்து உபாயமாய் நிற்கும் ஜ்ஞாநயோக₃த்தையும் ப₄க்தியோக₃த்தையும் இல்லையென்று சொல்லுகிறது. அறிவில்லையென்கிறதும் ஓரறிவின் கார்யமிறே. பேற்றுக்குடலாகத் தங்கள் தலையால் வரும் அறிவை இவர்களில்லையென்கிறது. (அறிவொன்றுமில்லாத) ஜ்ஞாதவ்யங்களாயிருக்குமவை ஒன்றிலுமறிவில்லையென்று தந்

---

A பெரியாழ் திரு 3-3-3, B பெரிய திரு 2-3-4, C நாச்-திரு 12-8.

த்ரேண உபாத3ாநம் பண்ணுகிறார்கள். (உண்போமறிவொன்றுமில்லாத) ஆஹார ஸுத்3தி4யுண்டானாலன்றோ ஜ்ஞாநம் பிறப்பது; ஊணர்க்குமுண்டோ அறிவு?

"ஜ்ஞாநமுண்டாய்க்கழிந்ததாகவுங்கூடுமே; மேல் உண்டாகைக்கும் யோக்3யதையுண்டே" என்ன:— (ஆய்க்குலம்) அறிவில்லாமை ஜந்மஸித்3த4ம். எங்கள் பிறப்புக் கண்டாய்க்கு, கர்ம ஜ்ஞாந ப4க்திகளுண்டோவென்று கேட்க வேண்டியிருந்ததோ? கீழ் "இல்லை" என்றவை உபேக்ஷையால் வந்ததன்று; யோக்3யதையில்லாமையால் குலைந்ததென்கிறார்கள். (ஆய்க்குலம்) "ராவணன் து3ர்வ்ருத்தன்" என்கைக்கு அடியென்? என்ன; "ராக்ஷஸன்" என்றாற்போலே, A "ஏழை ஏதலன்" என்கைக்கு அடியென்னென்ன; A "கீழ்மகன்" என்றாற போலே,- அறிவில்லாமைக்கு "ஆய்க்குலம்" என்கிறார்கள். B "ஒன்றுமறிவொன்றில்லாத உருவறைக் கோபாலர்" என்னக்கடவதிறே. வ்ருத்தஹாநியை உணர்ந்து திரியவிடுவிக்கவொண்ணாதபடியாய்த்திருப்பது ஜந்மம். "யஜ்ஞ தா3ந தபஸ்ஸுக்களுடைய பரிகரங்களுக்கு விபரீதங்களிலே நடந்தபடியாலே கர்மயோக3மில்லையென்றிகோள்; ஆத்மரதியாய் ஆத்மத்ருப்தனாய் ஆத்மஸந்துஷ்டனாய் க்ருதக்ருத்யனாயிருக்குமவனுடைய ஜ்ஞாநயோக3மும், அநந்யப4க்தனுடைய ப4க்தியுமில்லையென்றிகோள்; ஆக, இருபடியாலே பேற்றுக்கடியாயிருப்பதொரு புண்யலேஸமுமில்லையென்றிகோள்; உங்களுக்கு உள்ளதென்?" என்ன; (ஆய்க்குலத்துன்றன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்) எங்களை என் சொன்னாயே! ஸாக்ஷாத் புண்யத்துக்குப் பாலும் சோறுமிட்டன்றோ வளர்க்கிறோம்; ஆர்ஜிதஸுக்ருதமில்லையென்றோமத்தனை போக்கி அயத்நஸித்3த4ஸுக்ருதமில்லையென்றோமோ? ஸாத்4யஸுக்ருதமில்லையென்னுங்காட்டில் ஸித்3த4ஸுக்ருதமில்லையென்றிருந்தாயோ? உன்னாலே ஸ்த2ாபிக்கப்படுகிற கர்மங்களில்லையென்றோமத்தனையொழிய த4ர்மஸ்த2ாபகனாய் ஸாக்ஷாத்3த4ர்மமான உன்னை இல்லையென்னலாமோ? (ஆய்க்குலத்து உன்றன்னை) நீ எங்கள் குடியிலே விரும்பிவந்து பிறக்கும்படியன்றோ எங்களைஸ்வர்யம். (ஆய்க்குலத்து) நாங்கள் எத்தனையேனும் கைகழியச் செய்தேயும் நீ அவ்வளவெல்லாம் வந்து கிட்டினபின்பு எங்களுக்கு அதி4காரத்தில் குறையுண்டோ? எங்களுடைய இடைக்குலத்திலே நீ வந்து பிறக்கைக்கடியான புண்யத்தை நாங்களுடையோம்; எங்கள் பேற்றுக்கு உபாயமும் நீயே; அதுக்கடியான ஸுக்ருதமும் நீயேயாகப் பெற்றோம்.

(ஆய்க்குலத்துன்றன்னை) இதிலே நீக்கி முகக்கவோ நீ பிறந்தது? C இவ்வாய்க்குலத்தை வீடுய்யத் தோன்றிற்று; D "உய்யவிவ்வாயர்குலத்தினில் தோன்றிய வொண்சுடராயர் கொழுந்தே" என்னக்கடவதிறே. நீ ஸுக்ருதமாய் நின்று இக்குலத்தை எடுக்கைக்கு ஆண் பெண் சட்டி பானை என்றுண்டோ? (உன்றன்னை)

---

A பெரிய திரு 5-8-1. B பெரியாழ்திரு 3-8-2. C திருவாய் 6-2-10. D பெரியாழ்திரு 2-3-3.

ஸூரிகள் 1. ''அநுஸஞ்சரந்''களாய்த் தொடர்ந்து குற்றேவல் செய்கிற உன்னை, கறவைகள் பின்செல்லுகிற குலத்திலே பெற்றோம். A தடங்கடல் சேர்ந்த உன்னை கானஞ்சேர்ந்த குலத்திலே பெற்றோம். (ஆய்க்குலத்து உன்றன்னை) 2. ''அநஸ்நந்'' என்னும்படி ஒட்டறுத்து உண்ணாதே நிற்கும் உன்னை ''உண்போம்'' என்கிற எங்கள் குலத்திலே பெற்றோம். திவ்யஜ்ஞாநோபபந்நர்க்கு முகங் கொடுக்கிற உன்னை அறிவொன்று மில்லாத குலத்தில் பெற்றோம். (ஆய்க்குலத்து உன்றன்னை) B இமையோர்தங் குலமுதலான உன்னை C ஆயர்குலமுதலாகப் பெற்றோம். (ஆய்க்குலத்து உன்றன்னை) D வெங்கதிரோன் குலத்திற்காட்டில் இக்குலத்துக் குண்டான வாசிபாராய். நீ பகல்விளக்கான குலமும், நீ அணிவிளக்கான (5) குலமும் ஒக்குமோ?

(பிறவி) E ''செந்நாள் தோற்றி'' என்னும்படி நீ ஆவிர்ப்பவித்த யாதவகுலமோ இது? F ''நந்தன் பெற்ற ஆனாயன்'' என்னுமிடமன்றோ இது. (பெறுந்தனைப் புண்ணியம்) பெறுகைக்குத் தக்க பாக்யம். புண்யத்தை உன்னாலே தேடலாம். 3. ''புண்யாநாமபி புண்யோஸௌ'' என்கிற உன்னைப் பெறுகைக்குத் தக்க புண்ணியம் வேணுமிறே. புறம்புண்டான புண்யங்களை உன்னாலே பெறலாம், உன்னைத் தரவல்லது உன்னில் விஞ்சினதில்லையே. 4. ''க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்'' என்கிற ஸநாதநதர்மம் நீயேயிறே. இத்தை ''புண்ணியம்'' என்றால் G ஈதன்று என்பாரார்? வேதவித்துக்கள் சொல்லவோ, அத்யாத்ம வித்துக்கள் சொல்லவோ? கர்மபாக நிஷ்டரும் அன்று என்னார்கள்; ஜ்ஞாந பாக நிஷ்டரும் அன்று என்னார்கள். (பெறுந்தனை புண்ணியம்) பறைதரும் புண்ணியனேயிறே தன்னையுந் தருவது. பிறக்கைக்கு ஹேதுவேயிறே தருகைக்கும் ஹேது. H ''வேண்டி—வந்து பிறந்ததும்''. 'நம்மைப் பெறும்படியான புண்ணியம் I ''என்ன நோன்பு நோற்றாள் கொலோ'' என்கிற யஶோதையொருத்திய தன்றோ?' என்ன; (யாமுடையோம்) அவள் பெற்று உடையளானாள், நாங்கள் பிறந்து உடையோமானோம். 5. ''அஹோபாக்யம் அஹோபாக்யம் நந்தகோப வ்ரஜௌகஸாம்'' என்று ஊர்க்காகப் பலித்ததிறே. 'J ''இருந்தவூரிலிருக்கும் மானிடர்'' என்கிறபடியே உங்களுடைய தப:பலமாகப் பெற்றிகோளாகிறிகோள்; நாம் பிறந்த ஊரிலிருக்கைக்குப் புண்ணியம் பண்ணினிகோளாகிறிகோள்' என்றான்; — (உடையோம்) நாங்கள் ஒன்று செய்து ஆர்ஜித்தோமல்லோம், இந்த ஸுக்ருதம் ஸத்தாநிபந்தநம். (உடையோம்) நாங்கள் செய்ததுமல்ல, ஸ்வீகரித்ததுமல்ல, இப்புண்யத்துக்குச் செய்யுமவையும் ஸ்வீகரிக்குமவையும் ப்ரதிபந்தகங்களிறே. புறப்பகையுங் கழிக்கவேண்டா, உட்பகையுங் கழிக்கவேண்டா. (யாமுடையோம்) எங்கள் ஸுக்ருதத்தில் பாதக ஸ்பர்ஶமுமில்லை, மஹாபாதக ஸ்பர்ஶமுமில்லை. (புண்ணியம் நாமுடையோம்) நாட்டில் புண்ணியங்கள் அநேகங்களுமாய், ப்ரதிநியதங்களுமாயிருக்கும்; எங்கள் புண்ணியம் ஒன்றாய்,

---

A திருவாய் 3-5-6. B திருவாய் 7-1-8. C திருவாய் 1-5-6. D பெருதிரு 10-1. E திருப்பல் 10. F பெரியதிரு 5-5-3. G நான்-திருவ 72. H திருவாய் 6-4-5. I பெரியதிரு 2-2-6. J பெரியாழ்திரு 4-4-7.

அது எல்லார்க்கும் பொதுவாயிருக்கும். A ''யாவர்க்கும் புண்ணியம்'' என்னக் கடவதிறே.

'அறிவொன்றுமில்லை என்பது, புண்ணியம் நாமுடையோமென்பதாய்க் கொண்டு வ்யாஹதபா₄ஷணம் பண்ணினிகோளே' என்ன; ''ஓராஶ்ரயத்திலே உண்மையுமில்லாமையுஞ் சொல்லிலன்றோ வ்யாஹதியுள்ளது; அப்ரயோஜகங்களை யன்றோ நாங்கள் இல்லையென்கிறது; எங்களுடைய அபி₄மதஸித்₃தி₄ யாதொன்றாலே அத்தை இல்லையென்றோமோ? — (குறைவொன்றுமில்லாத) எங்களுக்கு அறிவொன்று மில்லை என்றோமத்தனைபோக்கி எங்கள் புண்ணியத்துக்கு ஏதேனும் குறை சொல்லிற்றுண்டோ? உண்டானாலும் கழுத்துக்கட்டியாமவற்றினுடைய இல்லாமை சொல்லுகை உன்னுடைய அநுக்₃ரஹத்துக்கு ஹேதுவாமத்தனையன்றோ; எங்கள் தலையால் வருமத்தை இல்லையன்றோமத்தனைபோக்கி உன்தலையால் வருமத்தை இல்லையென்றோமோ?

(குறைவு — இல்லை) (குறைவொன்று — இல்லை) (குறைவொன்றுமில்லை) எங்கள் புண்யம் ஸாபேக்ஷமுமன்று; ஸாவதி₄யுமன்று; ப்ரப₃லபாப நிருத்₃த₄மு மாகாது. உத்பத்தியில் சேதநனை அபேக்ஷிக்கும் என்னவேண்டா, ஸாத்₄யமல் லாமையாலே; ப₂லங்கொடுத்தால் குறையும் என்னவொண்ணாது பரமசேதந மாகையாலே; ப்ரப₃ல கர்மத்தாலே தகைப்படுமென்னவொண்ணாது, ஸர்வஶக்தி யாகையாலே. ''நிரபேக்ஷனைப்பற்றுய், பூர்ணனைப் பற்றுய், ப்ரப₃லபாபங்களை நான் போக்குகிறேன்'' என்றது வெறுமனேயோ? (குறைவொன்றுமில்லாத) ராஜாக்கள் வழிபோம்போது மேடுபள்ளம் ஒக்கவிட்டன்றோ போவது. பெருமாள் கடலைத் தூர்த்து வாநரஸேனையை நடத்தினாற்போலே, உன் குறைவில்லாமையை எங்கள் குறைவிலேயிட்டு நிரவி ஒக்கவிட்டுக்கொள்ளுமித்தனை. எங்களறிவொன் றில்லாமையாகிற பாழ்ந்தாறு நிரப்புகைக்கு வேண்டும் பௌஷ்கல்யம் போராதோ உனக்கு? உன் குறைவில்லாமை, எங்களறிவில்லாமையை அபேக்ஷித்தன்றோ இருப்பது. குறைவாளரையொழிய நீ நிறைவாளனும்படியெங்ஙனே? ஒரு மேட்டுக்கு ஒருபள்ளம் நேரன்றோ. 'ஆகில் ஒன்றுமில்லையென்று சொன்னவிடம் உங்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநமில்லாமையிறே' என்ன; — (கோவிந்தா) நீயோதான் சால அறிவுடையையாயிருக்கிறாய். உனக்கு ஸ்வரூபஜ்ஞாநமுண்டாகில் ஸூரிகள் நடுவேயிராயோ? அவனுடைய அறியாமையிறே நமக்குப் பற்றாசு. நீ B ''அயர் வறுமமரர்களதிபதி'' என்று உன்னையறிந்தாயாகில் நீ பசுக்களின்பின்னே போகப் பெறுவுதியோ? அவன்தன்னையறிந்தாலும் பெறவிரகில்லை, நம்மையறிந்தாலும் விரகில்லை; அவன் ஸ்வாதந்த்ரியத்தையும் மறந்து, நம்முடைய அபராத₄த்தையும் மறக்கையிறே நமக்குப் பெறலாவது. (குறைவொன்றுமில்லாத கோவிந்தா) இக்குறையொன்றுமில்லாமை பரத்வத்திலன்று; தாழநின்ற நிலத்திலே. ஸாம்யா

A திருவாய் 6-3-3. B திருவாய் 1-1-1.

பந்நர்க்கும், அவர்களிலும் சிறியவர்களுக்கும், அவர்களோடொத்தவர்களுக்கும் முகங்கொடுக்குமென்கிற குறை அங்கு. குறையுண்டென்னவும் அறியாதாரோடே பொருந்தித்திரிந்தவனன்றே. உனக்கு இற்றைக்கு விஶேஷமென்? எங்கள் குறையால் எங்களுக்கிழக்கவேண்டுவது உன்னுடைய பூர்த்தியில் ஏதேனும் குறையுண்டாகிலன்றோ? கன்றுகள் மேய்த்து கோவிந்த3ாபி4ஷேகம் பண்ணி கோபகுலத்திலே கலந்து பரிமாறி, A காலிப்பின்னே வருகின்ற வேடத்தை எல்லார்க்குங்காட்டி, ஏற்கவே அறிந்து கோவர்த்த4நத்தையெடுத்து ரக்ஷித்துப் போருகையாலே வாத்ஸல்யாதி3களாலும் ஜ்ஞாநஶக்த்யாதி3களாலும் பூர்ணனன வனன்றோ? எங்களுக்கு ஜ்ஞாநவ்ருத்தங்கள் கைபுகுந்ததில்லை; உனக்கு ஜ்ஞாந ஶக்திகள் குறைந்ததில்லை. (கோவிந்தா) 1. ''மாமேகம்'' என்றவன் பாசுரமன்றோ; B கடையாவும், கழிகோலும் கையிலே பிடித்த கண்ணிக்கயிறும், C கற்றுத்தூளி யாலே தூ4ஸரிதமான திருக்குழலும், மறித்துத் திரிகிறபோது திருவடிகளிலே கிடந்து ஆரவாரிக்கிற கழல்கள் சதங்கைகளும், A குளிர்முத்தின் கோடாலமுமாய் நிற்கிற உபாயவேஷத்தை ''கோவிந்தா'' என்கிறார்கள்.

''பெண்காள்! உங்கள் பேற்றுக்குடலாக நம் நைரபேக்ஷ்யம் சொல்லா நின்றிகோள்; குறைவாளர்க்கு நிறைவாளர் கொடுக்கக்கடவர்கள் என்றுண்டோ? நிரபேக்ஷராயிருப்பார் ஸ்வதந்த்ரரிறே; நீங்கள் சொன்னதுதானே இழவுக் குடலாயிருந்தது; நாம் அல்லோம் என்றபோது கைவிடுகைக்குடலாயன்றோ இருப்பது'' என்ன; (உன்றன்னோடுறவு) உன் பூர்த்தி குலையிலும் ப3ந்த3ம் குலையவொட்டுவதியோ? நீ எங்களுக்கு உறவன்றோ; நீ எங்கள் காரியம் செய்யவேண்டா வோ? குற்றுடக்குண்டானவிடத்தில் ஸ்வாதந்த்ரியம் ஜீவிக்குமோ? ''அதுகொண்டோ? ஆனால் அது ஒரு குடந்ரோடே போகிறது'' என்றான்; (உறவேல் — ஒழிக்கவொழியாது) ப்ருத2க்ஸ்தி2த்யாதி3களில்லாத ப்ரகாரியையொழிய ப்ரகாரத்துக்கு ஸ்தி2தியுண்டோ? (ஒழிக்கவொழியாது) வஸ்துவை ஶக்திமான் என்று உன்னாலே பிரிக்கலாமோ? ''என்னையன்றியிலை'' என்கிற ப்ரமாணம் D ''நானுன்னையன்றியிலேன் — நீ என்னையன்றியிலை'' என்கிற மூலப்ரமாணத்தில் முதல்வரியில் கேட்டறியாயோ? நீ எங்கள் கையில் தந்த ஆவணத்திலேயெழுத்தை வெட்டுதல். எங்கள் காரியம் தலைக்கட்டுதல் செய்யவேண்டாவோ? முதலெழுத்தை வெட்டுதல். எங்கள் காரியம் தலைக்கட்டுதல் உங்களுக்கும் வார்த்தைகளல்ல. E உறவு ''இவையெல்லாம் அறிவொன்றுமில்லாத உங்களுக்கும் தெரியாது'' என்றான். (நமக்கு — ஒழிக்கவொழியாது) சுற்றமெல்லாமொன்றிலா நமக்குத் தெரியாது'' என்றான். (நமக்கு — ஒழிக்கவொழியாது) உன்னுடைய ஜ்ஞாநவான்களுடைய ப3ந்த,மல்லகாண் நாங்கள் சொல்லுகிறது; உன்னுடைய ஜ்ஞாநவான்களுடைய ப3ந்த3மல்லகாண் எங்களது. அறிவில்லாதார்க்கு மறக்கலாம் இடையிலே வந்த உறவுகாண் எங்களது. அறிவில்லாதார் இட்டீடு கொள்ளும் உறவுகாண் இவ்வுறவு. அந்த உறவு; அறிவில்லாதார் இட்டீடு கொள்ளும் உறவுகாண் இவ்வுறவு.

A பெரியாழ் 3-3-1, B திருவாய் 4-8-4, C பெரியாழ் திரு 3-3-3, D நான்-திருவ 7
E பெரிய திரு 2-1-2.

நீ A மைத்துனனம்பி; நாங்கள் B மாமிமார் மக்கள்; எங்ஙனே ஒழிக்கும்படி? "இதென்னன்புது? நமக்கு ஶிஶுபாலன் மைத்துனனன்றோ" என்றான்; உன்னுடைய கோ₃விந்த₃த்வத்துக்குப் பழிப்புச் சொன்னவனாகையாலே அவனை விடாய்; கோ₃விந்தா₃பி₄ஷேகம் பண்ணினவன்று உன்காலிலே குனிந்த மைத்துனன் காரியமெல்லாம் உன் தலையிலே ஏறிட்டுக்கொண்டு முன் நடந்து செய்திலையோ? அந்தவுறவு காண். C "தாழ்ந்த தனஞ்சயற்காகி" D "பாலப் பிராயத்தே பார்த்தற்கருள் செய்த" என்னக்கடவதிறே. "யுத்₃த₄ார்த்த₂மாக ஒரு நிமித்தங் கூட்டிக்கொண்டு, அந்தக் காரியம் செய்த அநந்தரத்திலே விட்டிலோமோ அதுவும்?" என்றான். (இங்கொழிக்கவொழியாது) அங்கு ஒழிக்கலாம்; இங்கு ஒழிக்கவொண்ணாதுகாண். ஸ்வதந்த்ரன் தாழ்ந்தவிடத்தில் பண்ணின வுறவுபோலேயோ பரதந்த்ரரைத் தாழ நின்று கையைக் காலைப் பிடித்துப் பண்ணின உறவு? (கோவிந்தா உன்றன்னோடுறவேல் — ஒழிக்கவொழியாது) உன்னுடைய நாராயணத்வத்திலுறவு பழங்கிணறு கண்வாரவேணுமோ? எங்களுக்கு இவ்வுறவு போராதோ? E அளிக்கின்ற ஆயனானகையாலே ரக்ஷ்ய ரக்ஷகஸம்ப₃ந்த₄மும் உன்னோடே. F "குன்றுகுடையாவெடுத்த அடிகள்" என்று — கோ₃விந்தா₃பி₄ஷேகம் பண்ணுகையாலே ஶேஷஶேஷிபா₄வமும் உன்னோடே. G "ஏசும்படி அன்னசெய்யும் எம்மீசர்" ஆகையாலே நியந்த்ருநியாம்யபா₄வமும் உன்னோடே. H "தம்மனையானவனே" I "ஆயர்தாயவனே" என்று கார்ய காரண ஸம்ப₃ந்த₄மும் உன்னோடே. J "என்னுயிர்க்கண்ணபிரான்" என்று — நீ உயிராய், நீவிட்டகன்றபின் என்னுயிர் ஆற்றமாட்டாது; நாங்கள் துடிக்கும்படியிருக்கையாலே த₄ார்யத₄ாரக ஸம்ப₃ந்த₄மும் உன்னோடே. K "எண்ணத்துளென்று மிருந்து தித்திக்கும்" என்று வ்யாப்யவ்யாபகஸம்ப₃ந்த₄மும் உன்னோடே. இப்படி உன்னோடே உண்டான ஸம்ப₃ந்த₄த்துக்கு எல்லையுண்டோ? (கோவிந்தா — ஒழிக்க ஒழியாது) நீ கோ₃வர்த்த₄நமெடுத்தவாறே வேறொருவனோ என்று ஶங்கிக்க, "நான் ப₃ந்து₄வாய்ப் பிறந்தேன் உங்களுக்கு; வேறென்று நினையாதே கொள்ளுங்கோள்" என்ற வார்த்தை அமோக₄மன்றோ? (ஒழிக்க ஒழியாது) உன்னால் விடவொண்ணாது; எங்களால் விடவொண்ணாது; உன்னுடைய ப₃ந்து₄க்களால் விடுவிக்க வொண்ணாது; எங்கள் ப₃ந்து₄க்களால் விடுவிக்கவொண்ணாது; ஊராக ஸங்கேதித்தாலும் விடுவிக்கவொண்ணாது. நீ L துறந்தெம்மைவிட்டகன்ற விடத்திலும் போய்த்திலை; நாங்கள் M "புள்ளுவம் பேசாதே" N "கழகமேறேல்" என்றவிடத்தில் குலைந்ததில்லை, O "ஊனமுடையன செய்யப்பெறாய்" என்ற விடத்தில் போய்த்தில்லை. P "இவ்வூரொன்று புணர்க்கின்றதே" என்று திரள

A நாச்-திரு 6-6. B நாச்-திரு 3-8. C பெரியாழ்திரு 1-9-4. D பெரியாழ் திரு 2-6-6. E திருவாய் 9-9-2, F பெரியதிரு 6-10-7. G திருவிருத்தம் 54 H பெரியாழ் திரு 1-5-3. I திருவாய் 3-8-3. J திருவாய் 9-5-1. K பெரியாழ் திரு 2-3-11. L திருவாய் 10-3-4, M பெரு திரு 6-7. N திருவாய் 6-2-6. O பெரியதிரு 10-7-1. P பெரியாழ்திரு 3-4-3.

அவத்₃யம் சொன்னவிடத்தில் ஒழிந்ததில்லை. அறிவொன்றுமில்லாத எங்களுக்கு, குறைவொன்றுமில்லாத உன் உறவு; த்₃யாபூர்த்தியிலு த்₃யநீயதாபூர்த்தியுண்டான உறவுக்கு அந்யதா₂ஸித்₃தி₄ சொல்லவொண்ணுதே.

''இப்படி நம்மோடே உறவுசொல்லாநின்றிகோள்! உங்களை கோ₃பிகைகளாகவும், நம்மை கோ₃விந்த₃னாகவுஞ் சொல்லிற்று இப்போதன்றோ; நம்மை அடியிலே மர்மத்திலே தொட்டுவைத்து மேலும் அதிலே நடந்துவைத்து, கார்யகாலமானவாறே வாலைக்குழைத்து 'கோவிந்தா' என்னுநின்றிகோளே! என்னுக்கிவிடற்கு?'' என்றான். ''நாங்கள் செய்த தப்பைப் பொறுக்குமத்தனையன்றோ'' என்ன, ''சொல்லுகைக்கு ஹேதுசொல்லுங்கோள், பொறுக்கிறேம்'' என்றான்; (அறியாத பிள்ளைகளோம்) என்கிறார்கள். இவையெல்லாம் பொறுக்கைக்கு ஹேதுக்களிருக்கிறபடி;— முதலிலே அஜ்ஞர் செய்தது பொறுக்கவேணும்; ப₃ாலர் செய்தது பொறுக்கவேணும்: ஸ்நேஹிகள் செய்தது பொறுக்கவேணும்; அநவத₄ாநத்தாலே சொல்லுவதறிந்திலோம்; ப₃ால்யத்தாலே சொல்லுவதறிந்திலோம்; ப்ரேமத்தாலே வந்த இருட்சியாலே சொல்லுவதறிந்திலோம்; எங்களாலே அறிவுகெட்டோம்; பிறவியாலே அறிவுகெட்டோம்; உன்னாலே அறிவுகெட்டோம்; A யாதுமொன்றறியாத பிள்ளைகளிறே நாங்கள். அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்திலே பிறக்கையாலே அறிவுகெட்டோம்; B ''அழகுகண்டென் மகளயர்க்கின்றது'' என்கிறபடியே உன்னைக்கண்டு மதிகெட்டோம்; C ''அறிவழிந்தனராய்ப்பாடி ஆயர்'' என்று — இடையரை மதிகெடப் பண்ணுமது பெண்களை மதிகெடுக்கச் சொல்லவேணுமோ? D ''பித்தர் சொல்லிற்றும் பேதையர் சொல்லிற்றும், பத்தர் சொல்லிற்றும் பன்னப்பெறுவதோ'' என்று ப்ரஸித்₃த₄மன்றோ?

(அன்பினால்) ப்ரேமாந்த₄ரைக் குற்றங்கொள்ளுகையாவது—ஒரு படுக்கையிலேயிருந்து, 'கைதாக்கிற்று, கால்தாக்கிற்று' என்கையிறே. (உன்றன்னை) கோ₃விந்த₃ாபி₄ஷேகம் பண்ணியிருக்கிற உன்னை; அநவத₄ாநாதி₃களும் அன்புவிளைக்கைக்கு நிமித்தமாயிருக்கிற உன்னை. E ''இளையார் விளையாட்டொடு காதல்வெள்ளம் விளைவித்த'' என்று—தானேயிறே அவற்றுக்கு அடி. ''உன்றன்னைப் பிறவிபெறுந்தனை'' என்றத்தைப் போலன்று இந்த 'உன்றன்னை' அவ்விடத்தில் பெருமையுடையவன் தாழநின்று நீர்மை ஸம்பாதி₃க்கவந்தவிடத்தில் மேன்மைசொல்லுகை குற்றமிறே.

(சிறுபேர்) கோ₃விந்த₃ாபி₄ஷேகம் பண்ணினபின்பு முதல் திருநாமஞ் சொல்லுகை குற்றமிறே. முடிசூடினவனைத் தட்டியில் பேர் சொல்லுகைக்கு மேற்

A நாச்-திரு 2-7, B பெரியாழ் திரு 3-4-7, C பெரியாழ் திரு 1-1-3, D கம்பராமாயணம் - ப₃ாலகாண்டம் தொடக்கம், E பெரிய திரு 3-8-8.

வுண்டோ குற்றம்? இப்போது "சிறுபேர்" என்று நினைக்கிறது "நாராயணன்" என்றத்தை. தங்களுக்கு அஸாதாரணனாயிருக்கிறவனை ஸாதாரணனென்று சொல்லுகை குற்றமிறே. ஊடினால் சொல்லுமத்தைப் படுக்கைத் தலத்திலே சொல்லலாமோ? அந்த:புர வாசலிலே படுகாடு கிடப்பாரை நாட்டுக்குக்கடவனென்கிறது ப்ரணயியல்லனென்கையிறே. இவன் உபயவிபூதிக்கும் முடிகவித்து ஸ்ரீவைகுண்டத்திலேயிருக்குமவனென்று சிறிது ஜ்ஞானமுண்டாயிருக்கச்செய்தேயிறே, இந்த்ரன் வந்து, "பசுக்களை மேய்த்தான்" என்று முடி சூட்டிற்று. உபய விபூதிக்கும் முடிசூடினதுக்கு அவ்வருகே ஒரு ஐஶ்வர்யமிறேயிது. "நாராயணன்" என்றே பேர் நாராயணபரங்களான ப்ரமாணங்களுக்குச் சொல்லலாம், கோவிந்தாபிஷிக்தமான நெஞ்சுடையார்க்குச் சொல்லுகை குற்றம். (சிறுபேர்) ஸஹஸ்ராக்ஷரங்கள் த்வாதஶாக்ஷரங்கள் தொடக்கமான பெரும்பேர்களெல்லாம் A அவன் பேரெட்டெழுத்தையுங் கண்டவாறே சிறுகிற்று; அதுதான் B மூன்றெழுத்துடைய பேரைக் கண்டவாறே சிறுகிற்று; — முழுகி மூக்கைப் புதைப்பார்க்கு யோக்யமான பேர், நீட்டத்தோடே கத்திக்கையராயத் திரிவார்க்கும் யோக்யமான பேரைக்கண்டவாறே கழிப்பானாய்த்து. வாச்யன் சிறுகநின்று நிறம் பெற்றால் வாசகமும் அப்படியேயிறே. (சிறுபேர்) "அஷ்டாக்ஷரமஹாமந்த்ரம்" என்பார் கலங்கினவர்கள்; தெளிவுடைய இவர்களுக்கு சிறுத்துத் தோற்றுமிறே இது; மூலநாமமுமாய் அதிகுஹ்யமுமாய்ச் செவியிலே சொல்லவேண்டும்படியிறேயிருப்பது. பிறந்து பன்னிரண்டுங் கழிந்தவாறே, பேரிட்டுத் தாலாட்டினதிறே. C "மன்னு நாரணன் நம்பி பிறந்தமை" என்றும், D "நாராயணாவமேல் தாலேலோ" என்றும், அப்போது E செய்ததலை நீல நிறத்துச் சிறுப்பிள்ளையாகையாலே சொல்லலாம்; இப்போது F பெருங்கண்ணனிறே.

(அழைத்தன) அதுதன்னை ஒருக்கால் சொல்லிவிடாதே, "நாராயணனே" (1) என்றும், "நாற்றத்துழாய் முடிநாராயணன்" (10) என்றும், "நாராயணன் மூர்த்தி" (7) என்றும் பலகாலும் சொன்னார்களிறே. (அழைத்தனவும்) எங்களில் நாங்கள் முதல்நாமத்தைச் சொல்லிவிட்டவளவேயன்றிக்கே, மூலக்கிழங்கிலே தட்டச் சொன்னவற்றையும்; "பாழியந்தோளுடைப்பற்பநாபன்" (4) என்றார்களிறே. (உன்றன்னை — அழைத்தனவும்) எங்களில் நாங்கள் ப்ரணயித்வத்தாலே "பேய்ப்பெண்ணே" (7) "ஊமையோ! செவிடோ!" (9) "நாணாதாய்" (14) "பண்டே உன்வாயறிதும்" (15) என்று தொடங்கிச் செய்தவற்றையும் பொறைகொள்ள நினைத்தார்கள். 1. "ஸர்வாநஶேஷத:" என்னவேணுமிறே. த்ரிவித⁴கரணங்களாலுண்டான த்ரிவிதா⁴பசாரத்துக்கும் உபலக்ஷணம். புகுதருவானின்றவற்றில் (5) பு³த்³தி⁴ பூர்வத்துக்கு க்ஷமை கொள்ளுகிறார்கள். ப⁴க³வத்ப⁴ாக³வத விஷயங்களில் உபசாரபு³த்³த்⁴யா பண்ணும் அபசாரங்களுக்கு க்ஷமைகொண்டு விடவேணும்; ஸ்தூலபு⁴த்தி "பரன்" என்கிறதுதான் அபசாரமாகிற த³ஶையிறே. குளிர்ந்த

A திருச்சந்த 77. B திருமாலை 4. C பெரியாழ்திரு 1—1—10. D ஷை 1—3—8 E ஷை 1—2—12. F திருவாய் 9—5—9.

தண்ணீரை விநியோகஞ்கொள்ளுமவனுக்குக் காய்ச்சின தண்ணீர் பகையிறே. க்ருஷ்ணனுடைய ஆற்றலுக்கு ஈஶ்வரத்வத்தால்வந்த ஆற்றல் பகையிறே. “பேற்றுக்கு ப்ரயோஜகமானது புறம்பே கிடக்க, அப்ரயோஜகங்களைக் கிடந்து ஆராய்கிறதென்?” என்று (சீறியருளாதே) என்கிறார்கள்; ‘செய்வுத்தையெல்லாம் செய்து ‘சீறியரு ளாதே’ என்னவமையுமாகாதேதான்? இத்தலையை ஆராயில் சீறவேண்டும்படி யாயிறேயிருப்பது. பூர்வவ்ருத்தம் 1. “நக்ஷமாமி”க்கு இலக்கல்லவே, நப்பின் னைப்பிராட்டியை முன்னிட்டவர்களாகையாலே. ஸ்ரீவிஶ்வரூபங்கண்ட அர்ஜுனன், “நீ என்னோடே மேல்விழுந்து கலசினபடியாலே உன் வைபவமொன்றுமறிந்திலேன்; அநவதாநத்தாலும், ப்ரணயித்வத்தாலும் விஹார ஶய்யாஸந போஜநங்களில் பண்ணின அஸத்காரங்களைப் பொறுத்தருளவேணும்” என்று பொறை கொண்டான்; ஸௌலப்யத்திலே பரிமாறின தப்புக்களைப் பரத்வங்கண்டவாறே பொறை கொண்டான் அவன்; ஸௌலப்யத்தைக் கண்டு பரத்வபுத்திக்கு க்ஷமை கொள்ளுகிறார்கள் இவர்கள். பக்தியில் தலையாக நிற்கவுமாம், அவன்றன்னைப் பற்றவுமாம்; கிட்டினால் சொல்லுவது இதுவாய்த்து.

“நம்மாலே பேரும்படியான ஸம்பந்தம் நம்மோடேயுண்டானாலும், குற்றத்தைப் பொறுக்கவேணுமென்றாலும், பலபோக்தாக்கள் நீங்களானபின்பு உங்கள்தலையிலேயும் ஒன்றுண்டாகவேண்டாவோ? இவர்கள் இன்னது செய் தார்கள், அவன் இன்னது செய்தான் என்று நாட்டார்க்குச் சொல்லலாவதொரு ஆலம்பநம் வேண்டாவோ?” என்ன; (இறைவா) நீ தருவோமென்றவன்று விலக்குகைக்கு உரியாருண்டோ? (இறைவா) உன் ஸ்வரூபத்தை உணராதே எங்கள் தலையிலே கிடந்து, நாங்கள் ப்ரதிபத்தி பண்ணுமையாலே அழித்துக் கொண்ட ஶேஷத்வம்போலன்றே உன்தலையிலே கிடக்கையாலே எங்களால் அழிக்க வொண்ணாத ஶேஷித்வம். அத்தை ஆராய்ந்து எங்களுடைய காரியத்தைச் செய்யாய். அத்தலையில் குறையின்றியிலேயொழியவமையுமிறே; பேற்றுக்கு அத் வேஷமேயிறே இத்தலைக்கு வேண்டுவது; பேற்றின் ஸாதநத்துக்குக் கீழ்விளைந்த தெல்லாம் அத்வேஷமாத்ரமாயிருக்குமிறே. (இறைவா) A வானோரிறையை நினைத்தன்று; B ஆய்க்குலமாய் வந்து தோன்றின நம்மிறை.

(கோவிந்தா — இறைவா — ஒழிக்கவொழியாது — பறைதாராய்) உன்னைப் பார்த்தாலும் கைவிட விரகில்லை; எங்களைப் பார்த்தாலும் கைவிட விரகில்லை. (நீ) ‘நான் ரக்ஷிக்கைக்கு நீங்கள் பண்ணின ஸாதநாநுஷ்டாநமென்?’ என்று கேட்டால், ‘தேவர் எல்லையிலே வர்த்திக்கிறதுக்குக் குறைசொல்லப்போமோ?’ என்கிறார்கள். அறிவுடையார், அறிவொன்றுமில்லாத எங்களுக்கு விஷயவால மாத்ரமேயன்றிக்கே குடல்துடக்குண்டானால் ரக்ஷிக்கச் சொல்லவேணுமோ? (குறை

---

A திருவாய் 1-5-1. B திருவிருத்தம் 61.

வொன்றுமில்லாத கோவிந்தா — இறைவா — பறைதாராய்) 1. ‘‘கு₃ணதுங்கு₃தயா தவ ரங்க₃பதே ப்₄ருஶநிம்நமிமம் ஜநமுந்நமய | யத₃பேக்ஷ்யமபேக்ஷிதுரஸ்ய ஹி தத்பரிபூரணமீஶிதுரீஶ்வரதா ||’’ என்னக்கடவதிறே. 2. ‘‘நோபேக்ஷணம் மம தவோசிதமீஶ்வரஸ்ய’’ — உன்னுடைய ஶேஷித்வம் நிலைநிற்க வேணுமாகில் செய்கிறாய்; சீறுமைக்கும் ஹேது இது. 3. ‘‘ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே’’ என்னக்கடவதிறே. A ‘‘செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளுாலநாதனே’’. (பறைதாராய்) ஸாது₄பரித்ராணம் பண்ணுகைக்கன்றோ இங்கு வந்து பிறந்தருளிற்று. ‘‘பறைதாராய்’’ என்றவாறே, ‘‘கோ₃பீஜநத்தினுடைய மிகுதி குறை ஆராய்வாய் நீயன்றோ; இவர்கள் சொல்லுகிறவற்றை ஆராய்ந்து கொடு’’ என்றான் அருகிருக்கிறவளை — (நீதாராய்) அவள் தருவது தந்தாள்; நீதரும் அத்தைத் தாராய். உபாயநிஷ்டை₂யன்றோ அவள் தருவது; மேலுள்ளது உன் பணியன்றோ. 4. ‘‘அஸ்துதே’’ என்று — அவள் அதுசெய்தால்; 5. ‘‘அஹம் — மோக்ஷயிஷ்யாமி’’ என்னக்கடவ நீ பேசாதிருக்கவோ? ஸுலப₄னான நீ தாராய். ஸ்வாமியான நீ தாராய். ஸர்வோபாய ஸாத₄ாரணமான ருசியை உபாயத்திலே செலவெழுதாதே, சைதந்யகார்யமான ஸ்வீகாரத்தையும் உபாயத்திலே செலவிடாதே, எங்களால் ஸாத்₄யமன்றிக்கே ஸித்₃த₄ஸ்வரூபனான உன்னையே பார்த்துக் காரியஞ்செய்தருளவேணும்.

(கறவைகளித்யாதி₃) எங்களைப்பார்க்கிலும் நீ கார்யம் செய்யவேணும்; எங்களையும் உன்னையும் பார்க்கிலும் கார்யம் செய்யவேணும்; உன்னைப்பாராதே எங்களைப் பார்த்தாயாகில் இழக்கிறோம்; எங்களைப் பாராதே உன்னைப்பார்த்தாயாகில் பெறுகிறோம். ஆனபின்பு எங்களுடைய ரக்ஷணம் உன்னாலே விடலாமோ? எங்களுக்கு வ்ருத்த ஜ்ஞாந ஜந்மங்களால் நன்மையில்லையென்றோம்; நீ நன்மைக்கு அடியென்றோம்: பூர்ணனென்றோம்; ஸுலப₄னென்றோம்; உன்னோடு எங்களுக்குக் குலையாத ஸம்ப₃ந்த₄முண்டென்றோம்; எங்கள் தப்புக்கு அநுதபித்தோம்; பொறை கொண்டோம்; எங்களுக்கு இனி செய்யவேண்டும் அம்ஶமில்லை; இனி உன்னை இழவாமல் காரியஞ்செய்யப் பாராய். 6. ‘‘தத₃ஹம் த்வத்₃ருதே’’ இத்யாதி₃. ‘‘எங்களுக்குப் பரித்யாஜ்யத்வேந விஹிதங்களில் அந்வயமில்லையாய்த்து; ஸ்வீகார்யத்வேந விஹிதோபாயமான நீ ஸ்வீகாரநிரபேக்ஷமாகக் கைப்புகாநின்றாய்; உனக்கு ஜ்ஞாநஶக்தியிலுங் குறைவற்றிருந்தது; ப்ராப்தியிலுங் குறைவற்றிருந்தது; எங்களுக்கு அஜ்ஞ(த்வ)?ாதி₃கள் பூர்ணமாயிருந்தது; குற்றங்களைப் பார்த்துச் சீறவொண்ணாதபடி ஸமஸ்த விரோதி₄களையும் போக்குகிறேனென்றவனாயிருந்தாய் நீ; ஆனபின்பு ‘ப்ராப்யலாப₄நிமித்தமாக ஶோகியாதேகொள்’ என்ற நீ எங்களபேக்ஷிதத்தைச் செய்யலாகாதோ?’’ என்று தங்களாகிஞ்சந்யத்தையும், அயோக்₃யதையையும் ஆவிஷ்கரித்து, உபாயபூர்த்தியையும் தங்கள் ப்ராப்தியையும் முன்னிட்டு, ப்ராமாதி₃கமாகப் புகுந்த தப்புக்களுக்குப் பொறை கொண்டு, எங்கள் ப்ராப்யஸித்₃தி₄க்கு நீயே உபாயமாகவேணுமென்று க்ருஷ்ணனை அபேக்ஷிக்கிறார்கள்.

28.

A திருச்சந்த 111

# ஈராயிரப்படி — இருபத்தெட்டாம் பாட்டு

அவ:— இருபத்தெட்டாம் பாட்டு. "பெண்காள்! நீங்கள் சொன்னவற்றைத் தருகிறோம்; நாடு உங்கள் பாடே; நாமும் சிறிது உங்கள் பாடே பெற்றோமாக வேணும்; அதுக்கு உங்களுக்குள்ளதென்?" என்ன, "உனக்குத் தரலாவது ஒன்றுமில்லையே; பண்டு தப்பச்சொன்னதுண்டாகில் பொறுக்கவேணும்" என்று க்ஷமைகொள்ளுகிறார்கள்.

வ்யா:— (கறவைகள்) அறியாமைக்குக் கன்றுகாலியென்கை. 1. ஜ்ஞாநேந ஹீந: பஶுபி4ஸ்ஸமாந:" இறே (பின்சென்று) தாங்கள் கு3ருகுலவாஸம் பண்ணுகிறபடி சொல்லுகிறார்கள். (கானம் சேர்ந்து) விஸிஷ்டரிருந்தவிடத்தே சென்று இக்கோயில் புகுவதே! உள்ளுள்ள காட்டிலே வர்த்திக்குமத்தனை; ஊர் கண்டறியோம். (உண்போம்) ரிஷிகளைப் போலே தபஸ்ஸுக்கல்ல; அங்கும் வயிறு வளர்க்க. (சேர்ந்துண்போம்) நடந்துண்ணுமத்தனை; எங்களைப் பார்க்கப் பசுக்கள் வஸிஷ்ட2ாதி3களோடொக்கும்; இத்தால் கர்மமில்லை என்கை.

(அறிவொன்றுமில்லாத) ஜ்ஞானப4க்திகளில்லை என்கிறது; 2. "பக்திஶ்ச ஜ்ஞாநவிஶேஷ:" என்றாரிறே. முதல் தான் இல்லை. இது உண்டோமோ? 'இவர்கள் அலமாப்பு ப4க்தியன்றோ' என்னில், அது ஸ்வரூபமாகையாலே உபாயமாக நினையார்கள். (ஆய்க்குலம்) அதி4காரமில்லை. (உன்தன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்) "ஆனால் இப்புண்யமில்லாதார் இழக்குமத்தனையன்றோ?" "என் சொன்னாய்? எங்களுக்கன்றோ புண்யமுள்ளது; எங்கள் புண்யம் முதலில்லாதார்க்கு முதலும், பலிசையும் கொடுக்கும் புண்யங்காண்! ஸாத்4யத4ர்மத்தைப் பற்றினோமோ? ஸித்3த4மாய் வடிவுள்ளதொரு த4ர்மத்தைப் பற்றினோம். இதுவோ எங்களுக்குக் குற்றம்?" (குறைவொன்றுமில்லாத கோவிந்தா) 'உங்களுக்கொன்றுமில்லையென்றீர்களே' என்ன; 'உன்னையில்லையென்றோமோ?' என்ன; "உங்கள் வெறுமைக்கு நாம் செய்வதென்?" என்ன; ராஜாக்கள் வழிபோம்போது மேடுபள்ளம் ஒக்கவிடுமாபோலே உன் குறையில்லாமையை எங்கள் குறையிலேயிட்டு நிரப்புவது.

(உன் தன்னோடுறவேலித்யாதி3) நாங்கள் அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம்; நீ குறையொன்றுமில்லாத கோவிந்தன். ஆனபின்பு இப்பிறவி 3. "விதி4நிர்மிதமேதத்3வயம்". நாராயணனன்றோ. எங்களறிவு கொண்டு கார்யமுண்டோ? "உறவுண்டாயிருக்க து3ர்யோத4நாதி3களை விட்டோமே" என்ன, "உனக்கு விடவொண்ணாத பாண்ட3வர்களாகக் கொள் எங்களை; எங்கள் வெறுமையும் உன் பூர்த்தியும் உணர்ந்து எங்களை விடவொண்ணுமோ?" என்கை. (அறியாத) அநவத4ானம். (பிள்ளைகள்) அஜ்ஞர். (அன்பினாலித்யாதி3) தவிரவொண்ணாதாகையால் ப்ரக்ருதி உபாயபு3த்3தி4யாகிலிறே தப்பாவதென்ன; "நாராயணன்" என்று, கோ3விந்த3ாபி4ஷேகம் பண்ணிப் பூர்ணனாயிருக்கிற என்னை சிறு பேர் சொன்னீர்களென்ன, 'நாராயணனென்கை குற்றமோ?' என்னில்; நீர்மை ஸம்பாதி3க்கப் போந்தவிடத்திலே மேன்மை சொல்லுகை குற்றமன்றோ?

(இறைவா) உன் ஸ்வரூபம் பெறவேண்டாவோ? (நீதாராய்) ஸ்வீகாரத்தால் செய்யுமத்தனையும் நீ செய்து அனுதாபமும் அத்தலையிலேயாகவேணும். 1. "ஏகம்" என்றப டியே செய்தருளாயென்கை. (ஒழிக்கவொழியாது) நன்மை உண் டாகிலன்றோ பழி யிட்டு விடலாவது. (சீறியருளாதே) உபாயமென்று நினையாதே ப்ரக் ருதியென்று கொள்ளவேணும். இத்தலையால் பற்றும் பற்று சிற்றத்துக்கு வி ஷயம். இத்தலைக்குக் குறையும் அத்தலைக்கு ரக்ஷையும் ஸ்வ ரூபப்ரயுக்தம். (நீ தாராய்பறை) விலக்குகைக்கு ஆளில்லை; நீ தருமித்தனை. 28.

## நாலாயிரப்படி — இருபத்தெட்டாம் பாட்டு

அவ:— இருபத்தெட்டாம் பாட்டு. "பெண்காள்! நீங்கள் சொன்னவை நாட்டுக்கு; உங்கள் அபிஸந்தி இவ்வளவென்று தோற்றியிருந்ததில்லை. நீங்கள் சொன்னவையும் இன்னும் மேல் சொல்லுமவையும் உண்டாகில், நாம் தருமிடத்தில் உங்கள்பாடே ... நாமும் சிறிது பெற்றோமாகவேணும்; அதுக்கு உங்களுக்குள்ள தென்?" என்ன; "உனக்கு உதவுவதாவது எங்கள் பக்கல் ஒன்றுமில்லை. நாங்கள் பண்டு தப்பச் சொல்லிற்றினவுண்டாகில் பொறுக்கவேணும்?" என்று க்ஷமை கொள்ளுகிறார்கள். முதற்பாட்டில் 'நாராயணனே நமக்கே பறைதருவான்' (1) என்று ஸங்க்ரஹேண சொன்ன ப்ராப்யப்ராபகங்களை இந்த இரண்டுபாட்டாலே விவரிக்கிறது. இப்பாட்டு உபாய விவரணம்.

வ்யா:— (கறவை) உங்கள் ஸ்வரூபம் ஏதென்ன, இன்னதென்கிறார்கள். பட்டர் அருளிச்செய்யும் பாட்டையும் இங்கே நினைப்பது. (கறவைகள்) அறியா மைக்குக் கன்றுகாலி மேய்க்கை. 2. [ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ்ஸமாந:]— அறிவில்லாதாரைப் பசுக்களோடொப்பரென்னக்கடவது. [பின்சென்று] பின்னென்று தாங்கள் குடிருகுலவாஸம் பண்ணும்படி சொல்லுகிறார்கள். 3. [ராவணோ நாம] பரஹிம்ஸையிலே பேர்படைத்தவன். 3. [துர்வ்ருத்த:] பேர் மாத்ரமேயாய் ஸதா சாரமுண்டோவென்னில், அதிலும் புரையில்லை. 3. [ராக்ஷஸ:] ஜன்மத்தால் வரும் நன்மையுண்டோவென்னில், அதுவுமில்லை. காட்டிலே புக்குநோக்கினாலும் திருத்தப் போகாது. 3. [ராக்ஷஸாதிப:] நியாம்யனோவென்னில், இவன் தனக்கு எல்லாரும் நியாம்யர். (கானம் சேர்ந்து) ஊர் கண்டறியோம். (உண்போம்) ருஷிகளைப்போலே தபஸ்ஸு பண்ணுகைக்கல்ல. (சேர்ந்துண்போம்) நடந்து நடந்து உண்ணுமத்தனை. எங்களைப்பார்க்க, பசுக்கள் வஸிஷ்டாதிகளோடொக்கும். எங்கள் இளிம்புகண்டால் சிரிப்பன பசுக்களாயிற்று. 4. "க்ருதாநுகாராநிவ கோபிரார்ஜவே" என்று பசுக்கள் அசுக்காட்டும் ஆர்ஜவம் எங்கள் ... யென்... இத்தால் கர்மயோகத்தில் அதிகாரமில்லை என்றபடி.

(அறிவொன்றுமில்லாத) இஜ்ஜன்மத்தில் ஒரு ஸுக்ருதமில்லையாகிலும் ஜன்மாந் தரத்தில் புண்யம் பண்ணி அத்தாலே விதுராதிகளைப்போலே இஜ்ஜன்மத் திலே அறிவுண்டாமதுவுண்டோவென்னில், அதுவுமில்லையென்கிறார்கள். (ஒன்று மில்லாத) ஈச்வரஜ்ஞானத்துக்கடியான ஆத்ம ஜ்ஞானமில்லை. இத்தால் ஜ்ஞானபக்தி களில்லையென்கிறது. 5. "பக்திஸ்ச ஜ்ஞாநவிஶேஷ:" என்று, பக்தியாவது ஒரு ஜ்ஞான விஶேஷம். அதுவுமில்லையாகையாவது — கீழிலவையுண்டாகவுண்டாமதொன்று கையால் இதில்லையென்று சொல்லவேண்டாவிறே. 'இவர்கள் அலமாப்பு பக்தியன்றோ?' என்னில், ... ஸ்வரூபமாகையால் உபாயமாக நினையார்கள். இத்தால் கர்மஜ்ஞானபக்திகளில்லை ... 6. "அஹமஸ்ம்யபராதாநாமாலய: அகிஞ்சந:"

A "நோற்ற நோன்பிலேன்" B "குளித்து மூன்று" **1. "ந த₄ர்மநிஷ்டோ₂ऽஸ்மி"** இவையன்றோ அறிவுடையார் வார்த்தை; அவர்களோடொத்திகோளென்ன; (ஆய்க் குலம்) அதி₄காரமேயில்லை; எங்களைக் கண்டுவைத்து அறிவுண்டோவென்று கேட்கிற நீயன்றோ அறிவுகேடன்.

'முதலில்லாதவன் பலிசையிழக்கும்' என்று சொல்லுகிறபடியே புண்யமில்லாதார் இழக்குமத்தனையன்றோவென்ன — (உன் தன்னைப் பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்) என் சொன்னாய்? எங்களுக்கோ புண்ணியமில்லாதது. **2. "க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம்"** என்று எங்கள் புண்யத்துக்குப் பாலும் சோறும் இட்டு வளர்க்கிறோம் நாங்களன்றோ. **3. "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம்"** என்னும்படியான உன்னை. (பிறவிபெறுந்தனை) நாட்டார் ஆஶ்ர யணீயர் இருந்தவிடத்தே போய் ஆஶ்ரயிப்பார்கள். நாங்களிருந்தவிடத்தே எங்களோடே ஸஜாதீயனாய் ஆஶ்ரணீயனான நீ வந்து அர்த்திக்கும்படியன்றோ எங்களுடைய ஏற்றம். எங்கள் புண்யம் முதலில்லாதார்க்கு முதலும் பலிசையும் பலிக்கும் புண்யங்காண்! (புண்ணியம் யாமுடையோம்) ஸாத்₄யத₄ர்மத்தைப் பற்றினோமோ? ஸித்₃த₄முமாய் வடிவுள்ளதொரு த₄ர்மத்தைப் பற்றினோம்; இதுவோ எங்களுக்குக் குற்றம்?

(குறைவொன்றுமில்லாத கோவிந்தா) 'உங்களுக்கு ஒன்றுமில்லையென்றிகோளே' என்ன; 'உன்னைபுமில்லையென்றோமோ?' என்ன; 'உங்கள் பெருமைக்கு நாம் செய்ய வேண்டுவதென்?' என்ன, ராஜாக்கள் வழிபோம்போது மேடுபள்ளமொக்கவிட்டு வழிபோமாபோலே, உன் குறையில்லாமையை எங்கள் குறைவிலேயிட்டு நிரப்புவது; பெருமாள் கடலைத் தூர்த்து வழிபோனாற்போலே. (கோவிந்தா) 'அறிவில்லையென்றிகோளே' என்ன, நீயோ சால அறிவுடையையாயிருக்கிறாய். **4. "அவிஜ்ஞாதா"** வன்றோ? உன்னை உணரில் பிறக்க விரகுண்டா? கோல்கொண்டு பசுவின் பின்னே திரிய விரகுண்டோ?

(உன்தன்னோடுறவேல் நமக்கிங்கொழிக்கவொழியாது) நாங்கள் அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம். நீ குறையொன்றுமில்லாத கோவிந்தன். ஆனபின்பு இனி இவ்வுறவு **5. "விதி₄நிர்மிதமேதத₃ந்வயம்"** என்கிறபடியே. மேடுபடக்கண்டது பள்ளத்தை நிரப்பவன்றோ? நாராயணத்வமொழிய தூ₃யாபூர்த்திக்கு தூ₃யநீயதா பூர்த்திபுண்டானபடியாகிற உறவு. 'எனக்கறிவுண்டென்று கண்டால் உங்களறியாமை போயிற்றோ' என்னில்; 'எங்களறிவு கொண்டு கார்யமுண்டோ உன்னோடு உறவுண்டாயிருக்க?' என்ன; 'உறவுண்டாவிடவொண்ணாத குடல்துடக்கான உறவுண்டாயிருக்கச் செய்தேயன்றோ து₃ர்யோத₄ந ஶிஶுபாலனுள்ளிட்டாரை விட்டது' என்ன, "உனக்கு விடவொண்ணாத பாண்ட₃வர்களாகக் கொள் எங்களையும்" என்கிறார்கள். 'தங்கள் கர்மம் தாங்கள் செய்கிறோம்' என்றிருப்பாரையன்றோ உனக்கு விடலாவது; 'எங்கள் கர்மம் உன்னாலே' என்றிருப்பாரை உன்னால் விடவொண்ணாது. அவர்கள் தங்களாலும் விடவொண்ணாதென்கை. எங்கள் வெறுமையும் உன் பூர்த்தியும் உணர்ந்த எங்களை விடவொண்ணுமோ? என்றுமாம்.

(அறியாத) அநவத₄ாநம். (பிள்ளைகள்) அஜ்ஞர். (அன்பு) தவிரவொண்ணாதாகையால் ப்ரக்ருதி. ப்ரக்ருதி உபாயபு₃த்₃தி₄யாகிலிறே தப்பாவது; இம்மூன்றும் குற்றமாக நினைக்க விரகில்லை. **6. "மயா ப்ரமாத₃ாத் ப்ரணயேந வாபி"**. (அன்பினா

A திருவாய் 5-7-1, B திருமாலை 25.

லுன்தன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே) "நாராயணன்" (1) என்று கோவிந்தா₃பி₄ஷேகம் பண்ணிப் பூர்ணனாயிருக்கிற என்னை, சிறு பேர் சொன்னீர் கோளேயென்ன; 'நாராயணனென்கை குற்றமோ?' என்னில், நீர்மை ஸம்பாதிக்கப் பிறந்தவிடத்திலே மேன்மையைச் சொல்லுகை குற்றமன்றோ? அர்ஜுநனைப்போலே பொறைகொள்ளுகிறார்கள். "ஒரு படுக்கையிலேயிருந்து 'கால்தாக்கிற்று கை தாக்கிற்று' என்று குற்றம் கொள்ளுவாரைப்போலே அன்புடையாரைக் குற்றம் கொள்ளப்போமோ? பொறுத்தருளாய்" என்கிறார்கள்.

(இறைவா) உன் ஸ்வரூபம் பெறவேண்டாவோ? (நீ தாராய்) ஸ்வீகாரத்தில் செய்தவற்றையும் நீ செய்து, அநுதாபமும் நின் தலையிலே ஆகவேணும். 1. "ஏகம்" என்றபடி செய்தருளாய். (ஒழிக்க ஒழியாது) நன்மையுண்டாகிலன்றோ பழியிட்டு விடலாவதென்றுமாம். (சீறியருளாதே) உபாயமென்று நினையாதே ப்ரக்ருதிவ்ருத்தி யென்று கொள்ளவேணும். இத்தலை பற்றும் பற்றடைய சீற்றத்துக்கு விஷயம். இத்தலைக்குக் குறையும் அத்தலைக்கு ரக்ஷையும் ஸ்வரூபப்ரயுக்தம். (இறைவா) தன் கைகால் தப்பச்செய்ததென்று பொடிவாருண்டோ? (நீ தாராய்) விலக்குகைக்கு காளில்லை. நீ தருமித்தனை. 28.

## ஸ்வாபதே₃ஶவ்யாக்₂யாநம் — இருபத்தெட்டாம்பாட்டு

அவ:— இருபத்தெட்டாம் பாட்டு. (கறவைகள் இத்யாதி₃) முதற்பாட்டில் ஸங்க்₃ரஹேண சொன்ன ப்ராப்யப்ராபகங்களிரண்டையும் மேலிரண்டுபாட்டாலே விவரிப்பதாக, இப்பாட்டில் ப்ராபக ஸ்வரூபத்தை விவரிக்கிறார்கள்.

வ்யா:— (கறவைகள் இத்யாதி₃) ஜ்ஞாநஹீநரான ஸம்ஸாரிகளை அநுவர்த்தித்து ஸம்ஸாரத்தை ப்ராப்யமாகப்பற்றி தே₃ஹபோஷணைகபரரா யிருந்தோம்; இதிறே உன்னை நாங்கள் பற்றுகைக்கு அநுஷ்டி₂த்த கர்ம யோக₃ம். (அறிவொன்றுமில்லாத) ஜ்ஞாநமும் ஜ்ஞாந விஶேஷமான ப₄க்தி யோக₃மும் இல்லாத. (ஆய்க்குலம்) உபாயாந்தரங்களில்லாமையால் தோ₃ஷ மாகாத குலத்திலே பிறந்தவர்கள் நாங்கள். இத்தால் — ஜந்மவ்ருத்தஜ்ஞாநங் களாலுண்டான நிகர்ஷம் சொல்லுகிறது. 'ஆகில், புருஷார்த்த₂த்தை இழக்கு மித்தனையன்றோ' என்ன; புண்யமில்லாதாரன்றோ இழப்பதென்ன; உங்கள் புண்யம் ஏதென்ன, — (உன்தன்னை இத்யாதி₃) எங்கள் குலத்திலே அவதரித்த உன்னையே புண்ணியமாக அநந்யஸாத₄நரான யாம் உடையோம். (குறை வொன்றுமில்லாத) எங்கள் அபூர்த்தி ஆராயும்படியாயோ உன்னுடைய பூர்த்தியிருப்பது? ஸர்வநிரபேக்ஷனன்றோ நீ என்று கருத்து. (கறவைகள் இத்யாதி₃) இவ்வளவும் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அநந்யக₃தித் வத்தையும் உபாயத்தினுடைய நைரபேக்ஷ்யத்தையும் சொன்னார்களாய்த்து. "குறைவாளர்க்கு நிறைவாளர் குறை தீர்க்கவேணுமென்கிற நிர்ப்ப₃ந்த₄மென்?" என்ன; அதுவோ? (கோவிந்தா உன்தன்னோடு உறவு) எங்கள் குலத்தில் பிறந்த அஶரண்ய ஶரண்யனான உன்தன்னோடு அநந்யஶரணரான எங்களுக்கு உண்டான ஸ்வஸ்வாமிபா₄வஸம்ப₃ந்த₄ நிர்ப்ப₃ந்த₄மென்ன; அதுவோ? ஒருகுடி நீரோடே போகிறதென்ன, (உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது) உன்னோடு நமக்கு உண்டான உறவை ஆராய்ந்து பார்த்தால், ஸோபாதி

## திருப்பாவை — இருபத்தொன்பதாம்பாட்டு

**சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்**
**பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்**
**பெற்றம்மேய்த் துண்ணுங் குலத்திற் பிறந்த(து)நீ**
**குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது**
**இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா**
**எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோ**
**டுற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்**
**மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.**

பதவுரை— கோவிந்தா—கண்ணபிரானே! சிற்றஞ்சிறுகாலே—உஷ:காலத்திலே, வந்து—(இங்கு) வந்து, உன்னை சேவித்து—உன்னை வணங்கி, உன் பொன் தாமரை அடி போற்றும் பொருள்—உனது அழகிய திருவடித்தாமரைகளை மங்களாஶாஸநம் பண்ணுவதற்குப் பலனை, கேளாய்—கேட்டருளவேணும்; பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்த நீ—பசுக்களை மேய்த்துண்ணும் இடைக்குலத்தில் பிறந்த நீ, எங்களை—எங்களிடத்தில், குற்றேவல்—அந்தரங்க கைங்கர்யத்தை, கொள்ளாமல் போகாது—திருவுள்ளம் பற்றுதொழியவொண்ணாது; இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண்—இன்று (கொடுக்கப்படுகிற இப்) பறையைப் பெற்றுக்கொள்வதற்காக நாங்கள் வந்தோமல்லோம்; எற்றைக்கும்—காலமுள்ளவளவும், ஏழ் ஏழ் பிறவிக்கும்—எவ்வளவு பிறவி எடுத்தபோதிலும், உன்தன்னோடு—உன்னோடே, உற்றோமே ஆவோம்—உறவுடையவர்களாகக்கடவோம்; உனக்கே—உனக்கு மாத்திரமே, நாம்—நாங்கள், ஆள் செய்வோம்—அடிமை செய்யக்கடவோம்; நம்—எங்களுடைய, மற்றை காமங்கள்—இதர விஷய விருப்பங்களை, மாற்று—தவிர்த்தருளவேணும்.

ஸ்வா:-கமன்றிகே, நம்மிருவருடையவும் ஸ்வரூபமாயிருக்கையாலே அதுதானும் நித்யமாகையாலே ஸர்வஶக்தியான உன்னாலும் போக்கவொண்ணாது, ப்ராக்ருதரான நம்மாலும் போக்கவொண்ணாது, க்ருதஸங்கேதிகளான இருவராலும் போக்கவொண்ணாது, A இருள்தரு மாஞாலமான இத்தேஶத்தாலும் போக்கவொண்ணாது. 'ஸம்பந்தஜ்ஞாநரூபமாகையாலே இதுக்கு விஸ்ம்ருதி இங்கே வரக்கூடாதோ?' என்ன; B ''பிறந்தபின் மறந்திலேன்'' என்கையாலே வரக்கூடாது; 'ஆனாலும் யதோபாஸநமன்றோ பலம்? நீங்கள் நம்மைச் சிறுபேரிட்டழைத்திகோளே, உங்கள் சிறுமை தீரும்படி எங்ஙனே?' என்ன, —(அறியாத இத்யாதி) அறியாமையாலும் பால்யத்தாலும் ப்ரேமத்தாலும் உன்னைச சிறுபேராலே அழைத்தோமேயாகிலும் ஸர்வஜ்ஞனாய், ஸர்வஸ்மாத்பரனாய், ப்ரேமபரவஶனான நீ சீறியருளாதொழிய வேணும். (இறைவா — சீறியருளாதே) சீறினால் வரும் அநர்த்தம் உன்னதன்றோ? ஆகையால், (நீ தாராய்) அத்தலையில் குறையின்றியிலேயொழிய அமையுமிறே. பேற்றுக்கு அத்வேஷமேயிறே இத்தலைக்கு வேண்டுவது; பேற்றின் கநத்துக்குக் கீழ் விளைந்ததெல்லாம் அத்வேஷமாத்ரமாயிருக்குமிறே. (இறைவா) C வானோரிறையை நினைத்தன்று, D ஆய்க்குலமாய்வந்து தோன்றின நம்மிறை. 28.

A திருவாய் 10—6—1. B திருச்சந்த 64. C திருவாய் 1-5-1, D திருவிருத்தம் 61.

## மூவாயிரப்படி—இருபத்தோன்பதாம் பாட்டு

அவ:— இருபத்தொன்பதாம்பாட்டு. a கீழ்ப்பாட்டிலே உபாயஸ்வரூபத்தைச் சொல்லி, தங்கள் உத்3தே3ஶ்யம் கைங்கர்யமென்று ப்ரப3ந்த4தாத்பர்யத்தைச் சொல்லி முடிக்கிறார்கள்—இதில்: b ப்ராப்யருசியையும் $b_2$ ப்ராப்யந்தான் இன்னதென்னுமிடத்தையும், அத்தை $b_3$ அவனே தரவேணுமென்னுமிடத்தையும் தங்கள் $b_4$ ப்ராப்யத்வரையையும் அறிவிக்கிறார்கள். c திருவாய்மொழியில் A எம்மாவீட்டிலே—ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்து, அதில் $c_2$ சரமத3ஶையான அர்த்த2த்தை B நெடுமாற்கடிமையிலே அநுப4வித்து முடித்தது; இதில்—முந்துற சரமத3ஶையான B நெடுமாற்கடிமையில் அர்த்த2த்தை அனுப4வித்து, அது நிலைநிற்கைக்காகவும் அதனைக $c_3$ காத்தூட்டுகைக்காகவும் A எம்மாவீட்டில் அர்த்த2த்தோடே தலைக்கட்டுகிறது.

வ்யா:— d (சிற்றஞ் சிறுகாலே) e சிறு பெண்கள் எழுந்திருக்கவொண்ணாத குளிர்போதிலே; f 1. "ப்3ராஹ்மே முஹூர்த்தே சோத்த2ாய சிந்தயேதா3த்மநோ ஹிதம்" என்று ஸத்வம் தலையெடுத்த காலத்திலே; g அநாத்3யஜ்ஞாநாந்த4காரம் நீங்கி ப4க3வத்3விஷயம் வெளிச்செறித்(ந்)த காலத்திலென்றுமாம். h C "நார

---

பெ. அ. இருபத்தொன்பதாம் பாட்டு (சிற்றஞ்சிறுகாலே இத்யாதி3) a "உனக்கே நாமாட்செய்வோம்" என்றத்தைக் கடாக்ஷித்து வ்ருத்தவர்த்திஷ்யமாண கத2நமுகே2ந கீழ்ப்பாட்டோடே ஸங்க3தியிடுகிறார் (கீழ் இத்யாதி3) b ஶ்ரோதாக்களுக்கும் பு3த்3தி4 ஸௌகர்யார்த்த2மாக ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார் (ப்ராப்யேத்யாதி3) b "போற்றும் பொருள்கேளாய்" என்றத்தைப்பற்ற (ப்ராப்யருசியையும்) என்றது; $b_2$ "எற்றைக்கும்" இத்யாதி3யைக் கணிசித்து அருளிச்செய்கிறார் (ப்ராப்யந்தான் இத்யாதி3) $b_3$ (அவனேதர வேணும்) என்றது — "குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது" என்றத்தைக் கடாக்ஷித்து. $b_4$ (ப்ராப்யத்வரையையும்) என்றது — "சிற்றஞ்சிறுகாலேவந்து" என்றத்தை அவலம்பி3த்து; தாங்கள் காலமேவருகை த்வரையின்றிக்கே கூடாதிறே யென்று கருத்து. c ஆண்டாள் சரமபர்வத்திலே உற்றிருக்கையாலே இவள் ப்ரப3ந்த4த்துக்கும் ஆழ்வார் ப்ரப3ந்த4த்துக்குமுள்ள வாசியை அருளிச்செய்கிறார் (திருவாய்மொழியில் இத்யாதி3) $c_3$ (காத்தூட்டுகைக்காகவும்) என்றது — பரிபாலித்து மேன்மேலும் ரஸிப்பிக்கைக்காகவும் என்றபடி.

d, e "சிறுகாலே" என்றது — ப்ராத:காலத்திலேயென்றும், "சிற்றம்" என்றததாலே — அத்யந்தம் ப்ராத:காலமென்றும், ப2லிதார்த்த2த்தை அருளிச்செய்கிறார் (சிறுபெண்கள் இத்யாதி3) f ஸ்வாபதே3ஶத்திலே தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (ப்3ராஹ்மே இத்யாதி3) g இத்தை விவரிக்கிறார் (அநாதி3 இத்யாதி3) h இதுக்கு ஸம்வாத3ம் அருளிச்செய்கிறார்

---

சி. அ. இருபத்தொன்பதாம் பாட்டு. (சிற்றஞ்சிறுகாலே) $b_2$ "உனக்கே நாமாட்செய்வோம்" என்றது ப்ராப்யம். $b_3$ "நங்காமங்கள் மாற்று" என்றது ப்ரார்த்த2னை. $b_4$ "சிற்றஞ்சிறுகாலே வந்து" என்கையாலே த்வரை; "கொள்ளாமல் போகாது" என்கையாலே த்வரை சொல்லுகிறது என்றுமாம். c இவள் சரமபர்வத்திலே உற்றிருக்கையாலே இவள் ப்ரப3ந்த4த்துக்கும் ஆழ்வார் ப்ரப3ந்த4த்துக்குமுள்ள வாசியை அருளிச்செய்கிறார் (திருவாய்மொழியிலித்யாதி3) $c_2$ சரமத3ஶையான அர்த்த2மாவது —பெண்களை எழுப்பின பத்துப்பாட்டில் அர்த்த2ம். இத்தால் திருவாய்மொழியில் ஏற்றம் சொல்லுகிறது.

---

A திருவாய் 2-9. B திருவாய் 8-10. C இர—திருவ 81.

ணனைக்கண்டேன்—பகற்கண்டேன்'' என்னக்கடவதிறே. i ''சிற்றஞ் சிறுகாலே'' என்று ஜாதிப்பேச்சு; ''வெட்டவிடியாலே'' என்னுமாபோலே. (வந்து) j சேதநர்க்கு ப₄க₃வல்லாப₄ம் அவன் வரவாலேயாயிருக்க, ''வந்து'' என்றது j₂ ஆத₃ராதிஶயத்தாலே. k இதுதான் அங்குத்தைக்கு மிகையாயிறே யிருப்பது. எங்ஙனே? என்னில் — 1. ''பத்₃ப்₄யாமபி₄க₃மாச் சைவ ஸ்நேஹஸந்த₃ர்ஶநேந ச'' என்று நீ l இருந்த இடத்தே வந்து; m ராக₃ம் க்ரமப்ராப்தி ஸஹியாதிறே. n (உன்னைச் சேவித்து) o ப₂லம் வேண்டாதே ஸாத₄நகாலத்திலே ரஸிக்கும் உன்னைச்சேவித்து. 2. ''ஸுஸுக₂ம் கர்த்தும்'' என்றும், A ''பலமுந்துசீர்'' என்றுமிறே இருப்பது. p அதுக்குமேலே ஓரஞ்சலியையும் உண்டறுக்கமாட்டாத உன்னைச் சேவித்து. p₂ B எழுதும் என்னும் இது மிகையான உன்னைச் சேவித்து. q ஸேவ்யரான நாங்கள் ஸேவகராம்படி அத்தலை இத்தலையாவதே! 3. ''ஸுக்₃ரீவம் நாத₂மிச்ச₂தி'' என்னக்கடவதிறே.

r (உன் பொற்றாமரை அடியே) மஹார்க்க₄முமாய், போ₄க்₃யமுமாய், s ப்ராப்தமுமாயிருந்த திருவடிகளிலே. ''அடியே'' என்கிற அவத₄ாரணத்துக்குக் கருத்து— t 4. ''ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யத₂ா ந ஸௌமித்ரிருபைதி t₂ யோக₃ம்'' என்

---

பெ. அ. (நாரணனை இத்யாதி₃) i 'காலத்திலே' என்ன வேண்டியிருக்க, ''காலே'' என்றதுக்கு த்₃ருஷ்டாந்தபூர்வகம் நியாமகம் அருளிச்செய்கிறார் (சிற்றமித்யாதி₃) j₂ 'ஆத₃ராதிஶயத்தாலே' என்றது — திருவேங்கடயாத்ராதி₃களைப்போலே ப்ராப்யமாகையாலே வந்த ஆத₃ராதிஶயத்தாலே என்றபடி. j, k ப₄க₃வல்லாப₄ம் அவன் வரவாலேயாயிருக்கை எங்ஙனே? என்ன, அருளிச்செய்கிறார் (இதுதான் இத்யாதி₃) l (இருந்த விடத்தே வந்து) என்ற அநந்தரம் ''என்கை'' என்று ஶேஷம். n, o, p ''உன்னை'' என்றதுக்கு அர்த்₂ாந்தரம் அருளிச்செய்கிறார் (அதுக்குமேலே இத்யாதி₃) p 'அதுக்குமேலே' என்றது — தாங்கள் வந்ததுக்குமேலே என்றபடி. p, p₂ அஞ்சலியை உண்டறுக்க மாட்டாமையை ஸம்வாத₃பூர்வகம் விவரிக்கிறார் (எழுதும் இத்யாதி₃) இவ்வாக்யத்துக்கு, B ''தொழுதுமாமலர்நீர் சுடர்தூபங்கொண்டு எழுதும்'' என்ற இடத்தில், ''தொழுது'' என்றதிலே நோக்கு. q ''சேவித்து உன்பொற்றாமரை'' என்று—தாங்கள் ஸேவிக்கை அவத்₃யமாகச் சொல்லுகைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (ஸேவ்யரான இத்யாதி₃)

r, s ''உன்னைச்சேவித்துப் பொற்றாமரையடி'' என்ன அமைந்திருக்க, ''உன்'' என்றதன் ப₂லிதார்த்த₂ம் (ப்ராப்தமுமாயிருந்த) என்றது. t ஸர்வப்ரகாரத்தாலும் பெருமாள், ''யௌவராஜ்யத்தை அடையும்'' என்று இளையபெருமாளைக் குறித்து அருளிச்செய்தாலும் அதுக்கு ஆளாகாதாப்போலே என்று அருளிச்செய்கிறார் (ஸர்வாத்மநா

---

சி. அ. i ''சிறுகாலே'' என்னாதே ''சிற்றஞ்சிறுகாலே'' என்றது ஜாதிப்பேச்சென்றபடி. m 5. ''தத்தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்'' என்றிராதே வரலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (ராக₃ம் க்ரம ப்ராப்தியித்யாதி₃) p (அதுக்குமேலே) வந்ததுக்குமேலே. n, o, p, q ''உன்னை'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம். t ''ஸர்வாத்மநா'' என்றது — ஸர்வ ப்ரகாரத்தாலும்

---

A திருவாய் 2-8-4, B திருவாய் 9-3-9.

ஹுமாபோலே $t_3$ வேறொரு ப்ரயோஜனத்துக்கு ஆளாகாதிருக்கை. u (போற்றும்) v போற்றுகையாவது-ஸ்வாமிக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணுகை. w (பொருள் கேளாய்) முன்பே இருக்கிறவனை "கேளாய்" என்பானென்? என்னில்—இவர்களுடைய ஸ்தநாத்₃யவயவங்களிலே அந்யபரனாயிருக்கையாலே 'உன் பராக்கை விட்டு நாங்கள் சொல்லுகிற வார்த்தையைக் கேளாய்' என்கிறார்கள்.

x அவனும், இவர்கள் பேச்சன்றோ? என்று கேட்டான்; y (பெற்றம் மேய்த்து இத்யாதி₃) z என்றும் ஶாஸ்த்ரத்திலே கேட்டுப்போகக்கடவ நீ பசுக்கள் மேய்த்து உண்ணக்கடவதான இடைச்சாதியிலே வந்து பிறந்து, எங்களை அடிமைகொள்ளாதொழியவொண்ணாது, (பெற்றம் மேய்த்துண்ணும் குலம்) a ரக்ஷ்யமான பசுக்கள் வயிறு நிறைந்தாலல்லது தாங்களுண்ணாத குலம்; உன் பிறப்பாலும் எங்கள் கார்யம் தலைக்கட்டவேணுமென்று கருத்து.

b (குற்றேவல்) c அந்தரங்க₃ வ்ருத்தி; d அன்றிக்கே, உசிதமான அடிமை என்றுமாம். e (எங்களை) f பசுக்களுக்கு வேறு ரக்ஷகருண்டானாலும் உன்னையொழிய ரக்ஷகரில்லாத எங்களை. g (கொள்ளாமற் போகாது) உனக்கு விஹிதம். h ஶப்₃த₃ாதி₃ விஷயங்களே த₄ாரகமாயிருக்கிற எங்களை, உன் வடிவழகைக் காட்டி, A "உண்ணுஞ் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் எம்பெருமான்" என்னும்படிபண்ணி ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யம் தாராதே போகை உனக்குப் $h_2$ போருமோ? என்கை. B "உண்டிட்டாயினியுண்டொழியாய்" என்கிறார்கள்.

---

பெ. அ. இத்யாதி₃) $t_2$ யோக₃ம் — அலப்₄யலாப₄மான யௌவராஜ்யத்தை என்றபடி. 1. "அலப்₄யலாபே₄ா யோக₃: ஸ்யாத் க்ஷேமம் தத்பரிரக்ஷணம்" என்று ப்ரஸித்₃த₄ம்.

e, f, g, h "எங்களை" என்றதுக்கு அர்த்தா₂ந்தரம் காட்டாநின்றுகொண்டு "கொள்ளாமல் போகாது" என்றத்தை விவரிக்கிறார் (ஶப்த₃ாதி₃ இத்யாதி₃) $h_2$ போருமோ — தகுமோ?

---

சி. அ. பெருமாள் ராஜ்யயோக₃த்தையடையுமென்னச் செய்தேயும் இளையபெருமாள் ஐஸ்வர்யயோக₃த்தையடையாதாப்போலே இவர்களும் என்றபடி. $t_3$ (வேறொரு ப்ரயோஜனத்துக்கு ஆளாகாதிருக்கை) என்றது — திருவடிகளில் போ₄க்₃யதையாலே வேறொரு புருஷார்த்த₂த்துக்கு ஆளாகாதிருக்கை என்றபடி. u, v, w "போற்றும் பொருள் கேளாய்" "மங்க₃ளாஶாஸனத்தைப் பண்ணி அர்த்தி₂க்கிற ப்ரயோஜனத்தைக் கேட்டருளாய்" என்று ஶப்₃த₃ார்த்த₂ம். x அவயவங்களிலே ஸக்தனானவன் "கேளாய்" என்றால் கேட்குமோ? என்ன, 2. "மது₄ரா மது₄ராலாபா" என்று இவர்கள் வார்த்தையும் போ₄க்₃யமாகையாலே கேட்குமென்கிறார் (அவனுமிவர்கள் பேச்சித்யாதி₃) y, z, a "பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம். ஸௌலப₄னென்னுதல், ரக்ஷகனானவன் என்னுதல். b, c, d "குற்றேவல்" என்றதுக்கு இரண்டு பொருள். e, f, h "எங்களை" இத்யாதிக்கு உன்னையொழிய வேறொரு ரக்ஷகரில்லாத த₃யனீயரான எங்களை த₃யாபரனான நீ ரக்ஷிக்கை விஹிதமென்னுதல்; அன்றிக்கே ஶப்₃த₃ாதி₃ விஷயங்களே த₄ாரக

---

A திருவாய் 6-7-1. B திருவாய் 10-10-6.

i இவர்கள் சொன்ன ஸமநந்தரத்திலே, 'நீங்கள் நோன்புக்கு அங்க3மான வற்றைக் கொண்டுபோமித்தனையல்லது, வேறு நீங்கள் அடிமையென்று சொல்லுகிறவையெல்லாம் என்?' என்று பறையைக் கொடுக்கப்புக—(இற்றைப் பறைகொள்வானன்று j காண்) இன்று ஒரு ப்ரயோஜநங் கொண்டுபோக வந்தோ மல்லோங்காண் நாங்கள்; k யத2ாஸ்ருதக்3ராஹியாயிருந்தாய் நீ. l (கோவிந்தா) m ப4ாவஜ்ஞாநமில்லாத ஜன்மமிறே. n அபி4த4ாவ்ருத்தியைப் போக்கி, தாத்பர்யவ்ருத்தி அறியாத ஜன்மமிறே.

"ஆனல், o நீங்கள் சொல்லுகிறது என்?" என்ன, p (எற்றைக்கும் இத்யாதி3) q 1. "ந காலஸ் தத்ர வை ப்ரபு4:" என்கிற திருநாட்டிலேயிருக்கவுமாம்; ஆஶ்ரிதஸஜாதீயனாய்க் கொண்டு ஸம்ஸாரத்திலே பிறக்கவுமாம்; q2 அதில் ஒரு நிர்ப்ப3ந்த4மில்லை; q3 காட்டிலும் படைவீட்டிலும் ஒக்க இளையபெருமாள் அடிமை செய்தாற்போலேயாகவேணும். r 2. "தே3வத்வே தே3வதே3ஹோயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" என்னக்கடவதிறே.

s (உன்தன்னோடுற்றோமேயாவோம்) t நீ ஸ்வாமியாகவும் நாங்கள் ஸ்வம் மாகவும், இஸ்ஸம்ப3ந்த4ம் என்றும் ஸித்3தி4க்குமித்தனையே எங்களுக்கு

---

பெ. அ. i "பறைகொள்வானன்றுகாண்" என்றதுக்கு ப்ரஸக்தி அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி3) j, k 'காண்" என்று சொல்லுகையால் தோன்றுகிற வெறுப்பை அருளிச் செய்கிறார் (யதே2த்யாதி3) l, m 3. "கோ3ாஷ்ட2ாத்4யக்ஷோऽபி கோ3ாவிந்த3:" என்ற நிக4ண்டுவைப்பற்ற இடையனுக்குப் பேராய், அத்தால் ப2லிதத்தை அருளிச்செய்கிறார் (ப4ாவஜ்ஞாநம் இத்யாதி3) n 'அபி4த4ா வ்ருத்தி' என்று—பத3ஶக்தியைச் சொல்லுகிறது.

o (நீங்கள் சொல்லுகிறது என்னென்ன) என்றது — எப்படிப்பட்ட குற்றேவலென்றபடி. p, q "எற்றைக்கும் — என்றைக்கும், ஏழேழ் பிறவிக்கும்—உன்னுடைய எவ்வவதாரத்துக்கும்" என்று ஶப்3த3ார்த்த2ம் திருவுள்ளம்பற்றி, ப2லிதார்த்த2ம் அருளிச்செய்கிறார் (நகாலேத்யாதி3) q2 (அதில் ஒரு நிர்ப்ப3ந்த4மில்லை) என்றது — நீ தே3வனும்போது நாங்களும் அப்படி யேயாய், மநுஷ்யனும்போது நாங்களும் மநுஷ்யராக என்றபடி. r இப்படி ஆன பேருண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (தே3வத்வே இத்யாதி3)

s, t, u "உற்றோம்" என்றதுக்கு ஸ்வஸ்வாமிப4ாவ ஸம்ப3ந்த4மாகக் கீழருளிச்செய்து, உறவுமுறையாக அர்த்த2ாந்தரம் அருளிச்செய்கிறார் (ஒருறவை இத்யாதி3)

---

மாயிருக்கிற எங்களை என்னுதல். n (அபி4த4ாநவ்ருத்தியைப் போக்கி) என்றது —
சி. அ. இடையராகையாலே ஶப்3த3மாக மேலெழத்தோற்றின அர்த்த2மொழிய, தாத்பர்யமறியாய்
என்றபடி. p "எற்றைக்கும்" என்றது — நித்யமான பரமபத3த்தில் செய்கிற ஸர்வவித4
கைங்கர்யமும் சொல்லுகிறது. q3, s, t "உன்றன்னோடுற்றோமேயாவோம்" என்றதுக்கு
இரண்டு பொருள்:— t உன்னோடு ஸம்ப3ந்த4முடையோமாவோம் என்னுதல். q3 அன்றிக்கே

வேண்டுவது என்கிறார்கள். 1. ''ப₄க்தாநாத்ம ஶரீரவத்'' என்னக்கடவதிறே. u ஓர் உறவைக்குறித்து அதுவாகவேணுமென்னுதொழிந்தது எல்லாவுறவும் நீயேயாக வேணுமென்கைக்காக. 2. ''மாதா பிதா ப்₄ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்'' 3. ''க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணப₃லா: க்ருஷ்ணநாத₂ாஶ்ச பாண்ட₃வா:'' A ''சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும்'' என்னக்கடவதிறே.

'மற்றும் வேண்டுவது என்?' என்ன, v (உனக்கே நாம் ஆட்செய்வோம்) ஸம்ப₃ந்த₄ம் ஒத்திருக்கச்செய்தே, ஸ்ரீப₄ரதாழ்வானைப்போலே விஶ்லேஷித்திருக்கையன்றியே இளையபெருமாளைப்போலே அடிமை செய்யவேணும். ''உனக்கே'' என்கிற அவதா₄ரணத்துக்குக் கருத்து—நீ உகந்த அடிமை செய்வோம்; உனக்கும் எங்களுக்குமாயிருக்கிற இருப்பைத் தவிர்ந்து, B ''தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே'' என்னுமாபோலே நீ உகந்த அடிமையாகவேணும். அஹங்காரக₃ர்ப்ப₄மான அடிமை புருஷார்த்த₂மாகாது.

x (மற்றை நம் காமங்கள் மாற்று) y நாங்கள் ''எங்களுக்கு'' என்றிருக்குமதுவும், நீயும் ''இவர்களுக்கு'' என்றிருக்குமதுவும், இவை இரண்டும்—விரோதி₄யாகையாலே அத்தைத் தவிர்த்துத் தரவேணும் என்கிறார்கள். 29.

---

**பெ. அ.** v, w ''உனக்கே'' என்றவிடத்தில் ஏவகாரார்த்த₂ம் அருளிச்செய்கிறார் (ஸம்ப₃ந்த₄ம் இத்யாதி₃)

x, y ''மற்றை நங்காமங்கள்'' என்றது — மற்றை எங்களுடைய புருஷார்த்த₂ங்களென்றாய், அதுதானும் நீ எங்களுக்கென்று நினைத்திருக்கும் எங்கள் கார்யமென்றாய், தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (நாங்கள் இத்யாதி₃) 'நாங்கள் எங்களுக்கென்று இருக்குமதுவும்' என்றது — த்₃ருஷ்டாந்தார்த்த₂ம். 29.

---

**சி. அ.** உறுதல்—பொருந்துதலாய் விஶ்லேஷியாதே இளையபெருமாளைப்போலே அடிமைசெய்ய வேணுமென்னுதல். v, x ''உனக்கே நாமாட்செய்வோம் மற்றை நங்காமங்கள் மாற்று'' என்றது அந்வயவ்யதிரேகங்களாலே ப்ரார்த்த₂னை. அதாவது — 'உனக்கே' என்கையால் உனக்கே ஆட்செய்யவேணுமென்றபடி; ''மற்றைநங்காமங்கள்'' என்றது — அந்தக் கைங்கர்யத்துக்கு விரோதி₄யான ஸ்வார்த்த₂தையைப் போக்கவேணும் என்று ப்ரார்த்தி₂க்கிறது. x, y ''நங்காமங்கள்'' என்று ஈஶ்வரனையும் கூட்டியருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (நாங்கள் எங்களுக்கு இத்யாதி₃) 29.

---

A திருவாய் 5-1-8, B திருவாய் 2-9-4.

## ஆறுயிரப்படி — இருபத்தொன்பதாம் பாட்டு

அவ:— இருபத்தொன்பதாம்பாட்டு. ''நமக்கே பறைதருவான் (1) என்று ஸங்க்₃ரஹேண முதல் சொன்ன ப்ராப்யப்ராபகங்களிரண்டையும் இந்த இரண்டு பாட்டாலும் விவரிக்கிறார்களாய், ப₂லந்தருகிற ப்ராபகத்தை நிர்ணயித்து ஸ்வீகரித்தார்கள் கீழிற்பாட்டில்; அதில் ''பறை'' (1) என்று சொன்ன ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்து ப்ரார்த்தி₂க்கிறார்கள் — இப்பாட்டில். ''பறை'' (1) என்று ப்ராப்யத்தை முற்படச்சொல்லி, ''தருவான்'' (1) என்றுகொண்டு ஸாத₄நரூபத்தை அநந்தரம் சொல்லிற்று — ப்ராப்ய ருசியடியாக ப்ராபகாந்வேஷணம் பண்ணவேண்டுகையாலே. அவ்விடத்தில் ப்ராப்யஸித்₃தி₄யில் ப்ராபகஸ்வீகாரஸாபேக்ஷதை உண்டாகையாலே உபாயஸ்வீகாரம் பண்ணிப் ப₂ல ப்ரார்த்த₂நம் பண்ணுகிறது இங்கு. ''நமக்கே'' (1) என்கிற அதி₄காரிஸ்வரூபம் இரண்டு பாட்டாலும் விஶத₃மாகிறது. அநந்யபோ₄க்₃யத்வமும் அநந்யோபாயத்வமும் அநந்யார்ஹத்வமும் ஸ்வரூபமிறே. ''செல்வச் சிறுமீர்காள்'' (1) ''வையத்து வாழ்வீர்காள் நாமும்'' (2) ''நாங்கள் நம்பாவைக்கு''(3) ''நாங்களும் மார்கழி நீராட'' (4) ''எம்மை நீராட்டு'' (20) ''யாம் வந்தோம்'' (24) ''யாம் பெறு சம்மானம்'' (27) ''புண்ணியம் நாமுடையோம்'' (28) — நாங்களென்பது எங்களுடையது என்பதாய்ப் பாட்டுத்தோறும் தங்களையுறைத்துக்காட்டிற்று — ஸ்வரூபத்திலும் உபாயத்திலும் ப₂லத்திலும் தாங்களிருக்குமிருப்பை வெளியிடாநின்றுகொண்டு, ''நமக்கே'' (1) என்ற பத₃த்தை விவரித்தபடியிறே. ''தூயோமாய் வந்து நாம்'' (5) என்றும், ''தூயோமாய் வந்தோம்'' (16) என்றும் இரண்டு ஶுத்₃தி₄யுண்டிறே கீழ்ச்சொல்லிற்று; அதில் ஸித்₃தோ₄பாய பரிக்₃ரஹம் பண்ணினவர்களுக்கு ஸாத்₄யோபாயத்தில் ருசிவாஸனையாதல், ஸ்வீகாரத்தில் உபாயபு₃த்₃தி₄யாதல் ஸ்பர்ஶிக்கில் ஶவஸ்ப்ருஷ்டம்போலேயும் நீசஸ்பர்ஶம்போலேயும் இருப்பதொன்றிறே; அவை இரண்டு அஶுத்₃தி₄யுமில்லையென்னுமிடம் கீழ்ப்பாட்டிலே வெளியிட்டார்கள்; ஸாத்₄யத்திலும் வந்தால் ப்ரயோஜநாந்தர ஸங்க₃ம் நடப்புதல், அகவாயிலே போ₄க்த்ருத்வபு₃த்₃தி₄ நடப்புதல் செய்தால் விஷபோ₄ஜநம் போலேயும் உச்சி₂ஷ்டாஶநம்போலேயும் வருவதொரு அஶுத்₃தி₄யுண்டிறே; அந்த எச்சிலறுத்து போ₄க₃ஶுத்₃தி₄ பண்ணுகிறார்கள் இப்பாட்டில். A''ஆசற்றார் — மாசற்றார்'' என்கிறது— இரண்டு தோ₃ஷமுமற்றவர்களையிறே. 1.''ஸர்வத₄ர்மாந்--ஸர்வகாமாம்ஶ்ச''B''தொழுமின் தூயமனத்தராய்''. உபாயபரிக்₃ரஹத்தினுடைய அநந்தரத்திலே ருசிகார்யமாய் வருவதொரு பேற்றில் த்வரையும், ஸாத்₄யத்திலே ஸாத₄நபு₃த்₃தி₄ நடக்கும்படியான கலக்கமும், ஆர்த்தியை ஆவிஷ்கரித்து வளைக்கையும். ப்ராப்யாந்தரஶ்ரத்₃தை₄ குலைகையும், புருஷார்த்த₂த்தில் அவிச்சி₂ந்நமான பாரிப்பும், ப்ராப்யம் ஸப₂லமாம்படியான அபேக்ஷையும் இவை ஆறும் பரிக்₃ரஹித்த உபாயப₂லமாய் விளையுமவையிறே; காலமே கண்ணுறங்காதேவந்து துவளும்படியான த்வரையும், போற்றுதற்குப் பொருள் தேடும்படியான கலக்கமும், தங்கள்

---

A திருமாலை 22, B திருவாய் 3-6-7.

வடிவைக்காட்டி வளைக்கும்படியான ஆர்த்தியும், நோன்பை வ்யாஜமாக்கி வேண்டினவற்றில் அபேக்ஷை அற்றபடியும், பரிபூர்ணமாகக் கைங்கர்யத்தை அபேக்ஷிக்கிறபடியையும், அதில் களையறுத்துத்தரவேணுமென்று சொல்லும்படி ப்ரார்த்திக்கிறபடியையும் காட்டி, "நாமுடையோம்" (28) என்ற புண்யத்தினுடைய பலங்களை வெளியிடுகிறார்கள். கீழ்ச்சொன்ன உபாயத்துக்கு வேறொன்றைப் பலமாக்குகையாவது மாணிக்கத்தையிட்டுத் தவிடு கொள்வாரைப்போலேயிறே. அந்த உபாயத்துக்கு உபாயாந்தர நிவ்ருத்திபோலே ஸகலபலஸாதாரணமென்று விரோதியான பலத்தை அபேக்ஷிக்கலாகாதிறே; ஸ்வரூபாநுரூபமான பலத்தில் தங்களுடைய அபிநிவேசத்தை அறிவிக்கவேணுமென்று ச்ருதிசதஸிரஸ்ஸித்தமாய், கருத்தறியும் A "மூதுவர்" கைப்பட்டுக்கிடக்குமதாய், கருந்தறையில் வாஸநையாலே அவர்கள் பிறந்தவிடத்தில் அபேக்ஷிக்குமதாய், அவர்களோட்டைத்த ப்ராப்தியை உணர்ந்தவர்கள் பாரிக்குமதாய். பகவதநந்யார்ஹசேஷமான வேஷத்துக்கு அத்யந்தமநுரூபமாய், ஈச்வரனுடைய முகவிகாஸத்துக்கு ஹேதுவாயிருந்துள்ள பரமப்ராப்யத்தை, ப்ரபந்த நிகமநம்பண்ணுகையாலே எல்லார்க்கும் தெரியும்படி வெளியிடவேண்டுகையாலே, "நாட்டார் இசைகைக்கு 'நோன்பு' என்று ஒன்றை வ்யாஜீகரித்துப் புகுந்தோமித்தனை; எங்களுக்கு உத்தேச்யம் உன்திருவடிகளிலே நித்யகைங்கர்யம்" என்று ப்ராப்ய நிஷ்கர்ஷம் பண்ணுகிறார்கள். B "எம்மாவீட்டி"லர்த்தத்தோடே தலைக்கட்டுகிறது. B எம்மாவீட்டிலே ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்து, C ஒழிவில் காலத்திலே ப்ரார்த்தித்து, அதுதன்னுடைய எல்லைநிலமான பாகவதாநுபவத்தை D "நாளும் வாய்க்க" என்று E நெடுமாற்கடிமையிலே ப்ரார்த்தித்தார் — ஆழ்வார்; அவரிற்காட்டில் இவர்களுக்குள்ள வாசி;— "நீராடப்போதுவீர்"(1) "எல்லாரும் போந்தாரோ" (15) என்று-புருஷார்த்தத்தில் சரமாவதியிலே முதலடியிலே நின்று, அது நிலைநிற்கைக்காக ப்ராப்ய நிஷ்கர்ஷம்பண்ணி அர்த்திக்கிறார்கள். "'ஆவாவென்றாராய்ந்தருள்"(8)"எம்மேல்விழியாவோ" (22) என்று பெண்கள், அக்ரூரன் மநோரதித்தாற்போலே மநோரதித்துக்கொண்டுவந்தபடியே, நாமும் பெரிய ஆதரத்தோடே புறப்பட்டிருந்து, வந்த காரியங்களைச் சொல்லுங்கோளென்று கேட்டு, வேண்டுவனவும் கொடுக்க இசைந்து, பறைகொண்ட காலத்துக்குப் பெறும் ஸம்மானம்பண்ணுவதாக இசைந்து வந்தகாரியம் தலைக்கட்டிவிட்டோம்; திரிய "பறைதாராய்" (28) என்று நின்றார்கள்; "பாடிப்பறைகொண்டு" (27) என்றத்துக்கு மேலேயும் ஒரு பறையுண்டாயிருந்தது; நாம் அது அறிந்திலோம்; நமக்கு இதுவே தெரிந்ததில்லை; மேல்விளையும்படி காண்கிறோம்' என்று பேசாதேயிருந்தான். "எங்கள் த்வரையையும் தலைதடுமாறான பரிமாற்றத்தையுங்கண்டுவைத்து இதுக்கு ஹ்ருதயம் கேட்டிலையீ! எங்கள் நினைவைக் கேளாய்" என்று தொடைதட்டுகிறார்கள். "கீழ்ப்பண்ணின ப்ராபக ஸ்வீகாரம் அஸத்ஸமமாம்படியான ப்ராப்யருசியையும், 'உன்னாலேபேறு' என்று அறுதியிட்டால்நீ

A திருவிருத்தம் 2 B திருவாய் 2-9 C திருவாய் 3-3 D திருவாய் 8-10-8 E திருவாய் 8-10.

வரக்கண்டிருக்கவொண்ணுதபடியிருக்கிற த்வரையையும், எங்கள் ஆற்றுமையின்
ஸ்வபாவத்தையுங் கேளாய்'' என்கிருர்கள்.

வ்யா: (சிற்றஞ் சிறுகாலே வந்து) சிறு பெண்களாகையாலே குளிர்
காலத்தில் புறப்படமாட்டாத நாங்கள், அறப்போதோடே புறப்பட்டுவரும்படியன்றே
எங்கள் த்வரையிருந்தபடி. இவர்களுக்கு ஆபி4முக்2யம் பிறந்தகாலம், ஆத்ம
ஹித சிந்தநத்துக்கு ஸத்வோத்தரகாலமாக இருக்கும் ப்3ராஹ்ம முஹூர்த்தமாய்
வந்து விழுந்தது. மாஸம் மார்கழி மாஸமாய், பக்ஷம் பூர்வபக்ஷமாய், அதிலே
பௌர்ணமியாய், அப்படியே ஒரு நன்னாள் வந்து ப2லித்தாற்போலே அத்திவ
ஸத்தில் முஹூர்த்தமும் ப்3ராஹ்மமாய் வந்து விழுந்தது. (காலே) (சிறுகாலே)
(சிற்றஞ்சிறுகாலே) ''செங்கல்பொடிக்கூறை'' (14) என்று — தாமஸரும் உண
ரும்படியான அளவு — காலையாவது; ''ஆய்ச்சியர் மத்தினுலோசைபடுத்த'' (7)
என்று — இடைச்சிகள் உணர்ந்து ஸ்வக்ருத்யத்திலே அதி4கரிக்கும்படியானவளவு —
சிறுகாலையாவது. ''ஆய்ச்சியர்மத்தினுலோசைபடுத்த'' (7) என்றதுதான் விடிவுக்கு
அடையாளமாகச் சொல்லும்படி, அதுக்கு முன்னே உணர்ந்தார்களிறே தாங்கள்.
இவர்களுக்கு, ராத்ரி கழிந்து பகல் வருவதற்கு முன்புத்தை நடுவில்போதை
யிறே நினைக்கிறது; அஜ்ஞாநத3ஸை குலைந்து ப்ராப்தி த3ஸை புகுருவதற்கு
முன்புத்தை ஜ்ஞாந த3ஸையைச் சொன்னபடி. ''முனிவர்களும் யோகிகளும்'' (6)
உணருங்காலம் — சிற்றஞ் சிறுகாலையாவது. ஸம்ஸாரியான நிலைகுலைந்து
முக்தனுவதுக்கு முன்பு முமுக்ஷுத்வம் அங்குரித்த த3ஸையிறே. இருள் அகன்ற
வளவாய், வெளிச்செறிப்புள்ளவளவெல்லாம் ப்ரகாஸியாத அளவாய்த்து.
இதர விஷய ப்ராவண்யத்தால் வரும் அறிவுகேடின்றிக்கே ப4க3வத்3விஷயத்தில்
ஜ்ஞாநங்கொண்டு நேரான பரிமாற்றமுமின்றிக்கேயிருக்கிறவளவைப் பிடித்தபடி.
A ''காலை நன்ஞானத்துறை படிந்தாடி'' என்று ஜ்ஞாநதீர்த்த2ாவகா3ஹநத்துக்கு
யோக்3யமான காலம் பெற்றபடி. B ''தாமரையாள் கேள்வனெருவனையே நோக்கு
முணர்வு'' என்று, ஸ்ரிய:பதியை விஷயீகரிக்குமதிறே — நன்ஞானமாவது;
துறைபடிகையாவது — ஸதா3சார்யோபதே3ஸ மூலமாக, பிராட்டி புருஷகாரமாக,
ப4ாக3வதர்கள் உசாத்துணையாக, எம்பெருமானைப் பற்றுமது. ''உன் மணாளனை
எம்மை நீராட்டு'' (20) என்று — துறைதப்பாமலிழிந்தவர்களிறே — இவர்கள்.
C ''ஓயும் பொழுதின்றி'' விடிவுகாணுதபடி நீண்ட ஸம்ஸாரகாளராத்ரி கழிந்து.
D ''பகற்கண்டேன்'' என்று ஒரு பகல் முகஞ்செய்கிற ஸமயமிறே. 1. ''அந்த4ம்
தம இவாஜ்ஞாநம்'' இத்யாதி3 காலைமாலை என்று ஒரு நியதியில்லையிறே;
அவன் தோற்றும் காலம் விடிவாமத்தனையிறே. திருவாய்ப்பாடிக்கு,
நாட்டார் விடிவு அஸ்தமயமாய், ஸர்வபூ4தங்களினுடைய
அஸ்தமயம் விடிவாயிறே நடப்பது. 2. ''ஆவிர்ப்பூ4தம் மஹாத்மநா'' என்று —
அபரராத்ரம் விடிவாய் வந்துவிழுந்ததிறே. E ''விரியுங்கதிரே போல்வா''னிறே.

A திருவிருத்தம் 93, B முதல் திருவ. 67, C திருவாய் 5-4-3, D இர. திருவ. 81
E நாச்-திரு. 14-6.

(சிற்றஞ்சிறுகாலே) சிறுகாலே வரில் உன்னைக்காணவொண்ணுதென்று சிற்றஞ் சிறுகாலே வந்தோம். A ''சிறுகாலே ஊட்டி ஒருப்படுத்தேன்'' என்று மாத்ரு பரதந்த்ரனாய் இளங்கன்று மேய்க்கவேணும்; விடிந்தவாறே B ''காலிப் பின்னேபோம்''; C ''எல்லியம்போதாக வரும்''; D ''நீராட்டமைத்து'' வைக்கை யாலே D ''ஆடி அமுதுசெய்''யும்; E ''அல்லுத்தான் வந்தபின்னை'' என்கிற படியே இருளிலே ஆள்பார்த்து ஊரிலே திரியும்; அபி₄மதைகளை வேண்டின விடங்களிலே புணர்ந்து, F ''இராநாழிகை மூவேழுசென்ற''வாறே இங்கே கிடை காட்ட வரும்; அக்காலமறிந்துவந்து கைக்கொண்டார்கள். நாள்தோறும் ஒரு விடிவுண்டாய் நடக்கிறதிறே; ஸுப்ரபா₄தமாய்த்து இந்த தி₃வஸமொன்றுமாய்த்து.

அதுக்கடி என்னென்றால்—(வந்து) வந்த வருத்தத்தை ''வந்து தலைப் பெய்தோம்'' (22) என்று கீழே சொன்னார்களிறே. (வந்து) ஸம்ஸார பத₃வியில் ஓடினவர்கள் மீண்டுவருவதிலும் வருத்தமுண்டு எங்கள் வரத்துக்கு. தே₃ஹாத் மாபி₄மாநம் பண்ணியிருப்பாரை G ''எதிர்சூழல்புக்குத்'' திரிகிறவனுடைய யத்நத்தாலே வருவிக்கலாம்; நிவ்ருத்தி ஸாத்₄யமென்று ஸ்வரூபத்தையுணர்ந்து வாராதாரை வருவிக்கவரிதிறே. உபாயஸ்வீகாரத்தில் உபாயப்ரதிபத்தி பண்ணாத படியான நிலையிலே நிற்கிறவர்களை க்ரியாரூபமானத்தை ஏறிட்டுக் கொண்டு வரும்படி பண்ணுகை அரிதிறே. 1. ''உவாச ச'' என்று பெருமாள் திருவுள் ளத்தைப் புண்படுத்தினாற்போலே சொல்லுகிறார்கள். வரவுக்கு நோவுபடுகிறவனை வார்த்தையாலும் புண்படுத்தினான். தான் ஶரண்யராகப் பற்றிவந்தாரை உண் டாக்கிக் காரியங்கொள்ளமாட்டிற்றிலனென்றதிறே விபீ₄ஷணனை; அப்படியே 'நாலடியிட்ட நாங்களே வந்தோம்' என்கிறார்கள். 2. ''பத்₃ப்₄யாமபி₄க₃மாத்'' என்று — தாம் வந்த தூரம் பாராதே வாசலளவும் புறப்பட்டது பொறுத் திலரே. (வந்து) H ''இவ்வீதிபோதுமாகில்'' என்று — வந்தால் காரியங்கொள்ள விருக்கும் நாங்கள் வரும்படியன்றோ த்வரையிருந்தபடி. (வந்து) பிறந்தவிடத்தில் நின்றும் ஆயர் குலத்திலேவந்து, I ''மழைகொலோ வருகின்றது'' என்னும் படி J ''வீதியூடேவந்து'', K ''நம்தெருவின் நடுவேவந்து'' L ''கதவின்புறமே வந்து'', M''முற்றம் புகுந்து'', N ''நம்மில்லம் புகுந்து'', O நீ ''மலரணை மேல் வைகி மாலை''புகுர ப்ராப்தமாயிருக்க, படுக்கையை விட்டுப் படிகடந்து, P ''காவலுங்கடந்து'' உன் தோரண வாசலிலே (16) வந்து, உட்கட்டிலே புகுந்து,

---

A பெரியாழ்திரு 3-3-2. B பெரியாழ்திரு 3-3-1. C பெரியாழ்திரு 3-4-2. D பெரியாழ்திரு 3-3-3. E பெரியதிரு 10-7-6. F பெரியாழ்திரு 3-1-10. G திருவாய் 2-7-6. H பெரியாழ்திரு 3-4-6. I பெரியாழ்திரு 3-4-1. J பெரி யாழ்திரு 3-4-10. K நாச்திரு 4-5 L பெரியதிரு 10-8-2. M பெரியதிரு 10-8-5. N பெரியதிரு 9-2-4. O பெரியதிரு 7-5-7. P பெரியாழ்திரு 3-6-1.

''பள்ளிக்கட்டிற் கீழே'' (22) சிற்றஞ்சிறுகாலே வந்த வருத்தமறியவேண்டாவோ? ''கறவைகள் பின்சென்று'' (28) என்று அந்தப்போக்கு நிகர்ஷமாகச் சொன்னுறபோலே, இவ்வார்த்தையும் தப்பு என்றிருக்கிருர்கள். ஸ்வரூபத்தை உணராதபோது அது ப்ராப்தமாயிருக்கும்; ஸ்வரூபத்தை உணர்ந்தால் இது ப்ராப்தமாயிருக்கும். உபாயாந்தரத்துக்கு நிவ்ருத்தி தோஷம்; இவ்வதிகாரிக்கு ப்ரவ்ருத்தி குற்றம். ப்ராப்யப்ராவண்யம் ஸ்வரூபத்தை மறப்பித்தது. A ''பூமருகோல நம் பெண்மை சிந்தித்திராதுபோய்'' என்னப்பண்ணுமிறே.

நீங்கள் வந்து செய்த தப்பு என்னென்ன; (உன்னைச் சேவித்து) இதிறே நாங்கள் செய்த தப்பு என்கிருர்கள். எங்கள் ஸ்வரூபத்தை அறியாவிட்டால் உன் ஸ்வரூபத்தைத்தான் உணர்ந்தோமோ? இத்தலையில் மித்ரபாவனையாயிருக்கை-இவனைவிடில் தான் உளனுகாதபடியிருக்குமவனிறே. வரவுதானே மிகையாம்படியிருக்கிறவுன்னை, அதுக்குமேலே துராராதர் பக்கல் செய்வதெல்லாஞ்செய்தோம். பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிற பரிவ்ருத்தியைக் கரையேறி, துஸ்ஸாதமாய்க் கைபுகுந்தாலும் நிஸ்ஸாரமான விஷயங்களிலே துவண்டு, அதுதனக்கு உறுப்பாக இதரஸேவையிலே யிழிந்து, அவர்கள் முகத்தில் விழித்து, அவர்கள் முகத்தில் வெம்மை பொறுத்து, நீசபாஷணங்களைப் பண்ணித்திரிகையாகிற ஶ்வவ்ருத்தியை அநாதிகாலம் பண்ணிற்று; அத்தைத் தவிர்ந்து, விஷயம் வகுத்ததாய், ஸுஶீலனுய், ஸ்வாராதனுய், B ''புலங்கொள்வடிவு'' படைத்தவனுய், தானே தன்னைத் தருவானுய், தந்தால் பின்னையொருகாலமும் கைவிடாதவனுயிருந்தவனை உசிததாஸ்யம்பண்ணுகை ப்ராப்தமாகச் சொல்லாநிற்க, எதிரே இட்ட நாலடிக்கும் பொருதே உபசாரஞ் சொல்லுமவன் கருத்தறிகையாலே, பின்னே தொடர்ந்து ஸேவித்ததைக் குற்றமாகச் சொல்லுகிருர்கள். (உன்னைச்சேவித்து) 1. ''ஸோபயகுச்சூத்'' என்று — அபிகந்தாவான உன்னை அபிகமநம்பண்ணி குஶலப்ரஶ்நத்திலே த்ருப்தனும் உன்னை நாங்கள் ஸேவிக்கை மிகையன்றே. ''சென்று நாம் சேவித்தால்'' (8) என்கிற இரண்டு மிகையும்செய்தோமிறே. C 'பின்னே சென்று'' D ''சூழவேநின்று'' என்று எங்களைத் தொடர்ந்து ஸேவிக்கிறவுன்னை 2. ''பேஜுர்முகுந்தபதவீம்'' என்கிறபடியே சுவடுபார்த்துத் தொடர்ந்து திரிந்து. E ''நாரணன் போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்ருள்'' என்னக்கடவதிறே.

ஸேவித்தவளவேயோ, அதுக்கு மேலேயும் சில செய்திலோமோ? — (உன் பொற்றுமரையடியே போற்றும்) சூட்டக்கண்டபூவை விலை மதித்து விற்பாரைப் போலே, கண்டு அநுபவிக்கையே ப்ரயோஜநமாயிருக்கிற திருவடிகளைப் பெற்று வைத்து வேறேயொரு ப்ரயோஜநம் தோற்றும்படியான செயல் செய்த செல்லாமை பாராய். (சேவித்து — போற்றும்) F ''தொடர்ந்தேத்தவும்'' என்கிற படியே. (உன் — அடி போற்றும்) ஸ்வரூபகுணுதிகள் போற்றுகிருேமல்லோம்.

A பெரியதிரு 11-2-9. B திருவாய் 8-10-4. C பெரிய திரு 10-7-11. D திருவாய்6-2-4. E பெரியாழ்திரு 3-7-5. F பெரியதிரு 1-9-5.

(அடியே — போற்றும்) அங்குத்தைக்கு மங்க₃ளாஶாஸநம் பண்ணி, தனக்கும் ரக்ஷைதேடிக்கொள்ளுகையன்றிக்கே, தன்னை அழியமாறியும் அத்தலைக்கு நன்மைகளை ஆஶாஸிக்கை. புத்ரஶிஷ்யதா₃ஸாதி₃கள் தாங்களும் உண்டுடுத்துப் பித்ராதி₃களுக்கும் ஶேஷமாயிருக்குமாபோலன்றிக்கே, அத்தலைக்கே ஶேஷமாயிருக்குமிருப்பு தனக்கு உஜ்ஜீவநமாயிருக்கை. (உன்னடியே போற்றும்) அடியானுக்கு அடியிலேயிறே ப்ராப்தி. A ''அடிச்சியோம்'' என்கிறவிவர்கள் B ''கூறுளும்'' துறப்புக்கூட்டில் போகார்களிறே. (உன் — பொன் — அடி) C ''உலகமளந்த பொன்னடி'' போற்றுகிறவர்களோ, D ''காடுறைந்த பொன்னடி'' போற்றுகிறவர்களோ நாங்கள்? அவை — E '' உலகமெல்லாந் தலைவிளாக்கொள்ளுதல்'' D ''வானவர்தம் சென்னிமல''ராவுதலாயிறே அந்தப் பொன்னடிகள் இருப்பது; இது— F ''மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்'' என்றிறே இப்பொன்னடியிருப்பது. (உன் — பொன் — அடி) எல்லார்க்கும் பொதுவாயிருக்கையும், ஸ்ப்ருஹணீயமாயிருக்கையும், கண்டால் விடவொண்ணுதிருக்கையும், விட்டால் பிழைக்கவொண்ணுதிருக்கையும். வெறும் பொன்னடியாயிருக்கிறதோ? ''பொற்றுமரை''யடியன்றே. ஸாத₄நத்வமும் ஸாத்₄யத்வமும் பூர்ணமாயிருக்கை. G ''தாமரையன்ன பொன்னுரடி''யிறே. 1. ''த₄நம் மதீ₃யம் தவ பாத₃பங்கஜம்''. (உன் பொற்றுமரையடியே) எங்களுக்குப் பொன்னும் பூவும் புறம்பே தேட வேணுமோ? (உன் பொற்றுமரையடி) பெண்களுக்குப் புறம்பு அந்யபரதைகளுண்டானுல் க்ருஷ்ணன் அவற்றைக் குலைப்பதும் திருவடிகளாலே. H ''அழித்தாயுன் திருவடியால்'' I ''கற்றினம்மேய்த்த வெந்தை கழலிணை'' என்று — ஆஶ்ரயணீயமும் இது; J ''அவன் தாளிணைக்கீழ்ப்புகுங்காதல்'' என்று ஆசைப்படுவதும் இது. ஆஶாநுகு₃ணமாக K ''தாள்கண்டு கொண்டென் தலைமேற்புனைந்தேனே''என்று இவர்கள் L''சென்னிக்குக் கோலமாகச்'' சூடுவதும் இத்தை. (போற்றும்) ''பரமனடிபாடி'' (2) ''அடிபோற்றி — கழல்போற்றி'' (24) என்று முடியச் சொல்லிக்கொண்டு போந்தார்களிறே, M ''கண்ணன்தாள் வாழ்த்து''மது ஸ்வரூபப்ரயுக்தமாயிருக்குமிறே. இதுக்கு மேலே ஒன்று நினைக்கும்படியிறே ருசிகார்யமாய் வந்த ஆற்றுமையிருந்தபடி.

(போற்றும் பொருள்) போற்றுகிற ப்ரயோஜநம். இவர்கள் ''போற்றும் பொருள்'' என்று பாரித்துக்கொண்டு சொல்லத் தொடங்கினவாறே, சிற்றஞ்சிறுகாலே உணர்ந்து வந்த அனந்தலாலே சிவந்த ''போதரிக்கண்''களிலும் (13), இவர்கள் N ''கோவைக்கனி வாயில்'' பழுப்பிலும், பேச்சிலினிமையிலும், வடிவழகிலும், O ''பாடகமும் சிலம்பும்'' த்₄வனிக்கிற இவர்கள் பொற்றுமரை

A திருவாய் 10-3-6, B திருவாய் 4-8-1, C பெரிய திரு 5-8-9, D பெரிய திரு 11-5-1
E திருமாலை 35, F பெரிய திரு 5-8-5, G பெரியதிரு7-3-5, H திருவாய் 6-2-9
I திருமாலை 9, J திருவாய் 3-9-8, K திருவாய் 10-4-3, L திருவாய் 4-3-9
M பெரிய திருவ 12, N பெரிய திரு 9-6-5, O பெரியாழ் திரு 3-7-6.

யடியிலும் கண்ணை வைத்து, நாம் சொல்லுகிறவிது இவன் ப்ரதிபத்தி பண்ணு கிறிலனென்று தோற்றும்படி அந்யபரனுயிருந்தான்; ''கேளாய்'' என்கிருர்கள். இவர்கள் தாம், தங்களையறிந்தால் பின்னே நின்று வார்த்தை சொல்ல வேண்டாவோ? வார்த்தை சொல்லாநிற்கச் செய்தே ''கேளாய்'' என்னும் போது நடுவே அந்யபரனுகவேணுமிறே. (கேளாய்) எங்கள் ப்ராப்யத்தை அழித்தோ நீ உன் ப்ராப்யம் பெறப்பார்ப்பது என்று அடியைவிட்டுத் தொடை யைத்தட்டுகிருர்கள். (கேளாய்) 1. ''அர்த்₂பாபயந்தி'' என்று ஓதுவிக்க இழிந்த வளாகையாலே 2. ''ஶ்ரூயதாம்'' என்று கேட்பிக்கவேணுமிறே. இவன் தனக்கு ஶிஷ்யன் வாய்த்தாற்போலே ஆகவொண்ணுதே இவர்களுக்கு. ''கேளீரோ''(2) என்று—பெண்களுக்கு முதலிலே க்ருத்யாம்ஶம் சொன்னுர்கள். இவனுக்குக் கர்த்தவ் யாம்ஶம் சொல்லுகிருர்கள். ''அழகிது, எனக்குத்தான் ஏதானுல் நல்லது, உங்கள் பேச்சேயமையாதோ? இதொருபொருள் கேள்வியாயிருந்தது; விடிவோறே வந்து கைக்கொண்டிகோள், நமக்கு உசித த₄ர்மங்களையும் விட்டு, புறம்புள்ள அந்யபரதை களையுங்கழித்து, இற்றைக்கு இதுவே கேள்வியாகவிருக்கிருேம், சொல்லலாகாதோ'' என்றுன் —(நீ — கேளய்) ''சீரிய சிங்காசனத்திலே'' (23) யன்றே நீயிருக்கிறது. த₄ர்மாஸநத்திலே இருப்பார்க்குக் கேட்கவேண்டாவோ?

(நீ போற்றும் பொருள் கேளாய்) உனக்கு, க்ரமத்திலே இவர்கள் காரியஞ் செய்கிருேம் என்று ஆறியிருக்கவொண்ணுது; த்வரிக்கவேணுங்காணென் கிருர்கள். 'பேறு உங்களதாய் நீங்கள் த்வரியாநின்றிகோளே' என்றுன்; (பிறந்த நீ) இவ்வளவாக த்வரித்தோம் நாங்களாகிலன்றே மேலும் நாங்கள் த்வரிப்பது, A ''எதிர்சூழல்புக்கு'' இவ்வளவாக க்ருஷிபண்ணின நீ ப₂லவேளையிலே ஆறி யிருக்கலாகாது காண். எங்கள் ருசிகார்யமான த்வரைக்கு முற்பாடனை நீயே பேற்றுக்கு முற்பாடனுகவேணுங்காண். ''எத்தனைகார்யத்தையிட்டுப் பிறப்போமென்று தெரியாது; இதென்னென்பது?'' என்ன, (பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்தில் பிறந்த நீ) இங்கு வந்து பிறந்தது ஏதுக்காக? ஆர்க்காக? என்று விசாரிக் கலாகாதோ? (பெற்றம் மேய்த்துண்ணும்) நீ பிறப்பிலியாய், பிறவாதார் நடுவே பிருந்து பிறவியற்றுர்க்கு முகங்கொடுக்கிற நிலத்திலே வந்தோமோ? பிறவிக்குப் போர ப₄யப்பட்டு உன்னையே கால்கட்டுவாருள்ளவிடத்திலே வந்தோமோ? பிறவாநிற்கச்செய்தே ஆசாரப்ரத₄ானர் புகுந்து நியமிக்கும் ராஜகுலத்திற் பிறவி யிலே வந்தோமோ? வாலால் உழக்குக்குப் பசுமேய்க்க வந்து வயிறு வளர்க்கும் எங்கள் குலத்திலே நீ என்செய்யப் பிறந்தாய் என்று விசாரிக்கலாகாதோ?

(பெற்றம் மேய்த்து) தாழ்ந்தவர்களை ரக்ஷணம்பண்ணும் இக்குலத்திலே பிறக் கச்சொன்னுரார்? பரரக்ஷணமும் பண்ணுமல் ஸ்வரக்ஷணமும் பண்ணுதார்குலத்திலே உன்னைப்பிறக்கச்சொன்னுரார்? (பிறந்த நீ) நீ ஆசைப்பட்டுப் பிறந்தபிறவியன்றேயிது.

---

A திருவாய் 2-7-6.

(பெற்றம்மேய்த்துண்ணுங்குலத்தில் பிறந்த) A "எங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான்" என்றல்ல இவர்கள் நினைத்திருப்பது. (குலத்தில் பிறந்த) குலத்துக்குத் தலைவரானவர் வயிற்றிலே பிறந்தபடியாலே எல்லார்க்கும் ஸாத₄ாரணமிறே இப்பிறவி. 'நாம் உங்களிலே வந்து பிறந்தோமாகில் நம்மைச் செய்யச் சொல்லுகிறதென்?" என்ன: 'அந்தரங்க₃வ்ருத்தி கொள்ளச்சொல்லுகிறோம்' என்கிறார்கள்: ஆரைத்தான்? என்றான்: (எங்களை) குலத்தில் பிறந்த நீ B "புலங்கெழு கோவிய"ரான எங்களைக் கொள்ளவேண்டாவோ? 1. "நீளா குலேந ஸத்₃ருமீ" எங்களிலே ஒருத்தியை ஆசைப்பட்டன்றோ நீ இங்குப்பிறந்தது. (எங்களை) C "திருமாமகள் மண்மகள்" எனகிற ப்ரத₄ாநமஹிஷிகள் உன்னைத்தேடி நிற்க, நீ ஆசைப்பட்டு மேல் விழும்படி உகக்கைப்பர்டியான எங்களை. D "ஒசிசெய் நுண்ணிடை யிளவாய்ச்சியர் நீயுகக்கு நல்லவர்" என்று நாங்கள் ஆத₃ர விஷயமென்று ப்ரஸித்₃த₄மன்றோ. (பிறந்த நீ—எங்களை) பிறவாதாரைப் பிறவாதார் ஏவிக்கொள்ளவும், பிறந்தாரைப் பிறந்தார் ஏவிக்கொள்ளுகையும் ப்ராப்தமன்றோ. E "இவ்வாய்க் குலத்தாய்ச்சியோமாய்ப் பிறந்த" எங்களை விரும்பியன்றோ நீ ஆயனாய்ப் பிறந்தது. F "ஆயனாகி யாயர்மங்கை வேயதோள் விரும்பினாய்." (எங்களை) பசுக்களுக்கு வேறு ரக்ஷகருண்டாகிலும் உன்னையொழிய வேறு ரக்ஷிப்பாரில்லாத எங்களை. பசுக்கள், தானும் பறித்துத் தின்னும்; பிறரும் ஐயோ! என்னும்படியிருக்கும்; இரண்டாகாரமுமில்லாதவெங்களை (குற்றேவல்) அந்தரங்க₃மாய் ஏவிக்கொள்ளுமது. G "முகப்பே கூவிப்பணி கொள்ள"வேணுமிறே, H "விடுத்த திசைக்கருமமு"மல்ல, I "கருதுமிடத்தில்" வ்யாபாரமுமல்ல; அணுகின வ்ருத்தியும் ஏவின வ்ருத்தியுமாகவேணும். திருத்திரைக்குள்ளில் வ்ருத்தி; — உடைவாளும் அடுக்குருவுமெடுத்தல், கலசப்பானை பிடித்தல், படிக்கம் வைத்தல், J "உமிழும் பொன்வட்டி"லெடுத்தல், திருவடிகள் விளக்குதல், ஒலியன் பணிமாறுதல், சாமரமிரட்டுதல், அடைக்காய்திருத்துதல், அடிவருடுதல், K 'முலைகளிடர்தீர' அணைத்தல் இவை தொடக்கமானவை—K கோவிந்தற்குப் பண்ணும் K குற்றேவலாகிறது. 'இவையெல்லாம் க்ரமத்திலே கொள்ளுகிறோம்' என்றான்: (எங்களை) தா₃ஸ்யத்தில் சுவடறிந்து அதில் ருசியும் த்வரையும் விளைந்து க்ரமப்ராதி பொறுக்கமாட்டாதபடி வந்து மேல்விழுகிற எங்களை. 'அநந்தரக்ஷணத்துக்கு நாங்களிருப்புதோமென்று தோற்றியிருந்ததோ' என்று தங்களாற்றாமையை அணித்துக் காட்டுகிறார்கள். சிறிது விட்டுப்பிடிக்கவறியாத எங்களை; ஒரு படுக்கையிலே ஒக்கவிருக்கப் பிரிவதற்கிரங்குமெங்களை.

(குற்றேவல்—கொள்ளாமல் போகாது) உனக்கு—விஹிதம். (பிறந்த —நீ கொள்ளாமல்போகாது) முன் தீம்பு செய்தார்க்கு வீண்போமோ, புறம்புள்ள ஜீவ

---

A திருவாய் 9-1-7. B பெரியதிரு 3-3-2. C பெரியதிரு 10-8-9. D திருவாய் 10-3-8. E திருவாய் 10-2-3. F திருச்சந்த 41. G திருவாய் 8-5-7. H திருப்பல் 9. I திருவாய் 10-6-8. J பெரு திரு. 4-3. K நாச். திரு 13-9.

(கோவிந்தா) பசுக்களின் பின்னே திரிவார்க்கு, பெண்கள் வார்த்தையின் கருத்துத் தெரியாதிறே. பசுக்களின் பின்னேதிரிவார்க்கு அவற்றுக்குள்ள ஜ்ஞாநமிறேயுள்ளது. நாலுநாள் எங்களைவிட்டுக் கெட்டகேடு என்தான்! நீ பசுக்களையே விரும்பி எம்மைத் துறந்தால் இதுவோ ப₂லம்? (கோவிந்தா) "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" (29) என்று ஜ்ஞாநபூர்வகமான உபாயஸ்வீகாரம் பண்ணுகிறவிடமாகையாலே கு₃ணபூர்த்தி சொல்லக்குறையில்லை; அவ்விடத்தில் ப்ராப்யருசியாலே கண்ணுஞ்சுழலையிடுகையாலும், ப₂லாந்தரத்தைக் காட்டி நழுவத் தேடுகையாலுண்டான ரோஷத்தாலும் இவ்வளவும் சொல்லவேணுமிறே இங்கு. (கோவிந்தா) எங்களையும் எங்கள் ப்ராப்யத்தையும் மறந்தாற்போலே, உன்னையும் உன்பிறவியையும் மறந்தாயீ! (பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்தில் பிறந்த - கோவிந்தா) பூ₄மியை எடுத்து நோக்கின மஹாவராஹமாக நினைக்கிறாயோ? பூ₄மியை நீரேற்ற வாமநனாக நினைக்கிறாயோ? ஶப்₃த₃ராஶியைப் பிரித்தெடுத்த ஹம்ஸரூபியாக நினைக்கிறாயோ? அத்தை ப்ரகாஶிப்பித்த ஹயக்₃ரீவ வேஷமாக நினைக்கிறாயோ? ஆதி₃த்யாந்தர்வர்த்தியாக நினைக்கிறாயோ? அறிவில்லாத பசுக்களுக்கு நிர்வாஹகனாய் வந்து பிறந்து ஆயர்சிறுமியர்க்கு உதவிற்றில்லை என்றால் பரவ்யூஹாதி₃களையும் யாத₃வவம்ஶத்தையும்விட்டு, இடைச்சேரியிலே ஸுலப₄னான உன்னுடைய க்ருஷியும் விப₂லமாகாதோ?

"நீங்கள் சொன்ன வார்த்தைக்குப் பலருமறியக் கருத்தாயிருக்குமத்தை நாமும் அறிந்து சொன்னோமாகில் நமக்குத் தாத்பர்யஜ்ஞாநமில்லை என்கிறதென்? நீங்கள் குற்றேவல் என்கிறத்திலே இரண்டுவகையறிந்து சொல்லுங்கோள். இற்றைப் பொழுதை உங்களோடே போக்குகிறோம் அங்ஙனேயாகில்" என்றான்; (எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்) இற்றையளவில் போகாதுகாண், இப்பிறவியளவில் போகாதுகாண். (எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்) அகாலகால்யமான A "நலமந்தமில்லதோர் நாட்டிலே" இருக்கவுமாம்; ஆஶ்ரித ஸஜாதீயனாய்க்கொண்டு B "நிலைவரம்பிலபலபிறப்பாய்" ஸம்ஸாரமண்ட₃லத்திலே அநேகாவதாரம் பண்ணவுமாம்; அதில் ஒரு நிர்ப்ப₃ந்த₄மில்லை. (உன்றன்னோடு) நீ பிறவாதிருக்குமிடத்திலும், பிறந்து திரியுமிடத்திலும் கூடத்திரியுமித்தனை. (எற்றைக்கும்) 1. "தே₃வத்வே தே₃வதே₃ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" என்கிறபடியே நாங்களும் ஒக்கப் பிறந்து, விடாதே திரியவேணும்; இளையபெருமாள் படைவீட்டிலும் காட்டிலும் ஒக்கத் திரிந்தாற்போலே.

(உன்றன்னோடு) நீ ஶங்க₂சக்ரக₃தா₃தா₄ரனாய் ஸ்ரீவைகுண்ட₂த்திலிருக்குமிடத்திலும் எங்களோடே கண்கலந்த உன்னோடும் ஒக்கத்திரியவேணும். (உன்றன்னோடு) அங்கே C "உருவார்சக்கரம் சங்கு சுமந்து" உன்னோடே திரிகையும், D "தெறிவில்லும் செண்டுகோலும்" கொண்டு இங்கே திரியவும் பெறுவோமாகவேணும். இத்தை

A திருவாய் 2-8-4. B திருவாய் 1-3-2. C திருவாய் 8-3-7. D பெரியாழ்திரு 3-4-3.

நினைத்திறே A ''கச்சொடு பொற்சுரிகை'' அடியிலே இவர்கள்தான் அவனுக்கு வர விட்டது. (கோவிந்தா எற்றைக்கும்) B ''கோயில் கொள் தெய்வ மெல்லாந்தொழ வைகுந்தங் கோயில்கொண்டு'' நீ இருக்குமிடத்திலும், C ''பின்னும் எம்மாண்பு மானன்'' என்னும்படி நீ பிறந்து திரியுமிடத்திலும் உன்னோடே திரியவேணும். D ''தேவும் தன்னையும்'' என்கிற இரண்டவஸ்தையும் கோவிந்தனுக்கிறே. (உற்றோமேயாவோம்) ஸர்வவித பாந்தவமும் உன்னோடேயாகவேணும். ஒரு உறவைக்குறித்து ''அதுண்டாகவேணும்'' என்றுதொழிந்தது, ஒன்றை விசேஷிக் கில் அல்லாதவையில்லையாமென்று: எல்லாவுறவும் நீயேயாகவேணும். (உற் றோமே யாவோம்) நீ காட்டுக்குப்போக மூச்சடங்கும் உறவு உண்டாகவேணும்; அச லூரில் வளரப் போகப் பூண்டும் புலம்புமுறவுண்டாகவேணும்; நீ அபிமதவஸ்துக் களை விஞ்சி விநியோகங்கொண்டால், 'பொருதொழியில் செய்வதென்!' என்று வயிறுபிடித்துக்கொள்ளுமுறவு உண்டாகவேணும்; நீ 'நில்லுங்கோள்' என்றால் நீர் பிரிந்த ஜந்துக்களைப்போலே துடிக்குமுறவு உண்டாகவேணும்; நீ பாம்பின்வாயிலே விழுந்தாயென்றால் பிணம்படும்படியான பாந்தவம் வேணும்; கழிந்த பிழைக ளுக்குக் காப்பிடுமுறவுவேணும்; எங்கள் வீட்டிலேயிட்ட ஆஸநத்தை ஊன்றிப் பார்க்குமுறவு வேணும்; விட்டணைக்கத்தேடில் வெளுக்குமுறவுண்டாகவேணும். (கோவிந்தா உன்றன்னோடு) 1. ''மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:'' என்கிறபடியே E ''அவரேயினியாவார்'' என்றிருக்கவொண் ணாது; 2. ''ப்ராதா பர்த்தா ச பந்துஶ்ச பிதா ச மம ராகவ:'' என்கிறபடியே F ''அவருயிர் செகுத்தவெம்மண்ணல்'' என்றிருக்கவொண்ணாது; அவையுமெல் லாம் உன்னோடேயாகவேணும்; G. ''பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ மற் றையாராவாரும் நீ'' என்றிருக்கவேணும். (உற்றோமே) ஸம்பந்தமுண்டாயிருக்கச் செய்தே பத்துமாஸம் பிரிந்திருத்தல், பதினாலாண்டு பிரிந்திருத்தல், பதினாறண்டு பிரிந்திருத்தல் செய்யவொண்ணாது.

அத்தனையோ வேண்டுவது? என்றான்; (ஆட்செய்வோம்) பந்தபலம் பெற வேண்டாவோ? உறவு என்று ஸாதர்ம்யம் பெற்றிருக்கவொண்ணாது; ப்ராப்தி பலமான கைங்கர்யத்தைப் பெறவேணும். (ஆட்செய்வோம்) அரசுக்குப் பட்டம்கட்டி அருகிருக்கவொண்ணாது.''ஆகிறது, மற்றென்?'' என்றான்—(உனக்கு—ஆட்செய்வோம்) ஆட்செய்யுமிடத்தில் எங்களுக்கு உறவை அறிவித்து அடிமைகொண்டு ஸாபேக்ஷ ராய் நிற்கிற உனக்குச் செய்யவேணும். (உனக்கு-ஆட்செய்வோம்) H ''ஆட்கொள்ளத் தோன்றிய'' உனக்குச் செய்யவேண்டாவோ? ''அத்தனையோ?'' என்றான்; (உனக்கே) உனக்கும் எங்களுக்குமாயிருக்கிற இருப்பைத்தவிர்ந்து I ''தனக்கேயாக'' என்னுமா

A பெரியாழ்திரு 1-3-8. B திருவாய் 8-6-5. C திருவாய் 1-8-2. D திருவாய் 2-7-4. E திருவாய் 5-1-8. F பெரிய திரு 1—1—6. G பெரிய திருவ 5, H பெரியாழ் திரு- 1—6—11. I திருவாய் 2-9-4.

போலே கொள்ளவேணும். எங்கள் அபி₄நிவேஶத்தாலே உன் அபி₄மதம் செய்ய வொண்ணாது, நியுகந்ததாகவேணும். தே₃ஶகாலாவஸ்த₂ாப்ரகார நியமஶூந்யமாக அபி₄நிவேஶத்தாலே பாரியாநிற்கச்செய்தேயும் ருசிகரமான தே₃ஶத்திலே நியோ ஜித்துக்கொள்ளவேணுமென்று அவன் உகந்து ஏவினதைச் செய்யக்கடவராயிறே யிருப்பது. A ''உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும்'' என்னக்கடவதிறே. (நாம்) உனக்கு அபி₄மதமானத்தை எங்கள் நிர்ப்ப₃ந்த₄மொழிய நீ ஏவச் செய்தபோ தன்றோ எங்களுக்கு ஸ்வரூபஸித்₃தி₄யுண்டாயிற்றுவது.(ஆட்செய்வோம்) B ''உயர்ந் துயர்ந்து அப்பாலவன்'' என்கிறபடியே. உத்துங்க₃விஷயமாகையாலும், ''ஆயர் சிறுமியரோமை'' (16) தாங்கள் தாழ்ந்த மனிச்சராகையாலும், ''செய்வோம்'' என்று ப்ரார்த்திக்கிறார்கள். (கோவிந்தா—உனக்கே நாம் ஆட்செய்வோம்) C ''நீள்குடக் கூத்தனுக்காட்செய்வதே'' என்கிறபடியே—உனக்கு ஆட்செய்யுமதன்றோ ப்ராப்தமா யிருக்கிறது.

''அப்படியாகிறது; இனி என்?'' என்றான்; (காமம் மாற்று) வேறொரு காம முண்டாய்ச் சொல்லுகிறதல்லவிறே. D ''தேறேலென்னை'' என்றிருக்குமவர்களா கையாலே, E ''அடிமைசெய்வாரையும் செறுமவை'' ப்ரக்ருதி வாஸநையாலும், மனஸ்ஸு அஸ்தி₂ரமாயிருப்பதொன்றாகையாலும், ஸம்ப₄ாவிதமாக ஶங்கித்து, ''கூடகமே'' (27) என்று தொடங்கி நாட்டார்க்குச் சொன்னவை தொடருகிறதோ என்று, அது நடையாடாதபடி பண்ணவேணுமென்கிறது. ''அத்தனையோ?'' என் றான்; அவ்வளவுபோராது— (மற்றை—காமம்—மாற்று) நீ ஸ்ரீவைகுண்ட₂த்திலே ஸூரிகளுக்கு முகங்கொடுத்திருக்குமிருப்பிலே க்ரமத்திலே பெறும்படியிருக்கவொண் ணாது; நீயும் 'பெண்காள்!' என்றழைக்க நாங்களும் 'க்ருஷ்ணன்' என்று சொன்ன பரிமாற்றமே நடக்கவேணும். 1. ''ந காமகலுஷம் சித்தம்''—அவனுடைய ப்ராப்ய தையையும், ப்ராபகத்வத்தையும், ஶரண்யதையையும், இந்நிலத்தின் தண்மையையும், அந்நிலம் உத்₃தே₃ஶ்யமென்னுமிடத்தையும்; மநோரத₂ந்தானே அமையுமென்னுமிடத் தையும் சொன்னவாறே—'ஒரு அபேக்ஷையின்றிக்கே பலவற்றிலே நெஞ்சு தாழ நின்றதே?' என்ன, 1. ''தே பாத₃யோஸ்ஸ்தி₂தம்-மம சித்தம்—ந காமகலுஷம்''— ''ப்ராப்யத்வம், ப்ராபகத்வம், ஶரண்யத்வம் இவையெல்லாஞ்சொல்லிற்று நீயாகை யாலே; இவ்விடம் த்யாஜ்யமென்றது—உன்னுடைய அநுப₄வத்துக்கு விரோதி₄யாகை யாலே; அவ்விடத்தில் உத்₃தே₃ஶ்யதாபுத்₃தி₄ நடந்தது—அநுப₄வத்துக்கு ஏகாந்த ஸ்த₂லமென்று; அல்லாதவை உத்₃தே₃ஶ்யமென்று சொன்னேனன்று; உன்திரு வடிகளிலே நிலைநின்றவர்கள் நெஞ்சு ஸ்ரீவைகுண்ட₂ாதி₃களால் கலங்காதுகாண்'' என்றதிறே. அப்படியே இவர்களும் (மற்றை-காமம்) என்கிறார்கள். ''மற்று'' என்றது, F ''மற்றொன்றின் திறத்ததல்லா'' G ''மற்றொன்றினைக்காணாவே'' என்கிறவிடங்க ளிற் சொல்லுகிறத்தை. (கோவிந்தா—மற்றை—காமம்—மாற்று) H கண்ணன் வைகுந்தனோடான — நிலையைக் குலைக்கவேணும். I ''இம்மைப் பிறவிசெய்யாதே

A திருவாய் 10-3-9. B திருவாய் 1-7-2. C திருவாய் 4-10-10. D திருவாய் — 2-9-10. E திருவாய் 7-1-6. F திருவாய் 7-10-10. G அமலனாதி 10, H திரு விருத்தம் 30. I நாச்—திரு 13-9.

இனிப்போய்ச் செய்யுந்தவந்தானென்?'' என்னுமவர்களிறே. நாங்கள் சிந்தயந்தி பட்டதுபடாமல்கிடாய். 'அத்தனையோ வேண்டுவது?' என்றான்; (நங்காமம் மாற்று) ஆட்கொள்ளுமிடத்திலே எங்களுக்கொரு இந்த்₃ரியசாபல்யம் நடக்கும்; அந்த ஸௌந்த₃ர்ய ரூபமான அந்தராயத்தையும் பரிஹரிக்கவேணும். 'அத்தனையோ?' என்றான்; (காமங்கள்) என்கிறார்கள். இருவர் கூடப் பரிமாறநின்றால் அத்தால் பிறக்கும் இனிமை இரண்டு தலைக்கும் ஒத்திருக்குமிறே. விஷயவைலக்ஷண்யத் தாலும் ஆஶ்ரயத்தின் இனிமையாலும் மிகவும் ப்ரீதிரூபமாயிறே பரிமாற்ற மிருப்பது. அதில் ஸ்வரூபத்துக்கு விரோதி₄யான அஹங்கார க₃ர்ப்ப₄மான அடிமை யும் அபுருஷார்த்த₂மிறே. நாங்கள் செய்கிற அடிமைகண்டு நீயுகந்தால் அவ்வுகப் புக்கண்டுவரும் உகப்பொழிய போ₄க்த்ருத்வப்ரதிபத்தியும் மதீ₃யத்வ ப்ரதிபத்தி யும் போ₄ஜநத்துக்கு க்ரிமிகேஶங்கள்போலே பொகடவேண்டும்படி விரோத₄மாயிறே யிருப்பது. அந்தவிரோதி₄களையும் தவிர்த்துத் தந்தருளவேணுமென்கிறார்கள். ஸ்வரூப விரோதி₄யும் ஸாத₄நவிரோதி₄யும் ப்ராப்திவிரோதி₄யும் ப்ராப்யவிரோதி₄யும் என்று நாலு வகையாயிறே விரோதி₄கள் இருப்பது; அதில் ஸாத₄நவிரோதி₄யும் ப்ராப்திவிரோதி₄யும் கீழிற் பாட்டிலே-கழிந்தமை சொல்லிற்று; மற்றையிரண்டும் இப்பாட்டிலே கழிக்கிறது.

''கறவைகள் பின்சென்று'' (28) என்று — உபாயாந்தரத்தில் அநந்வயம் சொல்லுகையாலும், ப்ராப்திப்ரதிப₃ந்த₄கத்துக்கு க்ஷாபணம்பண்ணுகையாலும் இரண் டுங் குலைந்ததிறே; ப்ராப்யருசியும் த்வரையும் ஆர்த்தியும் விளைந்து பா₃ஹ்யங்களில் ஸங்க₃ம் குலைந்தபடி சொல்லுகையாலே ஸ்வரூபவிரோதி₄ கழிந்தபடி சொல்லிற்று இப்பாட்டில் முற்கூற்றால்; ''மற்றை நங்காமங்கள் மாற்று'' என்கிறத்தாலே—ப₂ல விரோதி₄யைக் கழிக்கிறது. ''கோவிந்தா—உனக்கு'' என்று அகாரார்த்த₂ஞ் சொல் லிற்று; ''உனக்கே'' என்று - உகாரார்த்த₂ஞ்சொல்லிற்று; ''நாம்'' என்று — மகாரார்த்த₂ஞ்சொல்லிற்று; ''உன்றன்னோடுற்றோமேயாவோம்'' என்கிறவிடத் தாலே - நாராயணபத₃த்தில் அர்த்த₂ஞ்சொல்லிற்று; ''எற்றைக்கும் ஏழேழ் பிற விக்கும்'' என்கையாலே-சதுர்த்₂யர்த்த₂ம் சொல்லிற்று; ''மற்றைநங்காமங்கள் மாற்று'' என்று - நமஸ்ஸில் அர்த்த₂ஞ்சொல்லிற்று; நடுவே நமஸ்ஸு கிடக்கிறது ஸ்வரூப உபாயங்களிரண்டிலும் கிடக்கிற விரோதி₄ போக்குகைக்கிறே.

ப்ராப்யருசிகார்யமான த்வரையும், அதின் ப₂லமான கலக்கமும் விளைந்த ஆர்த்தியும், இதெல்லாவற்றுக்குமடியான ப்ராப்யாந்தரஸங்க₃நிவ்ருத்தியும், பேற் றில் அளவிறந்த பாரிப்பும், அதில் ஸ்வப்ரயோஜநத்வ நிவ்ருத்தியும் சொல்லா நின்றுகொண்டு, ப்ரப₃ந்த₄ தாத்பர்யத்தையும் நிக₃மிக்கிறார்கள். ஸத்வோத்தர காலத்திலே உணருகையும், ப₄க₃வத்ஸந்நிதி₄யேற வருகையும், ஸேவிக்கையும், விக்₃ர ஹாநுப₄வம் பண்ணுகையும், தத்ஸம்ருத்₃தி₄யை ஆஶாஸிக்கையும், தன்பக்கலிலே ஆபி₄முக்₂யம் பண்ணுவித்துக்கொள்ளுகையும், அவதார ப்ரயோஜநங்களை விண்ணப் பஞ்செய்கையும், ஆர்த்தியை ப்ரகாஶிப்பிக்கையும், திருவுள்ளமறியப் ப₂லாந்தரஸங்க₃ நிவ்ருத்தியைக் காட்டுகையும், ஸூரிகள் பரிமாற்றத்தை அபேக்ஷிக்கையும், ஸ்வ ரூபவிரோதி₄களை அறுத்துத்தரவேணுமென்று வேண்டிக்கொள்ளுகையும், கைங்கர்ய ருசியுடையார்க்கு ஸ்வரூபமிறே. இவை எல்லாம் நிழலெழும்படி க்ருஷ்ணன் திருமுகத்தைப்பார்த்து விண்ணப்பஞ்செய்கிறார்கள். 29.

இனிப்போய்ச் செய்யுந்தவந்தானென்?'' என்னுமவர்களிறே. நாங்கள் சிந்தயந்தி பட்டதுபடாமல்கிடாய். 'அத்தனையோ வேண்டுவது?' என்றான்; (நங்காமம் மாற்று) ஆட்கொள்ளுமிடத்திலே எங்களுக்கொரு இந்த்3ரியசாபல்யம் நடக்கும்; அந்த ஸௌந்த3ர்ய ரூபமான அந்தராயத்தையும் பரிஹரிக்கவேணும். 'அத்தனையோ?' என்றான்; (காமங்கள்) என்கிறார்கள். இருவர் கூடப் பரிமாறுநின்றால் அத்தால் பிறக்கும் இனிமை இரண்டு தலைக்கும் ஒத்திருக்குமிறே. விஷயவைலக்ஷண்யத் தாலும் ஆஶ்ரயத்தின் இனிமையாலும் மிகவும் ப்ரீதிரூபமாயிறே பரிமாற்ற மிருப்பது. அதில் ஸ்வரூபத்துக்கு விரோதி4யான அஹங்கார கர்ப்ப4மான அடிமை யும் அபுருஷார்த்த2மிறே. நாங்கள் செய்கிற அடிமைகண்டு நீயுகந்தால் அவ்வுகப் புக்கண்டுவரும் உகப்பொழிய போ4க்த்ருத்வப்ரதிபத்தியும் மதீ3யத்வ ப்ரதிபத்தி யும் போ4ஜநத்துக்கு க்ரிமிகேஶங்கள்போலே பொகடவேண்டும்படி விரோத4மாயிறே யிருப்பது. அந்தவிரோதி4களையும் தவிர்த்துத் தந்தருளவேணுமென்கிறார்கள். ஸ்வரூப விரோதி4யும் ஸாத4நவிரோதி4யும் ப்ராப்திவிரோதி4யும் ப்ராப்யவிரோதி4யும் என்று நாலு வகையாயிறே விரோதி4கள் இருப்பது; அதில் ஸாத4நவிரோதி4யும் ப்ராப்திவிரோதி4யும் கீழிற் பாட்டிலே-கழிந்தமை சொல்லிற்று; மற்றையிரண்டும் இப்பாட்டிலே கழிக்கிறது.

''கறவைகள் பின்சென்று'' (28) என்று — உபாயாந்தரத்தில் அநந்வயம் சொல்லுகையாலும், ப்ராப்திப்ரதிப3ந்த4கத்துக்கு க்ஷாபணம்பண்ணுகையாலும் இரண் டுங் குலைந்ததிறே; ப்ராப்யருசியும் த்வரையும் ஆர்த்தியும் விளைந்து பா3ஹ்யங்களில் ஸங்க3ம் குலைந்தபடி சொல்லுகையாலே ஸ்வரூபவிரோதி4 கழிந்தபடி சொல்லிற்று இப்பாட்டில் முற்கூற்றால்; ''மற்றை நங்காமங்கள் மாற்று'' என்கிறத்தாலே—ப2ல விரோதி4யைக் கழிக்கிறது. ''கோவிந்தா—உனக்கு'' என்று அகாரார்த்த2ஞ் சொல் லிற்று; ''உனக்கே'' என்று - உகாரார்த்த2ஞ்சொல்லிற்று; ''நாம்'' என்று — மகாரார்த்த2ஞ்சொல்லிற்று; ''உன்றன்னோடுற்றோமேயாவோம்'' என்கிறவிடத் தாலே - நாராயணபத3த்தில் அர்த்த2ஞ்சொல்லிற்று; ''எற்றைக்கும் ஏழேழ் பிற விக்கும்'' என்கையாலே-சதுர்த்2யர்த்த2ம் சொல்லிற்று; ''மற்றைநங்காமங்கள் மாற்று'' என்று - நமஸ்ஸில் அர்த்த2ஞ்சொல்லிற்று; நடுவே நமஸ்ஸு கிடக்கிறது ஸ்வரூப உபாயங்களிரண்டிலும் கிடக்கிற விரோதி4 போக்குகைக்கிறே.

ப்ராப்யருசிகார்யமான த்வரையும், அதின் ப2லமான கலக்கமும், விளைந்த ஆர்த்தியும், இதெல்லாவற்றுக்குமடியான ப்ராப்யாந்தரஸங்க3நிவ்ருத்தியும், பேற் றில் அளவிறந்த பாரிப்பும், அதில் ஸ்வப்ரயோஜநத்வ நிவ்ருத்தியும் சொல்லா நின்றுகொண்டு, ப்ரப3ந்த4 தாத்பர்யத்தையும் நிக3மிக்கிறார்கள். ஸத்வோத்தர காலத்திலே உணருகையும், ப4க3வத்ஸந்நிதி4யேற வருகையும், ஸேவிக்கையும், விக்3ர ஹாநுப4வம் பண்ணுகையும், தத்ஸம்ருத்3தி4யை ஆஶாஸிக்கையும், தன்பக்கலிலே ஆபி4முக்2யம் பண்ணுவித்துக்கொள்ளுகையும், அவதார ப்ரயோஜநங்களை விண்ணப் பஞ்செய்கையும், ஆர்த்தியை ப்ரகாஶிப்பிக்கையும், திருவுள்ளமறியப் ப2லாந்தரஸங்க3 நிவ்ருத்தியைக் காட்டுகையும், ஸூரிகள் பரிமாற்றத்தை அபேக்ஷிக்கையும், ஸ்வ ரூபவிரோதி4களை அறுத்துத்தரவேணுமென்று வேண்டிக்கொள்ளுகையும், கைங்கர்ய ருசியுடையார்க்கு ஸ்வரூபமிறே. இவை எல்லாம் நிழலெழும்படி க்ருஷ்ணன் 29.
திருமுகத்தைப்பார்த்து விண்ணப்பஞ்செய்கிறார்கள்.

# ஈராயிரப்படி — இருபத்தொன்பதாம் பாட்டு.

அவ:— இருபத்தொன்பதாம் பாட்டு. A எம்மாவீட்டில் ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறது.

வ்யா:— (சிற்றஞ் சிறுகாலே) 1. "ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்₂தா₂ய" B "காலைநன்ஞானம்" இத்யாதி₃கள்; முன்பு ஒரு போகியாக உறக்கம்; பின்பு ஒரு போகியாக உணர்ச்சி; நடுவில் காலமிறே சிற்றஞ்சிறுகாலையாவது. பெண்களாகையாலே சிற்றஞ்சிறு காலம் என்றபடி. யோகிகளும் உணர்வதுக்கு முன்னே சிறுபெண்களான நாங்கள் உணர்ந்த இத்து₄ர்மஹாநியைப் பாராய். C "என்னில் முன்னம் பாரித்து" என்று—நீ உணருங் காலத்திலே நாங்கள் உணர்ந்து வந்தோமென்கை.

(வந்து) இரண்டு ஸ்வரூபத்தையும் அழித்தோம். ஸ்வரூபம் நிலையிட்டவர்களிறே. 2. "பத்₃ப்₄யாமபி₄க₃மாச்சைவ" என்று சொல்லுகையாலே அவனிருந்தவிடத்தே ஓரடியிட்டுச் செல்ல, இட்டபதந்தோறும் நெஞ்சுளுக்கும்; பொறுக்கமாட்டானென்கை. (உன்னைச் சேவித்து) அத்தலை இத்தலையாயிற்று; ஸேவ்யரான தாங்கள் ஸேவகரானபடி. 3. "ஸுக்₃ரீவம் நாத₂மிச்ச₂தி"—தாமேயிறே பார்த்திருப்பார். ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானை முடிசூட்டுகைக்காக லங்கைக்கு நடந்தவனன்றோ.

(உன்பொற்றாமரையடியே) ஆற்றாமையும் ஸ்வரூபமாகையாலே அடைவுகெட மேலே விழுந்தபடி. (அடியே போற்றும் பொருள்) சூடவந்த பூவுக்கு விலையிடுவாரைப்போலே. உபாயோபேயங்களிரண்டும் தானே; ஸ்வீகாரமாத்ரத்திலே நிற்கப் போகாமையாலே போற்றுகிறபடி. ருசிக்கவ்வருகுபட்டால் ப₂லத்திலே முளுமத்தனை. கவிழ்ந்துநிற்கச்செய்தே விண்ணப்பம் செய்கிறது. (கேளாய்) நாங்களும் முன்னே நிற்கில் வார்த்தை கேட்கவொண்ணாதோ? என்கை.

(பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து நீ) நீயன்றோ முற்றீமை செய்தாய்; என்றும் கேட்டே போகக் கடவதாயிருக்கிற நீ வந்து இக்குலத்தே பிறந்து இட்டீடுகொண்டு எளியனாய் என்கை. நாங்கள் நீயிருந்தவிடத்தே வந்து பிறந்தோமோ? வஸிஷ்டா₂தி₃கள் விலக்குமிடத்தே வந்தோமோ? (குற்றேவலெங்களைக் கொள்ளாமல் போகாது) பெரும் பசியராயிருப்பார் சோற்றை வாங்கி எச்சில் படுத்திப் பின்னை உண்ணாதே பொகட்டுப்போமாபோலே, ஶப்₃தா₃தி₃கள் போ₄க்₃யாதி₃களாக இருக்கிற எங்களை வடிவழகைக்காட்டி D "உண்ணும் சோறு" முதலானவையெல்லாம் நீ என்னப்பண்ணி ஸ்வரூபானுரூபமான அடிமை தாராதே இருக்கலாமோ? என்கை.

(இற்றைப் பறையிதயாதி₃) "இவர்கள் நம்மை விடார்களே இனி" என்று பறையெடுத்துக்கொடுக்க ஒரு கையாலே கும்பிட்டு ஒரு கையாலே ப்ரயோஜனங்

A திருவாய் 2-9 . B திருவிருத்தம் 93 C திருவாய் 9-6-10 D திருவாய் 6-7-1

கொண்டு போமவர்களோ நாங்கள்? (கோவிந்தா) பசுக்களின் பின்னே திரிவார்க்குப் பெண்கள் ஶ்ரோத்ரியராகப்போமோ?

ஆனால் செய்ய வேண்டுவதென்னென்ன; (எற்றைக்கும்) 1. "நகாலஸ்தத்ர வை" என்கிற பரமபதத்திலேயானாலும், (ஏழேழ் பிறவிக்கும்) இங்கே பிறந்தாலும் ஒக்கப்பிறக்கவேணும். இளையபெருமாள் காட்டிலும் படைவீட்டிலும் அடிமை செய்தாற்போலே 2. "தேவத்வே தேவதேஹேயம்" இத்யாதிப்படியேயாக வேணும் என்கிறார்கள்.

(உன்றன்னோடுற்றோமேயாவோம்) ஒரு உறவைக் குறித்து அதுவாகவேணுமென்னுதொழிந்தது எல்லாஉறவுமுறையும் நீயேயாகவேணுமென்கை. 3 . "மாதா பிதா ப்ராதா" இத்யாதியின்படியே. (உனக்கே நாமாட்செய்வோம்) உனக்கும் எங்களுக்கும் பொதுவான அடிமையன்றிக்கே உனக்கேயாகக் கொள்ளவேணும். ஸ்ரீ பரதாழ்வானைப் போலன்று. இளைய பெருமாளைப்போலே அடிமை செய்யவேணும்.

(மற்றை நங்காமங்கள் மாற்று) 4. "பரவோ நாங்பத்ர கச்சதி"போலே பண்ணவேணும். 29.

## நாலாயிரப்படி — இருபத்தொன்பதாம் பாட்டு

அவ:— இருபத்தொன்பதாம் பாட்டு. A எம்மா வீட்டிற்போலே ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறது. திருவாய்மொழியில் இப்ரபந்தத்துக்கு வாசி — முந்துற B நெடுமாற்கடிமையில் அர்த்தத்தை அனுபவித்துக்கொண்டு, அது நிலைநிற்கைக்காகவும் அத்தைக் காத்தூட்டுகைக்காகவும் பிற்பட A எம்மா வீட்டில் அர்த்தத்தோடே தலைக்கட்டுகிறது.

வ்யா:— (சிற்றம் சிறுகாலே) 5. "ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயேதாத்மநோ ஹிதம்" என்றும், C "காலை நன்ஞானத்துறைபடிந்தாடிக்கண் போது செய்து மாலை நன்னுவில் கொள்ளார் நினையாரவன் மைப்படியே" என்றும் சொல்லுகிறபடியே இவர்கள் அனுஷ்டிக்கிறார்கள். [காலையாவது] ஆத்மாவுக்கு வெளிச்செறிக்குங்காலம் என்றுமாம்; இக்கண்ணுக்கு இவ்வாதித்யன் வெளிச்செறிப்பு பண்ணுமாபோலே அகவாயில் கண்ணுக்கும் வெளிச்செறிப்புப் பண்ணக்கடவ ஆதித்யன் ஶ்ரிய:பதி. 6. "பாஸ்கரேண ப்ரபா யதா". [ஞானமாகிறது] D "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே ஶ்ரிய:பதியே தனக்கு விஷயமாகவுடைய ஜ்ஞானம். [நன்ஞானமாகிறது] ப்ராப்யப்ராபகங்களிரண்டும், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக அம்மிதுனமே நமக்குப் பலம் தரக்கடவதென்று அத்யவஸாயம். [துறைபடிந்தாடுகையாவது] குருபரம்பரையில் சொல்லுகிற க்ரமத்தாலே எம்பெருமானைப் பற்றுகை.

A திருவாய் 2-9 B திருவாய் 8-10 C திருவிருத்தம் 93 D முதல் திருவ 67

பகல் பரஹிம்ஸை பண்ணி, இராவெல்லாம் மறந்து கிடந்து உருகி, விடிந்தால் பரஹிம்ஸையிலே புகும். நடுவே அல்பகாலம் ஸத்வம் தலையெடுத்து வெளிச்செறிப்புள்ள காலம்; மனஸ்ஸு ஸ்திரமாம் காலம். முன்பு தான் தனக்குக் கடவனாயிருக்கும். பின்பு எம்பெருமானுக்கு பரமாயிருக்கும். நடுவிலுணர்ச்சியிறே இக்காலம். மாறனேர் நம்பி சரமதசையில் கலக்கங்கண்டு பயப்பட்ட பெரியநம்பிக்கு எம்பெருமானார் பயந்தீர அருளிச்செய்த ஶ்லோகங்களிவை. 1. "ஸ்திதே மநஸி" இத்யாதி. இவை எங்ஙனேயென்ன; ஸ்ரீவராஹ எம்பெருமான் ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு அருளிச்செய்தாரென்றார். ஸ்ரீ வராஹவெம்பெருமான் உம்மைப்போலே ஆஶ்ரிதபக்ஷபாதி; அவன் வார்த்தையொழிய என்போல்வார் மத்யஸ்தர் வார்த்தையுண்டாகில் சொல்லுமென்ன, 2. "நமே பக்த: ப்ரணஶ்யதி" இத்யாதிகளுடைய உம்மைப்போல்வார் வார்த்தையாயிராநின்றதென்ன, "இந்த ஜ்ஞானமுடையவனுக்குப் புநர்ஜன்மமில்லை என்னுமிடத்துக்கு ப்ரமாணமுண்டோ?" என்ன, 3. "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்று உண்டென்றருளிச் செய்தார். இவற்றைக் கொண்டு பெரியநம்பி ப்ரீதரானார்.

அந்திமஸ்ம்ருதியில்லையென்று அஞ்சவேண்டா, புநர்ஜந்மமுண்டென்று அஞ்சவேண்டா இந்த ஜ்ஞானமுடையவனுக்கு. ஆளவந்தார் கோஷ்டியிலே, "ஸம்ஸாரிக்கு எம்பெருமான் ஸந்நிதியில் விண்ணப்பம் செய்யவடுப்பதென்?" என்ன, சில முதலிகள் 4. "மூடோயம்" இத்யாதி க்ஷத்ரபந்துவின் ஶ்லோகத்தை விண்ணப்பம் செய்கை அழகிதென்ன, ஆளவந்தார் 'அதிலே பெருந்தேவையுண்டு; நமக்காவது 5. "ஸோஹம்தே" என்கிற காளியன் ஶ்லோகமே' என்றருளிச்செய்தார். A "பகல் கண்டேன் நாரணனைக் கண்டேன்"—என்னுடைய ஆதித்யனுதித்தான்; அஸ்தமியாத ஆதித்யனையும் கண்டேன்; உறங்காத என்னையும் கண்டேன்; முன்பு ஒரு போகியாக உறக்கம். பின்பு ஒரு போகியாக உணர்ச்சி. பெண்களாகையாலே "சிற்றம் சிறுகாலே" என்றபடி; "வெட்டவெடியாலே" என்னுமாபோலே. யோகிகளும் உணர்வதற்கு முன்னே சிறுபெண்களான நாங்கள் உறங்கக்கடவ போதிலே உணரக்கடவ இத்தர்மஹாநியைப்பாராய். B "என்னில் முன்னம் பாரித்து" என்று நீ உணரும் காலத்திலே நாங்களுணர்ந்து வந்தோமென்கை.

(வந்து) இரண்டு ஸ்வரூபத்தையுமழித்தோம். ஸ்வரூபம் நிலையிட்டவர்களிறே. (வந்து) 6, "பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்ஶநேந ச" என்று சொல்லுகையால் அவனிருந்தவிடத்தே நாலடியிட்டுச் செல்லில், இட்டஇட்டவடிதோறும் நெஞ்சுளுக்கும்; பொறுக்கமாட்டானென்கை. (வந்துன்னைச் சேவித்து) உன்னை வேண்டாதே ஸாதநகாலத்திலே ரஸிக்கிற உன்னைச்சேவித்து. 7. "ஸுஸுகம் கர்த்துமவ்யயம்". அதுக்குமேலே ஒரு அஞ்ஜலி உண்டாறுக்கமாட்டாத உன்னைச் சேவித்து. (உன்னைச்சேவித்து) அத்தலை இத்தலையாயிற்றே. ஸேவ்யரான நாங்கள் ஸேவகரானபடி. 8 "ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்று காலம் பார்த்திருப்பார்; லங்கையில் சென்று ஸ்ரீவிபீஷணாழ்வானைக் காலம்பார்த்திருந்தவனன்றே.

---

A இர-திருவ 81. B திருவாய் 9-6-10.

(உன் பொற்றாமரையடியே) ஆற்றாமை ஸ்வரூபமாகையால் அடைவுகெட மேல் விழுந்தபடி. (அடியே போற்றும் பொருள்) சூடவந்த பூவுக்கு விலையிடுவாரைப் போலே; உனதுபாலென்றுமாம். உபாயோபேயங்களிரண்டும் தானே. ஸ்வீகாரமாத்ரத்தில் நிற்கப்போகாமை போற்றுகிறபடி. ருசிக்கவ்வருகுபட்டால் ஃபலத்திலே மூளுமத்தனை. கவிழ்ந்து நிற்கச்செய்தே விண்ணப்பம் செய்கிறது. (கேளாய்) இவர்கள், அடியே போற்றாநிற்க, தான் இவர்கள் காலைப் பிடிக்கக் கணிசியாநின்றானென்கை. 'நாங்கள் முன்னே நிற்கில் வார்த்தைகேட்கவொண்ணாதோ?' என்கை.

(பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த நீ) 'கேட்கப்புகாநின்றதோ?' என்ன; "நீயன்றோ முத்தீமை செய்தாய்" என்ன; "எங்ஙனே?" என்ன; என்றும் கேட்டேபோகக்கடவதான நீ வந்து இக்குலத்திலே பிறந்து இட்டீடுகொண்டு எளியனானையென்கை. நாங்கள் நீயிருந்தவிடத்திலே வந்து பிறந்தோமோ? வஸிஷ்டாதிகள் விலக்குமிடத்தே வந்தோமோ? (குற்றேவலெங்களைக் கொள்ளாமல் போகாது) பெரும்பசியிலே உண்ணப்புக்கவன் கலத்திலே கேஶலேஶங்கண்டால் பின்னே உண்ணாதே பொகட்டுப்போமாபோலே, ஶப்தாதி விஷயங்கள் தாரகமாயிருக்கிற எங்களை வடிவழகைக்காட்டி A "உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம்பெருமான்" என்னப்பண்ணி, ஸ்வரூபாநுரூபமான அடிமை தாராதே போகைக்கு உன் தரமோ? என்கை. B "உண்டிட்டாயினியுண்டொழியாய்". நீர் விளாவி வைத்தோ போகப்பார்த்தது? 1. "நிவேதயதமாம் க்ஷிப்ரம்" 2. "அஹமந்நமஹமந்நமஹமந்நம்". (எங்களை) 3. "வைதர்ம்யம் நேஹ வித்யதே". (போகாது) உன் தரமோ நாங்கள்; நீதான் உனக்குரியையோ? C "என்னை நெகிழ்க்கிலும்" இத்யாதி. நப்பின்னைப் பிராட்டி பரிகரம். ஆணையிட்டவர்கள் பெண்பிள்ளையன்றோ?

(இற்றைப்பறைகொள்வானன்றுகாண்) இவர்கள் சொல்லிற்றுக்கேட்டு, 'இவர்கள் நம்மை விடார்களாயிருந்தார்கள்; நம்மைத்தடுத்தும் வளைத்தும் கொள்வர்கள்" என்று, "பறையை யெடுத்துக் கொள்ளுங்கோள்" என்ன, 4. "தேஹி மே ததாமி தே" என்று ஒரு கையாலே கும்பிட்டு ஒருகையாலே ப்ரயோஜனம் கொண்டு போமவர்களோ நாங்கள்? (கோவிந்தா) யதாஶ்ருதக்ராஹியாயிருந்தாய். 'கெடுவாய்! நாங்கள் இற்றைப் பறைகொள்வானன்றுகாண்' என்று பட்டர் அருளிச்செய்த வார்த்தை. இடையனாகையாலே அபிதாநவ்ருத்தி போமித்தனை; தாத்பர்யவ்ருத்தி போகாதென்கை. D "போகுநம்பி" என்று சொல்ல, வரநிற்குமவனல்லையோ? என்கை. பசுக்களின் பின்னே திரிவார்க்கு ஶ்ரோத்ரியராகமுடியுமோ?

ஆனால் செய்யவேண்டுவதென்னென்ன:— (எற்றைக்கும்) 5. "ந காலஸ்தத்ர வை ப்ரபு:" என்று சொல்லுகிற பரமபதத்தில் போனாலும், (ஏழேழ் பிறவிக்கும்) இங்கே பிறந்தாலும் ஒக்கப்பிறக்கவேணும். க்ருஷ்ணனும் பெண்களுமாய், புறப்படில் அமையுமென்கை. அவனும் E "எதிர்சூழல்" என்று இவர்களைப் பெறவேணுமென்று முற்கோலிப் பிறவாநிற்கும் என்றுமாம். இளையபெருமாள் படைவீட்டிலும் காட்டிலுமொக்க அடிமைசெய்தாற்போலே, 6. தேவத்வே தேவதேஹோயம் மனுஷ்யத்வே ச மாநுஷீ" ஆகவேணுமென்கிறார்கள்.

---

A திருவாய் 6—7—1. B திருவாய் 10-10-6. C திருவாய் 1-7-8. D திருவாய் 6-2-2. E திருவாய் 2-7-6.

(உன் தன்னோடுற்றோமேயாவோம்) ஒருறவைக்குறித்து அதுவாகவேணு மென்னுதொழிந்தது-எல்லாவுறவும் நீயேயாகவேணுமென்கை. 1. “மாதா பிதா ப்4ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்3க3திர் நாராயண:” என்றும், 2. “க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணப3லா: க்ருஷ்ண நாதா2ஶ்ச பாண்ட3வா:” என்றும் A “சேலேய்கண்ணியரும்” இத்யாதி3ப்படியே. (உற்றோமேயாவோம்) உதி3ரத்தெறிப்புண்டாகவேணும். 3. “நாராயணஸ்த்வம்”. 4. “ப4க்தா நாத்மஶரீரவத்”. இளையபெருமாள் வேலேற்றபோது நீ பட்டாப்போலே உனக்கொன்றுவந்தால் நாங்கள் முடியும் ப்ரக்ருதிகளாகவேணும். (உனக்கே) உனக்குமெனக்கும் பொதுவான அடிமையன்று. B “எனக்கேயாட் செய்” என்னுமாபோலே ஆட்செய்யவேணும். ஸ்ரீப4ரதாழ்வானைப்போலே கிடவென்ற விடத்திலே கிடக்குமவர்களன்று. இளையபெருமாளைப் போலே 5. “அஹம ஸர்வம் கரிஷ்யாமி” என்று அடிமைசெய்து உஜ்ஜீவிக்கவேணுமென்கை.

(மற்றை நங்காமங்கள் மாற்று) கையும் திருவாழியுமாய் நாங்கள் தொழ, மேன்மை காட்டியிருக்கவொண்ணுது. நீ ‘பெண்காள்’ என்ன, நாங்கள் ‘க்ருஷ்ணனே’ என்று ஊடினுர் சிறுமுற்றத்திலே உன்னை ஒரு பாச்சல் பாயவேணும். 6. “ப4ாவோ நாந்யத்ர க3ச்ச2தி” என்றவனை இசைவித்தாருண்டோ? எங்கள் வாஸனையாலும் உன் தோள்தடிப்பாலுமாகவேண்டா; உன் தரமாகாமலிருக்கிற இருப்பைத் தவிர்க்கவேணும். 29.

## ஸ்வாபதே3ஶவ்யாக்2யாநம்—இருபத்தொன்பதாம்பாட்டு

அ—இருபத்தொன்பதாம்பாட்டு. (சிற்றம்இத்யாதி3) இப்பாட்டில், உபேய ஸ்வரூபத்தை விவரிக்கிருர்கள்.

வ்யா—(சிற்றம்இத்யாதி3) ஸத்வோத்தரமான காலத்திலே ஆற்ருமையாலே வந்து, வருகை மிகை என்று இருக்கும் உன்னைச்சேவித்து. (உன் பொற்ருமரை இத்யாதி3) ப்ராப்தமாய், ஸ்ப்ருஹணீயமாய், ஸௌக3ந்த்4யஸௌகுமார்ய லாவண்யங்களாலே பரமபோ4க்3யமான உன் திருவடிகளையே மங்க3ளாஶாஸநம் பண்ணுகைக்கு ப்ரயோஜநத்தைக் கேளாய். (பெற்றம் இத்யாதி3) ஸ்வரக்ஷ்ய ரக்ஷணம்பண்ணித் தான் ஜீவிக்கிற குலத்தில் பிறந்த நீ. ரக்ஷகனை நீ ரக்ஷ்யரான எங்களைக் கைங்கர்யம் கொள்ளாமலிருக்கவொண்ணுது; ரக்ஷணருபகார்யமில்லாதபோது ரக்ஷ்யரக்ஷகபா4வம் ஜீவியாதிறே. இப்படி அபேக்ஷிக்க, “கைங்கர்யமாவது என்? நீங்கள் முதலில் சொன்னபடியே, பறையைக் கொள்ளுங்கோள்” என்று பறையைக்கொடுக்க; (இற்றைப்பறைகொள்வானன்றுகாண் கோவிந்தா) இந்தப்பறையைக் கொள்ளுகிற பேர்களன்று நாங்கள்: நீ தாத்பர்யக்3ராஹி யன்றியே யதா2ஶ்ருதக்3ராஹியாயிருந்தாய். ‘ஆனல், உங்களுக்கு அத்தால் ஏது?’ என்ன; (எற்றைக்கும் இத்யாதி3) ஸர்வதே3ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் உன்னோடே ஏகத4ர்மியென்னலாம்படி ஸம்ப3ந்தி4த்திருக்கக்கடவோம். (உனக்கே இத்யாதி3) ஸம்ப3ந்தி4த்திருந்து எங்கள் ரஸத்துக்கு உறுப்பாகையுமன்றிக்கே, உனக்கும் எங்களுக்கும் பிறக்கும் ரஸத்துக்கே உறுப்பாகையுமன்றிக்கே, உன்னுடைய ரஸத்துக்கே உறுப்பாக அநந்யார்ஹஶேஷபூ4தரான நாம்

A திருவாய் 5—1—8. B திருவாய் 2—9—4.

## முப்பதாம் பாட்டு

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை யணிபுதுவைப்
பைங்கமலத் தண்டெரியற் பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதுந் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்குந் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

பதவுரை :— வங்கம் கடல்—கப்பல்களையுடைய திருப்பாற்கடலை, கடைந்த—(தேவர்களுக்காகக்) கடைந்த, மாதவனை — ஶ்ரிய:பதியான, கேசவனை—கண்ணபிரானை, திங்கள் திரு முகத்து சே இழையார்—சந்திரன் போன்ற அழகிய முகத்தையும் செவ்விய ஆப₄ரணங்களையுமுடைய ஆய்ச்சிகள், சென்று — அடைந்து, இறைஞ்சி — வணங்கி, அங்கு— அத்திருவாய்ப்பாடியில், அப் பறை கொண்ட ஆற்றை — பிரஸித்₃த₄மான (தங்கள்) புருஷார்த்த₂த்தைப்பெற்ற வ்ருத்தாந்தத்தை, அணி புதுவை — அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் உதித்த, பை கமலம் தண் தெரியல் பட்டர்பிரான் — பசுமை பொருந்திய தாமரை மலர்களினுலான குளிர்ந்த மாலையையுடைய பெரியாழ்வாருடைய (திருமகளான), கோதை — ஆண்டாள், சொன்ன — அருளிச்செய்த, சங்கம் தமிழ் மாலை முப்பதும் — திரள்திரளாக அநுப₄விக்க வேண்டிய தமிழ்மாலையாகிய இம்முப்பது பாசுரங்களையும், தப்பாமே — தப்பாமல், இங்கு— இந்நிலத்தில், இ பரிசு—இவ்விதமாக, உரைப்பார்—ஓதுமவர்கள், ஈர் இரண்டு மால் வரை தோள்—பெரிய மலைபோன்ற நான்கு திருத்தோள்களையுடையவனும், செம் கண் திருமுகத்து —சிவந்த கண்களையுடைய திருமுகத்தையுடையவனும், செல்வம்—ஐஸ்வர்யத்தையுடையவனும், திருமாலால்—ஸ்ரீமானுமான எம்பெருமானலே, எங்கும்—எல்லாவிடத்தும், திரு அருள் பெற்று — (அவனுடைய) க்ருபையைப்பெற்று, இன்புறுவர் — ஆனந்தமுறுவர்.

---

ஸ்வா:— தா₃ஸவ்ருத்தியைப் பண்ணக்கடவோம் (மற்றைஇத்யாதி₃) இதுக்குப்புறம்பான நம்முடைய அபி₄மாநக்₃ரஸ்தமான ப்ரயோஜநங்களைப் போக்கு.

கீழ் ''பறை'' என்று மறைத்துச்சொன்ன அர்த்த₂த்தை, இப்பாட்டில், அவனுக்கு உகப்புக்காகப் புகராகப்பண்ணும் அடிமையென்று விஶதீ₃கரித்துச் சொல்லுகிறார்கள். ''பெற்றம்மேய்த்துண்ணும் குலம்'' என்று-ஜ்ஞாநஜந்மத்தைச் சொல்லுகிறது—ஜ்ஞாதாக்கள் ஆந்ருஶம்ஸ்ய ப்ரதா₄நராய்ப் பராநர்த்த₂ம் பொறுக்கமாட்டாதே பிறர் உஜ்ஜீவிக்கும்படி ஹிதப்ரவர்த்தநம் பண்ணுகையைப் பற்ற. ''பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்'' என்றவர்கள் தாங்களே ''குற்றேவல் எங்களைக் கொள்ளாமற்போகாது'' என்று கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கையாலே கைங்கர்யந்தானும் மங்க₃ளாஶாஸநரூபமானபடியாலே மங்க₃ளாஶாஸநத்துக்குப் ப₂லமாக அவன் கொடுக்கவேண்டியதும் இவர்கள் கொள்ளவேண்டியதும் மங்க₃ளாஶாஸநமே என்றதாய்த்து.

''சிற்றம் சிறுகாலே-போற்றும்பொருள் கேளாய்'' என்கையாலே - ரஜஸ் தமஸ்ஸுக்களாலே கலங்கி தே₃ஹாநுப₃ந்தி₄களான த்₃ருஷ்ட ப₂லங்களை அடியோங்கள் அபேக்ஷித்தாலும் ஹிதபரனன நீ கேள்விகொள்ளவும் கடவையல்லை, கொடுக்கக்கடவையுமல்லை என்றதாய்த்து. 29

# மூவாயிரப்படி — முப்பதாம் பாட்டு

அவ :— a நிக³மத்தில், இப்ரப³ந்த₄ம் கற்றார், பிராட்டியாலும் எம்பெருமானாலும் ஸர்வகாலமும் விஷயீகரிக்கப்படுவர்கள் என்கிறார்கள். b கற்றார்க்கு b₂ அநுஷ்டி₂த்தாரோபாதியும், b₃ அநுகரித்தாரோபாதியும் ப₂லம் ஸித்₃தி₄க்குமென்கை. c ''கன்றிழந்த தலைநாகு தோற்கன்றுக்கும் இரங்குமாபோலே இப்பாசுரங் கொண்டு புக நமக்கும் ப₂லிக்கும்'' என்று ப₄ட்டர் அருளிச்செய்வர்.

வ்யா :— d (வங்கக்கடல்) e கடல் கடையாநிற்க, மரக்கலம் அலையாதபடி கடைந்த நொய்ப்பம். f கடைந்தபோது சுழன்று வருகையாலே கடலடைய மரக்கலமாய் நின்றபடி என்றுமாம். g ப்ரயோஜநாந்தரபரருக்கும் உடம்பு நோவக் கடல்கடைந்து அபேக்ஷிதஸம்வித₄ாநம் பண்ணும் ஶீலவானென்கை. h க்ருஷ்ணனையாகில் கவிபாடிற்று, க்ஷீராப்₃தி₄மத₂நம் பண்ணினவனைச் சொல்லுகை பின்னைச் சேருமோ? என்னில்: — A ''விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்டவெம்பெருமானே'' என்று — தே₃வகார்யமென்று

---

பெ. அ. முப்பதாம் பாட்டு. (வங்கக்கடல் இத்யாதி₃) a ''திருமாலால் எங்கும் திருவருள் பெற்றின்புறுவர்'' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார் (நிக₃மத்தில் இத்யாதி₃) b திருவருள் பெற்றின்புறுகையை த்₃ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிறார் (கற்றார் இத்யாதி₃) b₂ ''சேயிழையார் சென்றிறைஞ்சி'' என்றத்தைப் பற்ற (அநுஷ்டி₂த்தார்) என்றது. b₃ ''கோதை சொன்ன'' என்றத்தைப் பற்ற (அநுகரித்தார்) என்றது. c அநுஷ்டி₂த்தார்க்கும் அநுகரித்தார்க்குமுள்ள ப₂லம் இத்தைச் சொன்ன மாத்ரத்திலே ஸித்₃தி₄க்குமோவென்ன' அருளிச்செய்கிறார் (கன்றிழந்த இத்யாதி₃).

d, e, f ''கடல்கடைந்த'' என்னாமல், ''வங்கக்கடல்'' என்று விஶேஷித்ததுக்கு இரண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (கடல் இத்யாதி₃ வாக்ய த்₃வயத்தாலே) e₂ நொய்ப்பம் - ஸாமர்த்₂யம். d திருப்பாற்கடலுக்கு வங்கஸம்ப₃ந்த₄ம் சொல்லுகிறது - இந்தக்கட

---

சி, அ. முப்பதாம் பாட்டு. (வங்கக்கடல்) b₂ (அநுஷ்டி₂த்தார்) கோ₃பிமார் b₃ (அநுகரித்தார்) ஆண்டாள். c பரமப₄க்தியுண்டான நாய்ச்சியார்க்குண்டானது ஶப்₃த₃மாத்ரமுண்டானார்க்கு வருமோ? என்ன அருளிச்செய்கிறார் (கன்றிழந்த தலைநாகித்யாதி₃) d, e, f ''கடல் கடைந்த'' என்னாமல் ''வங்கக்கடல்'' என்று விஶேஷிக்கிறதுக்கு இரண்டு தாத்பர்யம். கடல் கடையாநிற்கச்செய்தே அதுக்குள்ளே இருக்கிற மரக்கலம் அலையாதபடி கடைந்த நொய்ப்பமென்னுதல்; கடைந்தபோது ஸமுத்₃ரம் சுழன்று வருகையாலே அதுக்குள்ளே இருக்கிற மரக்கலங்கள் சுழன்று வருமாகையாலே கடலடைய மரக்கலமாய் நின்றபடி என்னவுமாம். e₂ (நொய்ப்பம்) — ஸாமர்த்₂யம். d வங்கம் — மரக்கலம்; திருப்பாற்கடலுக்கு வங்க ஸம்ப₃ந்த₄ம் சொல்லுகிறது இந்தக் கடல் ஸாம்யத்தைப் பற்ற. g ''வங்கக்கடல் கடைந்த'' என்று க்ஷீராப்₃தி₄மத₂நம் பண்ணினவனைச் சொல்லுவானென்? என்ற ஶங்கைக்கு ஒரு பரிஹாரமருளிச்செய்கிறார் (ப்ரயோஜ

---

A பெரிய திரு 6-1-2

ஒரு வ்யாஜத்தையிட்டுப் பெரியபிராட்டியாகிற பெண்ணமுதத்தைப் பெறுகைக்காகக் கடல்கடைந்தபடி — ஊரார் கார்யத்தை ஒரு வ்யாஜமாக்கிப் பெண்களைப் பெறுகைக்காக நோன்பிலே அந்வயிப்பித்த க்ருஷ்ணனுடைய ஸ்வபாவத்தோடு ஸத்ருஶமாயிருக்கையாலே சொல்லுகிறார்கள். i (மாதவனை) j ஆஶ்ரயணீயமுமாய், போக்யமுமாயிருக்கும் தத்வம் லக்ஷ்மீஸநாதமாயிருக்கும் என்கை. k ஆஶ்ரயித்தார் குற்றத்தைப் பொறுப்பித்து அபேக்ஷிதங்களைச் செய்விப்பார் அருகே உண்டென்கை. (கடல்கடைந்த மாதவனை) கடல்கடைந்து பிராட்டியை லபித்தவனை. l (கேசவனை) m விரோதிநிரஸநஸ்வபாவனை. n ஸ்த்ரீத்வப்ரயுக்தமான ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்யஶேஷத்வத்தையும் போக்கினவனை. ''(மாதவனைக் கேசவனை) o A 'அலைகடல் கடைந்து அதனுட் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே, விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே' என்கிறபடியே — தான் ஸாக்ஷாத் அம்ருதத்தையுண்டு ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக் கொடுத்தான்'' என்று பட்டர் அருளிச்செய்வர்.

p (திங்கள் $p_2$ திருமுகம்) q க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தாலே குளிர்ந்து $q_2$ மலர்ந்த முகம். r ''கதிர்மதியம்போல் முகத்தான்'' (1) என்று அநபிபவநீயத்வமும் உண்டு — அங்கு; அநுகூலர்க்கேயான முகமாகையாலே ''திங்கள் திருமுகம்'' என்கிறார்கள் — இங்கு; இவனை அநுபவிப்பார் முகமும் இப்படியே யிறே யிருப்பது. B மதிமுக மடந்தையரிறே. s (சேயிழையார்) t ''சூடகமே'' (27)

---

பெ.அ. லோட்டை ஸாம்யத்தைப் பற்ற. o 1. ''க இதிப்ரஹ்மணோ நாம''என்றத்தைப்பற்ற 'கேசவன்'' என்றதுக்கு அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (அலைகடல் இத்யாதி).

$p_2$, $q_2$ ''திரு'' என்று - விகாஸத்தாலுண்டான காந்தியைச் சொல்லுகிறதாய் அருளிச்செய்கிறார் (மலர்ந்த என்று) s, t, u, v ''சே'' என்று - அழகாய், ''இழை'' என்று - ஆபரணமாய், ''சூடகம்'' (27) இத்யாதியில் சொன்ன ஆபரணங்களாதல், க்ருஷ்ணவிஷயீ

---

சி.அ. நாந்தரேத்யாதி) h ஶங்கரபூர்வகமாக இரண்டாவது (க்ருஷ்ணனை இத்யாதி) i ''மாதவனை'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம். j முந்தினது ''கடல் கடைந்த'' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் (ஆஶ்ரயணீயமுமித்யாதி) k இரண்டாவது (ஆஶ்ரயித்தாரித்யாதி) o (கடல் கடைந்த யாதவனைக் கேசவனை) என்று பிராட்டிக்காகக் கடல் கடைந்து தான் பிராட்டியை லபித்து ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக் கொடுத்தான் என்னுதல். l, m, n ''கேசவனை'' என்றது கேஶிஹந்தாவென்று விரோதி நிரஸனம் சொன்னதுக்கு ஹார்தமான தாத்பர்யம் (ஸ்த்ரீத்வப்ரயுக்தமித்யாதி) o அன்றிக்கே ''கேசவனை'' என்றதை ''மாதவனை'' என்றத்தோடே கூட்டி 1. ''க இதி ப்ரஹ்மண:'' இதி ருத்ரவசனக்ரமேண ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நியாமகன் என்றபடியாய், தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (அலைகடல் கடைந்தித்யாதி) p, q, r ''திங்கள் திருமுகம்'' என்றதுக்கு இரண்டு பொருள். s சேய் — அழகு; இழை — ஆபரணம். s, t, u, v சேயிழைக்கு மூன்று பொருள் — (சூடகமித்யாதியும்) (க்ருஷ்ணவிஷயீகார இத்யாதியும்) (க்ருஷ்ண

---

A பெரிய திரு 6—1—2. B திருவாய் 10—9—10.

இத்யாதி3யில் தாங்கள் அபேக்ஷித்தபடியே அவனும் அவளும் கூட இருந்து பூட்டின ஆப4ரணத்தையுடையவர்கள். u க்ருஷ்ண விஷயீகாரயோக்3யதையாகிற ஆப4ரணத்தை உடையவர்கள். v க்ருஷ்ண விஷயீகாரத்தால் பிறந்த புகராலே v2 ஒருபடி ஆப4ரணம் பூண்டாற்போலேயிருக்கிறவர்கள். (சென்று) இவ்வொப்பனையோடே வரப் பார்த்திருக்குமளவல்லாத த்வரையைச் சொல்லுகிறது. (இறைஞ்சி) "அன்றிவ்வுலக மளந்தாய் அடி போற்றி" (24) என்கிறபடியே அவனுக்கு மங்க3ளாஶாஸநம்பண்ணி.

(அங்கு) திருவாய்ப்பாடியிலே. (அப்பறைகொண்ட w ஆற்றை) நாட்டுக்குப் "பறை" என்று ஒரு வ்யாஜத்தையிட்டு அடிமைகொண்டபடியை.

x (அணிபுதுவை) ஸம்ஸாரத்துக்கு நாயகக்கல்லான ஸ்ரீவில்லிபுத்தூர். y (பைங்கமலத்தண் y2 தெரியல்) z ப்3ராஹ்மணர்க்குத் தாமரைத்தாராகையாலே சொல்லுகிறது. (பட்டர்பிரான் கோதை சொன்ன) ஆண்டாள் அநுகார ப்ரகாரத்தாலே அநுப4வித்துச் சொன்ன. 1. "ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:" என்று பராஶரபுத்ரனென்று ஆப்திக்குச் சொன்னாற்போலே, பெரியாழ்வார் மகளாகையாலே சொன்ன அர்த்த2த்தில் அர்த்த2வாத3மில்லை.

a (சங்கத் தமிழ்மாலை) A "குழாங்களாய்" என்னுமாபோலே திரள் திரளாக அநுப4விக்கவேண்டும் ப்ரப3ந்த4ம். பஞ்சலக்ஷங் குடியிற் பெண்கள் திரள் திரளாக அநுப4வித்த ப்ரப3ந்த4மிறே. (தமிழ்மாலை) பிராட்டி ஆண்டாளானாற்போலே, b உபநிஷத்து தமிழானபடி. c (மாலை) d பாவநமான அளவன்றிக்கே போ4க்3யமுமாயிருக்கையும், d2 தலையாலே சுமக்கவேண்டியிருக்கையும். e (முப்பதும்

---

பெ. அ. காரமாகிற ஆப4ரணமாதல், அத்தால் வந்த புகராதல் என்று மூன்றுவித4மாக அருளிச்செய்கிறார் (சூடகம் இத்யாதி3) v2 (ஒருபடி) என்றது - முத்துப்படி, பவளப்படி என்றாற்போலே சில ஆப4ரணங்களென்றபடி.

y, z பை - பசுமையாய், கமலம் - கமலத்தினுடைய, தண் - குளிர்ந்த, தெரியல் - மாலை யென்று ஶப்3த3ார்த்த2ம் திருவுள்ளம்பற்றி, பெரியாழ்வார்க்கு அத்தை நிருபகமாகச் சொன்னதுக்கு ப4ாவம் அருளிச்செய்கிறார் (ப்3ராஹ்மணர்க்கு இத்யாதி3)

c, d மாலை - புஷ்பமாலிகையாய், அத்தாலே - இப்ரப3ந்த4த்தைச் சொல்லுகைக்கு அதுக்கும் இதுக்குமுண்டான ஸாத்3ருஶ்யத்தைக் காட்டுகிறார் (பாவநமான இத்யாதி3) d2 தலையாலே சுமக்கவேண்டியிருக்கையாவது — ஶிர:கம்பநேந அநுஸந்தி4க்கவேண்டியிருக்கை, இப்படி ஶிர:கம்பநம்பண்ணும்போது பிறர் கொண்டாடும்படியிருக்கை ஶிரோபூ4ஷணமாயிருக்கை என்றபடி. f2 'ஏகாவலி' என்றது - ஒற்றைவடமான ரத்நமாலிகை.

---

சி. அ. விஷயீகாரத்தால் பிறந்த இத்யாதி3யும்) v2 (ஒருபடி) ஓராப4ரண ஸமுத3ாயம். w ஆறு — மார்க்க3ம். x அணி — அழகு. y2 தெரியல் — மாலை. y "பைங்கமலத்தண்டெரியல் பட்டர்பிரான்" — "பைந்தண் — கமலத்தெரியல்" என்றந்வயமாய், அடிதோயக் குளிர்ந்த தாமரை மாலையையுடைய ப்3ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார். a சங்கம்—திரள்; தமிழ் மாலை — ஸமூஹமாக அனுப4விக்கவேண்டும் ப்ரப3ந்த4ம். b, d உபநிஷத்து தமிழாகையாலே பாவநத்வம். e, f "முப்பதும் தப்பாமே" என்றால் தேவைபோலே ஒன்று தப்பினாலும் ப2ல

---

A திருவாய் 2-3-11

தப்பாமே) இதில் ஒரு பாட்டும் குறையாமே. f விலையில்லாத ரத்நங்களாலே செய்த $f_2$ ஏகாவலியிலே ஒரு ரத்நம் குறைந்தாலும் நெடும்பாழா(டா)யிருக்கு மிறே; அப்படியே ஒருபாட்டுக் குறையிலும் பேரிழவாயிருக்குமென்கை.

(இங்கு) பிற்பட்ட காலத்திலே என்னுதல், ஸம்ஸாரத்திலே என்னுதல். g (இப்பரிசு உரைப்பார்) h இப்பாசுரமாத்ரத்தைச் சொல்லுவார். i திருவாய்ப் பாடியிற் பெண்கள் தாங்கள் க்ருஷ்ணநுபவம் பண்ணிப் பெற்றார்கள்; ஆண்டாள் அநுகாரத்தாலே பெற்றாள். ஆகையாலே இப்ரபந்தம் கற்றார்க்கும் $i_2$ இந்தப் பலம் கிடைக்கும்.

j (ஈரிரண்டு $j_2$ மால்வரைத்தோள்) k இவர்களளவு பாராதே $k_2$ பண்டு பாடினவர்கள் சொல்வழியாலே அநுஸந்திக்கையாலே தோள்கள் பணைக்கும்; $k_3$ உகவாதார்க்குத் தோள்கள் இரண்டாய்த் தோற்றும்; $k_4$ இவர்களுக்குத் தோள்கள் நாலாய்த் தோற்றுமிறே. (செங்கண் திருமுகத்து) அலபயலாபத் தாலே சிவந்த கண்கள். l (செல்வத் $l_2$ திருமாலால்) உபயவிபூதியுக்தனை ஶ்ரிய:பதியாலே. m இப்பாட்டில் — $m_2$ உபக்ரமத்திலே பிராட்டி ஸம்பந்தம் சொல்லி, முடிவிலும் சொல்லுகையாலே, த்வயத்திற் சொன்னபடியிலே இங்கும் சொல்லிற்றென்கை.

---

பெ. அ. g, h இப்பரிசு - இந்த ப்ரகாரமான பாசுரத்தையென்று திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறார் (இப்பாசுரம் இத்யாதி) i இப்படி விசேஷித்ததுக்கு பூர்வம் அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியில் இத்யாதி) $i_2$ ''இந்தப்பலம்'' என்றது - இன்புறுகையைச் சொல்லு கிறது.

g, j, k ஈரிரண்டு - நாலாய், மால் - பெருத்த வரைபோலேயிருக்கிற தோள்களென்று ஶப்தார்த்தமாய், அதுக்கு ''இப்பரிசுரைப்பார்'' என்றத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (இவர்கள் இத்யாதி) k இவர்கள்-கற்றார், $k_2$ பண்டுபாடினவர்கள் - கோபி மார். $k_4$ இவர்களுக்கு — கோபிமார்க்கு. $m_2$ 'உபக்ரமத்திலே' என்றது - ''மாதவன்'' என்றத் தைப்பற்ற.

---

சி. அ. மில்லையோ? என்ன அருளிச்செய்கிறார் (விலையில்லாதஇத்யாதி) g பரிசு — ப்ரகாரம். $j_2$ மால் — பெருமை. $k_2$ பண்டுபாடினவர்கள் சொல்வழியாலே அனுஸந்திக்கையாவது — திருப்பாவையை அனுஸந்திக்கையாலே திருப்பாவை பாடின ஆண்டாளை நினைக்கை. j ஈரிரண்டுமால்வரைத் தோள் — நாலாய், பெரியமலை போன்ற தோள்களையுடையவன். $k_3$ க்ருஷ்ணனுக்கு நாலு திருத்தோள் உண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (உகவா தார்க்கித்யாதி). l செல்வம் — உபய விபூதிஐஶ்வர்யம். m (இப்பாட்டில் உபக்ரமத்திலும்) என்றது ''மாதவனை'' என்றத்தைப் பற்ற. $l_2$ ''திருமாலால்'' என்கையால் ஆஶ்ரயித்தார்

(எங்கும் திருவருள்பெற்று) ம த்3ருஷ்ட அத்3ருஷ்டங்களிரண்டிலும் பிராட்டியும் தானும் ஸந்நிஹிதமாம்படி ப்ரஸாத3த்தைப் பெற்று. (இன்புறுவர்) ப4க3வத் ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆநந்த3ம் பெறுவர். ம "விடிவோரை எழுந்திருந்து முப்பதுபாட்டையும் அநுஸந்தி4த்தல், மாட்டிற்றிலனாகில் 'சிற்றஞ்சிறுகாலே' (29) என்கிற பாட்டை அநுஸந்தி4த்தல், அதுவும் மாட்டிற்றிலனாகில் ம2 நாம் இருந்த இருப்பை நினைப்பது" என்று ப4ட்டர் அருளிச்செய்வர். 30.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

[illegible] ம த்3ருஷ்டஅத்3ருஷ்டங்கள்- இஹலோகபரலோகங்கள். ம 1. "ஆத்மதா3ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபா4வம் ச ஸதா3 ஸ்மர" என்கிறபடியே ஶேஷத்வாநுஸந்தா4நம் அவஶ்யம் கர்த்தவ்யமாகையாலே, அந்த ஶேஷத்வத்தை ப்ரதிபாதி3க்கிற இந்த ப்ரப3ந்த4ம் நித்யாநுஸந்தே4யமென்னுமத்தை அபி4யுக்தோக்திமுகே2ந அருளிச் செய்கிறார் (விடிவோரை இத்யாதி3) ம2 'நாமிருந்தவிருப்பை' என்றது - இந்த ப்ரப3ந்த4த்தை அநுஸந்தி4த்து ஈடுபட்டிருந்த இருப்பை என்றபடி. 30.

சீயர் திருவடிகளே ஶரணம்.

---

சி. அ குற்றம் பொறுப்பித்து அபேக்ஷிதம் செய்விப்பாரும் அருகே உண்டென்கை. ம2 (நாமிருந்த இருப்பு) திருப்பாவை ப்ரஸாதி3த்தருளும்போது எழுந்தருளியிருக்குமிருப்பு. 30.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## ஆறாயிரப்படி — முப்பதாம் பாட்டு

அவ:— முப்பதாம்பாட்டு. காலத்தையும், அதி4கரிக்கிற மனிச்சரையும், விஷய பூ4தனாய்நின்று காரியம் தலைக்கட்டுகிற க்ருஷ்ணனையுங்கொண்டாடிக்கொண்டு, ஸங்கல்ப பூர்வகமாக நோன்பிலே உத்3யோகி3த்து (1); நோன்புக்கு அங்க3மாகச் செய்யவேண்டுவனவும் தவிரவேண்டுவனவும் இன்னவென்று கர்த்தவ்யாகர்த்தவ்யவிவேகம் பண்ணி (2); நாம் நமக்கினிதாக நோற்க, இதுக்கு அனுமதிபண்ணி ப்ரீதராயிருக்கிற நாட்டார்க்கு ஆநுஷங்கி3கமாக அபி4மத ஸித்3தி4யுண்டாம் என்று சொல்லி (3); த்3ருஷ்டப2லங்களுக்கு ஹேது வ்ருஷ்டியாகையாலே, வர்ஷார்த்த2மாக தே3வதையை அழைத்து நியமித்து, அத்தால் தாங்கள் கொள்ளும் ப்ரயோஜநமுஞ்சொல்லி (4); தாங்கள் உபக்ரமிக்கிற நோன்புக்கு ப்ரதிப3ந்த4கமான து3ஷ்கர்மம் இதிலே உபக்ரமிக்கவே நஶிக்குமென்று பூர்ணமநோரதை2களாய்ப் புறப்பட்டு (5); ப்ராதிகூல்யநிவ்ருத்தி தொடங்கி ப4ாக3வத ஸஹவாஸமொழியச் செல்லாத தன்மையையுடையரானாரளவுஞ்செல்ல, நடுவு பட்டாரடையக் கூட்டிக்கொள்ள வேண்டுகையாலே (6—15), அநுப4வரஸத்தில் அபி4நவையாயிருப்பாளொருத்தியை எழுப்பி (6); ரஸத்தையறிந்துவைத்தே இவர்கள் பேச்சிலினிமையாலே வித்3தை4யாய், பாரவஶ்யதையாலே காற்கடைக்கொண்டு கிடக்கிறாளொருத்தியை எழுப்பி (7); எல்லாரும் திரண்டு தன் வாசலிலே வரவேண்டும்படி க்ருஷ்ணனாலேயுண்டான

கொண்டாட்டத்தாலே சால வேண்டப்பாடுடையளாயிருப்பாளொருத்தியை எழுப்பி (8);
கு3ணவித்3தை4யாய்க் கிடக்கச்செய்தேயும் ரஸாந்தரங்கள் செல்லலாம்படியான முறை
யையுடையாளொருத்தியை எழுப்பி (9); க்ருஷ்ணநுப4வத்திலே எப்போதும் இச்சை2
நடக்கும்படி எல்லாரிலும் அவன் நோக்குடையாளொருத்தியை எழுப்பி (10); ஊர்
ஒரு தட்டும், தான் ஒரு தட்டுமாம்படியான ஆபி4ஜாத்யமுடையாளொருத்தியைஎழுப்பி
(11); க்ருஷ்ணனைப் பிரியாமையாலுண்டான ஸம்பத்தை யுடையானொருவனோடே
ஸம்ப4ந்த முடையாளொருத்தியை எழுப்பி(12); தன் அவயவஶோபை4யை அநுஸந்தி4த்
துக்கிடக்கிறாளொருத்தியை எழுப்பி (13); தான் எல்லாரையும் எழுப்புவதாகச் சொல்லி
வைத்து ப்ரதிஜ்ஞையைப்பண்ணி மறந்து கலங்கிக்கிடக்கிறாளொருத்தியை எழுப்பி (14);
பின்பு எல்லாருடையவும் திரள்காணவேண்டியிருப்பாளொருத்தியை எழுப்பி (15);
எல்லாரும் திரண்டு திருவாசல் காக்கும் முதலியை எழுப்பி (16); ஸ்ரீநந்த3
கோ3பர், யசோதை3ப்பிராட்டி, நம்பிமூத்தபிரான், இவர்களைச் சொல்லும் க்ரமங்கள்
குறையாமல் சொல்லி எழுப்பி (17); நப்பின்னைப் பிராட்டியுடைய செருக்கை
யும், லீலாரஸங்களையும், போ4க3வைப4வத்தையும், ஸௌகுமார்யத்தையும், ரூப
ஸௌந்த3ர்யத்தையும், ப4ர்த்ருவால்லப்4யத்தையும், புருஷகார வைப4வத்தையும்
சொல்லி எழுப்பி (18, 19, 20); க்ருஷ்ணனுடைய ஆபி4ஜாத்யாதி3 கு3ணங்களைச் சொல்லிக்
கொண்டு (21); தாங்கள் கு3ணஜிதைகளாய் வந்தபடியையும், ப4க்3நாபி4
மாநைகளாய், கடாக்ஷைகத4ாரகைகளாய் வந்தபடியையும் அறிவித்து (22);
எங்களுக்காகப் புறப்பட்டு ஓரிருப்பிருக்கவேணும் என்று (23); புறப்பட்டிருந்த
வநந்தரம், அவ்விருப்புக்கு மங்க3ளாஶாஸநம் பண்ணி (24); 'போந்ததென்?' என்று
அவன் கேட்க, உன் பக்கலிலே அர்த்தி2களாய் வந்தோமென்ன (25); அபேக்ஷி
தம் ஏதென்ன, நோன்புக்கு உபகரணங்கள் வேண்டிக்கொண்டு (26); நோற்றால்
பெறும் ஸம்மாநங்களையும் அபேக்ஷித்து (27); தங்கள் நினைவிலுள்ளவையும் ப2லிக்
கும்படி தங்கள் சிறுமையையும், அவன் பெருமையையும், அவனோடுள்ள வுறவை
யுஞ் சொல்லிக்கொண்டு தப்புக்களுக்குப் பொறைகொண்டு (28); தங்கள் நினைவை
யும் இன்னதென்று க்ரமப்பட வெளியிட்டபேக்ஷிக்க (29); அவனும் 'அப்படியே
செய்கிறோம்' என்று தலை குலுக்கப்பெற்று க்ருதார்த்தைகளாய்விட்ட க்ரமத்தை,
பிற்பட்ட காலத்திலே அந்த பா4வ வ்ருத்தியோடே வடபெருங்கோயிலுடையானை
அபேக்ஷித்து ஸமகாலரஸமாக நடத்தின ஆண்டாள், 'நம்முடைய பா4வவ்ருத்தியில்லை
யேயாகிலும் இப்ரப3ந்த4த்திநுடைய பாட2த4ாரணத்தாலே நாம்பெற்ற பேறு பெறுவர்
கள்' என்று நிக3மிக்கிறாள் (30); ஸமகாலத்திலே அநுஷ்டி2த்தாரோபாதியும் அநந்தர
காலத்தில் அநுகரித்தாளோபாதியும் பிற்பட்டகாலத்தில் கற்றார்க்கும் ப2லிக்குமென்கை.
"கன்றிழந்த தலைநாகு, தோல் கன்றை மடுக்க அதுக்கிரங்குமாபோலே, ஸ்நேஹிகள்
சொன்ன இப்பாசுரங்கொண்டு புகவே, அதில்லாத நமக்கும் ப2லிக்கும்" என்று ப4ட்டர்.
ஸ்ரீ கோ3பிமாருடைய ஆஶ்ரயணீய விஷயம் க்ருஷ்ணனாய், அந்த ஆஶ்ரயணம் ப2லபர்
யந்தமாவது பிராட்டி ஸம்ப3ந்த4ந்தாலேயாய், அவள்தன்னைப் பெறுகைக்கு அவன்
வ்யாபரித்த வ்யாபாரம் அம்ருதமத2நமாகையாலே அத்தைச் சொல்லுகிறார்கள்.

வ்யா :— (வங்கக்கடல் கடைந்த) தே₃வகார்யமென்று ஒரு வ்யாஜத்தையிட்டுப் பெரியபிராட்டியாராகிற A பெண்ணமுதைப்பெற்று, அப்போது உகப்போடேயிருந் தாற்போலே, ஊரார் காரியத்தை வ்யாஜமாக்கிப் பெண்களைப்பெற்ற ஹர்ஷத்தோடே க்ருஷ்ணனிருக்கிறவிருப்பைக் கண்டவாறே "அந்யார்த்த₂மான செயலிலே அபி₄மதம் இவனுக்கு இன்ருக வருகிறதோ?" என்கிறுர்கள். (வங்கக்கடல் கடைந்த) பாற் கடலைக்கடைந்து பிராட்டியைப்பெற்றுற்போலே இங்கு; தயிர் கடையவென்று ஒரு வ்யாஜமாய், கன்னிகைகளைப் பெறக்கடவனுயிறேயிருப்பது; B "ஒல்லைநானுங் கடைவனென்று". திருமஞ்சநம் செய்து தி₃வ்யமால்யாம்ப₃ரத₄ரையாய், பூ₄ஷண பூ₄ஷிதையாய், ஸகலதே₃வதைகளும் பார்த்துக்கொண்டு நிற்க, மார்பிலே சென்றணைந்தபோதைச் - செவ்வி— மார்கழிநீராடி ஆடையுடுத்து ஸம்மாநிதைகளாய் "பல்கலனுமணிந்து" (27) பெண்கள் கூடியிருந்தபோது ப்ரகாஶிக்கும்படியிருக் கையாலே அத்தைச் சொல்லுகிறுர்கள். (வங்கக்கடல் கடைந்த) A "விண்ணவரமு துண" என்று ப்ரயோஜநாந்தரபரர்க்குமகப்பட உடம்புநோவக் கடல்கடைந்து அபே க்ஷிதஸம்விதா₄நம் பண்ணும்படி ஶீலவானுன க்ருஷ்ணன், அநந்யப்ரயோஜநர் காரியஞ் செய்யச்சொல்லவேணுமோ? C "அமரர்க்கமுதீந்தவாயர்கொழுந்தை" என் கிறபடியே - க்ருஷ்ணனிறே தே₃வர்களுக்கு அமுதமிட்டவன்; க்ஷீராப்₃தி₄நாத₂ன் கடையில் கடல்தான் அம்ருதம்சுரவாதே. D கண்ணன்கையால் மலக்குண்கை யாலேயிறே சுரந்தது. (வங்கக்கடல்) கீழிலம்ருதமெல்லாம் மேலே கிளரும்படி E படுதிரை விசும்பிடைப் படரும்படி கடையாநிற்க, மரக்கலமலசாதபடி கடைந்த நேர்ப்பம் சொல்லுகிறது. (வங்கக்கடல்) கடைகிறபோது F சுழல மலைதிரிக்கையாலே கடலடங்கலும் மரக்கலமாய் நின்றபடி. G "வங்கம்விட்டுலவுங் கடலிறே" - க்ஷீராப்₃தி₄. H "வைகுந்தனென்பதோர் தோணி" சேர்ந்தவிடமென்று, I ஆழ்கடலைப்பேணுதே கடைந்தான். "பாற்கடலில் பையத்துயின்ற" (2) என்று க்ஷீரார்ணவஶயநத்தைத் தொடங்கி அதினுடைய மத₂நத்தைச் சொல்லி நிக₃மிக்கிறுர்கள். J "அதிற்கிடந்து முன்கடைந்த."

(கடல் கடைந்த மாதவனை) ஸாத₄நாநுஷ்ட₂ாநம் பண்ணினுல் ஸாத்₄ய ஸித்₃தி₄யுண்டாமிறே. K "அமுதங்கொண்ட பெருமான் திருமார்வன்" என்று — அம்ருதலாப₄மென்று ஒருவ்யாஜமாய், A "அமுதில் வரும் பெண்ணமுதை"யிறே க்ருஷ்ணன் பெற்றது. (மாதவனை) ஆஶ்ரயணீயவஸ்து லக்ஷ்மீஸஹிதமுமாய், ஆஶ்ர யணந்தான் லக்ஷ்மீஸநாத₂முமாயிறேயிருப்பது. ஆஶ்ரிதர் குற்றம் பொறுப்பித்து அபேக்ஷிதங்களைச் செய்விப்பார் அருகேயுண்டாகவேணுமிறே. மாதாவின் முன்பு ப்ரஜைகள் செய்த குற்றம் பிதாவுக்குத் தோற்றுதாப்போலே, பிராட்டி ஸந்நிதி₄

---

A பெரியதிரு 6-1-2. B பெரு-திரு 6-2. C திருவாய் 1-7-9. D திருவிருத்தம் 57. E பெரியதிரு 5-7-4. F பெரியதிரு மடல் 106. G பெரியாழ்திரு 4-5-6. H நாச்திரு 5-4. I பெரியதிரு 11-7-1. J திருச்சந்த 28. K பெரியதிரு 6-10-3.

யுண்டானல் சேதநருடைய அபராத₄ங்கள் அவனுக்குத் தோற்றுதென்கை. பிராட்டி புருஷகாரமாகப் பற்றினவர்களுக்கு அரியனசெய்து அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டிக் கொடுக்குமென்கைக்காக (கடல்கடைந்தமாதவனை) என்கிறது.

(கேசவனை) A ''வாசஞ்செய் பூங்குழலா''ளான பெரிய பிராட்டியார்தான் ஆசைப்படும்படியான ப்ரஸஸ்தமான மயிர் முடி, கட்டு நெகிழ்ந்து அலைய நின்ருய்த்து கடல் கடைந்தது; கடையப்புக்கார்க்கெல்லாம் குழலலையுமிறே. ''வாச நறுங் குழலாய்ச்சியர் (9) B ''வண்டமர்பூங்குழல் தாழ்ந்துலாவ'' என்று அவனேடு பிறரோடு வாசியில்லையே குழலலைய. C ''ஆமையான கேசவா'' என்று சுமந்து நிற்கிற ஆமைக்குட்பட குழல் அலையாநின்ருல் கடைகிறவனுக்குச் சொல்ல வேண்டாவிறே. (கேசவனை) பிராட்டியோட்டைக் கலவிக்கு விரோதி₄களை, பெண் களோட்டைக் கலவிக்கு விரோதி₄யான கேஸியைக்கொன்ருற்போலே போக்கவல்லன் என்னவுமாம். ''மாமாயன் மாதவன்'' (9) என்றும் ''கேசவனைப்பாடவும்'' (7) என்றும், ''மாவாய்பிளந்தானை'' (8) என்றுஞ் சொன்னவற்ரேடே தலைக் கட்ட வேணுமிறே. (கேசவனை) D ''அதனுள் கண்ணுதல் நஞ்சுண்ண'' என்கிற படியே ப்₃ரஹ்மருத்₃ராதி₃களுக்குக்கோதுகொடுத்து, தன் வைப₄வந் தோற்றநின்ற நிலையைச் சொல்லிற்ருகவுமாம். த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்திற்படியே ஆஸ்ரயணீய வஸ்துவைச் சொல்லுகிறது. (மாதவனை) என்று — 'ஸ்ரீமத்'ஸப்₃த₃ார்த்த₂மும், ''கடல்கடைந்த'' என்கிறத்தாலே — ப்ரயோஜநாந்தரபரருடைய தோ₃ஷம்பாராமல் வ்யாபரித்த வாத்ஸல்யமும், D ''அண்ணல்செய்து'' என்று — ஸ்தி₂ரமாம்படி பண்ணப்பட்ட ஸ்வாமித்வமும், E ''அசுரர்களுந்தானுமாய்'' என்னும்படி நின்ற ஸௌஸீல்யமும், F ''பெண்ணுகி யமுதூட்டின'' ஸௌலப்₄யமும், G ''ஆழ்கடலைக் கடைந்த துப்பன்'' என்னும்படி வேண்டும் உபகரணங்களைத் தேடி வ்யாபரித்த ஜ்ஞாநஸக்திகளும் தோற்றுகையாலே — நாராயண ஸப்₃த₃ார்த்த₂ம் ஸூசிதம். ''கேசவனை'' என்று — ப்ரஸஸ்தகேஸத்வத்தாலே விக்₃ரஹயோக₃த்தை நினைத்து சரணஸப்₃த₃த்திலர்த்த₂ஞ் சொல்லிற்ருகிறது. சரணக்₃ரஹணத்தோடு கேஸக்₃ரஹ ணத்தோடு வாசியில்லையே ப்ரணயிநியாகையாலே. H ''கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள்'' என்றிறே நிருபகம். ''பரமனடிபாடி'' (2) என்று தொடங்கி, ''கேசவனை'' என்று தலைக்கட்டுகையாலே — பாதா₃தி₃ கேஸாந்தமாக க்ருஷ்ணனை அநுப₄வித்தாளாய்த்து. I ''அசோதை முன்சொன்ன திருப்பாதகேசத்தை'' என்று — இடைச்சிகளநுப₄வம் பெரியாழ்வார்க்குண்டாகையாலே அது இவளுக்கு தா₃யப்ராப்தமிறே.

இனிமேல் ஆஸ்ரயித்த அதி₄காரிகள் வைலக்ஷண்யம் சொல்லுகிறது (திங்கள் திருமுகத்து) க்ருஷ்ணஸம்ஸ்லேஷத்தாலே குளிர்ந்து மலர்ந்து செவ்விபெற்ற

A திருவாய் 10-10-2, B பெரு-திரு 6-2, C திருச்சந்த 20, D பெரிய திரு 6-1-2 E சிறிய திருமடல் 47, F பெரிய திரு 2-6-1, G திருவாய் 4-7-5, H நாச்-திரு 1-8 I பெரியாழ் திரு 1-2-21.

முக₂த்தையுடையரானுர்கள். ''கதிர்மதியம்போல்முகம்'' (1) என்று — ப்ரதாபமும் தண்ணளியும்கலந்தபடியாலே அநபி₄ப₄வநீயத்வமுண்டு அவன் முக₂த்துக்கு; இவர்கள் முக₂த்தில் குளிர்த்தியே அமைகையாலே அநுகூலமேயாயிருக்கும். ''வங்கக்கடல் கடைந்த'' என்று கடைந்த அமுதில் பிறந்தவள் முக₂த்தோடு ஸாத₄ர்ம்யம் பெற்றுய்த்து இவர்கள் முகமிருப்பது. அவள், A ''திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை''; இவர்கள் B ''மதிமுகமடந்தையர்''. (திங்கள் திருமுகம்) ஸகல கலாபூர்த்தி இவர்கள் முகத்திலே விழித்தபோதே தோற்றுமாய்த்து. 1. ''ப்₃ரஹ்மவிதை₃வ ஸோம்ய தே முக₂ம் பா₄தி'' C ''குழையும்வாண்முகமும்'' என்றும் சொல்லக்கடவதிறே. முக₂த்தில் ஆநந்த₃ பூர்த்தி கண்டவர்கள், ''இவர்கள் எங்குத்தை மனிச்சர்?'' என்று ஸந்தே₃ஹிக்கும்படி உப₄யவிபூ₄தி வ்யாவ்ருத்தி தோற்றவிருப்பர்களிறே. D ''வெஞ்சிலைவாண்முகத்தீர்''. (திங்கள் திருமுகத்து) இவர்கள் முக₂த்திலே விழித்தவாறே அஹம்மாநோத்₃ப₄வமான அழல் ஆறும்படியிருக்கை. (திருமுகம்) உபமாநமான சந்த்₃ரமண்ட₃லம் உபமேயமான முக₂த்துக்கு நேர் நிற்கமாட்டாமையாலே (திருமுகம்) என்கிறது. E ''முகக்கமலச் சோதிதன்னுல் திங்கள்முகம் பனிபடைக்கு''மிறே. (சேயிழையார்) ஸ்வாபா₄விகமான அழகுக்கு மேலே ஆப₄ரணங்களாலே வந்த அழகைச் சொல்லுகிறது. (சேயிழையார்) ''சூடகமே — பாடகமே'' (27) என்று தாங்கள் ப்ரார்த்தி₂த்தபடியே க்ருஷ்ணனும், நப்பின்னைப் பிராட்டியும் கூடவிருந்து பூட்டின ஆபரணத்தையுடையவர்கள். (சேயிழையார்) ஸ்வரூபகு₃ணங்களாலும் ப்₃ரஹ்மாலங்காரத்தாலும் குறைவற்றவர்கள். ''போதுவீர் போதுமினோ'' (1) என்றபோதே நேரிழையாரானுர்கள்; நீராடின அநந்தரம் F ''திருவருள் மூழ்கின''படியாலே F ''புனையிழைகளணிந்து'' சேயிழையாரானுர்கள். (சென்று) ஆஶ்ரயணீயவிஷயத்தில் ருசிகார்யமான த்வரையைச்சொல்லுகிறது. (சென்று) இவ்வொப்பனையோடே நாமே போவோம் என்று அவன் வரவைப் பார்த்திருக்குமளவல்லவாய்த்து த்வரை. க்ருஷ்ணவிஷயீகார யோக்₃யதையாலும் விஷயீகாரத்தாலும் பிறந்த புகர் நிறம்பெறும்படி சென்று. (இறைஞ்சி) ''தூமலர்கள் தூய்த்தொழுது வாயினுல் பாடி மனத்தினுல் சிந்தித்து'' (5) ''அடிபோற்றி'' (24) என்கிறபடியே போற்றிப் புகழ்ந்து, ''சென்று சேவித்து'' (18), கும்பிடுகை தொடக்கமான செய்வதெல்லாஞ் செய்து.

(அங்கு) ஆஶ்ரயணீயஸ்த₂லமிருக்கிறபடி. (அங்கு) திருவாய்ப்பாடியிலே ஸ்ரீநந்த₃கோ₃பருடைய கோயிலிலே நப்பின்னைப்பிராட்டி கட்டிலிலே தி₃வ்யாஸ்தா₂நத்திலே தி₃வ்யஸிம்ஹாஸத்திலேயிருந்த இருப்பிலே. (அப்பறை) நாட்டுக்குச் சொன்ன பறையைக்கழித்து ''எற்றைக்கும்'' (29) என்ற பறையை; அப்பரிமாற்றத்திலே நின்று அவனை ஸர்வஸ்வமும் கொண்டபடியை. (கொண்ட) ''நீ தாராய்'' (29) என்றபடியே அவன் தரப் பெற்றபடி. (ஆற்றை) கொண்ட ப்ரகாரத்தை; தங்கள் வெறுமையையும் அவன்பூர்த்தியையும் ப₃ந்த₄த்தையும் முன்னிட்டு, தப்புக்குப் பொறைகொண்டு ருசியையும் த்வரையையுங்காட்டி, வளைப்பிட்டு அடி

A பெரிய திரு 2-7-1, B திருவாய் 10-9-10, C திருவாய் 6-5-5.
D திருவிருத்தம் 75, E பெரிய திரு 3-4-6, F திருவாய் 8-9-5.

மையை அபேக்ஷித்துக் கொண்ட ப்ரகாரத்தை. ஆஶ்ரயணப2லமும் ப2லஸித்3தி4க்ரம மும் சொன்னபடி. (அணிபுதுவை) க்ருஷ்ணனுக்கு ஸ்ரீநந்த3கோ3பர் ஸம்ப3ந்த4ம் ஏற்றமாய், அவர் வர்த்திக்கிற ஊரென்று திருவாய்ப்பாடியை ''சீர்மல்குமாய்ப்பாடி'' (1) என்று ஶ்லாகிக்குமாபோலே, தனக்குப் பெரியாழ்வார் ஸம்ப3ந்த4ம் உத்3தே3ஶ்ய மாய், அவர் அபி4மாநித்த தே3ஶமென்று ஸ்ரீவில்லிபுத்தூரைக் கொண்டாடுகிறார்கள்.

(அணிபுதுவை) நந்த3கோ3பனுடைய கோயிலில், க்ருஷ்ணன் மாத்ரமேயிறே; இவ்வூரில் வடபெருங்கோயிலுடையானும். (அணிபுதுவை) ஸம்ஸாரத்துக்கு ஆப4 ரணமான ஸ்ரீவில்லிபுத்தூர். பிராட்டிக்கு ஸ்ரீமிதி2லையும் திருவயோத்4யையும் போலவும், நப்பின்னைப் பிராட்டிக்குக் கும்ப4குலமும் திருவாய்ப்பாடியும் போலவுமன் றிக்கே, ஆண்டாளுக்குப் பிறவியும் புக்கவிடமும் ஓரூரிலேயான ஏற்றம் இவ்வூர்க்கே யிறே உள்ளது. பொன்னும் முத்தும் மாணிக்கமுமிட்டுச் செய்த ஆப4ரணம் போலே, நாச்சியாரும் பெரியாழ்வாரும் வடபெருங்கோயிலுடையானுமான அலங் காரமுள்ள தே3ஶமிறே. (பைங்கமலத்தண்டெரியல்) ப்3ராஹ்மணர்க்குத் தாமரை யைத் தாராகவிறே சொல்வது. A ''திருவில் பொலிமறைவாணன்'' என்னும்படி ப்3ராஹ்மணுக்3ரேஸரரான பெரியாழ்வாருக்குத் தாமரை தாராகக்கடவதிறே. (பைங் கமலத்தண்தெரியல்) பசுத்த கமலத்தினுடைய குளிர்ந்த மாலை. B ''தண்ணந் துழாயமல்போல்'' என்று -- வடபெருங்கோயிலுடையானுடைய மாலைபோலே கொதித்துக் கிடவாது பெரியாழ்வார் கழுத்தில் மாலை; பிரிந்தவன் மாலைபோலன்றே சேர்ப்பார்மாலை. (பட்டர்பிரான்) ப்3ராஹ்மணர்க்கு உபகாரகரானவர். C ''வேதப் பயன்கொள்ளவல்ல''வராகையாலே தாத்பர்யார்த்த2த்தை ஸர்வர்க்கும் உபகரிக்கு மவர்; ப4ட்டர்களுக்கு வித்3யாப்ரத3ாநம் பண்ணின உபகாரகர்; D ''மறை நான்கு முன்னோதிய பட்டனுக்கு'' கந்யகாப்ரத3ாநம் பண்ணின உபகாரகர். (பட்டர் பிரான் கோதை) பாராஶர்யனை வ்யாஸனென்று ஆப்திக்குச் சொன்னாற்போலே, பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்பு இவளுக்கு உத்கர்ஷஹேது. ''ஆற்றப்படைத்தான் மகன்'' (22) என்றிறே ப்ரதிபாத்3யனுக்கு ஏற்றம்; ஆழ்வார் ஸம்ப3ந்த4ம் இவளுக் கேற்றம். E ''விட்டுசித்தர் தங்கள் தேவரை'' என்று--இவர்க்கு தே3வராய், வட பெருங்கோயிலுடையான் நிறம்பெற்றான்; இவர் மகளாய் ஆண்டாள் நிறம்பெற் றாள். F ''ஒருமகள் தன்னை உடையேன்'' என்று இவள் ஸம்ப3ந்த4மிறே நமக்கு உத்கர்ஷமாகச் சொல்லுவது. (சொன்ன) ஆண்டாள் அநுகாரத்தாலே அநுப4வித் தது புறவெள்ளமிட்டபடி. (கோதை சொன்ன) ஸ்ரீகோ3பிமார் த3ஶையை ப்ராபித்து, G ''அணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன'' என்று பும்ஸ்த்வம் மேலிடும்படியான குற்றமற்றிருக்கை. (சொன்ன) ஶ்ருதிஶத3ஶிரஸ்ஸித்3த4மான அர்த்த2ம் ஸர்வோபஜீ வ்யமாம்படிசொன்ன. H ''மேகம்பருகின ஸமுத்3ராம்பு4போலே இவர்வாயன திருந்

A பெரியாழ் திரு 4-1-10. B திருவிருத்தம் 3. C பெரியாழ் திரு. 2-8-10.
D பெரிய திரு 7-3-6. E நாச்-திரு 10-10. F பெரியாழ் திரு 3-8-4. G திருவாய் 7-3-11. H ஆசார்ய ஹ்ருதயம் - 72.

தின'' என்கிறபடியே இவளுடைய வாக்கின் ஸ்பர்ஶத்தாலே காணும் அதிலும் அவர்பெற்றது. (சொன்ன) தான்றேன்றியான வேதம்போலல்ல; பிறப்பாலுண் டான ஏற்றமுண்டு. க்ஷீராப்₃தி₄நாத₂னைப்பற்ற ஒருத்தி மகனாய்ப் பிறந்தவனுக் கிறே வருமேற்றமுள்ளது.

(சங்கத்தமிழ்மாலை) ''சங்கமிருப்பார்போல் வந்து'' (22) என்று பஞ்சலக்ஷங் குடியில் பெண்கள் திரளாக அநுப₄வித்த அநுப₄வத்துக்கு ஆண்டாளும் தன்திறத் திற் பெண்களுக்குத் திரளவிருந்து சொன்ன பாசுரமாகையாலே. A ''சூழாங்களாய்'' என்னும்படி-திரள் திரளாக அநுப₄விக்கவேண்டும் ப்ரப₃ந்த₄ம். B ''சங்கமுகத்தமிழ் மாலை'' என்னக்கடவதிறே. (தமிழ்மாலை) C ''யவர்க்குஞ்சிந்தைக்கும் கோசர''மல் லாத வஸ்து ''பெற்றம் மேய்த்துண்ணும்'' (29) இடைச்சேரியிலே வந்துபிறந்து எளியனானாற்போலேயும், உத்தம வர்ணத்திலே பிறப்புடைய ஆண்டாள் ''ஆயர் சிறுமியர்'' (16) திரளிலே ஒருத்தியாய் அந்வயித்தாற்போலேயும் அருமறையின் பொருளான உபநிஷத்து தமிழாய் வந்து ஸர்வஸுலப₄மானபடி. ப்ரப₃ந்த₄ஞ் செய்தவளோடு ப்ரதிபாத்₃யனோடு ப்ரப₃ந்த₄த்தோடு வாசியறத் தாழநின்று நிறம் பெற்றபடி. (மாலை) பாவனமானவளவன்றிக்கே போ₄க₃யோக்₃யமுமாய், தலை யாலே சுமக்கவேண்டும்படியுமாய், ஶிரோபூ₄ஷணமுமாயிருக்கை. (கோதைசொன்ன மாலை) மாலை கட்டின மாலை. அடுத்தபத்தியோடே இரண்டுதலையும் தாள்பூவும் நடுவே நாயகமுமாகத் தொடுப்புண்ட மாலை. (கோதைசொன்ன மாலை) ''செவிப் பூவே'' (27) என்று - இவள் செவிக்கு ஒருபூவிறே அவன் கொடுத்தது; ஶ்லாக₄ யமான மாலை கொடுத்தாளிவள். 1. ''ஸ்ரஜி நிக₃ளிதம்'' என்னும்படி குழலில் மல்லிகை மாலையாலே விலங்கிட்டு அவனை ஓதுவித்த மாலையிருக்கிறபடி. (முப்பதும்) திருமந்த்ரமும் திருப்பல்லாண்டும்போலே சுருங்கியிருத்தல், வேத₃மும், திருவாய் மொழியும்போலே விரிந்திருத்தல் செய்யாமையாலே, வேண்டுமவையெல்லாம் மிகுதிக்குறையுண்டாயிருக்கையன்றிக்கேயொழிகை. ''நாராயணனே நமக்கே பறை தருவான்'' (1) என்று ஸங்க்₃ரஹேண சொன்ன ஸ்வரூபோபாய ப₂லங்களை ஒன்று பத்தாகச் சொன்னவித்தனையிறே. (முப்பதும்தப்பாமே) இதில் ஒருபாட்டும் நழு வாமே. விலையில்லாத ரத்நங்களாலே செய்த ஏகாவலியிலே ஒரு ரத்நம் குறைந் தாலும் நெடும்பாடாயிருக்குமிறே; அப்படியே ஒரு பாட்டுக்குறையிலும் பேரிழவா யிருக்கும். ப₄க₃வத₃ாபி₄முக்₂யம் பிறக்கிற கால வைலக்ஷண்யம் அறியாதிருத்தல்(1), த்யாஜ்யோபாதே₃யங்களில் நழுவநிற்றல்(2), பரஸம்ருத்₃த்₄யைகப்ரயோஜனனன்றி யிலேயொழிதல்(3), தே₃வதைகளையும் நியமிக்கும்படியான ஜ்ஞாநிகள் வைப₄வம் அறி யாதொழிதல்(4), ஆஶ்ரயணகாலத்திலே க்ஷீணபாபராம் ஏற்றம் அறிதல் (5) செய்யா தொழியவொண்ணாது; ப₄க₃வத்₃விஷயத்தில் முதலடியிட்டாரோடு(6), அவகா₃ஹித்தே சிறிது குலையநிற்பாரோடு(9), ஶ்லாக₄ாப்ரத₄ாநராயிருப்பாரோடு(7), த்யாஜ்யத்திலே

A திருவாய் 2-3-11, B பெரிய திரு 3-4-10, C திருவாய் 1-9-6.

அல்பஸ்பர்ஶம் நடையாடுவாரோடு(9), அநுப₄வமே நிரந்தரமாக நடப்பாரோடு(10), ப₄ாக₃வதகுலத்திலே அந்வயித்தாரோடு(11), கைங்கர்ய நிஷ்ட₂ரோடு ஸம்ப₃ந்த₄முடையாரோடு(12), ஸ்வரூபஜ்ஞாநமுடையாரோடு வைலக்ஷண்யாநுஸந்த₄ாநம் பண்ணி நிர்வ்யாபாரராயிருப்பாரோடு(13), ப₄க்தியாலே கலங்கி நடப்பாரோடு(14), ப₄ாக₃வதபாரதந்த்ர்யைக நிஷ்ட₂ரோடு(15)வாசியற உத்₃தே₃ஶ்யதாபு₃த்₃தி₄ குலையாமலிருக்கவேணும் என்றறியவேணும்; ப₄க₃வத்ஸந்நிதி₄யில் செல்லும் க்ரமங்களறியவேணும்(16, 17); புருஷகாரத்தினுடைய ஸ்வரூப ஸ்வப₄ாவங்களும் கார்யமும் அறியவேணும்(18, 19, 20); ப₄க₃வத்₃கு₃ணவித்₃த₄ராகவேணும்(21); கடாக்ஷைகத₄ாரகராம்படி ப₄க்₃நாபி₄மாநராகவேணும்(22); ஆபி₄முக்₂ய ப்ரார்த்த₂நம் பண்ணவேணும்(23); மங்க₃ளாஶாஸநபரராகவேணும்(24); அர்த்தி₂த்வந்தோற்றப் பல்காட்டவேணும்(25); முமுக்ஷு த₃ஶையில் அபேக்ஷிதம்(26) முக்தத₃ஶையில் பே₄ாக₃ம்(27) இவற்றில் வாஞ்சை₄ நடக்கவேணும்; அதுக்குத் தங்கள் உபாயாந்தர ஶூந்யதையை முன்னிடவேணும்(28); நித்ய கைங்கர்யத்தில் நித்யாபேக்ஷை நடக்கவேணும்(29); இத்த₃ஶை விளைந்தார் பாசுரமே பே₄ாக₃மாகவேணும்(30); ஆகையாலே இம்முப்பது பாட்டிலும் நழுவவிடலாவது ஒருபாட்டில்லை. (இங்கு) பிற்பட்ட காலத்திலே இப்பரிமாற்றத்துக்கு மேட்டுமடையான இந்நிலத்திலே. (இப்பரிசு) இப் ப்ரகாரந் தப்பாமல். (இப்பரிசுரைப்பார்) இப்ப₄ாவவ்ருத்தியோடே இப்பாசுரத்தைச் சொல்லுமவர்கள். திருவாய்ப்பாடியிலே பெண்களுக்கு ஸமகாலமாகையாலே ஸாக்ஷாத்காரமுண்டாய்த்து; ஆண்டாள் அநுகார ப்ரகாரத்தாலே பெற்றாள்; இவர்களுக்கு உக்திமாத்ரமே அமையும்.

இவர்களளவு பாராதே பண்டு பாடினவர்களையும் இச்சொல் வழியாலே நினைத்துக் காரியஞ்செய்யும் விஷயத்தைச் சொல்லுகிறது மேல் — (ஈரிரண்டுமால் வரைத்தோள்) பெண்களை அணைக்கப்புக்கபின்பு க்ருஷ்ணனுக்குத் திருத்தோள்கள் பணைத்தபடி. A ''வேயிருந்தடந்தோளினு''ரோடு அணைந்த தோள்களிறே. (ஈரிரண்டு) உகவாதார்க்கிறே தோள் இரண்டாய்த் தோற்றுவது; ஆசைப்பட்ட பெண்களுக்கு நாலாய்த் தோற்றுமிறே. வங்கக்கடல்கடைந்த B தோள்கள் நான்கும் கண்டிடப் பெற்றார்கள். (மால்வரைத் தோள்) C ''மதுரக் கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத் தோ''ளாயிராதே, காத்தூட்டவல்ல திண்மையைச் சொல்லுகிறது. (மால்வரை) D ''நீண்டமலைகளும்'' என்னும்படியிறேயிருப்பது. பெரிய பிராட்டியார்க்கும் கோபிமார்க்கும் க்ரீட₃ாஶைலமான தோள்கள். (செங்கண் திருமுகத்து) பெண்களைக்கண்ட பின்பு அலப்₄யலாப₄த்தாலே திருக்கண்களும் செவ்வி பெற்றுத் திருமுகமும் குளிர்ந்தபடி. இவர்களைப் பிரிந்தபோதிறே ஜலக்ஷயத்தில் பத்₃மம் போலே முகமும் விழியும் உருவுவது. (செங்கண் திருமுகம்) E ''கண்ணன் கோளிழைவாண்முகம்''; அதிலே, F ''நீரார்கமலம் போல் செங்கண்''; தோழிமார் 'பாரிகோள்' என்று ஒருவர்க்கொருவர் காட்டி அநுப₄வித்த கடாக்ஷமும் முக₂மும். (செங்கண்) ''கதிர்மதியம்போல் முகத்தான்'' (1) ''பங்கயக்கண்ணனை'' (14)

A திருவாய் 6-2-3, B திருவாய் 4-7-5, C நாச்-திரு 9-1, D பெரிய திரு 2-8-5
E திருவாய் 7-7-8, F சிறிய திருமடல் 11.

''செங்கண் சிறுச்சிறிதே அங்கணிரண்டுங்கொண்டு'' (22) என்று முடிய இம்முக₂மும் கடாக்ஷமுமிறே இவர்கள் நெஞ்சில் கிடந்தது. ''திங்கள் திருமுகம்'' என்று — ஸ்ரீகோ₃பிமார் முகத்தையும் அவர்கட்கு அநுப₄வ்யனானவன் முகத்தையும் ஒரு முகப்பட அநுப₄விக்கிறார்கள். இச்செங்கண் திருமுகமுடையவன்தான் ஆரென்னில்; (செல்வத்திருமாலால்) என்கிறார்கள். A ''கண்ணன் திருமால் திருமுக''மிறே இது. (செல்வத்திருமாலால்) உப₄யவிபூ₄த்யைச்வர்யத்தையுடைய ஸ்ரிய:பதி யாலே. (செல்வத் திருமால்) ''திருத்தக்க செல்வம்'' (25) செல்வத்துக்குத் தகுதியானவள். (திருமால் — செல்வம்) B ''திருவுக்குந் திருவாகிய'' செல்வு ''செல்வச்சிறுமியரை''ப் (1) பெற்றபின்பு சிறந்தது. இங்கு உத்தரவாக்யத்தில் ஸ்ரீமத்'ஶப்₃த₃ஞ் சொல்லுகிறது; ரஹஸ்யத்₃வயத்திலும் மறைந்துகிடந்த லக்ஷ்மீ ஸம்ப₃ந்த₄ம் வாக்யத்₃வயத்திலேயிறே வெளியாகிறது. இப்பாட்டில், உபக்ரமத் திலும் முடிவிலும் பிராட்டி ஸம்ப₃ந்த₄த்தைச் சொல்லுகையாலே — த்₃வயத்தில் சொல்லுகிறபடியை இங்குச் சொல்லிற்றாய்த்து

(எங்கும்) த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்களிலும். இங்கிருக்கும் நாளும் பரமபத₃த்தில் போனாலும். (திருமாலால் எங்கும்) C ''இங்குமங்கும் திருமால்'' என்றிருக்கையிறே அடுப்பது. (திருவருள் பெற்று) இப்ரப₃ந்த₄ம் கற்றவர்கள் இருந்தவிடத்திலே தானும் பிராட்டியுமாய் நித்யஸந்நிஹிதமாம்படி ப்ரஸாத₃த்தைப் பெற்று. (திருவருள் பெற்று) D ''திருமாலாலருளப்பட்ட'' E 'திருமாமகளால் அருள்மாரி'' என்று - இவளுடைய அருள்பெறுகையிறே உத்₃தே₃ஶ்யம். F ''நின்திருவருளும் பங்கயத் தாள் திருவருளுங்கொண்டு''. (திருமாலால் - திருவருள் பெற்று) 1. ''நிஸ்ஸம்ஶயம் ஸம்பத்ஸ்யதே'' என்று 'இவர்களை வாழ்த்திக் கடாக்ஷித்தது ப₂லித்தபடிபாராய்!' என்று பெரியபிராட்டியார் திருக்கையிலே காட்டிக்கொடுக்க, G''பூவளருந் திருமகளா லருள்பெற்று'' என்கிறபடியே - அவனடியாக இவள்தன்னுடைய அருளைப்பெற்று. உபாயநிஷ்டை₂யும் இவளாலே; ப்ராப்யவ்ருத்₃தி₄யும் இவளாலே; விரோதி₄ நிவ்ருத் தியும் ப₂லப்ராப்தியும் அவனாலே. (இன்புறுவர்) ஆநந்த₃நிர்ப்ப₄ரராவர். (எங்கும் - இன்புறுவர்) இங்கிருக்கும் நாள் ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தராய், ப்ரப₃ந்த₄த்தி னுடையவும், ப்ரதிபாத்₃யனுடையவும், ஆண்டாளுடையவும் சீர்மையையும் ஶீலத்தை யும் ப₄ாவவ்ருத்தியையும் அநுஸந்தி₄த்து இனியராவர்கள்; அங்குப் போனால் நிரந்தர ஸம்ஶ்லேஷத்தாலே. H ''மிகவெல்லை நிகழ்ந்த நம்'' என்னும்படி பரமாநந்த₃த் திலே அந்வயிப்பர்கள். (திருமாலால் - இன்புறுவர்) I ''இன்பம்பயக்க''விறே அவர்கள்தானிருப்பது. அந்யோந்யாநுப₄வாநந்த₃ம் போலன்றே மிது₂நாநுப₄வா நந்த₃ம். J ''அடியேனுக்கின்பாவாய் பொன்பாவை கேள்வா.'' எப்படி இன்புறு வர்களென்னில்; (எம்பாவாய் - இன்புறுவர்) எங்கள் ஸௌந்த₃ஸ்ஸாலே இன்புறுவர். நாங்கள் யாதொருபடி இன்புற்றோம், அப்படி இன்புறுவர்கள்.

A திருவிருத்தம் 63. B பெரிய திரு 7-7-1. C திருவாய் 7-9-11. D திருவாய் 8-8-11. E பெரிய திரு 8-6-10. F திருவாய் 9-2-1. G பெரிய திரு 11-6-10. H திருவாய் 4-5-3. I திருவாய் 7-10-1. J நான். திருவ 59.

மாதவனை — சேயிழையார் சென்றிறைஞ்சி — பறைகொண்டவாற்றை — கோதைசொன்ன — தமிழ்மாலை — உரைப்பார் — எம்பாவாய் — இன்புறுவர். பெரிய பிராட்டியார் இன்புற்றாற்போலே இன்புற்றாராவர்கள். ஸ்ரீகோபிமார் பாவாய் இன்புற்றோம் நாங்கள்; எங்கள் சொல்லையுரைப்பார் எங்கள் பாவாய் இன்புறுவர்கள்; ஸமகாலத்திலுள்ளாரை, ''எம்பாவாய் - நீராடப்போதுவீர் போது மினோ'' (1) என்று கூட்டிக்கொண்டார்கள்; பிற்பாடர்க்கும், ''எம்பாவாய் ப்ரபந்த முகத்தாலே எம்பாவாயின்புறுவர்'' என்று தலைக்கட்டுகிறார்கள். 30.

ஆறாயிரப்படி நிறைவுற்றது.

அழகியமணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளே ஶரணம்.

## ஈராயிரப்படி — முப்பதாம் பாட்டு

அவ :— முப்பதாம் பாட்டு: இப்ரபந்தத்தைக் கற்றார்க்கு இவ்வர்த்த மனுஷ்டித்தாரோபாதி பலம் ஸித்திக்கும்; ''கன்றிழந்த தலைநாகு தோல் கன்றை மடுக்க, அதுக்கு இரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டு புக நமக்குப் பலிக்கும்'' என்று பட்டர் அருளிச்செய்வர்.

வ்யா :—(வங்கக்கடல்) கீழில் அமுது மேலே எழக் கடையாநிற்க, கடலிலே மரக்கலமசையாமல் கடைந்த நொய்ப்பம் சொல்லுகிறது. கடைந்தபோது சுழன்று வருகையாலே கடலடைய மரக்கலமாய் நின்றபடி என்றுமாம். க்ருஷ்ணனே ப்ரயோஜநாந்தரபரர்க்கும் கார்யம் செய்யுமவனென்கை. (மாதவனை) தாய் முன்பு பிதாவுக்கு ப்ரஜை குற்றம் பொறுக்கவேணுமிறே. (கேசவனை) விரோதிநிரஸனஸ்வபாவனை. A ''விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்டவ''னிறே. க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தாலே குளிர்ந்து மலர்ந்த முகம். அங்கு கதிர்மதியம்போல் முகம்(1). 1. ''ஜகத் வ்யாபார வர்ஜம்'' என்று இதொழிய அல்லாததெல்லாம் கொடுக்கையாலே இவர்களுக்குக் குளிர்த்தி வேண்டுகையாலே (திங்கள் திருமுகம்) என்கிறது. B மதிமுக மடந்தையரிறே. (சேயிழையார்) தானுமவனுங் கூடவிருந்து பூட்டின ஆபரணத்தையுடையவர்கள். (சென்று) இவ்வொப்பனையோடே வரப்பார்த்திருக்கும் அளவில்லாத த்வரையைச் சொல்லுகிறது. (இறைஞ்சி) மங்களாஶாஸநம் பண்ணி. (அங்கு) திருவாய்ப்பாடியிலே. (அப்பறை) நாட்டுக்குப் பறை என்று அடிமைகொண்டபடியை.

(அணிபுதுவை) ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான ஸ்ரீவில்லிபுத்தூர். (பைங்கமலத் தண் தெரியல்) ப்ராஹ்மணருக்குத் தாமரைத் தாராகையாலே சொல்லுகிறது. (பட்டர்பிரான் கோதை சொன்ன) ஆண்டாள் அநுகாரப்ரகாரத்தாலே அநுபவித்துச் சொன்ன. 2. ''ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:'' என்றாற்போலே பெரியாழ்வார் மகள் சொன்னதில் அர்த்தவாதமில்லை.

(சங்கத்தமிழ்) C ''குழாங்களாய்'' என்னுமாபோலே திரளாக அநுபவிக்க வேண்டும் ப்ரபந்தம். (முப்பதும் தப்பாமே) இதில் ஒருபாட்டும் குறையாமே. அல்லாதபோது ரத்நம் குறைந்த ஏகாவளி போலே பேரிழவாயிருக்குமென்கை.

A பெரிய திரு 6-1-2, B திருவாய் 10-9-10, C திருவாய் 2-3-11.

(இங்கு) பிற்பட்ட காலத்திலே. (இப்பரிசுரைப்பார்) இப்பாசுர மாத்ரத்தைச் சொல்லுவார். ஆண்டாள் அநுகாரத்தாலே ப₂லம் பெற்றுளாகையாலே இது சொன்னார்க்கும் இங்கே ப₂லம் கிடைக்கும். (ஈரிரண்டு மால்வரைத்தோள்) பண்டு பாடினவர்கள் சொல்வழியாலே அநுஸந்தி₄க்கையாலே தோள்கள் பணைக்கும். ஆண்களுக்கு இரண்டாய்த் தோற்றும். இவர்களுக்கு நாலாயிருக்கும். (செங்கண் திருமுகத்து) அலப்₄யலாப₄த்தாலே சிவந்த கண்கள். (செல்வத் திருமாலால்) உப₄யவிபூ₄தியுக்தனான ஶ்ரிய:பதியாலே. இப்பாட்டில் உபக்ரமோபஸம்ஹாரங்களில் த்₃வயத்திற்போலே பிராட்டி ஸம்ப₃ந்த₄ம் சொல்லிற்றாய்த்து. (எங்கும் திருவருள் பெற்று) த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்களிரண்டிலும் பிராட்டியும் தானும் ஸந்நிஹிதமாம்படி ப்ரஸாத₃ம் பெற்று. (இன்புறுவர்) ப₄க₃வத் ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆனந்த₃ம் பெறுவர். 30.

## நாலாயிரப்படி — முப்பதாம் பாட்டு

அவ :— முப்பதாம் பாட்டு. "பெண்காள்! நீங்களும் நானும் அனுப₄வித்தோ? பிற்பாடரிழக்குமத்தனையோ ?" என்ன, அவர்கள் பெறும்படி சொல்லுகிறார்கள். ப்ரப₃ந்த₄ம் கற்றார்க்கு அநுஷ்டி₂த்தாரோபாதி ப₂லம் ஸித்₃தி₄க்கிறது. "கன்றிழந்த நாகு தோற்கன்றை மடுக்க அதுக்கிரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டுபுக நமக்கும் ப₂லிக்கும்" என்று ப₄ட்டர் அருளிச்செய்வர். "விடிவோறேயெழுந்திருந்து முப்பது பாட்டையுமநுஸந்தி₄த்தல்; அதுவும் மாட்டிற்றிலனாகில், "சிற்றஞ் சிறுகாலே" (29) என்கிற ஒருபாட்டையுமநுஸந்தி₄த்தல், அதுவும்மாட்டானாகில், இன்றுநாமிருந்த விருப்பை நினைப்பது" என்று ப₄ட்டர் அருளிச்செய்தார்.

வ்யா :— (வங்கக்கடல்) கீழிலுள்ள பதா₃ர்த்த₂ம் மேலெழக்கடையாநிற்கச் செய்தே, கடலில் மரக்கலம் அலசாமல் கடைந்த நொய்ப்பம் சொல்லுகிறது. கடைந்தபோது சுழன்று வருகையால் கடலடைய மரக்கலமாய்நின்றபடி என்றுமாம். க்ருஷ்ணனே ப்ரயோஜநாந்தரபரர்க்கும் கார்யம் செய்யும் ஶீலவானென்கை. (மாதவனை) ஆஶ்ரயணீய தத்வம் லக்ஷ்மீஸநாத₂மாயிருக்குமென்கை. தாய் முன்பு பிதாவுக்கு ப்ரஜை செய்த குற்றம் பொறுக்கவேண்டுமாபோலே, ஆத்மாவின் குற்றம் பொறுக்கைக்குப் புருஷகாரமென்கை. அவள் ஸந்நிதி₄யில் குற்றம் மிக்க காகம் பிழைத்தது. அவள்ஸந்நிதி₄யில்லாமை அத்தனை குற்றமின்றியேயிருக்க, ராவணன் தலையறுப்புண்டான். (கேசவனை) விரோதி₄நிரஸநஸ்வபா₄வனை. (மாதவனைக் கேசவனை) A "கண்ணுதல் நஞ்சுண்ணக்கண்டவனே! விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமான்" என்று சொல்லுகிறபடியே. "தான் ஸாக்ஷாத் அம்ருதத்தையுண்டு ப்₃ரஹ்மாதி₃களுக்குக் கோதைக்கொடுத்தான்" என்று ப₄ட்டர். "மாதவனை" என்று தன் வாயைக்காட்டி, "கேசவனை" என்று கோதைப் பொகட்டார். (கேசவனை) விரோதி₄நிரஸநஸ்வபா₄வனை. ஸ்த்ரீத்வப்ரயுக்தமான ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்யஶேஷத்வத்தையும் போக்கினவனை.

A பெரிய திரு 6-1-2

(திங்கள் திருமுகத்து) க்ருஷ்ணனோட்டைச் சேர்த்தியால் வந்த செவ்வி. அங்கு "கதிர்மதியம்போல் முகம்" (1) என்றது. 1. "ஜகத்₃வ்யாபாரவர்ஜம்" என்று கொடுப்பார்க்கு இது ஒன்றொழிய அல்லாததெல்லாம் கொடுக்கையாலே இவர்களுக்குக் குளிர்த்தி வேண்டுகையாலே, 'திங்கள் திருமுகம்' என்கிறது. A மதிமுகமடைந்தையரிறே. (சேயிழையார்) தானும் அவனும் கூடப்பூட்டின ஆப₄ரணத்தையுடையராயிருக்கை. (சென்று) இவ்வொப்பனையோடே வரப் பார்த்திராதே சென்று. (இறைஞ்சி) மங்க₃ளாஶாஸநம் பண்ணி. (அங்கு) திருவாய்ப்பாடியில். (அப்பறை கொண்டவாற்றை) மறந்து நில்லாதே நாட்டுக்குப் பறையென்று அடிமை கொண்டபடியை.

(அணிபுதுவை) ஸம்ஸாரத்துக்காப₄ரணமான் ஸ்ரீவில்லிபுத்தூர். (பைங்கமலத் தண்டெரியல்) பெரியாழ்வார்க்குத் தாமரைத்தாராயிருக்கிறபடி. (பட்டர் பிரான் கோதை சொன்ன) ஆண்டாள் அநுகாரத்தாலே அநுப₄வித்துப்பேசின. 2. "ஸஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:" என்று ஸ்ரீபராஶரப₄க₃வான் 'தன்மகன் ஸ்ரீவேத₃வ்யாஸப₄க₃வான்பாடே சென்று நாம் சொன்ன அர்த்த₂த்துக்கு ப்ரமாணம் கேட்டுக்கொள்ளுங்கோள்' என்னுமாபோலே, பெரியாழ்வார் மகள் சொன்னத்திலும் அர்த்த₂வாத₃மில்லை.

(சங்கத்தமிழ்மாலை) B "குழாங்களாய்" என்னுமாபோலே பஞ்சலக்ஷம் குடியிற் பெண்கள் திரண்டநுப₄வித்த ப்ரப₃ந்த₄மாகையாலே, ப₄க₃வத்ப்ரேமமுடையார்க்கெல்லாம் ஶிரஸாவஹிக்கவேண்டும்படியிருக்கை. (தமிழ்மாலை) பிராட்டி ஆண்டாளானுப்போலே உபநிஷத்தும் தமிழானபடி. (முப்பதும் தப்பாமே) இதிலொரு பாட்டும் விழவிடாதே. விலையில்லாத ரத்நங்களாலே செய்த ஏகாவளியிலே ஒரு ரத்நம் குறைந்தாலும் நெடும்பாழாயிருக்குமிறே. அப்படி ஒரு பாட்டுக்குறைந்தாலும் பேரிழவாயிருக்குமென்கை. (இங்கு) பிற்பட்ட காலத்திலே. (இப்பரிசுரைப்பார்) இப்பாசுரமாத்ரத்தைச் சொல்லுவார். திருவாய்ப்பாடியில் பெண்கள் தாங்களே க்ருஷ்ணனோடேகூடி அநுஷ்டி₂க்கப் போனார்கள். ஆண்டாள் அநுகாரப்ரகாரத்தாலே பெற்றாளாகையாலே இப்ரப₃ந்த₄ம் சொன்னார்க்கும் இங்கே ப₂லம் கிடைக்கும். (ஈரிரண்டுமால் வரைத்தோள்) இவர்களளவு பாராதே பண்டு பாடினவர்கள் சொல் வழியாலே அநுஸந்தி₄க்கையாலே தோள்கள் பணைக்கும், அநுப₄விக்கத் தோள்கள் பணைத்தாப்போலே.

(செங்கண் திருமுகத்து) அலப்₄யலாப₄த்தாலே சிவந்த திருக்கண்கள். (செல்வத் திருமாலால்) உப₄யவிபூ₄தியுக்தனான ஶ்ரிய:பதியென்கை. இப்பாட்டில் உபக்ரமத்திலும் உபஸம்ஹாரத்திலும் பிராட்டி ஸம்ப₃ந்த₄ம் சொல்லியிருக்கையாலே த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்திலும் உத்தரக₂ண்ட₃த்திலும் சொன்னபடியே இங்கு சொல்லிற்றாயிற்றென்கை.

(எங்கும் திருவருள் பெற்று) இத்திருப்பாவை சொன்னார்களிடத்தே எங்கும் கோத் தானும் பிராட்டியுமாக ஆத₃ரிக்குமென்கை; கிடக்கைப்பாயிலே வெள்ளம் கோத்

A திருவாய் 10-9-10. B திருவாய் 2-3-11.

தாற்போலே. (இன்புறுவர்) இஸ்ஸம்ஶ்லேஷத்தை அநுபவித்து இனியராவர். பிராட்டியும் தாழும் ஸந்நிஹிதமாம்படி ப்ரஸாத₃த்தைப் பெற்று, (இன்புறுவர்) ப₄க₃வத்ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆநந்த₃ம் பெறுவர். A "நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்" B "திருமாலாலருளப்பட்ட சடகோபன்" C "திருமாமகளாலருள்மாரி"; நிருபகத₄ர்மம். இசலி இசலி இருவரும் பரியக்கடவர். 30.

ஆயி அருளிச்செய்த நாலாயிரப்படி முற்றிற்று.
ஆயி திருவடிகளே சரணம்.

## ஆயி அருளிய
# திருப்பாவை நாலாயிரப்படி ஸ்வாபதேசம்

முதற்பாட்டில்:— ப₄க₃வத்பரத்வத்தால் சொல்லிற்றாகிறது வேதா₃ர்த்த₂ம்; அதாவது — ஸர்வஸமாஶ்ரயணீய ஸ்த₂லம் என்றும், அவதீர்ணனானவன் அழகே ருசிஜநகம் என்றும், ருசியுடையார் ப்ராப்யத்வரையாலே அவன் தன்னை மேல் விழுந்து அபேக்ஷிக்கை ப்ராப்தம் என்றும், இவ்விஷயத்திலே இழிவார்க்கு ருசியுடையார் உத்₃தே₃ஶ்யம் என்றும், ப்ராப்யமாகிறது அநுப₄வஜநிதப்ரீதிகாரிதமுமாய், யாவதா₃த்மப₄ாவியான கைங்கர்யமென்றும், தத்ஸாத₄நமும் அவன் திருவடிகளேயென்னலாயிற்று; ப்ராப்யப்ராபகஸங்க்₃ரஹம். 1.

இரண்டாம் பாட்டில்:— இவ்விஷயத்தில் இழிவார்க்குடைய விரக்தியையும் ஸம்ப₄ாவித ஸ்வப₄ாவத்தையும் சொல்லுகிறது. 2.

மூன்றாம் பாட்டில்:— ப₄க₃வத் ஸமாஶ்ரயணப₂லமான கைங்கர்யமொழியவே 1. "ஆயுராஶாஸ்தே" என்கிறபடியே ஐஹிகப₂லங்களும் ஆநுஷங்கிக₃ஸித்₃த₄மாய்க் கொண்டு ஸித்₃தி₄க்கும் என்கிறது. 3.

நாலாம் பாட்டில்:— அநந்ய ப்ரயோஜநனாய், ப₄க₃வத் ஸமாஶ்ரயணம் பண்ணுமவனுக்கு இந்த்₃ராதி₃ தே₃வதைகள் நியாம்யராவர்களென்று, இவ்வதி₄காரிகளுடைய உத்கர்ஷம் சொல்லுகிறது. 4.

அஞ்சாம் பாட்டில்:— இப்படி ப₄க₃வத்₃ப₄ஜநாநுப₄வம் பண்ணுமவனுக்கு 2. "உத்தரபூர்வாக₄யோரஶ்லேஷவிநாஶௌ" என்கிறபடியே, ப₄க₃வத₃நுப₄வமாஹாத்ம்யத்தாலே ஸகலது₃ரிதங்களும் போமென்று சொல்லுகிறது. 5.

"மார்கழி" (1) முதல் "மாயனை" (5) என்னுமளவும் — "நாராயணனே" (1) என்று தொடங்கி, "பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்" (2) என்றும், "ஓங்கியுலகளந்த உத்தமன்" (3) என்றும், "சார்ங்கமுதைத்த சரமழை" (4) என்றும், "மாயனை மன்னு வடமதுரை மைந்தனை" (5) என்றும் அடிப்பாடு சொல்லுகிறது.

இனி மேல்பத்துப்பாட்டிலும் ப₄க₃வத்₃ விஷயம் அபரிச்சி₂ந்நமாய், தனியனுப₄விக்கமாட்டாத சாபலத்தாலும், ப₄க₃வத₃நுப₄வம் பண்ணுவார்க்கு, D "தொண்டீரெல்லீரும் வாரீர்" என்கிறபடியே துணைத்தேட்டமாயிருக்குமென்னுமத்தைச் சொல்லுகிறது.

---

A திருவாய் 9-2-1. B திருவாய் 8-8-11. C பெரிய திரு 8-6-10. D திருவாய் 5-2-2.

அதில் முதற்பாட்டில் [புள்] (6) ப4க3வதே3கபோ4க3ரான ஸ்ரீவைஷ்ணவர்கள் - அநந்யப்ரயோஜநராய் இவ்விஷயத்தில் தே3ஶிகரன்றிக்கேயிருப்பாரை அவர்கள்பக்கல் பரிவாலே தே3ஶிகராக்குகை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வப4ாவமென்னுமத்தைச் சொல்லுகிறது. 6.

[கீசு] (7) இரண்டாம் பாட்டில், ப4க3வத்3விஷயமான அர்த்த2ம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால் தங்கள் பரிவால் 1. "போ3த4யந்த: பரஸ்பரம்" என்கிறபடியே அறிவிக்கையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 7.

[கீழ்வானம்] (8) மூன்றாம் பாட்டில், ப4க3வத3நுப4வத்தில் ப்ரத்யாஸந்நராயிருப்பார் திறத்தில் ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈஶ்வரனைக் கிட்டுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 8.

[தூமணி] (9) நாலாம்பாட்டில், 2. "தத்தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்" என்று பூர்வார்த்த4 நிஷ்ட2ராயிருப்பாரை, ப4க3வத்ப்ரேமாதிஶயத்தாலே தத3கபோ4க3ராயிருக்குமவர்கள் போ4க3ார்த்த2மாக ப்ரேரிக்கை அவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. 9.

[நோற்று] (10) அஞ்சாம்பாட்டில், 3. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" 4. "அஹம் ஸ ச மம ப்ரிய:" என்று அவன் பக்ஷபாதத்திலிருப்பார் திறத்தில் 10.
ஸ்ரீ வைஷ்ணவர்கள் நித்ய ஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபமென்கிறது.

[கற்று] (11) ஆறாம்பாட்டில், "ப4க3வத்ஸம்ப3ந்த4ம் விச்சே2தி3யாதே போந்த ஸந்தாந ப்ரஸூதர் நமக்குப் பூஜ்யர் என்றும், அவர்களடியாக ப4க3வத் ஸமாஶ்ர 11.
யணம் பண்ணுகை ஸ்வரூபம் என்கிறது.

[கனைத்து] (12) ஏழாம்பாட்டில், ப4க3வத்3விஷயம் ஸஹ்யமாம்படி அவகா3ஹித்தவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உத்3தே3ஶ்யராமளவன்றிக்கே தத்ஸம்ப3ந்த4 12.
ஸம்ப3ந்தி4கள் உத்3தே3ஶ்யரென்றிருக்கை ஸ்வரூபமென்கிறது.

[புள்ளும்] (13) எட்டாம்பாட்டில், ப4க3வத3நுப4வ ரூபமான ஜ்ஞாநப4க்திகளால் பூர்ணராயிருப்பாரிடத்திலும் தத3ர்த்த2மாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸாபேக்ஷராயிருக்கை 13.
ஸ்வரூபம் என்கிறது.

[உங்கள்] (14) ஒன்பதாம் பாட்டில், ப4க3வத்3 விஷயத்தில் மூட்டுகையிலே அதி4கரித்த நிர்வாஹகர் முன்பாக ப4க3வத3நுப4வம் பண்ணுகை ஸ்வரூபம் 14.
என்கிறது.

[எல்லே] (15) பத்தாம் பாட்டு — ஸ்ரீவைஷ்ணவ ஸமாஜ த3ர்ஶநம் அபி4மதமாயிருக்குமவர்களைக் கண்டால், அந்த ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபம் 15.
என்கிறது.

இவையிரண்டாலும் ப4க3வத்3விஷயத்தைக் கிட்டுவார்
[நாயக]னில் (16) — தத்ப்ரத்யாஸந்நரைப் புருஷகாரமாகக் கொண்டு புகுருகை ஸ்வரூபம் என்கிறது. 16.
ப4க3வத்3 விஷயீகாரம் பிராட்டி ஸாபேக்ஷமாயிருக்கிறது. 17.
[அம்பரம்] (17)—பிராட்டியைப் புருஷகாரமாக வரித்தால் அவனும்
[உந்து மதகளிற்றன்] (18)—அவளும் இசலி இசலிப் பரியும் பரிவையும் சொல்லுகிறது. 18.

[குத்து விளக்கு] (19) — அடிமை செய்யுமிடத்திலும் இருவர்க்கும் சேர்ந்த சேர்த்தியிலே அடிமை செய்வதே முறையாகிறது. 19.

[முப்பத்து] (20) — ப்ரபு3த்3த4னாய், தங்கள் கார்யம் செய்கைக்கு A "ஏத்தவேழுலகுங் கொண்ட" என்கிறபடியே ஆஶ்ரிதரானவர்கள் நிர்மமராய்க் கொண்டு அவன் கு3ணகீர்த்தநம் பண்ணுகை கர்த்தவ்யம் என்கிறது. 20.

[ஏற்ற கலங்] (21) — கீழிற் பாட்டில் தங்கள் அபி4மாந ஶூந்யதையைச் சொல்லிற்று, இப்பாட்டில் அநந்யார்ஹஶேஷத்வம் சொல்லுகிறது. அவனுடைய விஶேஷ கடாக்ஷத்துக்குத் தங்களுடைய அநந்யார்ஹ ஶேஷத்வம் அநுஸந்தே4ய மென்கிறது. 21.

[அங்கண்] (22) — கர்மபரதந்த்ரராயிருந்துள்ள ப்ரயோஜநாந்தரபரரிற் காட்டிலும், அநந்யப்ரயோஜநராய் ஸாத4நாந்தர நிஷ்ட2ராயிருக்குமவர்களிற் காட்டிலும், ஸித்3த4ஸாத4நம் பண்ணினார் குற்றம் போகத் தன்கைம்முதலில்லாமையால் ஈஶ்வரனே ப்ரபு3த்3த4னாய்க் கொண்டு ஸம்விதா4நம் பண்ணவேணுமென்று அபேக்ஷிக்க அவ்வதி4காரத்தைச் சொல்லுகிறது. 22.

[மாரி] (23) — அர்த்தி2கள் ஆஸ்தா2நத்திலிருக்கிற ஶ்ரிய:பதிக்கு ஸ்வரூபாநுகு3ணவ்ருத்தியை விண்ணப்பம் செய்யவேணுமென்கிறது. 23.

[அன்றிவ்வுலகம்] (24) — அர்த்தி2களாய்ச் சென்றாலும் தந்தாமுடைய புருஷார்த்த2த்தை விஸ்மரித்து மங்க3ளாஶாஸநம் பண்ணவேண்டும்படியான விஷய வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. 24.

[ஒருத்தி] (25) — ஸ்வரூபலாப4த்தோபாதி து3:க்க2நிவ்ருத்தியும் தத3ாஶ்ரயணத்தாலே என்கிறது. 25.

[மாலே] (26) — பே4ாகோ3பகரண ஸித்3தி4யும் அவனாலே என்கிறது. 26.

[கூடாரை] (27) 1. "தம் ப்3ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி" என்கிறபடியே கைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த2மென்றறுதியிட்டு, ப்ரதிப3ந்த4கநிவ்ருத்திக்கும் உத்3தே3ஶ்யமான புருஷார்த்த2 ஸித்3தி4க்கும் அநுகு3ணாலங்காரம் அவனே பண்ணவேணுமென்கிறது. 27.

[கறவைகள்] (28) — கீழடங்க ஒரு அதி4காரிக்கு ஸம்ப4விக்கும் ஸ்வபா4வங்களைச் சொல்லி, ஆகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு அவனே உபாயமாக வேணுமென்று அபேக்ஷித்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டு தலைக்கட்டுகிறது. 28.

[சிற்றம் சிறுகாலே] (29) — ஏவம் ஸ்வீக்ருதஸித்3தோ4பாயனுக்கு தத்க்ருத ஸ்வரூபாநுரூபப2லமும் தத்3விரோதி4நிவ்ருத்தியும், 2. "யா: காஶ்சந க்ருதய:" இத்யாதி3ப்படியே சொல்லித் தலைக்கட்டுகிறது. 29.

[வங்கக் கடல்] (30) — உக்தமான அநுஷ்டா2நமில்லாதவர்களுக்கு அவர்கள் பாசுரமே பேற்றைக் கொடுக்குமென்று சொல்லி நிக3மிக்கிறது. 30.

ஆசார்யஹ்ருத3யஸ்யார்த்தா2ஸ் ஸகலா யேந த3ர்ஶிதா: ।
ஸ்ரீஸாநுத3ாஸ மமலம் தே3வராஜம் தமாஶ்ரயே ॥

நாலாயிரப்படி ஸ்வாபதே3ஶம் முற்றிற்று.

ஆயி திருவடிகளே சரணம்.

A திருவாய் 2-2-11.

# ஸ்வாபதேஶவ்யாக்யாநம் — முப்பதாம்பாட்டு

அவ ;— முப்பதாம் பாட்டு. (வங்கக்கடல் இத்யாதி₃) இப்பாட்டில், இப்ர ப₃ந்த₄ம் கற்றார்க்கு உண்டாம் ப₂லத்தைச் சொல்லுகிறார்கள்.

வ்யா :— (வங்கமித்யாதி₃) மரக்கலத்துக்கு ஒருசலநம் பிறவாதபடி பாற்கடலை மந்தரத்தை மத்தாக நாட்டி வாஸுகியாலே சுற்றித் தன்கையாலே கடைந்து பிராட்டியை லபி₄த்தாற்போலே, சேதநர் பரிக்₃ரஹித்த ஶரீரத்துக்கு ஒருவாட்டம் வாராமல் ஸம்ஸாரமாகிற மஹாஸமுத்₃ரத்தைத் தன் ஸங்கல்பமாகிற மந்த₃ரத்தை நாட்டி, க்ருபையாகிற கயிற்றாலே சுற்றி, கடாக்ஷமாகிற கைகளாலே கடைந்து, பிராட்டியிலும் ப்ரேமவிஷயமான ஆத்மவஸ்துவை லபி₄த்தவன். இத்தால் - இஶ் ஶரீரத்தோடேயிருக்கச்செய்தே 1. ''ஸந்தமேநம் ததோவிது₃:'' என்னப் பண்ணின வனை என்கிறது. (கேசவனை) கேஶியை நிரஸித்தாற்போலே ஆத்மவஸ்துவை அநுப₄விக்கும்போது அவ்வநுப₄வவிரோதி₄யாய் இச்சேதநனுக்குப் பிறக்கும் போ₄க்த்ருத்வாதி₃களுக்கு நிவர்த்தகனானவனை.

(திங்கள் இத்யாதி₃) 2. ''ப₄வதி புமாந் ஜக₃தோऽஸ்ய ஸௌம்யரூப:'' என்கிற படியே சந்த்₃ரனைப்போலே ஆஹ்லாத₃கரமான திருமுகமண்டலமுடையவர்களாய், ததே₃கவிஷயமான ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யபூ₄ஷிதராய், அநந்யார்ஹரான பா₄க₃வதர்கள் ஆற்றாமையாலே அவனிருந்தவிடத்தே போய்ப் பூஜித்து, த்₃வாபர யுக₃த்திலே நாட்டார்க்கு ''பறை'' என்று வ்யாஜமாத்ரமாய்த் தங்களுக்கு உத்₃தே₃ஶ்யமான கைங்கர்யத்தைப் பரிக்₃ரஹித்த ப்ரகாரத்தை, பூ₄மிக்கு ஆப₄ரண மான ஸ்ரீவில்லிபுத்தூரிலே எழுந்தருளியிருக்கிற விஸ்த்ருதமாய்க் குளிர்ந்திருந் துள்ள தாமரைமணிகளாலே செய்யப்பட்ட மாலைகளையுடைய பெரியாழ்வார் திருமகளாரான சூடிக்கொடுத்த நாய்ச்சியார் அருளிச்செய்த ஸங்கா₄நுபா₄வ்ய மாய், கூட்டங் கூட்டமாயிருக்கிறதாய், தமிழாலே செய்யப்பட்டு மாலைபோலே போ₄க்₃யமாய், ஶிரஸாவாஹ்யமாய், ஶ்லாக்₄யமான இப்ரப₃ந்த₄த்தை, ஒருபாட்டுக் குறையாதே பிற்பட்ட காலத்திலே இப்ரப₃ந்த₄ரூபமான பாசுரத்தை அநுஸந் தி₄க்குமவர்கள், இப்பாசுரஶ்ரவணத்தாலே பணைத்து ப₃லிஷ்ட₂மான பெரிய மலை போலேயிருக்கிற நாலுதிருத்தோள்களையுடையனாய், வாத்ஸல்யத்தாலே சிவந்த திருக்கண்மலர்களையுடையனாய், விகஸிதமான திருமுகமண்டலத்தையுடையனாய், உப₄யவிபூ₄த்யைஶ்வர்ய ஸம்பந்நனான ஶ்ரிய:பதியாலே த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்க ளிரண்டிலும் பிறந்த ஜ்ஞாநத்துக்கு விச்சே₂த₃ம் வாராதபடி க்ருபையை லபி₄த்து ஆநந்த₃ நிர்ப₄ரராயிருப்பர்கள். 30.

ஶுத்₃த₄ஸத்வம் தொட்டாசார்யர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான
வானமாமலை ஜீயர் அருளிச்செய்த

# திருப்பாவை ஸ்வாபதே3ஶம்

திருப்பாவை முதலிட்டு அஞ்சு பாட்டாலும் ப்ரபந்ந நிஷ்டா2க்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாமவைப4வத்தையும் பேசுகிறது. மேல் பத்துப்பாட்டாலும் ப்ரபத்தவ்யனுடைய திருநாமஸங்கீர்த்தநமே ப்ரபந்நனுக்குக் காலக்ஷேபமாகையாலே, அந்த ஸங்கீர்த்தனத்துக்கு அதி4காரிகளானவர்களானவர்களை எழுப்பிக் கூட்டிக்கொள்ளும்படி சொல்லுகிறது.

அது எங்ஙனேயென்னில் ;— இதில் முதற்பாட்டாலே, பரிஶுத்3த4ராய் வ்ருத்த்யாப4ாஸத்தையுடையவர்களுடைய ஶப்3த3 ப்ரமாணத்தை முன்னிட்டு ஸத்வகு3ணநிஷ்ட2ரை ஸாத்விக ஸமாசார நித3ர்ஶநபூர்வக ப4க3வந்நாமஸங்கீர்த்தனத்திலே ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. இரண்டாம் பாட்டில் ;— ப4க3வத3பி4மதக்ரியாகலாபங்களாலே ப4க3வத்3போ4க்3யமான வஸ்துவை விவேகித்து த4ரிப்பார்படியைக்காட்டி, ஸத்வப்ரத4ானரை விரோதி4நிரஸனஸமர்த்த2னுடைய திருநாமஸங்கீர்த்தனத்திலே ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. மூன்றும் பாட்டில் :— ஸங்கீர்த்தனத்துக்கு அடுத்த ஸத்வோத்தரகாலத்தை முன்னிட்டு ஸத்துக்களாலே குதூஹலிக்கப்படும் விஷயரானவர்களை, ஸகலவிரோதி2நிவாரகனுடைய ஸங்கீர்த்தனத்திலே ஸங்க3தராக்கி ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. நாலாம் பாட்டில் :— ஜ்ஞாநதீ3பப்ரகாஶராய், அத்தாலே உத்துங்க3மான பத3த்திலே இருக்கும்படியான ஸம்ப3ந்த4முடையவர்களையும் அவனுடைய ஸர்வநாமஸங்கீர்த்தனத்திலே ஸங்க3தரானபடி ஸம்வித4ாநம் பண்ணும்படி சொல்லுகிறது. அஞ்சாம பாட்டில்:— ப4க3வத்3கு3ணவித்3த4ர் பாசுரம் கேட்கையில் அபேக்ஷிக்கும்படி சொல்லுகிறது.

ஆரும் பாட்டில் :— அபி4ஜாதமும் ஆஹ்லாத3கரமுமான திருநாமஸங்கீர்த்தனத்திலே அந்வயிப்பிக்கும்படி சொல்லுகிறது. ஏழாம் பாட்டில் :— ப4க3வத்ப்ரத்யாஸந்நரோடு ஆஸத்தியுடையாரையும் மநோபி4ராமமான நாமஸங்கீர்த்தனத்திலே ஸமர்த்த2ராய் தது3க்திபரராக்கும்படி சொல்லுகிறது, எட்டாம் பாட்டில்:— ப4க3வத்3கு3ண ஜ்ஞாநநிஷ்ட2ரையும் இதிஹாஸோக்தமான கு3ணநாமஸங்கீர்த்தனத்திலே ப்ரவணராக்கும்படி சொல்லுகிறது. ஒன்பதாம் பாட்டில் :— ஸௌக3ந்த்4யஸாரஸ்யயுக்தர்விகாஸத்தையும், ஸத்வோத்3ரிக்தர் ஸமாராத4ன ஸம்வித4ான தத்பரராகிறபடியையும் காட்டி, பரிபூர்ணஜ்ஞானரையும் புண்ட3ரீகாக்ஷ நாமஸங்கீர்த்தன தத்பரராக்கிச் சேர்த்துக் கொள்ளும்படி சொல்லுகிறது. பத்தாம் பாட்டில் :— வாக்பூ2ணிதியுடையாரையும், ஸமஸ்தப்ரதிப3ந்த4க நிவர்த்தகமான ஸர்வேஶ்வரநாம ஸங்கீர்த்தனத்திலே ஸஹகாரிகளாக்கிக் கொண்ட படியைச் சொல்லுகிறது.

ஏவம்வித4 ஸங்கீர்த்தனத்தாலே அவனுக்கு அறுதியாகையும், அவனையும்
எழுப்பி ஸ்வாபேக்ஷிதங்களை விண்ணப்பம் செய்து அடிமைசெய்யும்படியையும்,
அவன் அடிமை கொள்ளும்படியையும், அவனுக்கறிவித்துத் தலைக்கட்டுகிறது
மற்றெல்லாம்.

திருப்பாவை அடியிட்டஞ்சு பாட்டாலும் — ப்ரபந்ந நிஷ்டா2க்ரமமும்,
ப்ரபத்தவ்யன் அதிஸுலப4னும்படிக்கடியான அவனுடைய அவதாரத்தின் அடிப்
பாடும் சொல்லுகிறது. மேலிட்டுப்பத்துப்பாட்டும் ப்ரபத்திக்குப் பூர்வபா4வியான
வாக்யகு3ருபரம்பரையினுடைய க்ரமம் சொல்லி, ப4க3வத்3விஷயத்தில் உத்3யுக்
தரானவர்களோடு போர அவகா3ஹித்தாரோடுவாசியற, உத்3தே3ஶ்யரென்னு
மிடம் சொல்லுகிறது.

அது எங்ஙனே? என்னில் :— ''பிள்ளாய் எழுந்திராய்'' (6) என்கையாலே,
ப4க3வத்3விஷயத்திலே அபி4நவமாக மூட்டும் 1. ''அஸ்மத்3கு3ருப்4யோ நம:'' என்
னும்படி சொல்லுகிறது. அநந்தரம் ''நாயகப்பெண்பிள்ளாய்'' (7) என்கையாலே,
ஸ்வாசார்யனுக்கும் கௌ3ரவ்யனாகையாலே 2. ''அஸ்மத்பரமகு3ருப்4யோ நம:''
என்கிறபடியைச் சொல்லுகிறது. ''கோதுகலமுடையபாவாய்'' (8) என்று ஸர்வ
ராலும் கொண்டாடும்படியிருக்கையாலே 3. ''அஸ்மத்ஸர்வகு3ருப்4யோ நம:''
என்கிற அர்த்த2த்தைச் சொல்லுகிறது. ''மாமான்மகளே'' (9) என்கையாலே
ஒளி புதுவை நகர்வாழும் பேர்கள் தாயான ஆண்டாளுக்கு அண்ணரான
4.''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:'' என்னும் அர்த்த2ம் சொல்லுகிறது. இதுவும் ஆழ்வான்
அளவும் அநுஸந்தே4யம். ''நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்'' (10) என்
கையாலே, ஸித்3தோ4பாயத்தாலே ப்ராப்ய வைலக்ஷண்யஜ்ஞானத்தையுடையராய்,
அத்தாலே உடையவர்க்கும் கௌ3ரவ்யராயிருக்கும் 5. ''ஸ்ரீபராங்குஶதா3ஸாய
நம:'' என்னுமர்த்த2ம் சொல்லுகிறது.

''கோவலர்தம்பொற்கொடி'' (11) என்கையாலே, க்ருஷ்ண ப4க்தியுக்தரான
நாத2வம்ஶயுக்தராயிருக்கிற 6. ''ஸ்ரீமத்3யாமுநமுநயே நம:'' என்னும் அர்த்த2ம்
சொல்லுகிறது. ''நற்செல்வன் தங்காய்'' (12) என்கையாலே, திருக்குமாரத்தி
யார் பருவம் நிரம்பினபின்பு சேற்றில் படியாய்க்கிடந்து அநுசரணம் பண்ணியும்,
''மனத்துகினியானைப்பாடவும்'' (12) என்கையாலும், 7. ''ஸ்ரீராம மிஶ்ராய நம:''
என்னும் அர்த்த2ம் சொல்லுகிறது. ''போதரிக்கண்ணினாய்'' (13), ''பங்கயக்
கண்ணானைப்பாட'' (14) என்கையாலே, 8. ''ஸ்ரீபுண்ட3ரீகாக்ஷாய நம:'' என்னும்
அர்த்த2ம் சொல்லுகிறது. ''நாவுடையாய்'' (14) என்கையாலே தமிழ்மறையை
இயலிசையாக்கின நாவீறுடைமையாலே, 9. ''ஸ்ரீமந்நாத2முநயே நம:'' என்னு
மர்த்த2ம் சொல்லுகிறது. ''எல்லே இளங்கிளியே'' (15) என்கையாலே, 10. ''ஶட2க
முகா2த3ர்ருதத்3ரவஸம்யுதம்'' என்னும்படி A திருவருட்கமுகு ஒண் பழத்ததான

A திருவாய் 8-9-6.

ஆழ்வார் திருப்பவளத்தில் A "நின்கீர்த்திக்கனியென்னும் கவிகள் — B மொழி பட்டோடும் கவியமுத"மாய்த் திருவாய்மொழி ப்ரவஹிக்க, அத்தாலே C "அணி மழலைக் கிளிமொழியாளை" அநுகரிக்கையாலே, 1. "ஸ்ரீமதே ஶடகோபாய நம:" என்னும் அர்த்த₂ம் சொல்லுகிறது.

"நாயகனாய்" (16) என்று தொடங்கி மேலஞ்சுபாட்டாலே, 2. "ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:" 3. "ஸ்ரியை நம:" 4. "ஸ்ரீத₄ராய நம:" என்னும் அர்த்த₂ங்களையும் அச்சேர்த்தியிலே இவரும் புருஷகார பூர்வகமாக ஆஸ்ர யிக்கச்செய்தே பெறும் ஏற்றங்களைச் சொல்லுகிறது.

D "எட்டெழுத்தின் இணைப்பொருளும் இரண்டுதனில் பொருளும் இயல் வலித்தேர் அருச்சுனர்க்கு இறைவர் தம்மைத் தொட்டுரைத்த முறையறுதிப் பொருளையெல்லாம் தோன்றும்வகை" இத்யாதி₃ப்படியே, இப்ரப₃ந்த₄ம் ரஹஸ் யார்த்த₂த்தை ப்ரதிபாதி₃க்கக்கடவதாயிருக்கும். அதில் த்₃வயயோஜனையும் மேலே யோஜிக்கப்பட்டது.

அநந்தரம் பாட்டுக்கள் எல்லாவற்றாலும் ப்ரதிபாதி₃க்கிறபடியே விஶேஷ கடாக்ஷலக்ஷ்யமாம்படியை அபேக்ஷிக்கிறபடியையும், E "வீற்றிருந்தேழுல"கிற் படியே தி₃வ்யஸிம்ஹாஸனத்திலே பேரோலக்கமாக இருக்கும்படியையும், "போற்றி" (24) என்று சேர்த்திக்கு மங்க₃ளாஶாஸனம் பண்ணும்படியையும், தங்களர்த்தி₂த்வத்தையும் கைங்கர்யோபகரணங்களை அர்த்தி₂க்கும்படியையும், எல்லாரும் ஒருவனோடே கூடியிருந்து குளிரும்படியையும், ப₂லத்துக்கநுகு₃ண மாக ஸாத₄னங்கள் தங்கள் கையதன்றிக்கே அவன் கையதாயிருக்கும்படியையும், கைங்கர்யவேஷத்தையும், மாதர்களை எழுப்பும்படியையும், கைங்கர்ய ப்ரதி ஸம்ப₃ந்தி₄யான ஸ்ரிய:பதி கடாக்ஷத்தாலே அந்தக் கைங்கர்யத்தைப் பெற்று வாழும்படியையும் சொல்லித் தலைக்கட்டுகிறது.

ஆகையாலே, கு₃ருபரம்பரா விவரணபூர்வகமாக த்₃வய விவரணமான இப்ரப₃ந்த₄மே ப்ரபந்நனுக்கு அநவரதாநுஸந்தே₄யமென்றதாயிற்று. F "ஐப் தவ்யம் கு₃ருபரம்பரையும் த்₃வயமும்" என்னக்கடவதிறே. இதி கு₃ருபரம்பரா விவரணம்.

த்₃வயத்துக்கு ஸங்க்₃ரஹமான திருமந்த்ரயோஜனை காட்டப்படுகிறது — இப்ரப₃ந்த₄த்தாலே. G "நமோநாராயணாயவென்பாரே" என்றிறே இவர்தாம் அருளிச்செய்தது. இப்ரப₃ந்த₄த்தில் "ஊழிமுதல்வன்" (4) "பற்பநாபன்" (4) என்று ஶேஷத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஶேஷித்வத்தையும், "உனக்கே" (29)

A திருவாய் 3-8-6, B திருவாய் 8-10-5, C திருவாய் 9-7-11, D
E திருவாய் 4-5-1, F ஸ்ரீ வசனபூஷணம், 274 G நாச்-திரு 5-11.

என்கையாலே, உகாரத்தில் அநந்யார்ஹஶேஷத்வத்தையும், ''நாம்'' (5) என்றும் ''யாம்'' (24) என்றும் — மகாரவாச்யனாய் ப்ரக்ருதே:பரனாய் ஞாநாநந்த3வச்சே2ஷ பூ4தனாயிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் சொல்லுகையாலே, ப்ரணவார்த்த2ம் ஸங்க்3ருஹீதமாயிற்று. ''தூயோமாய் வந்து நாம்''(8) ''தூயோமாய்வந்தோம்''(16) ''அபிமானபங்கமாய்'' (22), ''மற்றைநங்காமங்கள் மாற்று'' (29) என்கையாலே நமஸ்ஸிலர்த்த2மும், ''கதிர்மதியம்போல்முகத்தான் நாராயணன்'' (1) என்றும், ''நாராயணன்மூர்த்தி'' (7), என்றும் ''ஓங்கியுலகளந்த உத்தமன்பேர்'' (3) என்றும் சொல்லுகையாலே நாராயண ஶப்3த3ார்த்த2மும்; A ''உலகை ஈரடியால் நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோநாராயணமே'' என்னக்கடவதிறே. ''உறவேல் நமக்கிங்கு ஒழிக்கஒழியாது'' (28) என்கையாலே அதில் ஸர்வவித4 ப3ந்து4த்வமும், ''எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமேயா வோம் உனக்கேநாமாட்செய்வோம்'' (29) என்கையாலே சதுர்த்2யர்த்த2மும் ஸங்க்3ருஹீதமாயிற்று. இதி திருமந்த்ரவிவரணம்,

''கறவைகள் பின்சென்று'' (28) இத்யாதி3களாலும், ''செய்யாதனசெய் யோம்'' (2), ''உன்னை அருத்தித்துவந்தோம்'' (25), ''சிற்றம் சிறுகாலேவந்து உன்னைச் சேவித்து'' (29) என்றும், ''நாராயணன்'' (10) என்றும், ''புண்ணியம் நாமுடையோம்'' (28) என்றும், ''மாயனை மன்னுவடமதுரைமைந்தனை'' (5) என்று தொடங்கி ''தீயினில் தூசாகும்'' (5) என்றும், ''எங்கள்மேல்சாபமிழிந்து'' (22) என்றும், ''வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து'' (25) என்றும் சொல்லுகையாலே சரமஶ்லோகார்த்த2ம் ஸங்க்3ருஹீதமாயிற்று. B ''ஐந்து தீயோடு நின்று தவம் செய்யவேண்டா திருமார்பனைச் சிந்தையுள் வைத்துமென்பீர்'', C ''ஐந்துநெருப் பிடையே நிற்கவும் நீர்வேண்டா'', D ''நகரமருள்புரிந்தித்யாதி3 - பெயரினையே புந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும் அந்தியால் ஆம்பயன் அங்கு என்'' என்றும் சொல்லக்கடவதிறே.

திருப்பாவையால் ''நாராயணன்'' (1) என்றும், ''பாற்கடலுள் பையத் துயின்ற பரமன்'' (2) என்றும், ''ஓங்கியுலகளந்த உத்தமன்'' (3) என்றும் 1. ''ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: । நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக3தோ மது4ராம் புரீம் ॥'' என்கிறபடியே ஶ்ரீக்ருஷ்ணாவதாரத்துக்கு அடியான அடிப்பாட்டை அடைவேசொல்லி, ஏவம்வித4னானவன் ''மாயனை மன்னு'' (5) இத்யாதி3ப்படியே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்திமகனாய் ஒளித்து (25) வளருகிறவிடத்தே, ''பேய்முலைநஞ்சுண்டு, கள்ளச் சகடம் கலக்கழியக்காலோச்சி'' (6) என்று பூதனாஶகடநிராகரணம் சொல்லி,

A பெரிய திரு 6-10-1. B பெரிய திரு 3-2-2. C மூன்-திருவ 76.
D முதல்-திருவ 33.

அதுக்குமேலே ''தாமோதரன்'' (5) என்று வெண்ணெய் களவு காண்கையாலே கட்டவுமடிக்கவும் எளியனாயிருந்தபடி சொல்லி, மது4ரையிலே மல்லரைமாட்டி (8) வல்லானை (15) கொன்றபடியைச் சொல்லி, அநந்தரம், தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில் (25) நெருப்பாய், அவனைப் போக்கினவளவும் அருளிச்செய்தாரிறே. இதி சரமஶ்லோக விவரணம்.

(மார்கழித்திங்களித்யாதி3) இதில் அத்யந்தப4க்தியுக்தரானவர்கள் ப4க3வத்3 விரஹபரிதாபஹரமாக ஸஹகாரிகளுடன் ப4க3வத்3விஷய அவகா3ஹனம்பண்ண ஒருப்பட்டு, ஸ்வாபேக்ஷிதங்களை அத்தலையாலே பெற்று வாழும்படியையும் சொல்லுகிறது. தந்தாம் ப்ரீதிவிஷயங்களைப் பிரிந்தார்களுக்கெல்லாம் இப்படியிறே ப்ரேமஸ்வபா4வமிருப்பது.

ஶ்ரிய:பதியாய் ஶ்ரீவைகுண்ட2 நிகேதநனாய், ஸர்வஸ்மாத்பரனாய் இருந்துள்ள ஸர்வேஶ்வரன், ஆஶ்ரிதரக்ஷணார்த்த2மாக ஸ்வவிபூ4தியிலே சக்ரவர்த்தித் திருமகனாய் வந்து அவதரித்துப்போந்து, பிராட்டியைப் பிரிந்து A மெல்லியல் தோள்தோய்ந்து அநந்தரம் இப்படி அதிவிலக்ஷணையாய் அத்யந்தாபி4மதையான தத்3விஷயத்தை லோகரக்ஷணார்த்த2மாக விஶ்லேஷித்து, B ''உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து'' என்னும்படி பரிதப்தனாய், ''அந்த விரஹதாபம் மாற்றலாமோ?'' என்கிற அலமாப்பாலே அர்ணவத்திலே அவகா3ஹிக்க நினைப்பதானாற்போலேயும், அவனைப் பின்தொடர்ந்துபோந்த பரிவரான தம்பி ப4ரதனும் C தயரதன் பெற்ற மாகதமணித்தடத்தைப் பிரிந்து, 1. ''கூ3டே4ாக்3 நிரிவ பாத3பம்'' என்னும்படி பரிதபித்து ஸரயு ஆற்றிலே அவகா3ஹித்து, ஸரஸ்ஸு முதலானவற்றிலே அவகா3ஹிக்கவும் ஒருப்பட்டிருந்தாற்போலவும், பின்னையும் மாமாயன் மாதவன் வைகுந்தன் (9) D ''வானிளவரசு வைகுந்தக் குட்டன் வாசுதேவன், மதுரைமன்னன், நந்தகோனிளவரசு, கோவலர்குட்டன்'' E ''சூட்டுநன்மாலை'' தொடக்கமான அங்குத்தை போ4க3த்தை அநாத3ரித்து, E அடலாயர்தம் கொம்பினுக்காக இங்கே போந்தாற்போலே.

ஆண்டாளும் அந்த F வைகுந்தவான்போகம் தன்னை இகழ்ந்து இங்கேற G வேயர் தங்கள்குலத்திலே H விட்டுசித்தன் வியன்கோதையாய் வந்தவதரித்து, ஆயர்சிறுமியர்(16) படியை அடைந்து, ஆயர்குலத்தினில் தோன்றினவனை(5) மனத்துக்கு இனியதாகப் (12) பாடிக் கூடியிருந்தபடியைச் செய்யவெண்ணப் போந்தவளாய், I அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது தொடக்கமான விஷயங்களைப் பிரிந்த தளர்த்தியாலே J இனவேல் நெடுங்கண்கள் இமைபொருந்தாதே, அவனில் எண்மடங்கான K காமத்தீ உள் புகுந்து கதுவ, அந்த விரஹதாபமாகிற

A திருநெடும் 13, B நாச்-திரு 11-7, C திருவாய் 10-1-8, D பெரியாழ் திரு 3-6-3
E திருவிருத்தம் 21, F உபதேச 22, G பெரியாழ் திரு 5-4-11, H நாச்-திரு 13-10
I திருநெடும் 14, J நாச்-திரு 5-4, K நாச்-திரு 8-2.

பெரு நெருப்பை ஆற்றுகைக்கு A ஆதரம் பெருத்து, B பெரும்புறக்கடல் இப் புறத்திலே திருப்பாற்கடலாய்ப் பொங்கி எங்கும் பரந்து, வெள்ளக்கால்களாய்ப் பரந்து சுழித்துப் பெருநீராக C மதுர ஆருய்ப்பெருகுகிற அம்ருதத்திலே குள்ளக்குளிரக்குடைந்து நீராட (13) ஒருப்பட்டு, பெருக்காற்றிலே இழிவார் துறை தப்பாமே துறைஅறிந்தநிலவரோடேகூட இறங்க நினைக்குமாபோலே, இறங்க நினைக்கிறதாயிருக்கிறது இங்கும்.

அது எங்ஙனே? என்னில்: - ஸ்ரிய:பதியாய், ஸ்ரீவைகுண்ட₂ நிகேதநனாய், நித்யமுக்தாநுபாவ்யனாய், ஸர்வஸ்மாத்பரனாயிருந்துள்ள ஸர்வேஸ்வரன், "நாராயணனே" (1) என்று அவன் B பெரும்புறக்கடலாயிருக்கிறபடியும், அநந்தரம் "பாற்கடலுள் பையத்துயின்றபரமன்" (2) என்று பாற்கடல்போலே யான வ்யூஹத்தையும், "ஓங்கி உலகு அளந்த உத்தமன்" (3) என்று அது கால்களாய்ப் புறப்பட்டுப்பரந்து "பற்பநாபன்" (4) என்று சுழித்து, "தூயபெருநீர் யமுனைத் துறைவன்" (5) என்று D பெருக்காறுபோலேயான விப₄வத்தையும், "நாற்றத்துழாய் முடிநாராயணன்" (10) என்று உள்ளே ஊற்று ஜலம்போலே அந்தர்யாமியாயிருக்கும்படியையும், "புள்ளரையன் கோயில்" (6) என்று நித்யமான நீர்மையாலே D "அதிலே தேங்கிய மடுக்கள்" என்னலாம்படி E ருசிஜநகவிப₄வலாவண்யத்தோடே எப்போதும் ஆஸ்ரயிக்கலாம்படியிருக்கிற அர்ச்சாவதாரத்தையும், அத்யபி₄நிவேஶத்துடன் F இங்கே காண இப்பிறப்பே அநுப₄விக்கக்கோலி;

அவை அப்போதே அநுப₄விக்கப் பெருமையாலே, G "வைகுந்தனென்ப தோர் தோணிபெருது உழல்கின்றேன்" என்றும், H "பொங்கிய பாற்கடல் பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால் என் கொங்கை கிளர்ந்து குமைத் துக் குதுகலித்து ஆவியை ஆகுலம்செய்யும்" என்றும், I "விண்ணுறநீண்டு அடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தை விரும்பி" என்றும், J "பாஞ்சசன்னி யத்தைப் பற்பநாபனோடுவாய்ந்த பெருஞ்சுற்றமாக்கிய" என்றும், K "கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்றும், L "ஆவலன்புடையார் தம் மனத்தன்றி மேவலன்" என்றும், M "உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து என்னை நலங்கொண்டநாரணன்" என்றும், N "பெண்கொடியை வதை செய்தான்" என்றும், O "காமத்தீயுள்புகுந்துகதுவ" என்றும், P "தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர் ஆமுகத்தை நோக்காரால்" என்றும் சொல்லு

A திருமாலை 16. B பெரிய திரு 7-10-1. C திருமாலை 36. D ஸ்ரீவசனபூஷணம் 39. E ஆசார்ய ஹ்ருதயம் 162. F திருவாய் 8-5-11. G நாச்-திரு 5-4. H நாச்-திரு 5-7. I நாச்-திரு 5-11. J நாச்-திரு 7-10. K நாச்-திரு 13-9. L நாச்-திரு 4-8. M நாச்-திரு 8-6. N நாச்-திரு 8-9. O நாச்-திரு 8-2. P நாச்-திரு 11-1.

கிறபடியே, பரத்வாதி3பஞ்சாவஸ்த2ாவஸ்தி2தனாய் ப3ஹுகு3ணனாய் தே3ஶகால விப்ரகர்ஷாக்3யுபாதி4யாலே ஆஶ்ரயிப்பார்க்கு அஸந்நிஹிதத்வாதி3களாலும் ஆலோகாலாபாத்3யநாநுப4ாவிகத்வத்தாலும் எம்பெருமான் அரியனாகிறபடியை தர்ஶித்து;

முற்காலத்திலே ஸ்ரீகோ3பிமார் 1. ''கோ3பீபரிவ்ருதோ ராத்ரிம்'' என்று பூர்வ பக்ஷத்தில் பூர்வராத்ரியிலே, A அணியாய்ச்சியர் சிந்தையுள் குழகனான க்ருஷ்ணனோடே கழகமாகக்கூடியிருந்து, ஒருகார்யப்பாட்டிலே, பிரிந்துபோந்து, B அவனை விட்டு அகன்று உயிராற்றகில்லாதாப்போலே, யமுனையாற்றிலே ''மார்கழி நீராட'' (4) என்று ஒரு வ்யாஜத்தாலே க்ருஷ்ணானுப4வ குதூஹலத்தையுடையராய், அபரராத்ரியிலே உணர்ந்து, முற்பட்டார் பிற்பட்டாரை எழுப்பி, எல்லாரும் திரண்டு நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக க்ருஷ்ணனை எழுப்பி, அவலாப4ங்களை அர்த்தி2த்துப்பெற்று அநுப4வித்தாற்போலவும்;

சீர்மல்குமாய்ப்பாடிக்கு (1) ஸத்3ருஶமான ஸ்ரீவில்லிபுத்தூரிலும், ஸ்ரீவைஷ்ணவஸந்தான ப்ரஸூதையான ஆழ்வார் திருமகளாரான ஆண்டாள் க்ருஷ்ணாநுகாரிகளான அவர்களை அநுகரித்து, C ''வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து'' என்கிறபடியே, D ''வேதப்பயன் கொள்ளவல்ல விஷ்ணுசித்தன் ஸம்ப3ந்த4த்தாலே, E வேதமனைத்துக்கும் வித்தான அர்த்த2த்தைக்கொண்டு, ப4க3வத்3 ருசியுடையாரைக்கொண்டு, பத்துப் பெண்களை எழுப்புகிறமுகே2ந, ப்ரப3ந்நஜனகூடஸ்த2ரான பதின்மரை முன்னிட்டு, வேத3ப்பொருளாய் ''யமுனைத்துறைவன்'' (5) என்று பேர்பெற்ற எம்பெருமான் திருவடிகளைப்பற்றுமளவும் சொல்லுகிறார்கள். '''புள்ளும்' (6) தொடங்கி 'எல்லே' (15) அளவும் த3ஶமாந்தமாயே'' என்றாரிறே தே3ஶிகரும். இவர்கள் க்ருஷ்ணாநுப4வத்துக்கு தே3ஶிகராகையாலும் பத்துப்பெண்களை எழுப்புகிறது, நாச்சியாருக்கு தே3ஶிகராகையாலும், பிராட்டிமாரோடே ஸாம்யகு3ண ஷட்கத்தையுடையராகையாலும், இவ்வநுப4வத்துக்கு இவர்களைக் கூட்டிக்கொள்ளுகிறது.

இன்னமும், ப4க3வத்3 விஷயத்தில் முற்பட்டார் பிற்பட்டாரையும் கூட்டிக்கொண்டு போகவேண்டும். பரஸம்ருத்3தி4யாலும் இவர்களை எழுப்புகிறார்கள். 2. ''வ்யுஷ்ய ராத்ரிம் து தத்ரைவ க3ங்க3ாகூலே ஸ ராக4வ: | ப4ரத: கால்யமுத்த2ாய ஶத்ருக்4நமித3மப்3ரவீத் || ஶத்ருக்4நோத்திஷ்ட2 கிம் ஶேஷே நிஷாத3ாதி4பதிம் கு3ஹம் | ஶீக்4ரமாநய ப4த்3ரந்தே தாரயிஷ்யதி வாஹிநீம் || ஜாக3ர்மி நாஹம் ஸ்வபிமி தமேவார்யம் விசிந்தயந் ||'' என்னக்கடவதிறே. இங்கும் அப்படியேயாயிற்று. ப்ரத்யக்ஷாநுப4வத்தாலல்லது த4ரியாதார், கு3ணாநுப4வத்தாலே த4ரித்திருப்பாரைத்வரித்தெழுப்புகிறபடி.

---

A நாச்-திரு 4-10, B திருவாய் 9-9-11, C திருவாய் 4-6-8, D பெரியாழ் திரு 2-8-10
E திருப்பாவைப் பெருமை பற்றிய வெண்பா.

இதில் முதற்பாட்டில் ''பிள்ளாய் எழுந்திராய்'' (6) என்று ''பிள்ளைப் பெண்'' என்கிறது - பொய்கையாழ்வாரை. அதெங்ஙனே? என்னில்; A ''அரவம் அடல்வேழம்'' இத்யாதி$_3$யாலே க்ருஷ்ணநுப$_4$வத்துக்கு தே$_3$சிகராகையாலும், இவள் சூடிக்கொடுத்த வடிவுக்கு, B ''வையந்தகளி'' இத்யாதி$_3$ — B ''சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை'' என்றும், C ''மாலுங்கருங்கடலே என் நோற்றாய்'' இத்யாதி$_3$யாலே அவனுடைய அங்க$_3$ஸங்க$_3$த்தை ஆத$_3$ரித்துப் பேசியும், D ''மணமருவமால் விடையேழ்செற்று'' என்று, நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்கு எருதுகளின் மேலே வ்யாபரித்த படியைப் பேசுகையாலும், இதிலே ''பேய் முலை நஞ்சுண்டு'' (6) என்றதை - E ''பேய்முலை நஞ்சூணாக உண்டான்'' என்றும், ''கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி'' (6) என்று கன்னிப்போரான சிறுச் சேவகத்தை, F ''ஓரடியும் சாடுதைத்த'' என்றும், ''வெள்ளத்தரவில்துயிலமர்ந்தவித்தினை'' (6) என்றத்தை, G ''வெள்ளத்தினுள்ளானும்'' இத்யாதி$_3$யாலே பேசியும், H ''ஒன்றுமதனையுணரேன் நான்'' என்று முந்துறமுன்னம் ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்திலே இழிந்தவராகையாலும், ''பிள்ளைப்பெண்'' என்கிறது — பொய்கையாழ்வாரை என்கை. பிள்ளை - மௌக்$_3$த்$_4$யம்.

இரண்டாம்பாட்டில் ''பேய்ப்பெண்'' (7) என்கிறது - பேயாழ்வாரை. அதெங்ஙனே? என்னில்; I ''திருக்கண்டேன்'' இத்யாதி$_3$யாலே நாயகனுடைய வைப$_4$வத்தை த$_3$ர்சிப்பிக்கையாலும், மற்றும் ஸ்த்ரீத்வாபத்தியாலே, J ''வெற்பென்று வேங்கடம்'' என்று தொடங்கி, J ''நீண்டதோள்மால் கிடந்த நீள்கடல் நீராடுவான் பூண்டநாள் எல்லாம் புகும்'' என்கையாலும், K ''கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதி'' என்று க்ருஷ்ண சேஷ்டிதங்களைப் பேசுகையாலும், L ''பின்னைக்கா ஏற்றுயிரை அட்டான்'' என்று நப்பின்னைப் பிராட்டிக்காக அவன் எருதுகளின்மேலே வ்யாபரித்தபடியைப் பேசுகையாலும், ''பேய்ப்பெண்ணே'' (7) என்கிறது - பேயாழ்வாரை என்றபடி.

மூன்றாம்பாட்டில், ''கோதுகலமுடையபாவாய்'' (8) என்கிறது - பூதத்தாழ்வாரை. அதெங்ஙனே? என்னில், -ஸ்த்ரீத்வாபத்திக்கு உடலாக M ''அன்பேதகளி'' இத்யாதி$_3$யாலே ப$_4$க்தியைப் பேசி, N ''பெருந்தமிழன் நல்லேன் பெரிது'' என்ற அநந்தரம், O ''பெருகுமதவேழம்'' என்று அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதத்தையும், ஜாத்யுசிதத$_4$ர்மத்தையும் பேசியும் P ''ஏறின்பெருத்தெருத்தம் கோடொசியப் பெண்ணசையின் பின்போய் எருத்திறுத்த நல்லாயர் ஏறு'' என்று நப்பின்னைப்பிராட்டியைப்

A முதல் திருவ 54, B முதல் திருவ 1, C முதல் திருவ 19, D முதல் திருவ 62
E முதல் திருவ 11, F முதல் திருவ 100, G முதல் திருவ 99, H முதல் திருவ 2
I மூன்-திருவ 1, J மூன்-திருவ 69, K மூன்-திருவ 42, L மூன்-திருவ 85
M இர-திருவ 1, N இர-திருவ 74, O இர-திருவ 75, P இர-திருவ 62

பெறுகைக்கு எருதுகளின் மேலே அவன் வ்யாபரித்த வ்யாபாரத்தைப் பேசியும், இதில் A "தேவாதி தேவனெனப் படுவான் முன்னொருநாள் மாவாய் பிளந்த மகன்" என்றும், B "மாலே நெடியோனே கண்ணனே விண்ணவர்க்கு மேலா வியன்துழாய்க் கண்ணியனே மேலால் விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே என்தன் அளவன்றால் யானுடைய அன்பு" என்றும் அருளிச்செய்கையாலும், "கோதுகலமுடையபாவாய்" (8) என்றது பூதத்தாழ்வாரை என்றபடி. C "மாதவன் பூதம்" என்கிறது கோதுகலமிறே; ஆகையாலும், D "மாதவன்பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு" என்றவரிறே. ஆக மூவரும் ஜ்ஞாநதர்ஶநப்ராப்த்ய வஸ்த்தைகளோடே கூடியாயிற்றிருப்பது.

நாலாம்பாட்டில், இவர்களுக்கு அநந்தரத்தில்வரான திருமழிசையாழ்வாரை - "மாமான் மகள்" (9) என்கிறது. அதெங்ஙனே? என்னில்; 1. "தாத்ரா துலிதா லகுர்மஹீ" என்றும், E "உலகுதன்னை வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே வைத்தெடுத்த பக்கம்வலிது." என்னும்படி மஹீஸாரக்ஷேத்ரமான திருமழிசையிலே, 2. "பார்க்கவோ தீர்க்கஸத்ரேண வாஸுதேவம் ஸநாதநம் ! அபிபூஜ்ய யதாந்யாயம்" என்கிறபடியே ஸ்ரீஜகந்நாதனை உத்தேஶித்து யஜித்துக்கொண்டிருக்கிற காலத்திலே, பார்க்கவனுடைய பத்னி கர்ப்பிணியாய்த் திருமழிசைப்பிரானைத் திருவயிறு வாய்த்ததாலே, 3. "பார்க்கவீ லோகஜநநீ" என்னும்படியான பிராட்டியோடே உடன்பிறந்த பார்க்கவபுத்ரர் ஆகையாலும் F "காட்டில் வேங்கடம்" இத்யாதி F "கூட்டுமாகில் நீ கூடிடுகூடல்" என்கிறபடியே, G "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண இழைப்பன் திருக்கூடல் கூட" என்று ஸ்த்ரீத்வபாவனையாய்ப் பேசுகையாலும், "தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய" (9) என்கிற ஜ்ஞாநதீபப்ரகாஶத்தை, H "என் மதிக்கு விண்ணெல்லாம் உண்டோவிலை", I "ஞானமாகி ஞாயிருகி" என்று பேசுகையாலும், J "ஆயன்துவரைக்கோனாய் நின்றமாயன்" என்றும், K "அடிச்சகடம் சாடி இத்யாதி - வடிப்பவளவாய்ப் பின்னை தோளிக்கா வல்லேற்றெருத் திறுத்து" என்றும், L "ஆயனாகி ஆயர்மங்கை வேயதோள் விரும்பினாய்" என்றும், M "பின்னைகேள்வ ! நின்னொடும் பூட்டிவைத்த வெண்ணை நின்னுள் நீக்கல்" என்றும், க்ருஷ்ணசேஷ்டிதங்களையும் நப்பின்னைப்பிராட்டி புருஷகார வைபவத்தையும் சொல்லி, இதிலே "மாமாயன் மாதவன் வைகுந்தன்" (9) என்றதை N "மாதவனை" என்றும், O "வைகுந்தச் செல்வனார்" என்றும் பேசுகையாலும், "மாமான்மகள்" (9) என்கிறது - திருமழிசைப்பிரானை என்றபடி.

---

A இர-திருவ 28. B இர-திருவ 100. C திருவாய் 5-2-2. D இர-திருவ 39. E திருச்சந்த-தனியன். F நாச்-திரு 4-2. G நான்-திருவ 39. H நான்-திருவ 51. I திருச்சந்த 114. J நான்-திருவ 71. K நான்-திருவ 33. L திருச்சந்த 41. M திருச்சந்த 99. N நான்-திருவ 65. O நான்-திருவ 75.

ப4ார்க்க3வனும் ப4ார்க்க3வியும், ப்4ருகு3வுக்குக் க்2யாதியினிடத்திலே ஸஹோத3ரராக ஸம்ப4விக்கையாலும், லோகமாதாவுடன் பிறந்தவன் லோகத்துக்கெல்லாம் மாமனாகத்தட்டில்லையிறே. அந்த ப4ார்க்க3வ புத்ரனாகையாலே இவரை "மாமான் மகள்" (9) என்னக்குறையில்லை. அன்றிக்கே, யஶோதை3ப்பிராட்டிக்குப் பின்பிறந்த ஸ்ரீகும்ப4ர் குமாரத்தியான நப்பின்னைப் பிராட்டிதரத்தையுடையார் ஒருவராகையாலே "மாமான் மகள்" (9) என்று சொல்லுகிறதாகவுமாம்.

அஞ்சாம் பாட்டில், "அம்மனாய்" என்கிறது — குலசேகரப்பெருமாளை. அது எங்ஙனே? என்னில் — குலஶேக2ரனாகையாலும், A எல்லையிலடிமைத் திறத்தினில் என்று மேவுமனத்தனாகையாலும்; B அல்லிமலர் திருமங்கை கேள்வன் தன்னை நயந்து இளஆய்ச்சிமார்கள் எல்லிப்பொழுதினில் ஏமத்தூடி எள்கியுரைத்தவுரையதனை ஸ்த்ரீத்வப4ாவநயா பேசுகையாலும், C "ஏறு அடர்த்ததும்", D "ஆனேறேழ்வென்றான் அடிமைத் திறமல்லால்" என்று நப்பின்னைப் பிராட்டி விஷயமாக வ்யாபரித்த வ்யாபாரத்தில் தோற்று "அடிமையல்லது" என்கையாலும், E "ஆலைநீள் கரும்பன்னவன்" என்று தொடங்கி, F "மல்லைமாநகர்க்கிறையவன்தன்னை வான் செலுத்தி" என்னுமளவும் க்ருஷ்ணசேஷ்டிதங்களைப் பேசி அநுப4விக்கையாலும், இதிலே "நாற்றத்துழாய்முடி நாராயணன்" (10) என்றதை G "வண்டு கிண்டு நறுந்துழாய் மாலையுற்றவரைப் பெருந்திருமார்வனை" என்றும், அந்நாரணனை H "நலந்திகழ் நாரணன்" என்றும் பேசுகையாலும், இவர்க்கு அசலுணர்த்தி அநுப4வம்போலே ரங்க3யாத்ரையில் அநுப4வம் நடந்து செல்லுகையாலே ப்ரபந்ந குலஶேக2ரரான குலசேகரப்பெருமாளை "நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்" (10) என்கிறதென்கை.

ஆரும் பாட்டில், "கோவலர்தம் பொற்கொடியே" (11) என்கிறது — பெரியாழ்வாரை. எங்ஙனே? என்னில் — I சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான இவளைப்போலே J கோவலப்பட்டம் கவிக்கும்படி கோ3ப ஜந்மத்தை ஆஸ்த2ானம் பண்ணினவராகையாலும், K "கன்னியரோடெங்கள் நம்பி கரியபிரான்விளையாட்டை" என்னும்படி, L "கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று தொடங்கி, M "பண்டு அவன்செய்த கிரீடையெல்லாம்" என்னும்படி க்ருஷ்ண சேஷ்டிதம் பேசி அநுப4விக்கையாலும், N "நப்பினை தன்திறமா நல்கு3ண சேஷ்டிதம் பேசி அநுப4விக்கையாலும், N "நப்பினை தன்திறமா நல்கு3ண" என்றும், O "ஐயபுழுதி" விடையேழவிய நல்லதிறலுடைய நாதனுமானவனே" என்றும், O "ஐயபுழுதி" விடையேழவிய நல்லதிறலுடைய நாதனுமானவனே

A பெ -திரு 2-10. B பெரு-திரு 6-10. C பெரு-திரு 2-3. D பெரு-திரு 4-1.
E பெரு-திரு 7-1. F பெரு-திரு 7-11. G பெரு-திரு 2-3. H பெரு-திரு 10-11.
I திருப்பாவைத் தனியன். J பெரியாழ்-திரு 3-8-7. K நாச்-திரு. 3-10.
L பெரியாழ்-திரு 1-1-1. M பெரியாழ்-திரு 2-9-11. N பெரியாழ்-திரு 1-5-7.
O பெரியாழ்-திரு 3-7. P பெரியாழ்-திரு 3-8.

A ''தழைகளும்'' இத்யாதி₃யளவாய் B கன்னிமார்கள் காமுற்ற மாற்றத்தைப் பேசுகையாலும், இதிலே ''முகில்வண்ணன்'' (11) என்றத்தை — C ''விட்டு சித்தன்மனத்தே கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர் முகில்வண்ணனை'' என்கையாலும், ''கோவலர்தம் பொற்கொடியே'' (11) என்கிறது பெரியாழ்வாரை என்கை.

ஏழாம்பாட்டில், ''நற்செல்வன் தங்காய்'' (12) என்கிறது தொண்டரடிப் பொடியாழ்வாரை; அது எங்ஙனே? என்னில்: — ஸ்த்ரீத்வத்துக்கநுகு₃ணமாக, D ''தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகன்'' என்றும், E ''உடலெனக்கு உருகுமாலோ'' என்றும், F ''கண்ணனைக் கண்ட கண்கள் பனியரும்புதிருமாலோ'' என்றும் தம்முடைய ப₄க்தியைப் பேசுகையாலும், G கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ் உற்றதிருமாலை பாடுகையாலும் H ''மழைக்கன்றுவரை முன் ஏந்தும் மைந்தனே'' என்று குன்றுகுடையாக எடுத்தபடியைப் பேசுகையாலும், I ''கவளமால் யானைகொன்ற கண்ணனை'' என்கையாலும், ஸ்ரீமாலாகாரரைப்போலே J செண்பகமல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி எண்பகர் பூவுங்கொணர்ந்துசாத்த, அத்தால் வந்த கைங்கர்யஸ்ரீயை உடைய பெரியாழ்வார்க்குப் பிற்பாடராய், அவர் கைங்கர்யஸ்ரீயை அநுவித₄ானம் பண்ணுகையாலே, ''அவர்க்கு அநுஜர்'' என்னும்படியாய், திருப்பள்ளியுணர்த்துகிறவதிலும் வந்தால் K ''விஷ்ணுசித்ததுளஸீப்₄ருத்யர்'' என்று ஸஹபடி₂தராகையாலும், ''நற்செல்வன் தங்காய்'' (12) என்கிறது ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வாரை என்கை. இவரும், இதிலே ''சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச்செற்ற மனத்துக்கினியானை'' (12) என்றத்தை — L ''இலங்கையர் குலத்தை வாட்டிய வரிசிலை வானவர்ஏறே'' என்றும், M ''செருவிலே அரக்கர் கோனைச் செற்ற நம்சேவகனார்'' என்றுமருளிச்செய்தாரிறே.

எட்டாம் பாட்டிலே, ''போதரிக்கண்ணினாய்'' (13) எனகிறது — திருப்பாணாழ்வாரை. அது எங்ஙனே? என்னில்: — தொண்டரடிப்பொடியாரோபாதி, N ''அடியார்க்கு என்னை ஆட்படுத்தவிமலன்'' என்றும், N ''என் கண்ணினுள்ளன'' என்றும், O ''கொண்டல் வண்ணனைக் கோவலனாய்'' என்று தொடங்கி, O ''என் அமுதினைக்கண்ட கண்கள்'' என்கையாலே — ''போதரிக் கண்ணினாய்'' (13) என்கிறது — திருப்பாணாழ்வாரை. P ''மெய்ம்மையை மிக வுணர்ந்து'' என்று ததீ₃யசேஷத்வபர்யந்தமான ஜ்ஞானமிறே ஜ்ஞானமாவது. ததீ₃யர்க்கு உகப்பாகப்பண்ணும் ப₄க₃வத₃நுப₄வமிறே இவரது. ஸ்த்ரீத்வபா₄வனையாலுண்டான ப₄க்தி, பத்தும் பத்தாக அடிதொடங்கி முடியளவுமாய் மேலாயிருக்கும். இப்பாட்டிலே ''பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை'' (13) என்றத்தை, இவரும், Q ''சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிர ஓட்டியோர் வெங்கணையுய்த்தவன்'' என்றாரிறே.

A பெரியாழ்-திரு 3-4-1, B பெரியாழ்-திரு 3-4-10, C பெரியாழ்-திரு 5-4-11 D திருமாலை 16, E திருமாலை 19, F திருமாலை 18, G திருமாலைத் தனியன் H திருமாலை 36, I திருமாலை 45, J பெரியாழ் திரு 2-7-10, K ஆசார்ய ஹ்ருத₃யம் 85 L திருப்பள்ளி 4 M திருமாலை 11 N அமல 1 O அமல 10 P திருமாலை 38 Q அமல 4

ஒன்பதாம்பாட்டில்: ''எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்'' (14) என்கிறது - நம்மாழ்வாரை. அது எங்ஙனே? என்னில்; A ''திருமாலுக்குரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்'' என்னும்படியான ஶேஷத்வ பூர்த்தியையுடையராய், B ''அவனடியார் நனிமாக்கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே'' என்னும்படி பாகவத ஸம்ருத்தியைக் காண்கையிலே அபிவ்ருத்த மனோரதத்தை உடையராய், அந்யாபதேஶத்திலும், C ''அடிச்சியோம்'' என்கையாலும், D ''பின்னைகொல்'' என்கிற ஒப்பனையாலும், E ''சூட்டுநன்மாலைகள்'' என்று தொடங்கி, E ''அடலாயர்தம் கொம்பினுக்கே'' என்று நப்பின்னைப்பிராட்டிக்காக அவன் விடையடர்த்த வ்யாபாரத்தைப் பேசியும், F ''பின்னைநெடும் பணைத்தோள் மகிழ்பீடுடைமுன்னையமரர் முழுமுதலானே - என்னைநெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை அகல்விக்கத்தானுங் கில்லான்'' என்றும், G ''வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணாளனை'' இத்யாதியாலும், H ''வாள்கெண்டை ஒண்கண் மடப்பின்னைதன் கேள்வன் தாள்கண்டு கொண்டென் தலைமேல் புனைந்தேன் — ஆள்கின்றான் ஆழியான் ஆரால் குறையுடையம்'' என்றும், I ''எருது ஏழ்தழீஇ'', J ''சறையினார்'' இத்யாதியாலும் பலபடியாக அவள் புருஷகாரவைபவத்தை ஆதரித்து, மற்றும், K ''எத்திறம்'' என்று, L பிறந்தவாற்றிலே க்ருஷ்ணசேஷ்டிதங்களிலே ஈடுபட்டு, M குரவை ஆய்ச்சியரிலே நண்ணிவணங்கி அநுபவித்தும், N ''எல்லாம் கண்ணன்'' என்றும் ''நீராடப்போதுவீர்'' (1) என்றத்தை, O ''கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்'' என்கையாலும், மந்தாதிகாரிகளை, P ''என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்'' என்று உணர்த்தியும், ஸகோத்ரிகளை உயிராகத் தேடி Q ''இசைமின்'' என்று போதிக்கையாலும், ''நீராட'' (1) என்றத்தை, R ''காலைநன்ஞானத் துறைபடிந்தாடி'', S ''அப்பன் திருவருள் மூழ்கினள்'' என்கையாலும், இதில் ''நாணாதாய்'' (14) என்றத்தை T ''நெஞ்சும் நிறைவும் எனக்கிங்கில்லை'' என்றும், ''நாவுடையாய்'' (14) என்றத்தை, U ''என்நா'' என்றும், V ''வலக்கையாழி இடக்கைச் சங்கம் இவையுடை மால்வண்ணனை மலக்குநாவுடையேன்'' என்றும், W ''நாவியலால் இசைமாலைகள்'' என்றும் சொல்லுகையாலே. ''எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய்'' (14) என்கிறது - நம்மாழ்வாரை. இப்பாட்டில் ''சங்கொடுசக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணானைப்பாட'' (14)

---

A திருவாய் 6-9-11, B திருவாய் 8-10-7, C திருவாய் 10-3-6, D திருவாய் 6-5-10
E திருவிருத்தம் 21, F திருவாய் 1-7-8, G திருவாய் 3-9-8, H திருவாய் 10-4-3
I திருவாய் 4-2-5, J திருவாய் 4-8-4, K திருவாய் 1-3-1, L திருவாய் 5-10
M திருவாய் 6-4, N திருவாய் 6-7-1, O திருவாய் 10-5-1, P திருவாய் 5-5-2
Q திருவிருத்தம் 30, 31 R திருவிருத்தம் 93, S திருவாய் 8-9-5, T திருவாய் 7-3-9
U திருவாய் 3-9-1; 1-6-3, V திருவாய் 6-4-9, W திருவாய் 4-5-4.

என்றதை, A ''பங்கயக்கண்ணனையே'', B ''பங்கயக் கண்ணனென்கோ'' என்றும், C ''வீவில்சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான் தன்னை வீவில்காலம் இசைமாலைகளேத்தி'' என்றும் பேசினாரிறே.

பத்தாம் பாட்டில் ''எல்லே இளங்கிளியே'' (15) என்கிறது — திருமங்கை யாழ்வாரை. அது எங்ஙனே? என்னில் D ''அடிகளடியே நினையும் அடிய வர்கள் தம்மடியான்'' என்று ஶேஷத்வத்தின் எல்லை நிலத்திலே நிற்கை யாலும், ஸ்த்ரீத்வத்துக்கநுகு₃ணமாக, E ''பேராளன் பேரோதும் பெண்ணை'' என்றும், F ''கடிமாமலர்ப்பாவையொப்பாள்'' என்றும் லக்ஷ்மீ ஸாம்யத்தை யுடையராயிருக்கும் இருப்பைப் பேசுகையாலும், G ''பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே'' என்றும் H ''வண்சேறை யெம்பெரு மான் அடியார் தம்மைக் கண்டேனுக்கு இதுகாணீர் என் நெஞ்சும் கண் ணிணையும் களிக்குமாறே'' என்றும் ததீ₃யாநுப₄வதத்பரராய், தத்ப்ரீதிஹேதுவாக I ''ஆயர்பூங்கொடிக்கு இனவிடை பொருதவன்'' என்றும், J ''பின்னைபெறும் தண்கோலம் பெற்றார்'' என்றும், K ''பின்னை மணாளர்திறத்தம்'' என்றும், L ''அன்றாயர் குலமகளுக்கரையன் தன்னை'' என்றும், நப்பின்னைப் பிராட்டி புருஷகாரத்தை அடியே தொடங்கி முடிய நடத்தியும், ''நீராடப்போதுவீர்'' (1) என்றத்தை M ''பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்'' என்றும், N ''சந்த மலர்க்குழல்'', O ''பூங்கோதை'', P ''எங்கானும்'', Q ''மானமுடைத்து'' இத்யாதி₃களிலே க்ருஷ்ண கு₃ணசேஷ்டிதங்களை மண்டியநுப₄வித்து, R ''பண் டிவன் ஆயன்நங்காய்'' என்று தொடங்கி R ''அவன்பின்கெண்டைஒண்கண் மிளிரக்கிளிபோல் மிழற்றி நடந்து'' என்றும், S ''மென்கிளிபோல் மிகமிழற்றும்'' என்கையாலும், ''இளங்கிளியே'' (15) என்கிறது — திருமங்கையாழ்வாரை. ''வல்லையுன் கட்டுரைகள் பண்டே உன்வாய் அறிதும்'' (15) என்னுமதுண்டு இவருக்கும். இப்பாட்டிலே ''வல்லானை கொன்றானை'' (15) என்கிறவித்தை T ''ஆவரிவை செய்தறிவார்'' இத்யாதி₃யாலும், U ''கரிமுனிந்தகைத்தலமும்'' என்றும் அருளிச்செய்தார்.

இப்படியாயிற்று இப்பத்துப்பாட்டுக்கும் கு₃ணஸாம்யத்தாலும், கௌ₃ரவ் யதையாலும் பத்துப்பெண்களை எழுப்புகிற முக₂த்தாலே, ஆழ்வார்கள் பதின் மரையும் கூட்டிக்கொண்டு ஆழ்வார் திருமகளார் அநுஸந்தி₄க்கிறதாக அறுதி யிட்டார்கள். இப்படி ப₄க்தராய் முக்தராயிருப்பார் ஆழ்வார்கள்.

---

A திருவாய் 3-4-2. B திருவாய் 3-4-3. C திருவாய் 4-5-3. D பெரிய திரு 2-6-10 E திருநெடு 20. F பெரிய திரு 3-7-9. G பெரிய திரு 7-4-4. H பெரிய திரு 7-4-6 I பெரிய திரு 3-1-5. J பெரிய திரு 5-2-2. K பெரிய திரு 11-2-5. L திருநெடு 29 M திருநெடு 19. N பெரிய திரு 10-4. O பெரிய திரு 10-5. P பெரிய திரு 10-6 Q பெரிய திரு 10-7. R பெரிய திரு 3-7-2. S திருநெடு 15. T பெரிய திரு 3-3-7 U திருநெடு 25.

அநந்தரம் நித்யகைங்கர்ய நிரதரான நித்யரையும், நித்யாநபாயிநி யான பிராட்டியையும் உணர்த்தி இவர்களை முன்னிட்டு நித்யமுக்தாநுப4ாவ்யனை எம்பெருமானைப் பற்றும்படி சொல்லுகிறது — 'நாயகன்' (16) தொடங்கி அஞ்சுபாட்டாலே. 1. ''ஜநபத3ஸரித3ந்தரீப புஷ்யத் புரபரிபாலந நித்யஜாக3ருகாந் । ப்ரஹரண பரிவார வாஹநாட்4யாந் குமுத3முகா2ந் க3ணநாயகாந் நமாமி ॥'', 2. ''ஸ்மேராநநாக்ஷிகமலோர்நமத: புநாநாந் த3ம்ஷ்ட்ரா க3த3ா ப்4ருகுடிபி4ர் த்3விஷதோ து4நாநாந் । சண்ட3 ப்ரசண்ட3 முகா2த: ப்ரணமாமி ரங்க3த்3வாராவளீஷு சதஸ்ருஷ்வதி4காரப4ாஜ: ॥'', 3. ''ஸேநாந்யமந்யவிமுகா2ஸ்தமஶிஶ்ரியாம'', 4 ''ஸைந்யது4ரீண ப்ராணஸஹாயஸ்ய ஸந்த்ரஸ்தி மாலஸிஸ்ரியமம்ப3ாம்'', 5. ''நம: ஸ்ரீரங்க3நாயக்யை யத்3ப்4ருவிப்4ரமபே4த3த: । ஈஶேஶிதவ்யவைஷம்ய நிம்நோந்நதமித3ம் ஜக3த் ॥'', 6. ''ஸ்ரீஸ்தநாப4ரணம் தேஜஸ் ஸ்ரீரங்கே3ஸயமாஸ்ரயே । சிந்தாமணிமிவோத்3வாந்தமுத்ஸங்கே3ऽநந்தபோ4கி3ந: ॥'' என்னும்படி A வைகுந்தத்தமரரான B கோயில் கொள் தெய்வங்களையும், வானவர்களையும், தே3வியர்களையும், C அயர்வறுமமரர்களதிபதியை ஆயிரமுகத்தினாலே காப்பாருடைய அவதாரமானவரையும், அவர்களையும் அதிஶங்கைபண்ணி நெருங்க அணைத்துக்கொண்டு கிடக்குமவர்களையுமெழுப்பி, அவர்களுடனே எம்பெருமான் திருவடிகளிலே சென்றுகிட்டி அபேக்ஷிதங்களை அர்த்தி2க்கும்படி சொல்லுகிறது. 7. ''ஸ்ரியை நம:'', 8. ''ஸ்ரீத4ராய நம:'' என்றிறே க்ரமமிருப்பது.

''உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்'' (6) என்றதிலே முமுக்ஷுக்களாய் முக்தரோடு ஸாம்யம் பெற்ற நாத2முநிகள் யாமுநயோகி3 யதிவராதி3களும் ஸூசிதர், இது கு3ருபரம்பரையினடைவு.

இவ்விடத்துத் திருப்பாவை ஆறாயிரப்படியிலே (17 அவதாரிகை), அழகிய மணவாளப்பெருமாள்நாயனார் நிர்வஹித்தபடி; ''பெறுகைக்குப்புறப்படுகிற திரள் பெற்று அநுப4விக்கிற ஸ்ரீ நந்த3கோ3பர் தொடக்கமானாரை எழுப்புகிறார்கள்; அவர்கள் முன்னாக க்ருஷ்ணனைப் பெறவேண்டுகையாலே; அதாவது, D வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிகையிறே. E 'நன்ஞானத்துறைபடிந்தாடி' என்னுமாபோலே; நன்ஞானமாகிறது — ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவனே என்றிருக்கை. 9. ''விஜ்ஞாநம் யதி3த3ம் ப்ராப்தம்'' என்னுமாபோலே; துறையாவது, — முறை தப்பாதே கு3ருபரம்பரை வழியே பற்றுகை; த்3வயநிஷ்டர்க்கு கு3ருபரம்பரையே ப்ரத4ானமாகக் கடவது. துறைதப்பாதார் ஸ்ரீவிபீ4ஷணாழ்வானைப்போலே. D 'வேதம் வல்லார்கள்' என்றவிடத்து, கு3ருபரம்பரையை நினைத்துக் கீழ்ப்பத்துப்பாட்டாலும் அநுஷ்டி2த்தார்கள். D விண்ணோர் பெருமானில், 'விண்ணோர்' என்கிறது, த்3வாரபாலர்கள் தொடக்கமாக தி3வ்யமஹிஷிகளீறாக உள்ளவர்கள் என்றபடி''.

A திருவாய் 10-9-9. B திருவாய் 8-6-5. C திருவாய் 1-1-1. D திருவாய் 4-6-8.
E திருவிருத்தம் 93.

இந்த யோஜநைகளெல்லாம் A "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசுவருவிப்பரேல் அது காண்டுமே" என்று சொல்லுகிற ஆசார்யாபி₄மாந நிஷ்டையான ஆழ்வார் திருமகளார் படிக்குச் சேருமிறே. B "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர்" என்கிறவிடத்து கு₃ணஸாம்யத்தாலே யோஜித்தபடியாகக் கடவது இங்கு.

இனி, த்₃வய யோஜநையில் அர்த்த₂ விஷயமாக மெய்ப் பொருளையிறே விஶத₃மாக்கிற்று. ‡(இரண்டு அர்த்த₂த்தையும் C "புலன் ஐந்து மேயும்" என்று உபதே₃ஶிக்கக் கேட்டவர்கள் அநுஷ்ட₂ாநமாக, திருப்பாவையிலும், D 'தாயே தந்தை'யிலும், ஸ்தோத்ரகூ₃த்₃யங்களிலும்)‡ த்₃வயத்தின் அடைவு காணும்படி எங்ஙனே? என்னில்: முதல்பாட்டில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" (1) என்ற ப்ராப்யப்ராபகங்களிரண்டையும், "கறவைகள் பின் சென்"(28)றிலும், "சிற்றஞ்சிறு காலை"(29)யிலும் க்ரமத்திலே வெளியிடுகிறது. நடுவுடையவுண்டானவை இரண்டர்த்த₂த்துக்கும் உபபாத₃கங்களாயிருக்குமாகை யாலே த்₃வயத்தின் அடைவு க்ரமமாகக் காணலாமென்றபடி.

"நாராயணனே நமக்கே பறைதருவான்" (1) என்று திருமந்த்ரத்தில் பத₃த்ரயத்திலும் ப்ரதிபாதி₃க்கிற ஸ்வரூப உபாய புருஷார்த்த₂ங்கள் மூன்றும் ஒவ்வொன்றே பத்துப்பாட்டாய்ப் பரவும்படியே, திருப்பாவை முப்பது பாட்டாகப் பாடியருளிற்று. திருமந்த்ரத்தில் ஸ்வரூபாநுரூபமாக நிஷ்கர்ஷித்த ப்ராப்ய ப்ராபகங்களையிறே த்₃வயத்திலே விஶத₃மாக அநுஸந்தி₄க்கிறது. அந்த க்ரமத்திலே யாயிற்று இங்கும் அநுஸந்தி₄க்கிறது.

இனிமேல் கு₃ருபரம்பராபூர்வகமாக த்₃வயத்தின் அடைவு சொல்லுகிறது. "நப்பின்னை நங்காய், திருவே" (20) என்கையாலே, ஶ்ரீஶப்₃த₃ார்த்த₂மும், "உன்மணாளனை" (19, 20) என்கையாலே, "ஶ்ரிங் — ஸேவாயாம்" என்கிற தா₄த்வர்த்த₂மும், "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா" (19) என்றும், "நீ உன்மணாளனை எத்தனைபோதும் துயிலெழவொட்டாய் காண், எத்தனையேலும் பிரிவாற்ற கில்லாயால்" (19) என்கையாலே வாத்ஸல்யாதி₃ கு₃ணப்ரகாஶகமான நாராயணபத₃த்தில் அர்த்த₂மும், "பாற்கடலுள் பையத் துயின்ற பரமனடி" (2) என்றும், "ஓங்கி உலகளந்த" (3), "அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த" (17), "அன்றிவ்வுலகம் அளந்தாய்" (24) என்றும், லோகவிக்ராந்த சரணங்களாய், நாராயணன் திரிவிக்கிரமன் அடியான உலகளந்த மெல்லடியை "உன்பொற்றாமரையடி" (29) என்று சரணஶப்₃த₃ார்த்த₂த்தையும், "கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான்" (1) "ஊழிமுதல்வன் உருவம்போல்" (4), "முகில்வண்ணன்" (11), "சங்கொடுசக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணன்" (14) என்று, அதில் விக்₃ரஹ

A நாச்-திரு 10-10, B திருவாய் 1-5-11 C திருவாய் 2-8-4, D பெரிய திரு 1-9-1
‡( ) அடைப்பிலுள்ளது அநந்விதம் என்பர்

யோகத்தையும், A ''முத்துத்திரைக்கடல்சேர்ப்பன்'' என்னும்படி ஸம்ஸாரி திரிந்தவிடத்திலே வந்துகிடக்கிற ''பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்'' (2) என்கையாலே ஸ்வாமித்வமும், ''ஓங்கியுலகளந்த உத்தமன்'' (3) என்கையாலே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த ஸௌலப்யமும், ''மாயனை'' (5) என்று தொடங்கி — தாமோதரனளவும், கட்டவுமடிக்கவுமாம்படியான ஸௌசீல்யமும், ''குறைவொன்றுமில்லாத கோவிந்தா'' (28) என்று கல்யாண குணவிசிஷ்டவஸ்துவின் உபாயபூர்த்தியையும், ''அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம்'' (28) ''அறியாதபிள்ளைகளோம்'' (28) என்கையாலே அதிகாரிஸ்வரூபமான ஆகிஞ்சந்யமும், ''தூயோமாய்வந்து நாம் தூமலர் தூவித்தொழுது வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்கப் போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' (5) என்றும், ''வந்து தலைப்பெய்தோம்'' (22) என்றும், ''உன்னை அருத்தித்து வந்தோம்'' (25) என்றும், அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் தப்பாத உபாயமாக ஸ்வீகரிக்கும் உபாயவரணத்தையும், ''ஆவாவென்று ஆராய்ந்தருள்'' (8) ''அங்கணிரண்டுங்கொண்டெங்கள் மேல் நோக்குதியேல்'' (22) ''இறைவா! நீ தாராய் பறை'' (28) என்று அவனுடைய ப்ரக்ருதஸ்வீகாரத்தின் ஏற்றத்தையும்;

''குத்துவிளக்கு எரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்'' (19) இத்யாதியிலே பர்யங்கவித்யையிற்படியே இருவருமாய் எழுந்தருளியிருக்கிற சேர்த்தியான வேஷத்தை ''நாற்றத்துழாய்முடி நாராயணன்'' (10) என்கையாலும், ''தேவாதி தேவனை'' (8) என்கையாலும், ''உம்பர்கோமானே'' (17) என்கையாலும், ''இறைவாநீ'' (28) என்கையாலும், உத்தரவாக்ய நாராயணபதத்தில் ப்ரதிபாதிக்கிற சேஷித்வமும், ''தட்டொளியும் தந்து உன்மணாளனை (20) என்கையாலும், ''இப்போதே எம்மை நீராட்டு'' (20) என்கையாலும், B பூவளரும் திருமகளாலருள்பெற்று வரும்படியும், ''போற்றி யாம்வந்தோம் புகழ்ந்து'' (24) என்றும், ''பள்ளிக்கட்டிற்கீழே'' (22) என்றும், ''சீரியசிங்காசனத்திருந்து'' (23) என்றும், ''அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி'' (24) என்றும், ''வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து'' (25) என்றும், ''மாலே! ஆலினிலையாய் அருள்'' (26) என்றும், ''கூடியிருந்து குளிர்ந்து'' (27) என்றும், ''நீதாராய் பறை'' (28) என்றும், ''சிற்றம் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து'' (29) என்று தொடங்கி ''உனக்கே நாம் ஆட்செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்று'' (29) என்கையாலே உத்தரசதுர்த்தியில் கைங்கர்ய உபகரண ஸஹிதமான பலாநுபவ கைங்கர்ய பரம்பரைகளையும், கைங்கர்ய ப்ரார்த்தனையையும், அவற்றில் களையறுப்பையும், ''செல்வத்திருமாலால் எங்கும் திருவருள்பெற்று'' (30) என்கையாலே C ''த்வயத்திலே பெரியபிராட்டியாராலே பேறு'' என்னுமதும் சொல்லித் தலைக்கட்டிற்று.

A பெரியாழ் திரு 5-2-2. B பெரிய திரு 11-6-10. C முமுக்ஷுப்படி 118.

A "மாதவன்" என்று த்₃வயமாக்கினாற்போலே, "மாதவன்" (9) என்றும், "மாதவனை" (30) என்றுமிறே இங்கு இரட்டித்திருப்பது. "செல்வத்திருமாலால்" (30) என்று, "பட்டர்பிரான் கோதைசொன்ன" (30) என்கையாலே "இவ்வர்த்த₂ம் ஆசார்ய ருசிபரிக்₃ருஹீதம்" என்னுமிடம் சொல்லிற்று.

இப்படி கு₃ருபரம்பராபூர்வகமான த்₃வயத்தில் பேருக ப்ரதிபாதி₃க்கிறதாயிறே திருப்பாவைதானிருப்பது. ஆகவிறே இதுக்கு வர்த்த₄கரான உடையவரும் இத்தை நாள்தோறும் ஆத₃ரித்துக்கொண்டுபோந்தருளிற்று. ஆகையால் இது ஆண்டாளடியாரான அனைவர்க்கும் நித்யாநுஸந்தே₄யமாக நடந்துபோருகிறது.

1. "கோ₃பஸ்த்ரீகுலமதி₄ கோ₃தா₃யோபதி₃ஷ்டம் க்ருஷ்ணைக்₂யம் ப்ரணவமிவாதி₄காரிஜப்யம்। தத் த்ரிம்ஶத்பரிமிதபத்₃யமார்க்க₃ஶீர்ஷ ப்ராரப்₃தே₄ாத்ஸவஸமயோசிதம் ப்ரஸித்₃த₄ம் ॥"

B "எட்டெழுத்தின் இணைப்பொருளும் இரண்டதனிற் பொருளும் இயல்வலித்தேர் அருச்சுனனுக் கிறைவர்தம்மைத், தொட்டுரைத்த மறையறுதிப் பொருளை எல்லாம் தோன்றும்வகைப் ‡புகழ்வரை துடர்வளைந்துபாட, மட்டவிழும் பொழில்புடைசூழ் முடும்பைவேந்தன் மணவாளன் தணவாத மாயன் மாதர், கட்டுரையே புதுவையர்கோன் கோதைசொன்ன கவிபாடல் பொருள் தெரியக் காட்டினனே."

திருப்பாவை முப்பது பாட்டுக்கும் முதற்பாட்டு ஸங்க்₃ரஹமாயிருக்கும்; எங்ஙனே? என்னில்; - ஸ்ரீப₄ாஷ்யம் ஒன்பதினாயிர க்₃ரந்த₂த்துக்கும் முதல் ஶ்லோகம் ஸங்க்₃ரஹமானாற்போலேயும், ஸ்ரீராமாயணம் இருபத்து நாலாயிரம் க்₃ரந்த₂த்துக்கும் முதல் ஸர்க்க₃ம் ஸங்க்₃ரஹமானாற்போலேயும், ஸ்ரீமஹாப₄ாரதம் நூறாயிரத்து இருபத்தையாயிரம் க்₃ரந்த₂த்துக்கும் முதலத்₄யாயம் ஸங்க்₃ரஹமானாற்போலேயும், திருவாய்மொழிக்கு முதல்திருவாய்மொழி ஸங்க்₃ரஹமானாற்போலேயும், முதல்திருவாய்மொழிக்கு முதல்பாட்டு ஸங்க்₃ரஹமானாற்போலேயும், மந்த்ரஶேஷத்துக்கு ப்ரணவம் ஸங்க்₃ரஹமானாற்போலேயும், முப்பது பாட்டுக்கும் முதற்பாட்டு ஸங்க்₃ரஹமாயிருக்கும்.

ஸங்க்₃ரஹமானபடி எங்ஙனே? என்னில்; "மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்" (1) என்கிறவிடத்தாலே முதலிட்டு அஞ்சுபாட்டுக்கும் ஸங்க்₃ரஹம் சொல்லிற்று. "நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள்" (1) என்கிறவிடத்தாலே பத்துப் பெண்பிள்ளைகளை எழுப்புகிறவிடத்துக்கு ஸங்க்₃ரஹம் சொல்லிற்று. "கூர்வேல்கொடுந்தொழிலன்" (1) என்கிறவிடத்தாலே "கோயில்காப்பானே" (16) என்கிறவிடத்துக்கு ஸங்க்₃ரஹமாகச் சொல்லுகிறது. "நந்தகோபன்" (1) என்கிறவிடத்தாலே

A திருவாய் 10-5-7, B ‡பாடப்பிறழ்வு உள்ளது.

‘‘நாயகனாய்நின்றநந்தகோபன்’’ (16) என்றும், ‘‘ஓடாததோள்வலியன் நந்த கோபாலன்’’ (18) என்றும் சொல்லுகிறவிடங்களுக்கு ஸங்க்3ரஹம். ‘‘குமரன்’’(1) என்றத்தாலே ‘‘மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள் ஆற்றப் படைத்தான் மகனே’’ (21) என்கிறவிடத்துக்கு ஸங்க்3ரஹம். ‘‘கார்மேனி’’ (1) என்கிறவிடத்தாலே ‘‘முகில்வண்ணன்’’ (11) ‘‘பூவைப்பூவண்ணா’’ (23) ‘‘மாலே மணிவண்ணா’’ (26) என்கிறவிடங்களுக்கு ஸங்க்3ரஹம். ‘‘செங்கண்’’ (1) என்கிற விடத்தாலே ‘‘கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப் பூப்போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ - அங்கண் இரண்டும் கொண்டு (22) என்றும், ‘‘பங்கயக் கண்ணன்’’ (14) என்றும், ‘‘செங்கண் திருமுகம்’’ (30) என்றும் சொல்லுகிற விடங்களுக்கு ஸங்க்3ரஹம்.

‘‘கதிர்மதியம்போல் முகத்தான்’’ (1) என்கிறவிடத்தாலே ‘‘திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்’’ (22) என்றும், ‘‘உலகினில் தோற்றமாய் நின்றசுடரே’’ (21) என்றும் இத்யாதி3களுக்கு ஸங்க்3ரஹம். ‘‘நாராயணன்’’ (1) என்கிறவிடத்தாலே ‘‘நாராயணன்மூர்த்திகேசவன்’’ (7) என்றும், ‘‘நாற்றத் துழாய்முடிநாராயணன்’’ (10) என்றும், ‘‘ஓங்கியுலகளந்த உத்தமன்’’ (3) என் றும், ‘‘மாமாயன்மாதவன் வைகுந்தன்’’ (9) என்றும், ‘‘முகில்வண்ணன்பேர் பாட’’ (11) என்றும், ‘‘சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே’’ (28) என்றும், ‘‘வங்கக்கடல்கடைந்தமாதவன்’’ (30) என்றும் சொல்லுகிறவிடங்களுக்கு ஸங்க்3ரஹம்.

‘‘நமக்கேபறைதருவான்’’ (1) என்கிறவிடத்தாலே - ‘‘பாடிப்பறை கொண்டு’’ (27) என்றும், ‘‘நம்மால்போற்றப்பறைதரும்’’ (10) என்றும், ‘‘இற் றைப்பறைகொள்வான்’’ (29) என்றும், ‘‘அறைபறை’’ (16) என்றும், ‘‘சாலப் பெரும்பறை’’ (26) என்றும், ‘‘அருத்தித்து வந்தோம் பறைதருதியாகில்’’ (25) என்றும், ‘‘இறைவா நீ தாராய் பறை’’ (28) என்றும், ‘‘அங்கு அப்பறை கொண்ட ஆற்றை’’ (30) என்றும் சொல்லுகிற இடங்களுக்கு ஸங்க்3ரஹம். ‘‘பாரோர் புகழ’’ (1) என்கிறவிடத்தாலே - ‘‘நாடுபுகழும்’’ (27) என்றும், ‘‘எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர்’’ (30) என்றும் சொல்லுகிற இடங்களுக்கு ஸங்க்3ரஹம்.

‘‘ஏலோரெம்பாவாய்’’ (1) என்கிற இடத்தாலே முப்பதுபாட்டிலே ஏலோ ரெம்பாவாய்க்கு ஸங்க்3ரஹம். இப்பாட்டில், காலத்தைக் கொண்டாடாநின்று கொண்டு ப்ரப3ந்த4தாத்பர்யமான ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லுகிறது.

அதி4காரி ஸ்வாபதே3ஶம். இனி இந்த ஸ்வாபதே3ஶத்தில் இப்ரப3ந்த4த் துக்கு அடியில் அஞ்சுபாட்டாலும் - ப்ரபந்ந நிஷ்டா2க்ரமங்களையும், ப்ரபத்தி வாசகமான திருநாமவைப4வத்தையும் பேசுகிறது. அதில் முதல்பாட்டில், ப்ரபந்நாதி4காரிக்கு 1. ‘‘ஸ ஏஷ தே3ஶ: கால:’’ என்கிறபடியே தே3ஶகாலம்

எல்லாம் அவனுடைய கடாக்ஷத்தாலே ப்ராப்யம் என்னுமத்தையும், கர்மாந்தர பரித்யாக3த்தையும், ப4க3வத்3விஷயத்தில் ருசிவிர்வாஸங்களுடைய ப்ராதா4ந்யத்தையும், ''ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் ஸர்வஸ்வாமியான நாராயணனே'' என்றத்தையும், ஏவகாரத்தால் தே3வதாந்தரராஹித்யத்தையும், ப்ரயோஜனாந்தர ராஹித்யத்தையும், அநந்யப்ரயோஜனத்வத்தையும், ''த்ரிபாத்3விபூ4திநாயகனான ஸர்வேஶ்வரனே தங்களுக்கு அபேக்ஷிதஸம்விதா4னம் பண்ணுவன்'' என்று நிர்ப்ப4ரத்வாநுஸந்தா4னத்தையும், ஸர்வஜனஸௌஹ்ருத்த்வத்தையும், இப்படி நிஷ்டா2க்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாமத்தையும் சொல்லுகையால் அதி4காரிஸ்வரூபம் சொல்லிற்றாயிற்று.

''நாராயணனே நமக்கே பறைதருவான்'' (1) என்கையாலே திருமந்த்ரத்தில் பத3த்ரயத்திலும் ப்ரதிபாதி3க்கிற ஸ்வரூபோபாய புருஷார்த்த2ங்கள் மூன்றும் சொல்லுகிறது. ஆகையாலே இப்பாட்டு திருமந்த்ரத்துக்கு ஸங்க்3ரஹம் என்று சொல்லிற்றாயிற்று. இப்பாட்டில் பரத்வம் ஸூசிப்பிக்கிறது.

இரண்டாம் பாட்டில், நோன்புக்குப் பெண்கள் தாங்கள் செய்யக்கடவ க்ருத்யத்தை நியமிக்கிற முகத்தாலே, இவ்விஷயத்தில் இழிவாருடைய விரக்தியையும் ஸம்பா4விதஸ்வபா4வத்தையும் சொல்லுகிறது என்றொரு ஸ்வாபதே3ஶம்.

இப்பாட்டில், இந்த ப்ரபந்நாதி4காரிக்கு ஸம்பா4விதமான நிஷ்டா2க்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாம வைப4வத்தையும் சொல்லுகிறது. எங்ஙனே? என்னில்:— ஸ்ரீவைகுண்ட2 நிகேதனனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், 1. ''தே யே ஶதம் இத்யநுக்ரமாத்'' என்று 2. ''யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ'' என்கிறபடியே, ஆஶ்ரிதர்கள் வந்து ஒருவிண்ணப்பம் செய்வதற்கு அங்கு அவஸரமில்லாமையாலே, ஒரு பயணமெடுத்து, க்ஷீர ஸாக3ரத்தில் திருவனந்தாழ்வான் மேலே ஜக3த்3ரக்ஷணசிந்தையாலே சாய்ந்தருளி, ''ஆஶ்ரிதர்களிலே ஆராலே யாருக்கு என்ன தீங்கு வருகிறதோ?'' என்று அந்தவுரைக்குச் செவிகொடுத்துக் கண்வளருகிறதாக நினைத்திருக்கையும், ஸகலசேதனோஜ்ஜீவனமான த்3வயத்தைப் பெரியபிராட்டியாருக்கு உபதே3ஶம் பண்ணுகிற க்ஷீராப்3தி4 நாத2னுடைய திருவடிகளை வாயாலே ஸங்கீர்த்தனம் ஸதா3பண்ணுகையுமாகையால் ப்ரபந்நனுக்கு த்3வயாநுஸந்தா4னம் ஸதா3 பண்ணவேணுமென்று தாத்பர்யம். இந்த ரஸாநுப4வம் பண்ணுகிறவரைக்கும் இதர விஷயங்களில் 3. ''தவாம்ருதஸ்யந்தி3நி பாத3பங்கஜே நிவேஶிதாத்மா கத2மந்யதி3ச்ச2தி'' என்கிறபடியே போ4க்3யமான மது4 ஶர்க்கர க்ஷீர த3தி4 க்4ருதாதி3களிலும் நைரபேக்ஷ்யத்தையும், 4. ''த்ரிவிக்ரம த்வச்சரணாம்பு3ஜ த்3வயம் மதீ3யமூர்த்தா4நமலங்கரிஷ்யதி'' என்கிறபடியே அவன் திருவடிகளை ஸர்வாலங்காரமாகப் பற்றுகையும், அதொழிய ஸ்ரக் சந்த3ன வஸ்த்ராத்3யாப4ரணங்களை நிஷேதி4த்தமையும், அவனுக்கு ஶேஷமாயிருக்கிற ஸகலவஸ்து விஷயங்களில் ஜாதிபே4த3த்தாலே அபோ4க்3யமாயிருக்கச்செய்தேயும், பரம

பே4ாக்3யத்வத்தாலே ஸ்வீகரிக்கையும், யதா2ஶக்தி பா4க3வதர்க்கு நித்ய ததீ3யாராத4னம் பண்ணி ப4க3வத3நுப4வம் பண்ணுவித்து ''ஒன்றும் செய்யப் பெற்றிலோம்'' என்றிருக்கையும், இப்படி அதி4காரி நிஷ்டா2க்ரமம்சொல்லுகிறது. இரண்டாம்பாட்டில் வ்யூஹம் சொல்லுகிறது.

மூன்றாம்பாட்டில்:— நோன்பிலே இழியவே தத்ப2லமான ஸம்ருத்3தி4க ளடைய உண்டாமென்கிறார்கள். இத்தால் ப4க3வத்ஸமாஶ்ரயணப2லமான கைங் கர்யமொழிய, வேறே 1. ''ஆயுராஶாஸ்தே'' என்கிறபடியே ஐஹிகப2லங்களும் ஆநுஷங்கி3கஸித்3த4மாய்க்கொண்டு ஸித்3தி4க்கும் என்கிறது.

நாலாம்பாட்டில்:—வர்ஷதே3வதையைக்குறித்து வர்ஷிக்கும்படியை நியமிக் கிறார்கள். இத்தால் அநந்யப்ரயோஜனராய் ப4க3வத் ஸமாஶ்ரயணம்பண்ணு மவர்க்கு, இந்த்3ராதி3தே3வதைகளும் நியாம்யராவர்கள் என்று இவ்வதி4காரியி னுடைய உத்கர்ஷம் சொல்லுகிறது. 2. ''ஸர்வே஽ஸ்மை தே3வா ப3லிமாவஹந்தி'' என்னக்கடவதிறே.

அஞ்சாம்பாட்டில்: — 3. ''ஶ்ரேயாம்ஸி ப3ஹுவிக்4நாநி'' என்கிறபடியே நோன்புக்கு விக்4நங்கள் ஸம்ப4வியாதோவென்னில்; 'மனோவாக்காயங்களாலே க்ருஷ்ணனையே அநுஸந்தி4க்க அவைபோம்' என்கிறார்கள். இத்தால், ப4க3வத்3 கு3ணானுப4வம் பண்ணுமவனுக்கு 4. ''உத்தரபூர்வாக4யோரஶ்லேஷவிநாஶௌ'' என்கிறபடியே ப4க3வத3நுப4வ மாஹாத்ம்யத்தாலே ஸகலது3ரிதங்களும் போமென்கிறது.

ஆக, இவ்வைந்துபாட்டாலும், ''நாராயணனே'' (1) என்றும், ''பாற் கடலுள் பையத்துயின்ற பரமன்'' (2) என்றும், ''ஓங்கி உலகளந்த உத்தமன்'' (3) என்றும், ''மாயனை மன்னு வடமதுரைமைந்தனை'' (5) என்றும் சொல்லு கையாலே, க்ருஷ்ணனுடைய அடிப்பாடு சொல்லிற்று. இதுக்குமேல் பத்துப் பாட்டும் முற்பட்டவர்கள் பிற்பட்டவர்களை எழுப்பிச்செல்லுகிறது. இத்தால், பெருங் ப4க3வத்3விஷயம் அபரிச்சி2ந்நமாய் தனி அநுப4விக்கவொண்ணாமையாலே, பெருங் காற்றிலே இழிவார் துணைகொண்டு இழியுமாபோலேயும், 5. ''ஏக: ஸ்வாது3 ந பு4ஞ்ஜீத'' என்று தனி அநுப4விக்கமாட்டாத சாபலத்தாலும், ப4க3வத3நுப4வம் பண்ணுவார்க்கு A ''தொண்டீர் எல்லீரும் வாரீர்'' என்கிறபடியே துணை தேட்டமாயிருக்கும் என்னும் இவ்வர்த்த2த்தைச் சொல்லுகிறது.

A திருவாய் 5-1-2.

இதில் முதற்பாட்டில் (6) க்ருஷ்ணாநுப₄வத்தில் புதியளாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், ப₄க₃வதே₃கபோ₄க்₃யரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநந்யப்ரயோஜனராய் இவ்விஷயத்தில் தே₃ஶிகரன்றிக்கேயிருப்பாரை அவர்கள் பக்கல் பரிவாலே தே₃ஶிகராக்குகை தங்களுக்கு க்ருத்யம் என்றிருக்கை - ஸ்ரீவைஷ்ணவத்வம் என்கிற ஸ்வபா₄வத்தைச் சொல்லிற்று.

இரண்டாம் பாட்டில் (7) க்ருஷ்ணாநுப₄வத்தை தே₃ஶிகையாய், இவ்வநுப₄வத்தை ஸ்மரித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால் ப₄க₃வத்₃விஷயத்தில் ஜ்ஞாதமான அர்த்த₂ம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால், தங்கள் பரிவாலே 1, "போ₃த₄யந்த: பரஸ்பரம்" என்கிறபடியே அறிவிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது.

மூன்றாம் பாட்டில் (8) க்ருஷ்ணனாலே கொண்டாடப்படும் ஏற்றமுடையவளை எழுப்புகிறார்கள். இத்தால் ப₄க₃வதநுப₄வத்தில் ப்ரத்யாஸந்நராயிருப்பாரிடத்தில் ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈஶ்வரனைக் கிட்டுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது.

நாலாம்பாட்டில் (9) "க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான்" என்று நிர்ப₄ரையாய்க்கொண்டு கிடக்குமவளை எழுப்புகிறார்கள். இத்தால், 2. "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" என்று பூர்வார்த்த₂நிஷ்டராயிருப்பாரை, ப₄க₃வத்ப்ரேமாதிஶயத்தாலே ததே₃கபோ₄க₃ராயிருக்குமவர்கள் போ₄க₃ார்த்த₂மாக ப்ரேரிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிற அர்த்த₂ம் சொல்லுகிறது.

அஞ்சாம்பாட்டில் (10) பெண்களெல்லாம் "க்ருஷ்ணன்" என்றால் படும் பாட்டை அவன்தான் பட்டு "தண்ணீர், தண்ணீர்" என்னும்படியாய் இருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால் 3. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" 4. "அஹம் ஸ ச மம ப்ரிய:" என்று அவன் பக்ஷத்திலிருப்பார்திறத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபமென்னும் இவ்வர்த்த₂ம் சொல்லுகிறது.

ஆறும் பாட்டில் (11) அபி₄ஜாதையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், "ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄ம் விச்சே₂தி₃யாதே போந்த ஆசார்ய ஸந்தானப்ரஸூதர் நமக்கு உத்₃தே₃ஶ்யர், என்றும் அவர்களடியாக ப₄க₃வத் ஸமாஶ்ரயணம் பண்ணுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வபா₄வம்" என்கிறது.

ஏழாம்பாட்டில் (12) இளையபெருமாளைப் போலே க்ருஷ்ணனைப் பிரியாதேயிருப்பானொருத்தன் தங்கையை எழுப்புகிறார்கள். இத்தால், ப₄க₃வத்₃விஶ்லேஷம் அஸஹ்யமாம்படி அவகா₃ஹித்தவர் தாங்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உத்₃தே₃ஶ்யராமளவன்றிக்கே, தத்ஸம்ப₃ந்த₄ஸம்ப₃ந்தி₄களும் உத்₃தே₃ஶ்யரென்றிருக்கை ஸ்வரூபமென்கிறது.

எட்டாம் பாட்டில் (13) "நம் கண்ணழகு உண்டாகில் தானே வருகிறான்" என்று அவயவசோபையை மதித்துக்கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால் பகவதநுபவபரிகரமான ஜ்ஞாந வைராக்ய பக்திகளால் பூர்ணரா யிருக்குமவர் திறத்திலும், ததர்த்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸாபேக்ஷரா யிருக்கை ஸ்வரூபமென்கிறது.

ஒன்பதாம் பாட்டில் (14) எல்லார்க்கும் தானே நிர்வாஹகையாய், எல்லாரையும் தானே எழுப்பக்கடவளாகச் சொல்லி விஸ்மரித்துக்கிடக்கிறாளொ ருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்விஷயத்தில் மூட்டுகையாலே அதிகரித்த நிர்வாஹகர் முன்னாக பகவததநுபவம் பண்ணுகை ஸ்வரூபமென்கிறது.

பத்தாம் பாட்டில் (15) எல்லாருடைய திரட்சியும் காணவேண்டியிருப்பா ளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், ஸ்ரீவைஷ்ணவஸமாஜ தர்ஶனம் அபிமதமாயிருக்குமவர்களைக் கண்டால், அந்த ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபமென்கிறது.

ஆக, இப்பதினைந்து பாட்டாலும், எழுப்பப்பட்டவர்களெல்லாரும் கூடவந்து, மேல் பதினாறும் பாட்டில் ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையிலே சென்று கோயில் காப்பானையும் திருவாசற்காப்பானையும் எழுப்புகிறார்கள்.

பதினேழாம் பாட்டில்:— இவர்கள், திருக்காப்பு நீக்கி உள்ளே புகவிட, ஸ்ரீநந்தகோபர் தொடக்கமான உள்ளுள்ளாரையடைய எழுப்புகிறார்கள். இவ் விரண்டு பாட்டிலும், பகவத்விஷயத்தைக் கிட்டுவார் தத்ப்ரத்யாஸந்நரைப் புருஷகாரமாகக்கொண்டு புகுருகை ஸ்வரூபமென்கிறது.

பதினெட்டாம் பாட்டில்:— இப்படி எழுப்பினவிடத்திலும் எழுந்திராமை யாலே, தங்களுக்குப் புருஷகாரமாக நப்பின்னையை எழுப்புகிறார்கள். இத்தால் பகவத்விஷயீகாரம் பிராட்டி புருஷகாரஸாபேக்ஷமென்கிறது.

பத்தொன்பதாம் பாட்டில்:—இவள் திறக்கப்புக, "நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது" என்று இவளைத் திறக்கவொட்டாதே கட்டிக் கொண்டுகிடக்கிற க்ருஷ்ணனை எழுப்பி, மறுமாற்றம் கொள்ளாமையாலே மீளவும் அவனையுணர்த்துகைக்காக அவளையெழுப்புகிறார்கள். இத்தால், பிராட்டி யைப் புருஷகாரமாக வரித்தால், அவனும் இவளும் இசலி இசலிப் பரியும் பரிவைச் சொல்லுகிறது.

இருபதாம் பாட்டில்:—"அவனுக்கும் எங்களுக்கும் அடியான நீ எங்களை நீராட்டுவீ" என்று க்ருஷ்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும்கூட எழுப்பு கிறார்கள். இத்தால், அடிமைசெய்யுமிடத்தில் இருவரும் சேர்ந்த சேர்த்தியிலே அடிமைசெய்வதே முறை என்கிறது.

இருபத்தோராம் பாட்டில், நப்பின்னைப்பிராட்டியும், ''நானும் உங்களிலே ஒருத்தியன்றோ? நாமெல்லாருங்கூட க்ருஷ்ணனை அர்த்தி2க்கவாருங்கோள்'' என்ன; அவன் கு3ணங்களிலே தோற்றோர் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள். இத்தால், ப்ரபு3த்3த4னாய் தங்கள் காரியம் செய்கைக்கு, A''ஏத்தவேழுலகம்கொண்ட'' என்கிறபடியே, ஆஶ்ரிதரானவர்களுக்கு நிர்மமராய்க்கொண்டு அவன் கு3ணகீர்த்தனம் பண்ணுகை கர்த்தவ்யம் என்கிறது.

இருபத்திரண்டாம் பாட்டில்:—கீழ்ப்பாட்டிலே தங்கள் அபி4மான ஶூன்யதையைச் சொல்லி, இப்பாட்டில் அநந்யார்ஹஶேஷத்வம் சொல்லுகிறது. இத்தால், அவனுடைய விஶேஷகடாக்ஷத்துக்குத் தங்கள் அநந்யார்ஹஶேஷத்வம் அநுஸந்தே4யமென்கிறது.

இருபத்துமூன்றாம் பாட்டில்:—1. ''உபஸ்தே2யைருபஸ்தி2த:'' என்று ''ஶ்ரீத3ண்ட3காரண்யத்தில் ரிஷிகளுடைய து3:க்க2 நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப்பெற்றிலோம்'' என்று வெறுத்தாப்போலே, ''இவர்கள் நோவுபடப்பார்த்திருந்தோமாகாதே'' என்று இன்னாதாய், அவர்களை அழைத்து ''செய்யவேண்டுவதென்?'' என்ன; ''இங்ஙனே சொல்லவொண்ணாது; பேரோலக்கமாக இருந்து கேட்டருளவேணும்'' என்கிறார்கள். இத்தால், ''கர்மபரதந்த்ரராயிருந்துள்ள ப்ரயோஜனாந்தரபரரைக் காட்டிலும், அநந்யப்ரயோஜனராய் ஸாத4னாந்தர நிஷ்ட2ராயிருக்குமவர்களிற்காட்டிலும், ஸித்3த4ஸாத4னம்பண்ணினார்க்குத் தந்தாம் கையில் கைம்முதல் இல்லாமையாலே ஈஶ்வரனே ப்ரபு3த்3த4னாய்க்கொண்டு அபேக்ஷிதஸம்விதா4னம் பண்ணவேணும் என்று இவ்வதி4காரத்தில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது.

இருபத்துநாலாம் பாட்டில்:—''அப்படியே செய்கிறோம்'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணினபடியைக்கண்டு, தாங்கள் வந்த காரியத்தை மறந்து, தத்காலீநமான அழகிலே ஈடுபட்டு மங்க3ளாஶாஸனம் பண்ணுகிறார்கள். இத்தால், அர்த்தி2களாய்ச் சென்றால் தந்தாமுடைய புருஷார்த்த2த்தை விஸ்மரித்து மங்க3ளாஶாஸனம் பண்ணவேண்டும்படியான விஷயவைலக்ஷண்யம் சொல்லுகிறது.

இருபத்தஞ்சாம் பாட்டில்:—ஏதேனும் இப்ரவ்ருத்திக்கொரு ப்ரதிப3ந்த4கமுண்டேயாகிலும், நீயே போக்கி எங்கள் து3:க்க2மெல்லாங்கெட விஷயீகரிக்கவேணும் என்கிறார்கள். இத்தால், ஸ்வரூபலாப4ம் அத்தலைக்கே கூறானவோபாதி, து3:க்க2நிவ்ருத்தியும் அத்தலைக்கே ப4ரம் என்னும் இவ்வர்த்த2ம் சொல்லுகிறது.

இருபத்தாறாம்பாட்டில்: — ''மற்றபேக்ஷிதமென்?'' என்ன, நோன்புக்கு வேண்டும் உபகரணங்களைத் தரவேணுமென்கிறார்கள். இத்தால், து3:க்க2நிவ்ருத்தியோபாதி, போ4கோ3பகரண ஸித்3தி4யும் அவனாலே என்கிறது.

A திருவாய் 2-2-11.

இருபத்தேழாம்பாட்டில்:— நோற்ருல் பெறக்கடவ பேறு சொல்லுகிறது. இத்தால், 1. ''ப்3ரஹ்மாலங்காரேணலங்குர்வந்தி'' என்று அலங்காராதி3களும் ப4க3வத்ப்ரஸாத3ாயத்தமென்கிறது.

இருபத்தெட்டாம்பாட்டில்: — ''நாட்டாரிசைகைக்காக 'நோன்பு' என்று ஒரு வ்யாஜத்தையிட்டுப் புகுந்தோமித்தனை. எங்களுக்கு உத்3தே3ஶ்யம் அது வன்று; உன்திருவடிகளில் கைங்கர்யம்'' என்று தங்களுக்கு உத்3தே3ஶ்யமான புருஷார்த்த2ஸித்3தி4க்குத் தங்களாகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு ''அவனே உபாயமாகவேணும்'' என்று அபேக்ஷித்து க்ஷாமணம் பண்ணிக் கொண்டு ப்ராப்யப்ரார்த்த2னம் பண்ணித்தலைக்கட்டுகிறது. இதுக்குக்கீழடங்க ஓரதி4காரிக்கு ஸம்ப4விக்கும் ஸ்வப4ாவங்களைச் சொல்லிற்ருயிற்று. இப்பாட்டில் அதி4காரிஸ்வரூபமான உபாய ஸ்வீகாரத்தை ஸப்ரகாரமாகச் சொல்லுகிறது.

இருபத்தொன்பதாம்பாட்டில்:— ''தங்களுக்கு உத்3தே3ஶ்யமானது கைங் கர்யம்'' என்று ப்ரப3ந்த4தாத்பர்யம் சொல்லி முடிக்கிருர்கள். இத்தால், ஸ்வீக்ருதோபாயத்துக்குப் ப2லமான புருஷார்த்த2ஸ்வரூபம் சொல்லுகிறது.

முப்பதாம் பாட்டில்:—''இப்ரப3ந்த4ம் கற்ருர், நாய்ச்சியாராலும் ஈஶ்வர னாலும் ஸர்வகாலமுமுண்டான விஶேஷகடாக்ஷத்தைப் பெற்று நித்யஸுகி2களாகப் பெறுவர். இத்தால், உக்தமான அநுஷ்ட2ானமில்லாதார்க்கும் அவர்களுடைய பாசுரமே அவர்கள் பெற்ற பேற்றைத் தரும்'' என்று இப்பாசுரத்தின் ஏற்றத் தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

ஆக, திருப்பாவையால் சொல்லிற்ருயிற்று வேத3ார்த்த2ம். அதாவது, —அவ தாரமே ஸர்வஸமாஶ்ரயணீயமென்றும், அவதீர்ணனானவனுடைய வடிவழகே ருசிஜநகமென்றும், ருசியுடையார் ப்ராப்யத்வரையாலே அவனை மேல்விழுந்து அபேக்ஷிக்கைப் ராப்தம் என்றும், இவ்விஷயத்தில் இழிவார்க்கு ருசியுடையாரடங்க உத்3தே3ஶ்யரென்றும், ப்ராப்யமாகிறது—அநுப4வஜநிதப்ரீதிகாரிதமாய் யாவதா3த்ம ப4ாவியான கைங்கர்யம் என்றும், தத்ஸாத4னமும் அவன் திருவருளே என்றும் சொல்லிற்ருயிற்று.

வானமாமலைஜீயர் அருளிச்செய்த

திருப்பாவை ஸ்வாபதே3ஶம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

''ஸௌம்யஜாமாத்ருயோகீ3ந்த்3ரபாத3ரேகா2மயம் ஸதா3||

தத்3ாயத்தாத்மஸத்தாதி3ம் ராமாநுஜமுநிம் ப4ஜே||''

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருப்பாவை வ்யாக்2யான ப்ரமாணத்திரட்டு

## அ

1. அகாலப2லிநோ வ்ருக்ஷா: 19-2; 288-8 [ரா-யு 127-18, 19]

அகாலப2லிநோ வ்ருக்ஷா: ஸர்வே சாபி மது4ஸ்ரவா: ।
ப2லாந்யம்ருதகல்பாநி ப3ஹூநி விவித4ாநி ச ॥
ப4வந்து மார்க்கே3 ப4க3வந் அயோத்4யாம் ப்ரதி க3ச்ச2த: ॥

[ப4ரத்3வாஜமஹர்ஷியே! நான் அயோத்திக்குச் செல்லும்போது வழியிலுள்ள எல்லா மரங்களும் அகாலத்தில் பழமுடையவையாகவும், தேன் பெருகுபவையாகவும், அப்பழங்கள் பலவாகவும், பலவகைப்பட்டவையாகவும், அமுதம் போன்றவையாகவும் ஆகட்டும்.]

2. அகி2லஜக3ந்மாதரம் 302-4; 344-3 [ஶரணாக3தி க3த்3யம்-1]

ப4க3வந் நாராயணாபி4மதாநுரூப ஸ்வரூபரூப கு3ணவிப4வைஶ்வர்ய ஶீலாத்3யநவதி4காதிஶயாஸங்க்2யேய கல்யாண கு3ணக3ணாம், பத்3மவநாலயாம், ப4க3வதீம், ஶ்ரியம் தே3வீம், நித்யாநபாயிநீம், நிரவத்3யாம், தே3வதே3வ தி3வ்யமஹிஷீம், அகி2லஜக3ந்மாதரம், அஸ்மந்மாதரம் அஶரண்யஶரண்யாம், அநந்யஶரண:, ஶரணமஹம் ப்ரபத்3யே ॥

[ப4க3வான் நாராயணனுக்கு இனிதாகவும் தகுந்ததாகவுமுள்ள ஸ்வரூபம், ரூபம், கு3ணம், விபூ4தி, ஐச்வர்யம், ஶீலம் முதலான எல்லையற்ற மேன்மையை உடையவையும் கணக்கற்றவையுமான கல்யாண கு3ணக3ணங்கள் ஆகியவற்றை உடையவளும், பத்3மவனத்தை இருப்பிடமாக உடையவளும், பூஜிக்கத்தக்கவளும், எப்போதும் எம்பெருமானைவிட்டு அகலகில்லாதவளும், தோ3ஷமற்றவளும், தே3வதே3வனான எம்பெருமானுடைய தி3வ்யமஹிஷியும், எல்லா உலகிற்கும் தாயாயிருப்பவளும், க3தியற்றவர்களுக்கு க3தியாயிருப்பவளுமான ஸ்ரீதே3வியை வேறு புகலற்ற அடியேன் தஞ்சமாக அடைகிறேன்.]

3. அகி2லஹேய 370-11 [ஶரணாக3தி க3த்3யம்-5]

அகி2லஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஸ்வேதர ஸமஸ்த-
வஸ்து விலக்ஷண அநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப!

[எல்லாத் தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாயிருப்பவனாய், மங்க3ளங்கள் அனைத்துக்கும் ஒரே கொள்கலமாயிருப்பவனாய், (அதனாலேயே) தன்னையொழிந்த எல்லாப் பொருள்களைக் காட்டிலும் சிறப்புற்றவனாய், தே3ஶம், காலம், வஸ்து என்னும் மூன்றாலும் அளவுபடாதவனாய், தானே பிரகாசிக்கையாகிற ஞானம், ஸுக2ரூபமாயிருக்கையாகிற ஆனந்த3ம் ஆகிய இரண்டையுமே வடிவாகக் கொண்டவனாயிருப்பவனே!]

4. அக3திம் ஶரணாக3தம் 397-1, 398-2, 405-3 [ஸ்தோ-ர. 48]

அபராத4ஸஹஸ்ரபா4ஜநம் பதிதம் பீ4மப4வார்ணவோத3ரே ।
அக3திம் ஶரணாக3தம் ஹரே! க்ருபயா கேவலமாத்மஸாத் குரு ॥

[து3க்க2ங்களையெல்லாம் போக்கும் எம்பிரானே! கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிடமாகவும், ப4யங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள் விழுந்தவனாகவும், (உன்னையொழிய வேறு) கதியற்றவனாகவும், 'ஶரணாக3தன்' என்று சொல்லிக் கொள்ளுமவனாகவுமிருக்கிற அடியேனை (உன்) அருளினாலேயே உன்னுடையவனாகக் கொள்வாயாக]

5. அக3ஸ்த்யப்4ராதரம் [ரா-ஆ. 11-73]

ப்4ராதரம் தமக3ஸ்த்யஸ்ய ஹ்யாமந்த்ரயத ராக4வ: ।

[ராமன் அக3ஸ்த்யரின் தம்பியை ஆராதி4த்து விடைபெற்றான்.]

6. அக்3நிமுகா2 வை தே3வா: 350-1.

அக்3நிமுகா2 வை தே3வா:

[தே3வர்கள் தங்கள் உணவான ஹவிஸ்ஸைப் பெற்றுக்கொடுக்கும் அக்3னியையே முக2மாகக் கொண்டவர்கள்.]

7. அக்3நீஷோமீயம் 33—2 [யஜுஃ-அஷ்டக 3—5]

அக்3நீஷோமீயம் பஶுமாலபே4த

[அக்3நீஷோமயாக3த்தில் அதற்குரிய நாலுகாற்பிராணியைக் கொல்ல வேண்டும்.]

8. அங்கு3ள்யக்3ரேண 367-1; 411-1. [ரா—யு 18—23.]

பிஶாசாந் தா3நவாந் யக்ஷாந் ப்ருதி2வ்யாம் சைவ ராக்ஷஸாந்

அங்கு3ள்யக்3ரேண தாந் ஹந்யாமிச்ச2ந் ஹரிக3ணேஶ்வர ॥

[வாநரஸமூஹத்துக்கு அரசனே! பிசாசங்களையும், அஸுரர்களையும், யக்ஷர்களையும், உலகிலுள்ள ராக்ஷஸர்களையும், நான் விரும்பினேனாகில் என் விரல் நுனியாலே கொல்லுவேன்.]

9. அச்யுதபா4நு 122—1; 128—1; 130—3; 372—5; 328—2: 439—1; 440—9; 513—2 [வி. பு. 5—3—1.]

ததோ ऽகி2லஜக3த்பத்3ம போ3தா4யாச்யுதபா4நுநா ।

தே3வகீபூர்வஸந்த்4யாயாமாவிர்பூ4தம் மஹாத்மநா ॥

[மஹாத்மாவாகிற அச்யுத சூரியன், அனைத்துலகுமாகிற தாமரை மலர்வதற்காக தேவகியாகிற கீழைத்திக்கில் தோன்றினான்.]

10. அச்யுதாஹம் [253—2.?]

அச்யுதாஹம் தவாஸ்மீதி ஸைவ ஸம்ஸார பே4ஷஜம் ।

['அச்யுதனே! நான் உன்னுடையவனாயிருக்கிறேன்' என்று அநுஸந்தி4ப்பதே ஸம்ஸார நோய்க்கு மருந்து.]

11. அஜோऽபி ஸந் 127—2; 130—4; 440—3; [கீ3தை 4—6.]

அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ4தாநாமீஶ்வரோऽபி ஸந் ।

ப்ரக்ருதிம் ஸ்வாமதி4ஷ்டா2ய ஸம்ப4வாம்யாத்மமாயயா ॥

[பிறப்பற்றவனாகவும், அழிவற்றவனாகவும், பூ₄தங்களுக்கு ஈஶ்வரனாகவுமிருந்த போதிலும், என்னுடைய ஸ்வபா₄வத்தைக்கொண்டு, என் ஸங்கல்பத்தாலே நான் பிறக்கிறேன்.]

12. அத்யந்தஸு₂க₂ 65—1; 72—4; 239—1; 248—1. [ரா.-ஆ 16—30]

அத்யந்தஸு₂க₂ஸம்வ்ருத்₃த₄: ஸு₂குமார: ஸு₂கோ₂சித: ।
கத₂ம் ந்வபரராத்ரேஷு₂ ஸரயூமவகா₃ஹதே ॥

[மிகவும் ஸு₂க₂த்திலே வளர்ந்தவனும், ஸு₂குமாரனும், ஸு₂க₂த்திற்கே தகுந்தவனுமான ப₄ரதன் எப்படித்தான் பின்னிரவு நேரங்களில் ஸரயுவில் குடைந்தாடுகிறானோ?]

13. அத்ர பரத்ர சாபி 6—3. [ஸ்தோ-ர 2.]

தஸ்மை நமோ மது₄ஜித₃ங்க்₄ரிஸரோஜதத்த்வ-
ஜ்ஞாநாநுராக₃மஹிமாதிஶயாந்தஸீம்நே ।
நாத₂ாய நாத₂முநயேऽத்ர பரத்ர சாபி
நித்யம் யதீ₃யசரணௌ ஶரணம் மதீ₃யம் ॥

[இவ்வுலகத்திலும், மேலுலகத்திலும், எப்போதும் எந்த ஸ்ரீமந்நாத₂முனிகளுடைய திருவடிகள் எனக்குப் புகலிடமோ, மது₄வை நிரஸித்த எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளைப்பற்றின உண்மை அறிவினுடையவும், அன்பினுடையவும், பெருமேன்மையின் முடிவே எல்லையாயிருப்பவரும், (எனக்கு) நாத₂ராயிருப்பவருமான அந்த நாத₂முனிகளுக்கு நமஸ்காரம்.]

14. அத்ரோபவிஶ்ய 66—1. [வி. பு. 5—13—35]

அத்ரோபவிஶ்ய ஸா தேந காபி புஷ்பைரலங்க்ருதா ।
அந்யஜந்மநி ஸர்வாத்மா விஷ்ணுரப்₄யர்ச்சிதோ யயா ॥

[எவளொருத்தியாலே முற்பிறவியில் ஸர்வாந்தர்யாமியான விஷ்ணு (பூக்களாலே) அர்ச்சிக்கப்பட்டானோ, அத்தகைய கோ₃பிகை இவ்விடத்தில் வீற்றிருந்து அக்கண்ணனால் பூக்களாலே அலங்கரிக்கப்பட்டாள்.]

15. அதீவப்ரிய 48-7; 382-1; 387-3; 388-4; 390-1. [ரா-அ. 3-29]

சந்த்₃ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியத₃ர்ஶநம்

[சந்திரன்போன்று அழகிய முகமுடையவனாய், மிகவும் இனிய காட்சியை உடையவனான ராமனை (த₃ஶரத₂ன் கண்டான்)]

16. அதீவ ராம: 332-1; 338-3; 346-1 [ரா-பா₄ர. 77-30]

தயா ஸ ராஜர்ஷிஸுதோऽபி₄ராமயா ஸமேயிவாநுத்தமராஜகந்யயா ।
அதீவ ராம: ஶுஶுபே₄ऽதிகாமயா விபு₄: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர: ॥

[அழகியவளாய், உத்தம ராஜபுத்திரியான அந்த ஸீதையுடன் கூடிய ராஜரிஷிபுத்ரனான ராமபிரான், மிகவும் விரும்பத்தக்க ஸ்ரீதே₃வியுடன் கூடிய அமரர்களதிபதியான விஷ்ணுப₄க₃வானைப்போல் மிகவும் விளங்கினான்.]

17. அதவா கிம் 228-5 [வி-பு. 5-24-15]
அதவா கிம் தத₃ாலாபை: க்ரியதாமபரா: கதா: ।
யஸ்யாஸ்மாபிர் விநா தேந விநாஸ்மாகம் பவிஷ்யதி ॥
[அன்றிக்கே, அக்கண்ணனைப்பற்றி எதற்காகப் பேசவேண்டும்? வேறு விஷயங்களைப்பற்றிப் பேசுவோமே. நாமில்லாமல் அவன் வாழ்வதுபோலே, அவனில்லாமல் நாமும் வாழ்ந்துவிட்டுப் போகிறோம்.]

18. அத ஸோऽபயங்கதத: 143-3; 147-3; 153-3; 319-3 [தை-ஆந. 6]
யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருஶ்யேऽநாத்ம்யேऽநிருக்தேऽ நிலயநேऽபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே । அத ஸோऽபயங்கதோ பவதி ।
[பார்க்கத்தகாதவனும், (ப்ராக்ருத) ஶரீரமற்றவனும், (தேவன், மனுஷ்யன் முதலிய) வார்த்தைகளால் சொல்லத்தகாதவனும், (தனக்கு ஒரு) ஆதாரமற்றவனுமான இந்தப்பரமாத்மாவிடம் ஸம்ஸாரபயமில்லாமைக்காக பக்தியோகத்தை எப்போது அடைகிறானோ, அப்போது அவன் (ஸம்ஸார) பயமற்றவனாக ஆகிறான்.]

19. அத்ய மே ஸபலம் -3; 27-1; 41-3; 47-5; 50-11 [வி-பு 5-17-3]
அத்ய மே ஸபலம் ஜந்ம ஸுப்ரபாதா ச மே நிஶா ।
யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம் ॥
[இன்றே என் ஜன்மம் ஸபலமாயிற்று; இன்றே என் இரவு நன்றாக விடிந்தது; மலர்ந்த தாமரையிதழ் போன்ற கண்ணையுடைய விஷ்ணுவின் முகத்தை நான் காணப்போகிறேனன்றோ.]

20. அத்யைவ தம் 220-2 [ரா-கி 8-21]
அத்யைவ தம் ஹநிஷ்யாமி தவ பார்யாபஹாரிணம் ।
[இன்றே உன் மனைவியை அபஹரித்த வாலியைக் கொல்வேன்.]

21. அதிருஹ்ய பதிஷ்யாமி 412-3. [வி-பு 5-7-10]
தத்தேதம் நாதிதூரஸ்தம் கதம்பமுருஶாகிநம் ।
அதிருஹ்ய பதிஷ்யாமி ஹ்ரதேऽஸ்மிந் அநிலாஶிந: ॥
[அருகிலுள்ளதாய், பெருங்கிளைகளுள்ளதான இந்தக் கடம்பமரத்தில் ஏறி, காற்றை உணவாகக்கொண்ட இக்காளிய நாகத்தின் மடுவில் குதிப்பேன்.]

22. அத்யாபயந்தீ 517-1 திருப்பாவைத் தனியன். பக்கம் 2ல் உள்ள "நீளாதுங்க" என்று தொடங்கும் தனியனையும் அதன் பதவுரையையும் காண்க.

23. அநந்தபோக 283-3 [?]
அநந்தபோக பர்யங்கே நிஷண்ணம்
[அநந்தனின் உடலாகிற படுக்கையில் இருப்பவன்.]

24. அநந்யா 20 ; 177-1; 338-2; 342-2; 525-6 [ரா-ஸு 21-16; ரா-யு 121-15]
அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா ।

[சூரியனை விட்டுப் பிரியாத ஒளிபோலே நான் ஸ்ரீராமபிரானை விட்டுப் பிரியாமலிருப்பவள்.]

அநந்யா ஹி மயா ஸீதா பா4ஸ்கரேண ப்ரபா4 யதா2

[சூரியனை விட்டுப் பிரியாத ஒளிபோலே சீதை என்னை விட்டுப் பிரியாமலிருப்பவள்.]

25. அநஸ்1நந்நந்ய: 96-1; 493-2. [முண்ட3 3-1-1]

த்3வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா2யா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே |

தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்3வத்தி அநஸ்1நந்நந்யோ அபி4சாகஸீதி ||

[(ஞானமாகிற) அழகிய இறக்கையை உடையவையும், ஸமானமான குணங்களை உடையவையும், (எப்போதும்) கூடியிருப்பவையுமான இரு பக்ஷிகள் (ஜீவனும் ஈச்வரனும்) ஒரே மரத்தை (தேஹத்தை)ப் பற்றி நிற்கின்றன. அவைகளில் ஒன்று (ஜீவன்) பழுத்த கனியை (பக்வமான கர்மப2லத்தை)ப் புசிக்கிறது. மற்றொன்று (பரமாத்மா) அக்கனியை உண்ணாமலேயே பிரகாசிக்கிறது.]

26. அநஸூயவே 81-4 [கீ3தை 9-1]

இத3ம் து தே கு3ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே |

ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஸு1பா4த் ||

[எதை அறிந்து (என்னை அடைவதற்குத் தடையான) புண்யபாபங்களினின்றும் விடுபடுவாயோ இந்த அதிரஹஸ்யமான உபாஸன ரூபமான அறிவை அவ்வுபாஸனத்தின் வகைகளைப்பற்றிய அறிவோடு கூட என் விஷயத்தில் பொறாமையற்ற உனக்கு நன்கு கூறுகிறேன்.]

27. அநாதி3மாயயா 9-1; 20-1. [கௌட3-காரிகை 21]

அநாதி3மாயயா ஸுப்தோ யதா3 ஜீவ: ப்ரபு3த்4யதே

[அநாதி3மாயையாகிற ப்ரக்ருதியாலே (கட்டுண்டு) உறங்குகிற ஜீவன் எப்போது விழித்துக்கொள்கின்றானோ...]

28. அநாதி3ர்ப4க3வாந் 39-1; 49-2 [வி-பு 1-2-26]

அநாதி3ர் ப4க3வாந் காலோ நாந்தோऽஸ்ய த்3விஜ வித்3யதே |

[ப்3ராஹ்மணரே! பெருமை பொருந்தியதான காலம் அநாதி3யானது. இதற்கு முடிவும் கிடையாது.]

29. அநித்3ர: 3-4; 228-6; 299-1; 305-4 [ரா-ஸு 36-44]

அநித்3ரஸ் ஸததம் ராம: ஸுப்தோऽபி ச நரோத்தம: |

ஸீதேதி மது4ராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபு3த்4யதே ||

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவனாகவே இருக்கிறான்; நரஸ்ரேஷ்ட2னான அவன் தூங்கினாலும் 'ஸீதே' என்னும் அழகிய சொல்லை உச்சரித்துக்கொண்டே விழித்தெழுகிறான்.]

30. அநுஸஞ்சரந் 259-1; 493-1 [தை-ப்4ருகு3 10-5]
ஏதமாநந்த3மயமாத்மாநமுபஸங்க்ரம்ய ।
இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந் ।
ஏதத் ஸாம கா3யந்நாஸ்தே । ஹா வுஹா வுஹா வு ॥
[ஆனந்த3மயனுன இந்தப் பரமாத்மாவை அணுகி, இஷ்டப்பட்ட அநுப4வங்களையும், உருவங்களையும் உடையவனாய், இந்த லோகங்களில் (பரமாத்மாவைப்) பின் தொடர்ந்துகொண்டு இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிருன்: ஹா வுஹா வுஹா வு.]

31. அந்த4ம் தம இவாஜ்ஞாநம் 513-1 [வி-பு 6-5-62]
அந்த4ம் தம இவாஜ்ஞாநம் தீ3பவச்சேந்த்3ரியோத்3ப4வம் ।
யதா2 ஸூர்யஸ்ததா2 ஜ்ஞாநம் யத்3விப்ரர்ஷே விவேகஜம் ॥
[முனிவரே! அறிவின்மை இருள்போன்றது; (காதாகிற) இந்திரியத்தாலுண்டாகும் ஆக3மஜந்யஜ்ஞாநம் விளக்குப்போலே இருளைச் சிறிது போக்கக்கூடியது. விவேகமாகிற யோக3த்தால் உண்டாகும் ஞானம் ஸூர்யன்போலே எல்லா இருளையும் போக்கடிக்கவல்லது.]

32. அந்தரிக்ஷக3த: 31—8; 43—4; 51—5; 281—4; 282—7, [ரா—யு 16-17]
அப்3ரவீச்ச தத3ா வாக்யம் ஜாதக்ரோதோ4 விபீ4ஷண: ।
அந்தரிக்ஷக3த: ஸ்ரீமாந் ப்4ராதரம் ராக்ஷஸாதி4பம் ॥
[ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடைய விபீ4ஷணன் அப்போது மிகவும் கோபங்கொண்டவனாய், ஆகாயத்தில் கிளம்பி, ராக்ஷஸர்களுக்கு அதி4பதியான தன் தமையனைக் குறித்துச் சிலவார்த்தைகள் சொன்னுன்.]

33. அந்த: ப்ரவிஷ்ட: 427—1; 439—3. [யஜு—ஆர 3-11-21]
அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா
[ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிருன்.]

34. அந்ருதம் நோக்த 286—3; 293—3. [ரா-கி-7-22]
அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதா3சந ।
ஏதத்தே ப்ரதிஜாநாமி ஸத்யேநைவ ஶபாமி தே ॥
[நான் இதுவரை பொய் சொன்னதில்லை; இனியும் எப்போதும் பொய் பேசமாட்டேன். உனக்கு இதை ப்ரதிஜ்ஞை செய்கிறேன். உண்மையின் பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்.]

35. அவரம் ப4வதோ 71—3. [கீ3தை 4-4]
அவரம் ப4வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத: ।
கத2மேதத்3 விஜாநீயாம் த்வமாதௌ3 ப்ரோக்தவாநிதி ॥

[உம்முடைய பிறப்பு (காலத்தால்) பிற்பட்டது; ஸூர்யனுடைய பிறப்பு (காலத்தால்) முற்பட்டது. (அப்படியிருக்க) நீயே மந்வந்தரத்தின் ஆதியில் (ஸூர்யனுக்கு) உபதேசித்தாய் என்னும் இந்த (பொருந்தாத) அர்த்தத்தை எப்படி (உண்மையென) அறிவேன்?]

36. அபராதஸஹஸ்ர பாஜநம் [ ப்ரமாணம் 4 பார்க்கவும்]

37. அபரிமித குண 370—12 [?]

அபரிமித குணகணௌகமஹார்ணவ !

[அளவற்ற குணகணங்களின் கூட்டங்கள் ஒன்றுசேரும் கடலாயிருப்பவனே!]

38. அபி சேத் ஸுதுராசார: 138-3; 211-2; 215-2; 219-10. [கீதை 9—30]

அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் ।

ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ॥

[மிகவும் தாழ்ந்த ஒழுக்கத்தை உடையவனுயிருந்தாலும், என்னிடம் வேறு பயனை விரும்பாதவனாய், பக்தி செய்தானாகில் அவன் தலைசிறந்த ஜ்ஞானிகளோடு ஸமமானவனாவான்; கொண்டாடத் தக்கவனும் ஆவான். (ஏனெனில்) அவன் நன்கு (என்னிடத்தில்) உறுதியான ஈடுபாடு உடையவனன்றோ.]

39. அபி வ்ருக்ஷா: 19—1: 22—2: 50—4; 150—6: 288—9. [ரா—அ 59—4]

விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஸிதா: ।

அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா: ॥

[மஹாராஜரே! உம்முடைய தேசத்தில், புஷ்பம், முளை, மொட்டு முதலியவற்றுடன் கூடிய மரங்களுங்கூட ராமனைப் பிரிந்த துக்கத்தால் வாடிவிட்டன.]

40. அப்யஹம் 84-2; 91-4; 372-10 [ரா-ஆ 10-19]

அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணம் ।

ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விஶேஷத: ॥

[ஸீதே! நான் உயிரையும், லக்ஷ்மணனோடுகூட உன்னையும் விடுவேனேயொழிய, செய்த பிரதிஜ்ஞையை - அதிலும் விசேஷமாக ப்ராஹ்மணர்களுக்குச் செய்த பிரதிஜ்ஞையை - விடமாட்டேன்.]

41. அப்ராப்ய, 98-1; 125-5; 312-1; 319-2; 327-3; 366-1; 372-1; 375-1; 376-2; 568-2, [தை-ஆந 9-1]

யதோ வாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ ॥

ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் । ந பிபேதி குதஶ்சநேதி ॥

[எந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குக்கள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்தத்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்.]

42. அப₄யம் ஸர்வ 144-2; 219-5; [ரா-யு 18-33].

ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃த₃ாம்யேதத்₃ வ்ரதம் மம॥

[ஒரு தடவை ஶரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனுகிறேன்' என்று பிரார்த்திப்பவன் பொருட்டும், எல்லா ப்ராணிகளிடத்தினின்றும் அப₄ய மளிக்கிறேன். இது எனக்கு விரதம்.]

43. அபி₄த்வா ஶூர 219-2. [யஜு-கா – 2-4-45.]

அபி₄ த்வா ஶூர நோ நுமோऽது₃க்₃த₄ா இவ தே₄நவ:

[எங்களுக்கு (இஷ்டப்ராப்தி அநிஷ்ட நிவ்ருத்திகளில்) சூரனே! பால் கறக்கப் பெருத பசுக்கள் (கன்றைக் கூவி அழைப்பது) போலே உன்னைத் துதித்து அழைக்கிருேம்]

44. அபி₄த: பாவகோபமம் 397-3; 484-2; 406-4. [ரா-ஆ 99-26].

க்ருஷ்ணாஜிநத₄ரம் தம் து சீரவல்கலவாஸஸம்।
த₃த₃ர்ஶ ராமமாஸீநம் அபி₄த: பாவகோபமம்॥

[மான்தோலை த₄ரிப்பவனுய், மரவுரியை உடுத்திருப்பவனுய், வீற்றிருப்பவனுய், நெருப்புப்போலே நாலுபுறத்திலும் நெருங்கவொண்ணுதவனுயிருக்கும் ராமனை (ப₄ரதன்) கண்டான்.]

45. அபி₄யாதா 211-1; 215-1; 219-9. [ரா-அ 1-29.]

அபி₄யாதா ப்ரஹர்த்தா ச ஸேநாநயவிஶாரத₃:

[எதிரிகளிருக்குமிடம் சென்று போர்புரிபவன் ராமன்; யுத்த நீதிகளில் வல்லவன்.]

46. அமர்யாத₃: 370-14; 405-4. [ஸ்தோ-ர 62.]

அமர்யாத₃: க்ஷுத்₃ரஶ் சலமதிரஸூயாப்ரஸவபூ₄:
க்ருதக்₄நோ து₃ர்மாநீ ஸ்மரபரவஶோ வஞ்சநபர:।
ந்ருஶம்ஸ: பாபிஷ்ட₂: கத₂மஹமிதோ து₃:க்கஜலதே₄:
அபாராது₃த்தீர்ணஸ் தவ பரிசரேயம் சரணயோ:॥

[வேத₃வரம்பை மீறினவனும், நீச விஷயங்களில் மிகவும் சாபல்யமுள்ளவனும், நிலையற்ற நெஞ்சையுடையவனும், (பிறர் கு₃ணத்தையும் தோ₃ஷமாகப் பார்க்கும்) அஸூயைக்குப் பிறப்பிடமானவனும், நன்மை செய்தவர்களுக்குத் தீமை செய்பவனும், ஹேயமான க₃ர்வத்தையுடையவனும், காம வசப்பட்டவனும், வஞ்சிப்பவனும், கொடுமையான காரியங்களைச் செய்பவனும், பாபத்திலேயே ஊன்றியிருப்பவனுமான நான் இந்தக் கரைகாணவொண்ணுத துன்பக் கடலிலிருந்து கரையேறியவனுய் உன்னுடைய திருவடிகளில் எப்படி அடிமை செய்யப்பெறுவேன்?]

47. அம்ஸாவதாரோ 429-1; 434-1; 441-1 [வி-பு 5-1-2]

அம்ஸாவதாரோ ப்3ரஹ்மர்ஷே யோऽயம் யது3குலோத்3ப4வ: ।
விஷ்ணோஸ்தம் விஸ்தரேணாஹம் ஶ்ரோதுமிச்சா2மி தத்த்வத: ॥

[ப்3ரஹ்மரிஷியே! ஸர்வவ்யாபியான நாராயணனின் அம்ஸாவதாரமாய், யது3குலத்தில் பிறந்தவனான கண்ணனைப்பற்றி விரிவாக உள்ளபடி கேட்க விரும்புகிறேன்.]

48. அயோத்4யாமடவீம் 69-2; 76-1 [ரா-அ 40-8]

ராமம் த3ஶரத2ம் வித்3தி4 மாம் வித்3தி4 ஜநகாத்மஜாம் ।
அயோத்4யாமடவீம் வித்3தி4 க3ச்ச2 தாத யதா2ஸுக2ம் ॥

[குழந்தாய்! ஸ்ரீராமனை தசரதசக்ரவர்த்தியாக நினைத்திரு; சீதாபிராட்டியை நானாக நினைத்திரு; காட்டை அயோத்யாபட்டணமாக அறிவாயாக; ஸுகமாகச் செல்வாயாக.]

49. அரதிர்ஜந 385-1; கீ3தை 13-10.

மயி சாநந்யயோகே3ந ப4க்திரவ்யபி4சாரிணீ ।
விவிக்ததே3ஶஸேவித்வம் அரதிர்ஜநஸம்ஸதி3 ॥

[ஸர்வேஶ்வரனான என்னிடத்தில், வேறு எவரிடமும் ஈடுபடாமையாலே அசையாத நிலையுடனிருக்கும் ப4க்தி, ஜனஸஞ்சாரமில்லாத இடத்தில் வாழ்தல், ஜனக் கூட்டத்தில் ஈடுபாடு இன்மை.]

50. அலப்4யலாபே4ா யோக3: 508-1 (?)

அலப்4யலாபோ4 யோக3: ஸ்யாத் க்ஷேமம் தத்பரிரக்ஷணம்

[கிடைக்காதது கிடைப்பது 'யோக3ம்' எனப்படும்; அதை நன்கு ரக்ஷிப்பது 'க்ஷேமம்' எனப்படும்.]

51. அலமேஷா 114-9 [ரா-ஸு 27-46]

அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ ப4யாத்

[இந்த ஸீதை ராக்ஷஸிகளைப் பெரும்ப4யத்தினின்றும் காக்கவல்லவள்.]

52. அவஶ்யம் பிது: 324-8 [?]

அவஶ்யம் பிதுராசாரம்

[தந்தையின் ஒழுக்கம் பிள்ளையால் அவஶ்யம் கைக்கொள்ளத்தக்கது.]

53. அவஷ்டப்4ய 106-1; 111-4; 115-5 [ரா-யு 100-12]

ஸ த3த3ர்ஶ ததோ ராமம் திஷ்ட2ந்தமபராஜிதம் ।
ஆலிக3ந்தமிவாகாஶமவஷ்டப்4ய மஹத்3த4நு: ॥

[ஜயிக்கப்படாதவனும், ஆகாயத்தை அளாவிநிற்கும் பெருவில்லை அழுத்திப் பிடித்துக்கொண்டு நிற்பவனுமான ராமனை அந்த ராவணன் பார்த்தான்.]

54. அவிஜ்ஞாதம் 125-6 & 7; 366-2; 372-2 [கேந 2-3]

யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத₃ ஸ: ।

அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥

[எவனுக்கு ப்₃ரஹ்மம் (அளவிட்டு) அறியப்படவில்லையோ, அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது. எவனுக்கு (ப்₃ரஹ்மம்) அறியப்பட்டதாகிறதோ, அவன் (அதை) அறியவில்லை. (அளவிட்டு) அறிந்தவர்களுக்கு அறியப்படாததாகவும், (அளவிட்டு) அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாகவுமிருக்கிறது (ப்₃ரஹ்மம்).]

55. அவிஜ்ஞாதா 129-9; 134-4; 503-4 [விஷ்ணு ஸஹஸ்ரநாமம்-488, 484]

அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:

[(அடியார்களின் தோ₃ஷங்களைக் காண்பதில்) ஞானமற்றவனுயிருப்பவன்; (அடியார்களின் நன்மைகளைக்காண்பதில்) அளவற்ற ஞானமுடையவனுயிருப்பவன்.]

56. அஸந்நேவ 68-1; 74-3; 79-1; 362-1; 599-1 [தை-ஆ 6]

அஸந்நேவ ஸ ப₄வதி । அஸத் ப்₃ரஹ்மேதி வேத₃ சேத் ।

அஸ்தி ப்₃ரஹ்மேதி சேத்₃ வேத₃ । ஸந்தமேநம் ததோ விது₃: ॥

[ப்₃ரஹ்மஜ்ஞானம் இல்லையாகில், அவன் இல்லாதவனுகவே ஆகிருன். ப்₃ரஹ்மஜ்ஞாநம் உள்ளதாகில், அக்காரணத்தினுலேயே இவனை இருக்கிறவனுக அறிகிருர்கள்.]

57. அஸிதேக்ஷணு 3-3; 32-8; 45-3; 242-5; 244-6; 246-4; 335-1; 342-5; 345-4; 347-6; 474-6 [ரா-ஸு 66-10; ரா-ஸு 16-5]

சிரம் ஜீவதி வைதே₃ஹீ யதி₃ மாஸம் த₄ரிஷ்யதி ।

ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் ॥

[ஸீதை ஒருமாதம் த₄ரித்திருப்பாளாகில், வெகுகாலம் பிழைத்திருந்தவளாகிருள். கறுத்த கண்ணை உடைய அவளை விட்டு ஒரு க்ஷணநேரமும் நான் பிழைத்திருக்கமாட்டேன்.]

துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபி₄ஜநலக்ஷணாம் ।

ராக₄வோ ऽர்ஹதி வைதே₃ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா ॥

[ஒரேவித₄மான குணங்கள், வயது, நடத்தை இவைகளை உடையவளும், ஸமானமான குலத்தையும், லக்ஷணங்களையும் உடையவளுமான வைதேஹிக்கு ராகவனே தகுந்தவர்; கறுத்த கண்களை உடைய இவளும் அவருக்கே தகுந்தவள்.]

58. அஸூர்யமிவ 41-5 [ப₄ார-ஸப₄ா 36-15]

அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா ।

க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே ப₄ாரதம் புரம் ॥

[ஸூர்யனற்றவிடத்தில் ஸூர்யன் உதி₃த்தாற்போலவும், காற்றில்லா இடத்தில் காற்றடித்தாற்போலவும், க்ருஷ்ணன் வந்ததும் ப₄ாரதராஜத₄ானி ஆனந்தி₃த்தது.]

59. அஸ்தமிதாந்ய 3-5 [?]

அஸ்தமிதாந்ய ப4ாவா:

[வேறு நினைவுகள் அற்றவர்கள்.]

60. அஸ்து தே 500-4 [ஶரணாக3தி க3த்3யம் 3, 4 - பிராட்டி வாக்யம்]

அஸ்து தே । தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே ॥

[உமக்கு அப்படியே உண்டாயிடுக. அப்படிப்பட்ட உபாயத்தாலேயே பரப4க்தி தொடக்கமாக, கைங்கர்யமீறுக உள்ளதெல்லாமும், உம்மோடு பரம்பராஸம்ப3ந்த4ம் உடையார்க்கு உஜ்ஜீவனமும் உண்டாகக்கடவது.]

61. அஸ்மத் பரம 551-2 [வாக்யகு3ருபரம்பரை]

அஸ்மத் பரமகு3ருப்4யோ நம:

[நம்முடைய பரமகு3ருக்களுக்கு (ஆளவந்தாருக்கும், அவரது ஸப்3ரஹ்மசாரிகளுக்கும்) நமஸ்காரம்.]

62. அஸ்மத் ஸர்வ 559-3 [வாக்யகு3ருபரம்பரை]

அஸ்மத் ஸர்வகு3ருப்4யோ நம:

[நம்முடைய ஸர்வகு3ருக்களுக்கும் (மணக்கால்நம்பி முதலான எல்லா கு3ருக்களுக்கும்) நமஸ்காரம்.]

63. அஸ்மத் கு3ருப்4யோ நம: 551-7 [வாக்யகு3ருபரம்பரை]

அஸ்மத்3கு3ருப்4யோ நம:

[நம் கு3ருவான பெரியநம்பிக்கும், திருக்கச்சிநம்பிக்கும், பேரருளாளப் பெருமாளுக்கும் நமஸ்காரம்,]

64. அஸ்மாந் ஹந்தும் 441-3 [ரா-யு 17-5]

ஏஷ ஸர்வாயுதோ4பேதஶ் சதுர்ப்பி4ஸ்ஸஹ ராக்ஷஸை: ।
ராக்ஷஸோऽப்4யேதி பஶ்யத்4வமஸ்மாந் ஹந்தும் ந ஸம்ஶய: ॥

[எல்லா ஆயுதங்களோடும் கூடின இந்த அரக்கனை விபீஷணன் நாலு ராக்ஷஸர்களோடுகூட நம்மைக்கொல்ல எதிர்நோக்கி வருகிறான்; ஸந்தேஹமில்லை; காணுங்கள்.]

65. அஸ்மாபி4ஸ்துல்யோ 50-9; 280-2; 287-5; 288-3; 290-7; 294-4 [ரா-யு 18-38]

தஸ்மாத் க்ஷிப்ரம் ஸஹாஸ்மாபி4ஸ் துல்யோ ப4வது ராக4வ ।
விபீ4ஷணோ மஹாப்ராஜ்ஞ: ஸகி2த்வஞ்சாப்4யுபைது ந: ॥

[ரகுகுலத்தோன்றலே! ஆகையால் பெரும் பேரறிவாளனான விபீ4ஷணாழ்வான் விரைவிலேயே நம்மோடு கூட ஒத்தவனாக ஆகட்டும்; நமக்கு நண்பனாயிருக்கும் நிலையையும் அடையட்டும்.]

66. அஸ்மிந்மயா 323-1; 325-2; 328-3. [ரா-ஆ 63-12.]

அஸ்மிந் மயா ஸார்த்த₄முதா₃ரஶீலா
ஶிலாதலே பூர்வமுபோபவிஷ்டா ।
காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா
த்வாமாஹ ஸீதா ப₃ஹு₂ வாக்யஜாதம் ॥

[லக்ஷ்மணனே! இந்தப் பாறையின்மேல் என்னோடேகூட (உடம்புகொடுப்பதில்) உதாரத்தன்மையை உடையவளாய், இனிய புன்சிரிப்பை உடையவளான சீதா தேவி முன்னதாகவே நாலாபுறமும் (மாறிமாறி) உட்காருமவளாய், பெரிய சிரிப்பை உடையவளாகி உன்னை நோக்கிப் பலவிதமான வசன ஸமூஹங்களைச் சொன்னாள்.]

67. அஸ்யேஶாநா 314-1; [யஜு॰ஸ்ஸம் 4-4-12.]

அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ.

[இவ்வுலகிற்கு ஈஶ்வரியாகவும், விஷ்ணுவுக்குப் பத்தினியாகவுமிருப்பவள்.]

68. அஹத்வா ராவணம் 336-2; 348-5; [ரா-யு 19-21]

அஹத்வா ராவணம் ஸங்க்₂யே ஸபுத்ரப₃லபா₃ந்த₄வம் ।
அயோத்₄யாம் ந ப்ரவேக்ஷ்யாமி த்ரிபி₄ஸ்தைர் ப்₄ராத்ருபி₄ஶ் ஶபே ॥

[பிள்ளைகளுடனும், ஸேனையுடனும், ப₃ந்து₄க்களுடனும் கூடிய ராவணனைச் சண்டையில் கொல்லாமல் அயோத்தியில் ப்ரவேசிக்கமாட்டேன். மூன்று தம்பிகளின் மீதும் ஆணையிடுகிறேன்.]

69. அஹமந்ந 5-5; 463-1; 473-1; 572-2. [தை-ப்₄ருகு₃ 10-6]

அஹமந்நமஹமந்நமஹமந்நம் ।
அஹமந்நாதோ₃ऽஹமந்நாதோ₃ऽஹமந்நாத₃: ॥
அஹமந்நமந்நமத₃ந்தமத்₃மி ।

[நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்போல் போ₄க்₃யமாயிருப்பவன்; நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்; நான் அன்னம். நான்(பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தை பு₄ஜிப்பவன்; நான் அன்னத்தை பு₄ஜிப்பவன். நான் அன்னத்தை புஜிப்பவன். (பரமனுக்கு) அன்னமாகிற நான் அன்னமாகிற என்னை அனுப₄விக்கும் பரமனை அனுப₄விக்கிறேன்.]

70. அஹமபி நமம 84-3; 96-3 [?]

அஹமபி ந மம । ப₄க₃வத ஏவாஹமஸ்மீத்யேவம் அமமதாம்
யோஜயத்யதோ நம இதி ॥

['நானும் எனக்குரியேனல்லேன்; ப₄க₃வானுக்கே உரியவனாகிறேன்' என்று மமகாரமின்மையை உண்டாக்குகிறதாகையால், நம: எனப்படுகிறது.]

71. அஹமஸ்ம்யபராத₄ நாம் 480-1; 502-6. [அஹிர்பு₃த்₄ந்ய 37-30, 31]

அஹமஸ்ம்யபராதா₄நாமாலயோऽகிஞ்சநோऽக₃தி: ।
த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி: ॥
ஶரணாக₃திரித்யுக்தா ஸா தே₃வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥

[“நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக் கொள்ள) ஓர் உபாயமுமற்றவனாயிருக்கிறேன். உன்னையொழிய வேறுகதியில்லாதவனாயிருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக” என்று ப்ரார்த்தி₂க்கும் பு₃த்₃தி₄யே ஶரணாக₃தியெனப்படுகிறது. அது இந்த ப₄க₃வான் விஷயத்தில் செய்யப்படட்டும்.]

72. அஹம் த்வா 17-2; 133-4; 323-2; 325-3; 329-2, 334-5; 342-4; 444-2; 449-1; 454-1; 495-1; 500-5; 502-1; 504-1. [கீதை-18-66.]

ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥

[(ப₄லஸாத₄னமான) எல்லா த₄ர்மங்களையும், வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; து₃க்கி₂க்காதே.]

73. அஹம் ப்₃ரஹ்மாஸ்மி 340—2; 344—5; 346—9. [கௌஷீ 1—52, தை—நா 1—40]

தம் ப்₃ரஹ்மாஹ கோऽஸீதி
[பரப்₃ரஹ்மம் முக்தனை “நீ யாராக இருக்கிறாய்” என்று கேட்டது,]
அஹம் ப்₃ரஹ்மாஸ்மி
[நான் ப்₃ரஹ்மத்தின் ப்ரகாரமானவன்.]

74. அஹம் ஶிஷ்யா 7—6; 63—3 [வராஹபுராணம்]

அஹம் ஶிஷ்யா ச தா₃ஸீ ச ப₄க்தா ச த்வயி மாத₄வ ।
மத்க்ருதே ஸர்வபூ₄தாநாம் லகூ₄பாயம் வத₃ ப்ரபோ₄ ॥

[ப்ரபு₄வான ஸ்ரீமந்நாராயணனே! (பூ₄மியாகிய நான்) உன்னிடத்தில் ஶிஷ்யையாகவும், வேலைக்காரியாகவும், ப₄க்தையாகவுமிருப்பவள்; எனக்காக எல்லா ஜீவர்களுக்கும் எளிய உய்வுபாயத்தைச் சொல்லுவாய்,]

75. அஹம் ஸ ச 199—3; 275—4; 570—4. [கீ₃தை 7—17]

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகப₄க்திர் விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂மஹம் ஸ ச மம ப்ரிய: ॥

[அந்நால்வருக்குள், என்னோடு எப்போதும் சேர்ந்திருப்பவனாய், என்னொருவனிடமே ஈடுபாட்டை உடையவனாயிருப்பவனான ஞானி சிறப்புறுகிறான். நான் ஞானிக்கு, சொல்லவொண்ணாதவளவுக்கு இனியவன்; அவனும் எனக்குஇனியவன்]

76. அஹம் ஸர்வம் 448—2; 458—2; 528—5. [ரா—அ 31—25]

ப₄வாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே ।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்₃ரதஸ் ஸ்வபதஶ்ச தே ॥

[நீர் வைதே₃ஹியுடன்கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும், தூங்கும்போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.]

77. அஹோ பாக்யம் 493—5. (?)

அஹோ பாக்யமஹோ பாக்யம் நந்தகோப வ்ரஜௌகஸாம் |
யந்மித்ரம் பரமாநந்தம் பூர்ணம் ப்ரஹ்ம ஸநாதநம் ||

[நந்தகோபனுடைய திருவாய்ப்பாடியிலுள்ளவர்களுடைய பாக்யம் எத்தகையது! எத்தகையது! பரமானந்தஸ்வரூபியாய், பழையதாய், நிறைவுற்றதான ப்ரஹ்மமே அவர்களுக்கு நண்பனாய் அமைந்ததல்லவோ.]

78. அஹோவீர்யம் 229—4; [ரா-ஸு 49-17]

அஹோவீர்யம் அஹோரூபம் அஹோ ஸத்வம் அஹோ த்யுதி: |
அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா ||

[ராக்ஷஸ ராஜாவான ராவணனின் வீர்யம் எத்தகையது! ரூபம் எத்தகையது! பலம் எத்தகையது! தேஜஸ் எத்தகையது! எல்லா லக்ஷணங்களும் கூடியிருக்கையாகிற பெருமை எத்தகையது!]

## ஆ

79. ஆக்யாதி 305-2; 397-5; [ரா-பா 77-29]

தஸ்யாஶ்ச பர்த்தா த்விகுணம் ஹ்ருதயே பரிவர்த்ததே |
அந்தர்கதமபிவ்யக்தமாக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா ||

[(ராமன் நெஞ்சில் சீதை உறைவதுபோலே) சீதையின நெஞ்சிலும் கணவனான ஸ்ரீராமன் இரண்டுமடங்கு உறைகின்றான். ஒருவர் நெஞ்சிலிருப்பதை மற்றவர் நெஞ்சே தெளிவாகப் பேசிக்கொள்கிறது.]

80. ஆசாரஶ்சைவ 10-41. (?)

ஆசாரஶ்சைவ ஸாதூநாம்

[நல்லோர்களின் ஆசாரமும் ப்ரமாணம்,]

81. ஆஜகாம 20-4 [ரா-யு 17-1]

இத்யுக்த்வா பருஷம் வாக்யம் ராவணம் ராவணாநுஜ: |
ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராம: ஸலக்ஷ்மண: ||

[ராவணனுக்குத் தம்பியான விபீஷணன் ராவணனைக் குறித்து இப்படியாகக் கடுமையாகச் சொல் தொடரைச் சொல்லி, எவ்விடத்தில் ஸ்ரீராமபிரான் லக்ஷ்மணனோடு கூடியவராய் எழுந்தருளியிருக்கிறாரோ அங்கே விரைவாக வந்தான்.]

82. ஆத்மதாஸ்யம் 584-1 [விஷ்ணுதத்வம்]

ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி |
ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர ||

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவினுடைய தாஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியின்

னுடைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் (இவைகளின்) இயல்வையும் எப்போதும் நினைப்பாயாக.]

83. ஆத்மாநம் பூஜயந் 177-4; 179-8 [ரா-யு 17-33]

அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித் த்ரிஷு லோகேஷு ராகவ ।
ஆத்மாநம் பூஜயந் ராம ப்ருச்சஸ்யஸ்மாந் ஸுஹ்ருத்தயா ॥

[ரகுகுலதிலக! உமக்கு மூன்றுவகைச் சேதனர்கள் விஷயத்திலும் தெரியாதது சிறிதும் இல்லை. உம்மைப் பெருமைப்படுத்திக்கொண்டு நட்பினாலே எங்களைக் கேட்கிறீர்.]

84. ஆத்வாரம் 467-1 [ரா-அ 16-21]

பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தாரமஸிதேக்ஷணா ।
ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபித்யுஷீ ॥

[கணவனுன ராமனால் கௌரவிக்கப்பட்டவளும், கறுத்த கண்களை உடையவளுமான ஸீதை, மங்களாஸாஸனம் செய்துகொண்டு கணவனை வாயில்வரையில் பின்தொடர்ந்தாள்.]

85. ஆநந்தம் ப்ரஹ்மணோ — 41-வது ப்ரமாணம் காண்க.

86. ஆநந்தயாதி 4-4; 194-2; 200-2. [தை-ஆந 7]

ஏஷ ஹ்யேவாநந்தயாதி

[இப்பரமாத்மாவேயன்றோ ஜீவனை ஆனந்திப்பிக்கிறான்.]

87. ஆநந்தோ ப்ரஹ்ம 4-8. [தை-ப்ருகு, 6-1]

ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்

[ப்ரஹ்மம் ஆனந்தமயமானது என்று அறிந்தான்.]

88. ஆநயைநம் 202-2; 287-4; 290-4; 291-5; 294-1. [ரா-யு 18-34]

ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட! தத்தமஸ்யாபயம் மயா ।
விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவண: ஸ்வயம் ॥

[வானரர்களுள் சிறந்தவனுன ஸுக்ரீவனே! இவனை அழைத்துவா; விபீஷணனாயிருந்தாலும், ராவணன்தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அபயமளிக்கப்பட்டது.]

89. ஆந்ருஸம்ஸ்யம் 31-8; 173-8; 178-9; 180-14; 297-3. [ரா-ஸு 38-41]

த்வயா நாதவதீ நாத ஹ்யநாதா இவ த்ருஸ்யதே ।
ஆந்ருஸம்ஸ்யம் பரோ தர்மஸ் த்வத்த ஏவ மயா ஸ்ருத: ॥

[நாதனே! உன்னை நாதனுக அடைந்தும் (இவ்வடியாள்) நாதனற்றவள்போல், காணப்படுகிறாள். 'இரக்கம் என்பதே மேலான குணம்' என்று உம்மிடமிருந்தே என்னால் கேட்கப்பட்டது.]

90. ஆபூர்யமாணே 26-1; 40-2; 47-4. (?)

ஆபூர்யமாணே பக்ஷே புண்யே நக்ஷத்ரே

[சந்த்ரகலைகள் நிறையும் ஶுக்லபக்ஷத்தில் குற்றமற்ற கு3ணம்மிக்க நக்ஷத்திரத்தில் (மங்க3ளகார்யம் செய்யத்தக்கது)]

91. ஆயுராஶாஸ்தே 81-1; 90-2; 546 1;] 567-1. [யஜு-அஷ்டக 3-5]

ஆயுராஶாஸ்தே

[(யாக3ம்செய்பவன்) நீண்ட ஆயுளைப் பிரார்த்திக்கிறன்]

92. ஆர்த்தோ வா 334-4; 339-8; 342-8; 345-8; 846-7; 847-4. [ரா-யு 18-28]

ஆர்த்தோ வா யதி3 வா த்3ருப்த: பரேஷாம் ஶரணாக3த: ।
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥

[எதிரிகளுள், ஶரணமடைந்த சத்துருவானவன், (வருத்தத்தாலே ஶரணமடைந்த) ஆர்த்தனுயினும், (அரைமனமாக சரணமடைந்த) த்3ருப்தனுயினும், பண்பட்ட மனத்தையுடைய புருஷனுலே, தன் ப்ராணனை விட்டு ரக்ஷிக்கத்தக்கவன்.]

93. ஆவிர்பூ4தம். ப்ரமாணம் 9 காண்க.

94. ஆஶயா. 266-8. [ரா-அ 59-8]

கு3ஹேந ஸார்த்த4ம் தத்ரைவ ஸ்தி2தோऽஸ்மி தி3வஸாந் ப3ஹூந் ।
ஆஶயா யதி3 வா ராம: புந: ஶப்3த3ாபயேதி3தி ॥

['ராமபிரான் மறுபடியும் கூப்பிடுவரோ' என்னும் ஆசையாலே குஹனுடன் கூட அங்கேயே பல தினங்கள் தங்கினேன்.]

95. ஆஷாடே4 406-2. (?)

ஆஷாடே4 [ஆடிமாதத்தில்]

96. ஆஹாரநித்3ரா. 478-1; 501-1; 502-2. [நரஸிம்ஹபுராணம் 16-18]

ஆஹாரநித்3ரா ப4யமைது2நாநி துல்யாநி க2ல்வத்ர ஸமஸ்தஜந்தோ: ।
ஜ்ஞாநேந ஹீந: பஶுபி4ஸ் ஸமாந: ॥
ஜ்ஞாநாத்3 விஶிஷ்டோ ஹி நர: பரேப்4யோ ஜ்ஞாநேந ஹீந: பஶுபி4ஸ் ஸமாந: ॥

[ஆஹாரம், தூக்கம், பயம், ஸ்த்ரீபுருஷஸங்கமம் எனபவை இங்குஎல்லாஜந்துக்களுக்கும் ஸமானம். மற்றவைகளைக்காட்டிலும் மனிதன் அறிவினுல் மேலானவனுயிருக்கிறன்; ஞானமற்றவன் பசுக்களுக்கு ஸமானமானவன்.]

## இ

97. இச்ச2ாம: 125-1; 412-1; 424-1. [ரா-ஆ 2-22]

இச்ச2ாமோ ஹி மஹாபா3ஹும் ரகு4வீரம் மஹாப3லம் ।
க3ஜேந மஹதாயாந்தம் ராமம் ச2த்ராவ்ருதாநநம் ॥

[நீண்ட திருக்கைகளை உடையராய், ரகுகுலச்ரேஷ்டராய், பெரும்பலத்தை உடையவரான ராமபிரானை யானையின் மேல் எழுந்தருளுமவராயும், குடையால்

(வெயில் படாதபடி) மறைக்கப்பட்ட முகத்தை உடையவராயும் (காண) ஆசைப் படுகிறோமன்றோ.]

98. இத உபரி 225-5; 230-1; 234-1. [ப4ட்டர் அருளிய ஸஹஸ்ரநாமபா4ஷ்யம் 'பரர்த்தி4:' என்னும் 391-வது திருநாம பா4ஷ்ய அவதாரிகை.]

இத உபரி ம்ருதஸஞ்ஜீவநம் ராமவ்ருத்தாந்தம்

[செத்தவர்களையும் பிழைக்கவைக்கும் மருந்தான ராமனின் சரிதம் இதற்கு மேல் தொடங்கப்படுகிறது.]

99. இத3ஞ்ச ஶ்ருணு 370-3. [வி-பு 1-9-1]

இத3ஞ்ச ஶ்ருணு மைத்ரேய! யத் ப்ருஷ்டோऽஹமிஹ த்வயா |
ஸ்ரீஸம்ப3ந்த4ம் மயாऽப்யேதத் ஶ்ருதமாஸீந்மரீசித: ||

[(மைத்ரேயரே) ஸ்ரீதே3வியைப்பற்றி நீர் என்னைக்கேட்டபடியால் இன்னொரு விஷயத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக; நானும் காஶ்யபரின் தந்தையான மரீசியிடமிருந்து இதைக் கேட்டேன்.]

100. இத3ம் து தே — 26 வது ப்ரமாணம் காண்க.

101. இதா3நீம் க2ல்வஹம் 98-3 [ரா-யு 68-12]

இதா3நீம் க2ல்வஹம் நாஸ்மி யஸ்ய மே த3க்ஷிணோ பு4ஜ: |
பதிதோ யம் ஸமாஸாத்3ய ந பி3பே4மி ஸுராஸுராத் ||

[எந்தக் கும்ப4கர்ணனைப் பெற்றதினால் தே3வாஸுரர்கள் அனைவரையும் கண்டு நான் பயப்படுவதில்லையோ, எவன் என் வலதுகையாயிருந்தானோ அவன் விழ்ந்து விட்டான்; இப்போது நான் (இருந்தும்) இல்லாதவனாயிருக்கிறேனன்றோ]

102. இஷீகதூல 124-4; 129-8; 134-3. [சா2ந் 5-24-3]

தத்3 யதா2 இஷீகதூலமக்3நௌ ப்ரோதம் ப்ரதூ3யேத |
ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ3யந்தே ||

[அக்னியில் இடப்பட்ட பஞ்சு எப்படிக் கொளுத்தப்படுகிறதோ, அப்படியே இவனுடைய எல்லாப் பாபங்களும் கொளுத்தப்படுகின்றன.]

## ஈ

103. ஈஷது3ந்நம்ய 358-3 [ரா-யு 5-13]

கதா3 நு சாருபி3ம்போ3ஷ்டம்2 தஸ்யா: பத்3மமிவாநநம் |
ஈஷது3ந்நம்ய பாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம் ||

[அழகிய கோவைப்பழம் போன்ற திருப்பவளங்களையுடைய அந்த ஸீதையினுடைய தாமரைபோன்ற முகத்தைச் சிறிது உயர்த்தி, உயர்ந்த மருந்துபோன்ற அவளது வாயமுதத்தை எப்போது பருகுவேன்.?]

104. ஈஶ்வர: ஸர்வ 383-3 [தை-நா 44]

ஈஶாநஸ் ஸர்வவித்₃யாநாம் ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தாநாம்

[எல்லா வித்₃யைகளுக்கும் ஈஶன்; எல்லா பூ₄தங்களுக்கும் ஈஶ்வரன்.]

105. ஈஶ்வரீம் ஸர்வ 343-8 [ஸ்ரீஸூக்தம் 9]

ஈஶ்வரீம் ஸர்வபூ₄தாநாம் த்வாமிஹோபஹ்வயே ஶ்ரியம்

[ஸர்வபூ₄தங்களுக்கும் ஈஶ்வரியாய் ஸ்ரீதே₃வியான உன்னை இங்கு வரும்படி அழைக்கிறேன்.

106. ஈஶ்வரோऽஹம் 126-1; 131-6; 354-1; 388-4; 430-1 [கீதை 16-14]

ஈஶ்வரோऽஹமஹம் போ₄கீ₃ ஸித்₃தோ₄ऽஹம் ப₃லவாந் ஸுகீ₂

[நானே ஈஶ்வரன். நானே போகத்தை அடைபவன். நான் இயற்கையாகவே ஸித்₃த₄னாயிருப்பவன்; (இயற்கையாகவே) ப₃லவானாகவும், ஸுகத்தை அனுபவிப்பவனாகவுமிருப்பவன் நானே.]

## உ

107. உத்தரபூர்வாக₄ 546-2; 569-4 [ப்₃ரஹ்மஸூத்ரம் 4-1-13]

தத₃தி₄க₃ம உத்தர பூர்வாக₄யோ: அஶ்லேஷவிநாஶௌ
தத்₃வ்யபதே₃ஶாத்

[ப்₃ரஹ்மவித்யையை அடைந்தவனுக்கு உத்தராக₄ங்கள் ஒட்டமாட்டா; பூர்வாக₄ங்கள் நசித்துவிடும். அப்படியன்றோ வேதவாக்யங்கள் சொல்லுகின்றன.]

108. உத்தரம் நிர 170-1; 173-1; 175-1; 177-2; 179-1; 212-2; 216-1; 218-2 [ரா-யு 17-8]

தேஷாம் ஸம்பா₄ஷமாணாநாமந்யோந்யம் ஸ விபீ₄ஷண: ।
உத்தரம் தீரமாஸாத்₃ய க₂ஸ்த₂ ஏவ வ்யதிஷ்ட₂த ॥

[அந்த விபீஷணன் — ஒருவர்க்கொருவர் அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே (கடலின்) வடகரையை அடைந்து, ஆகாயத்திலேயே நிலைநின்றான்.]

109. உத்திஷ்ட₂ நர 71-6; 144-6 [ரா-பா₃ 23-2]

கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்₄யா ப்ரவர்த்ததே ।
உத்திஷ்ட₂ நரஶார்த்₃தூல கர்த்தவ்யம் தை₃வமாஹ்நிகம் ॥

[ஆண்புலியே! கௌஸல்யாதேவிக்கு நல்லபிள்ளையான ராமனே! முதல் ஸந்த்யாகாலம் நடக்கிறது; எம்பெருமானாலே விதிக்கப்பட்ட நித்யநைமித்திக கர்மங்கள் அநுஷ்டிக்கப்படவேண்டும்]

110. உதார: ஸந்த₃ர்ஶயந் 370-5 [ஸ்தோ-ர 4]

தத்த்வேந யஶ்சித₃சிதீ₃ஶ்வரதத்ஸ்வபா₄வ போ₄க₃ாபவர்க்க₃தது₃பாயக₃திருதா₃ர: ।
ஸந்த₃ர்ஶயந் நிரமிமீத புராணரத்நம் தஸ்மை நமோ முநிவராய பராஶராய ॥

[உதாரரான எந்தப் பராசரர் சித்து, அசித்து, ஈச்வரன் என்னும் தத்வ த்ரயம், அவற்றின் ஸ்வபாவங்கள், (இவ்வுலகத்து) போகங்கள், மோக்ஷம், போக மோக்ஷஸாதனங்கள், ஜீவன் செல்லும் கதிகள் ஆகிய இவைகளை உள்ளபடி நன்கு விளக்கிக்கொண்டு, புராணங்களுள் மேலான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தை அருளினரோ, அப்படிப்பட்ட ரிஷிச்ரேஷ்டரான பராசரருக்கு நமஸ்காரம்.]

111. உதாரா: 199-2; 275-3; 301-1; 302-1; 369-2; 375-5; 547-3; 570-3. [கீதை 7-18]

உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்

[இவர்கள் எல்லாரும் உதாரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தாரகன்) என்று என் ஸித்தாந்தம்.]

112. உத்காயதீநாம் 157-1; 161-1; 165-1; 255-6 [பாகவதம் 10-46-47]

உத்காயதீநாமரவிந்தலோசநம்
வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத் த்வநி: ।
தத்நஶ்ச நிர்மந்தநசப்தமிச்ரிதோ
நிரஸ்யதே யேந திசாமமங்களம் ॥

[தாமரைக்கண்ணனை நினைத்துப் பாடுகிற கோபஸ்த்ரீகளின் ஒலியானது, தயிர் கடையும் ஓசையுடன் கூடிக்கொண்டும் திசைகளின் அமங்களங்களைப் போக்கிக் கொண்டும் ஸ்ரீவைகுண்டத்தையும் எட்டியது.]

113. உபதாய புஜம் 339-5; 346-5; [ரா-ஸு 21-16]

உபதாய புஜம் தஸ்ய லோகநாதஸ்ய ஸத்க்ருதம் ।
கதம் நாமோபதாஸ்யாமி புஜமந்யஸ்ய கஸ்யசித் ॥

[லோகநாதனுடைய அவனுடைய அலங்கரிக்கப்பெற்ற தோளில் சாய்ந்திருந்த நான் வேறு ஒரு புல்லியனின் தோளில் சாய்வேனோ?]

114. உபவாஸக்ருசாம் 180—10. [ரா-யு 15-19]

உபவாஸக்ருசாம் தீநாம் நி:ச்வஸந்தீம் புந: புந: ।
ததர்ச சுக்லபக்ஷாதௌ சந்த்ரரேகாமிவாமலாம் ॥

[பட்டினியால் மெலிந்தும், வருந்தத்தக்கவளாகவும், மறுபடியும் மறுபடியும் பெருமூச்சுவிடுபவளாகவுமிருக்கும் ஸீதா தேவியை சுக்லபக்ஷத்தின் தொடக்கத்தில் அழுக்கற்று விளங்கும் சந்த்ரகலையைப்போலே ஹனுமான் பார்த்தான்.]

115. உபஸம்ஹர 252-4; 255-5; 427-3; 428-1; 440-2. [வி-பு 5-3-1]

உபஸம்ஹர ஸர்வாத்மந்! ரூபமேதச்சதுர்புஜம் ।
ஜாநாது மாऽவதாரம் தே கம்ஸோऽயம் திதிஜந்மஜ: ॥

[ஸர்வாந்தர்யாமியே! நான்கு திருக்கைகளையுடைய இந்த ரூபத்தை மறைத்துக் கொள்வாயாக. அஸுரனான இந்தக் கம்ஸன் உன்னுடைய அவதாரத்தை அறியவேண்டாம்.]

116. உபஸ்தே2யை: 123-2; 129-1; 130-6; 133-7; 173-1; 178-6; 180-4; 254-7; 392-4; 396-1 571-1. [ரா-ஆ 10-9]

ப்ரஸீத3ந்து ப4வந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா |
யதீ3த்3ருஶைரஹம் விப்ரைருபஸ்தே2யைருபஸ்தி2த: ||

[(முனிவர்களே!) நீங்கள் உகந்தருளுவீர்களாக. வந்து அடையத்தகுந்த பெரியோர்களான உங்களால் (நான்) அடையப்பட்டபடியால், எனக்கு இப்போ திருக்கும் லஜ்ஜை மிக அதிகமாயிருக்கிறது.]

117. உபாயோபேயத்வே 53-4; 480-4; 503-8; [ர-ஸ்த 2-88.]

உபாத3த்தே ஸ்த்தா ஸ்தி2தி நியமநாத்3யைஶ் சித3சிதௌ
ஸ்வமுத்3தி3ஶ்ய ஶ்ரீமாநிதி வத3தி வாகௌ3பநிஷதீ3 |
உபாயோபேயத்வே ததி3ஹ தவ தத்த்வம் ந து கு3ணௌ
அதஸ்த்வாம் ஶ்ரீரங்கே3ஶய! ஶரணமவ்யாஜமப4ஜம் ||

[ஹே ஶ்ரீரங்க3நாத2னே! 'ஶ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி, ஸ்தி2தி, நியமனம் முதலிய காரியங்களால் சேதநாசேதநங்களைத் தனக்காக ஸ்வீகரிக்கிருன்' என்று உபனிஷத்3வாக்யமானது சொல்லுகிறது. ஆகையால், இவ்விஷயத்தில் உபாயத் வமும் உபேயத்வமும் உனக்கு இயல்வானது; செயற்கையல்ல. ஆகையால் உன்னை நிர்வ்யாஜமான உபாயமாக அடைந்தேன்.]

118. உப4ாப்4யாம் 6-5.

வைகுண்டே2 து பரே லோகே ஶ்ரீஸஹாயோ ஜநார்த்த3ந: |
உப4ாப்4யாம் பூ4மிநீளாப்4யாம் ஸேவித: பரமேஶ்வர: ||

[வைகுண்டம் என்னும் மேலான உலகில் மேலான ஈஶ்வரனை ஶ்ரீமந்நாரா யணன், பூ4மிநீளைகளான தேவியர் இருவரால் ஸேவிக்கப்படுகிறவனாய் எழுந்தருளி யிருக்கிருன்.]

119. உவாச ச 124-2; 129-5; 184-2; 355-2; 456-3; 514-1 [ரா-யு 17-9.]

உவாச ச மஹாப்ராஜ்ஞ: ஸ்வரேண மஹதா மஹாந் |
ஸுக்3ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய க2ஸ்த2 ஏவ விபீ4ஷண: ||

[நல்ல புத்திமானாய், பெரியோனை விபீஷணன், ஆகாயத்தில் நின்றவனாகவே உரத்த குரலோடு ஸுக்3ரீவனையும் அந்த வானரர்களையும் பார்த்து ஒருவார்த்தை யும் சொன்னான்.]

## ஊ

120. ஊர்த்4வம் மாஸாந்ந 46-2 [ரா-ஸு 38-67]

ஜீவிதம் தா4ரயிஷ்யாமி மாஸம் த3ஶரதா2த்மஜ! |
ஊர்த்4வம் மாஸாந்ந ஜீவேயம் ஸத்யேநாஹம் ப்3ரவீமி தே ||

[ஆர்யபுத்திரரே! நான் என்உயிரை ஒருமாதகாலம்த4ரித்து நிற்பேன்; ஒருமாதத் திற்குமேல் உயிர்வாழமாட்டேன் என்று ஆணையிட்டு உமக்குச் சொல்லுகிறேன்.]

## ஈ (ரு)

121. ருணம்ப்ரவ்ருத்₃த₄ 77-2; 90-7; 124-1; 131-1; 184-1; 227-1; 304-2; [ப₄ார-உத். 47-22]

கோ₃விந்தே₃தி யத₃ாக்ரந்த₃த் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம் ।
ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்ப்பதி ॥

[த்₃ரௌபதி₃யானவள் வெகுதூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோ₃விந்த₃ா!' என்று கூக்குரலிட்டது, (வட்டியினால்) வ்ருத்₃தி₄யடைந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருத₃யத்திலிருந்து அகலுகிறதில்லை.]

## ஏ

122. ஏகத₃ாது 412-2, [வி. பு. 5-1-7.]

ஏகத₃ா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்₃ருந்த₃ாவநம் யயௌ ।
விசசார வ்ருதோ கோ₃பைர் வந்யபுஷ்பஸ்ரகு₃ஜ்ஜ்வல: ॥

[ஒருநாள் ப₃லராமனைப் பிரிந்து க்ருஷ்ணன் ப்₃ருந்த₃ாவனத்துக்குச் சென்றான். காட்டுப்பூமாலை அணிந்து இடையர்களால் சூழப்பெற்றவனாய் ஸஞ்சரித்தான் அவன்.]

123. ஏகத₄ா ப₄வதி 91-2. [ச₂ாந் 7-26-2]

ஸ ஏகத₄ா ப₄வதி த்ரித₄ா ப₄வதி பஞ்சத₄ா ।
ஸப்தத₄ா நவத₄ா சைவ புநஸ் சைகாத₃ஶ: ஸ்ம்ருத: ।
ஶதஞ்ச த₃ஶ சைகஞ்ச ஸஹஸ்ராணி ச விம்ஶதி: ॥

['முக்தாத்மா பல ஶரீரங்களை உடையவனாகிறான்' என்று தாத்பர்யம்.]

124. ஏகம் 17-2; 188-4; 323-2; 325-3; 329-2; 334-5; 342-4; 444-2; 449-1; 454-1; 495-1; 502-1; 504-1. [கீ₃தை 18-66]

ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥

[(ப₃லஸாத₄னமான) எல்லா த₄ர்மங்களையும் வாஸனையுடன் விட்டு, என்னையொருவனையே உபாயமாக உறுதிகொள். நான் எல்லாப் பாபங்களினின்றும் உன்னை விடுவிக்கிறேன். வருந்தாதே.]

125. ஏக: ஸ்வாது₃ 47-5; 136-1; 144-4; 569-5, [ப₄ார-உத்₃ 32-53]

ஏக: ஸ்வாது₃ ந பு₄ஞ்ஜீத ஏகஸ்சார்த்₂ம் ந சிந்தயேத் ।
ஏகோ ந க₃ச்சே₂த₃த்₃த்₄வாநம் நைகஸ் ஸுப்தேஷு ஜாக்₃ருயாத் ॥

[நல்ல பத₃ார்த்தத்தை ஒருவனாகப் புசிக்கலாகாது; நற்பொருளை ஒருவனாகச் சிந்திக்கலாகாது; வழிப்பாதையில் ஒருவனாகச் செல்லலாகாது; (பலர்) தூங்குகையில் ஒருவன் விழித்திருக்கக்கூடாது.]

126. ஏகாந்தீ வ்யப 283-6. [விஷ்வக்ஸேநஸம்ஹிதை]

ஏகாந்தீ வ்யபதே3ஷ்டவ்ய: நைவ க்3ராமகுலாதி3பி4: ।
விஷ்ணுநா வ்யபதே3ஷ்டவ்ய: தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி ॥

[பகவதேகபரனுயிருக்குமவன் ஊர் குலம் இவற்றையிட்டுச் சொல்லப்படுமவ னல்லன்; அவனுக்கு அந்த க்3ராமகுலங்கள் முதலியவை எல்லாம் எம்பெருமானேயன்றே.]

127. ஏகாம் த4ரணி 70-4, 76-3. [ரா-யு 5-10]

ப3ஹ்வேதத் காமயாநஸ்ய ஶக்யமேதேந ஜீவிதும் ।
யத3ஹம் ஸா ச வாமோரூரேகாம் த4ரணிமாஶ்ரிதௌ ॥

[இவ்வண்ணம் மிகுதியாகக் காமத்தால் பீடிக்கப்பட்ட எனக்கு இவ்வளவே உயிர்த4ரிக்கப் போதுமாயுள்ளது; (எது? எனில்:) நானும் எனக்கினிய அவளும் ஒரே பூ4மியில் வாழ்கிறோம் என்பதே அது.]

128. ஏகைகப2ல 81-2; 297-1; 301-3; 306-1; 307-3 ?

பித்ரு மாத்ரு ஸுதப்4ராத்ருத3ார மித்ராத3யோऽபி வா ।
ஏகைகப2லலாப4ாய ஸர்வலாப4ாய கேஶவ: ॥

[தந்தை, தாய், மகன், ஸஹோத3ரன், மனைவி, நண்பன் முதலானோர் ஒவ்வொரு ப2லனை அடைவதின் பொருட்டேயாவர்கள். கேஶவன் எல்லாம் ப2லன்களையும் அடைவதற்காக ஏற்பட்டவன்.]

129. ஏதத்ஸாம— 30- வது ப்ரமாணம் காண்க.

130. ஏதத்3வ்ரதம்— 42- வது ப்ரமாணம் காண்க.

131. ஏபி4ஶ்ச 176-8; 178-8; 180-12; 397-2; [ரா- அ- 104-12]

ஏபி4ஶ்ச ஸசிவை: ஸார்த்த4ம் ஶிரஸா யாசிதோ மயா ।
ப்4ராது: ஶிஷ்யஸ்ய தா3ஸஸ்ய ப்ரஸாத3ம் கர்த்துமர்ஹஸி ॥

[இந்த மந்திரிகளோடு கூட, என்னால் தேவரீர் தலையாலே யாசிக்கப்பட்டீர்; உமது தம்பியாய், சீடனாய், அடியவனான எனக்கு அருள்புரிவது தக்கது.]

132. ஏவமுக்தா ஹநுமதா 113-4; 114-6; 116-2 [ரா-யு 116-37]

ஏவமுக்தா ஹநுமதா மைதி2லீ ஜநகாத்மஜா ।
உவாச த4ர்மஸஹிதம் ஹநூமந்தம் யஶஸ்விநீ ॥

[மிதிலையரசகுமாரியாய், ஜனகனின் பெண்ணாய், புகழ் நிரம்பியவளான ஸீதை அனுமனால் இவ்வண்ணம் உரைக்கப்பட்டு, அறத்தோடு கூடிய வார்த்தையை அனுமனுக்குச் சொன்னாள்.]

133. ஏஷ நாராயண: 37-2; 49-1; 63-1; 153-4; 340-4; 553-1 [ஹரிவம்ஶம் 113-62]

ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக3தோ மது4ராம் புரீம் ॥

[பாற்கடலில் பள்ளிகொண்டவனான இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப் பாயை விட்டு மது4ராபுரிக்கு வந்திருக்கிறான்.]

134 ஏஷ ப்3ரஹ்ம 27-2; 42-1; 50-13; 56-2; 284-4; 359-3 [பா4ர-மோக்ஷ 4-50]

ஏஷ ப்3ரஹ்ம ப்ரவிஷ்டோऽஸ்மி க்3ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரத3ம் ।
ஶாம்யாமி பரிநிர்வாமி ஸுக2ம் மாமேதி கேவலம் ॥

[கோடையில் குளிர்ந்த குளத்தில் குடைந்தாடுவதுபோல், இந்த ப்3ரஹ்மத்தினுள் குடைந்தாடுகிறேன். அதனால் ஶாந்தனாகிறேன்; தாபம் ஆறினவனாகிறேன்; ஸுக2த்தையே அடைகிறேன்.]

135. ஏஷ ஸர்வஸ்வ 50-7; 319-1; 324-2 [ரா-யு 1-14]

ஏஷ ஸர்வஸ்வபூ4தஸ்து பரிஷ்வங்கோ3 ஹநூமத: ।
மயா காலமிமம் ப்ராப்ய த3த்தஸ் தஸ்ய மஹாத்மந: ॥

[(ராமன் வார்த்தை—) ஸர்வஸ்வ தா3னம் போன்ற இந்த ஆலிங்க3னம் மஹாத்மாவான ஹநுமானுக்கு என்னால் இப்போது உரியகாலத்தில் தரப்பட்டது.]

136. ஏஷ ஸுப்தேஷு 283-7; 294-9 [கட2 2-5-8]

ஏஷ ஸுப்தேஷு ஜாக3ர்த்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண:

[இந்த ஜீவர்கள் உறங்குகையில் பரமபுருஷன் (இவர்களை ஸ்வப்நத்தில் அனுப4விப்பிப்பதற்காகப்) பதா3ர்த்த2ங்களைத் தன் விருப்பப்படி ஸ்ருஷ்டித்துக் கொண்டு விழித்திருக்கிறான்.]

137. ஏஷ ஹ்யேவா — 86-வது ப்ரமாணம் காண்க.

138. ஏஹி பஶ்ய 178-7; 180-9; 353-1; 359-1; 360-2; 362-2; 431-1 [ரா-ஆ 6-16]

ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பா4விதாத்மநாம் ।
ஹதாநாம் ராக்ஷஸைர் கோ4ரைர் ப3ஹூநாம் ப3ஹுதா4 வநே ॥

[ராம! (இங்கு) வருவாயாக; பரமாத்மாவை தியானம் செய்பவர்களும், வனத்தில் கோ4ரமான ராக்ஷஸர்களால் பலவித4மாக ஹிம்ஸிக்கப்பட்டவர்களுமான பல முனிவர்களுடைய ஶரீரங்களைப் பார்ப்பாயாக.]

## ஓ

139. ஓக4மேக4ஸ்வந: 109-6 ?

ஓக4மேக4ஸ்வந: க்ருஷ்ண:

[பெருவெள்ளம் போலவும், மேக4ம் போலவும் முழங்குபவன் கண்ணன்.]

## க

140. க இதி ப்3ரஹ்மணோ 245-7; 531-1 [ஹரிவம்ஶம் 131-48]

க இதி ப்3ரஹ்மணோ நாம ஈஶோऽஹம் ஸர்வதே3ஹிநாம் ।
ஆவாம் தவாங்கே3 ஸம்பூ4தௌ தஸ்மாத் கேஶவநாமவாந் ॥

['க' என்பது பிரமனின் நாமம்; தே₃ஹத்தில் பற்றுடைய அனைவர்க்கும் நான் ஈசன். நாங்களிருவரும் உன் அவ்யவத்தினின்றும் பிறந்தவர்கள். ஆகையால், நீ கேசவன் என்னும் பெயரையுடையவனாகிறாய்.]

141. கச்சிந்ந 385-4; 389-4; [ரா-அ 85-7]

கச்சிந்ந து₃ஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்டகர்மண: I
இயம் தே மஹதீ ஸேநா ஶங்காம் ஜநயதீவ மே II

[அருஞ்செயல்களையும், எளிதில் செய்யவல்ல இராமன் விஷயத்தில் தீய எண்ணத்தால் வருகின்றாயோ? உனது இந்தப் பெரியஸேனை எனக்கு ஐயத்தை விளைக்கிறது.]

142. கதா₃ந்வஹம் 50-10; [ரா-ஆ 16-40]

கதா₃ந்வஹம் ஸமேஷ்யாமி ப₄ரதேந மஹாத்மநா I
ஶத்ருக்₄நேந ச வீரேண த்வயா ச ரகு₄நந்த₃ந II

[ரகு₄குலத்தை விளங்கவைக்கும் லக்ஷ்மணா! மஹாத்மாவான ப₄ரதனோடும், வீரனான ஶத்ருக்₄னனோடும், உன்னோடும் நான் எப்போது சேரப்போகிறேன்?]

143. கலஶம் பூர்ண 489—1. [ரா—பா₃ 2—21]

ப₄ரத்₃வாஜஸ் தத: ஶிஷ்யோ விநீத: ஶ்ருதவாந் கு₃ரோ: I
கலஶம் பூர்ணமாதா₃ய ப்ருஷ்ட₂தோऽநுஜகா₃ம ஹ II

[ஆசாரியரான வால்மீகியிடமிருந்து அனைத்தையும் பயின்று அடக்கமுடைய சிஷ்யரான ப₄ரத்₃வாஜர் பூர்ணகும்ப₄த்தை எடுத்துக்கொண்டு வால்மீகியைப் பின்தொடர்ந்தார்.]

144. க: ஶ்ரீ: ஶ்ரிய: 358-5; 482-2. [ஸ்தோ-ர 12]

க: ஶ்ரீ: ஶ்ரிய: பரமஸத்த்வஸமாஶ்ரய: க: க: புண்ட₃ரீகநயந: புருஷோத்தம: க:I
கஸ்யாயுதாயுதஶதைககலாம்ஶகாம்ஶே விஶ்வம் விசித்ரசித₃சித்ப்ர-
விப₄ாக₃வ்ருத்தம் II

[திருவுக்கும் திருவாகியவன் யார்? ஶுத்₃த₄ஸத்வத்தை உடையவன் யார்? தாமரைக் கண்ணன் யார்? புருஷோத்தமன் யார்? எவனுடைய பல்லாயிரம் கோடி ப₄ாக₃ங்களின் ஒருபகுதியில் இவ்வுலகெல்லாம் விசித்திரமான சேதனா சேதனப் பிரிவுகளை உடையதாக இருக்கிறது?]

145. காந்தஸ்மிதா 358—1. 66—வது ப்ரமாணம் காண்க.

146. கால: கலயதாமஹம் 341—1. [கீ₃தை 10—30]

ப்ரஹ்லாத₃ஶ்சாஸ்மி தை₃த்யாநாம் கால: கலயதாமஹம் I
ம்ருகா₃ணாம் ச ம்ருகே₃ந்த்₃ரோऽஹம் வைநதேயஶ்ச பக்ஷிணாம் II

[அஸுரர்களுக்குள் ப்ரஹ்லாத3னுகவும் ஆகிறேன்; (துன்பம் விளைக்க) எண்ணுகிறவர்களுக்குள் (மரணத்துன்பத்தை விளைக்கும்) காலனுகிறேன் நான்; விலங்குகளுக்குள், ஸிலங்கரசனுகிற சிங்கமாகிறேன் நான்; பறவைகளுக்குள் க3ருட3னுகவும் ஆகிறேன் நான்.]

147. காலே ஶம்ஸதி 407—2. [ஸ்ரீகு3ண 19]

காலே ஶம்ஸதி யோக்3யதாம் சித3சிதோரந்யோந்யமாலிங்க3தோ:
பூ4தாஹங்க்ருதி பு3த்3தி4 பஞ்சகரணீ ஸ்வாந்தப்ரவ்ருத்தீந்த்3ரியை: |
அண்ட3ாநாவரணைஸ் ஸஹஸ்ரமகரோத்தாந் பூ4ர்பு4வஸ்ஸ்வர்வத:
ஸ்ரீரங்கே3ஶ்வரதே3வி தே விஹ்ருதயே ஸங்கல்பமாந: ப்ரிய: ||

[ஸ்ரீரங்கநாச்சியாரே! சேதநாசேதனங்கள் ஒன்றோடொன்று பிணைந்துகிடக்குமளவில், ஸ்ருஷ்டிக்குரிய பருவகாலம் வந்தவாறே, உம்முடைய விளையாட்டுக்குறுப்பாக, உமக்கினியவனான எம்பெருமான் ஸ்ருஷ்டிஸங்கல்பம் செய்பவனாய், ஐம்பெரும் பூதங்கள், அஹங்காரம், மஹான், ஐந்து ஞானேந்திரியங்கள், மனம், கர்மேந்திரியங்கள், ஏழு ஆவரணங்கள், பூ4ர்பு4வஸ்ஸுவர்லோகங்கள் ஆகியவற்றோடு கூடிய கணக்கற்ற அண்டங்களைப் படைத்தான்.]

148. கிமத்ர சித்ரம் 372—11. [ரா—யு 18—36]

கிமத்ர சித்ரம் த4ர்மஜ்ஞ லோகநாத3 ஸுக2ாவஹ |
யத் த்வமார்யம் ப்ரப4ாஷேத2ா: ஸத்வளாந் ஸத்பதே2 ஸ்தி3த: ||

[அறமறிந்தவரே! உலகின் தலைவரே! இன்பமளிப்பவரே! நன்னெஞ்சையுடையீராய் நல்வழியில் நடப்பவரான தேவரீர், நல்வார்த்தை பேசினது யாதொன்றுண்டோ (அது) தேவரீர் விஷயத்தில் ஆச்சர்யமோ?]

149. கிமிவ ஹி மது4ராணும் 208—2. [ஶாகுந்தலம் 1-17]

ஸரஸிஜமநுவித்3த4ம் ஶைவலேநாபி ரம்யம்
மலிநமபி ஹிமாம்ஶோர் லக்ஷ்ம லக்ஷ்மீம் தநோதி |
இயமதி4கமநோஜ்ஞா வல்கலேநாபி தந்வீ
கிமிவ ஹி மது4ராணும் மண்ட3நம் நாக்ருதீநாம் ||

[தாமரை பாசியால் சூழப்பட்டிருந்தபோதிலும் அழகாயுள்ளது; சந்திரனின் நடுவிலுள்ள அடையாளம் இருண்டிருந்தபோதிலும் (சந்திரனுக்கு) அழகைத் தருகிறது; (அதுபோலே) இந்த அழகியான ஶகுந்தலை மரவுரியை உடுத்திருந்தபோதிலும் மனத்தை மிகவும் ஈர்க்கிருள். இனிய பொருள்களுக்கு எது தான் அழகை அளிப்பதாயிராது?]

150. கேஶி ஶப்3த3—158-2 கேஶவ ஶப்3த நிஷ்பத்திப்ரக்ரியை

ப்ரமாணத்திற்கு மூலத்தைக்காண்க. [கேஶவ ஶப்3த3த்திற்கு 'கேஶியைக் கொன்றவன்' என்னும் பொருள் கிடைக்கும் வழியை இலக்கண விதி4களைக்கொண்டு காட்டுகிறது இவ்வாக்யம்.]

151. கோநு நாம 61—4 ?

கோநு நாம ஹரேர் விஷ்ணோ: தே3வதே3வஸ்ய ஶார்ங்கி3ண: ।
ஶ்ருண்வந் ஸ்மரந் வா கத2யந் த்ருப்திம் யாதி தி3வாநிஶம் ॥

[பாபங்களை அழிப்பவனும், ஸர்வவ்யாபியும் தேவதேவனும், சார்ங்கமென்னும் வில்லை ஆள்பவனுமான எம்பெருமானுடைய திருநாமத்தை இராப்பகலாகக் கேட்டாலும், நினைத்தாலும், சொன்னாலும் எவனுக்குத்தான் திருப்தி விளையும் ?]

152. கோऽஸி— 73—வது ப்ரமாணம் காண்க;

153. கௌஸல்யா லோக 206—8: 230-2; 335-3; 343—1; 347—8 [ரா-ஸு 38.56]

கௌஸல்யா லோகப4ர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ ।
தம் மமார்த்தே2 ஸுக2ம் ப்ருச்ச2 ஶிரஸா சாபி4வாத3ய ॥

[நல்ல மனமுடைய கௌஸல்யை உலகிற்கெல்லாம் நாத2னாக எவரைப் பெற்றெடுத்தாளோ, அவரை என்பொருட்டு க்ஷேமத்தை விசாரிப்பாய்; தலையால் வணங்குவாய்.]

154. கௌஸல்யா ஶுஶுபே4 122—2; 128—2; 130—5: 133—1. [ரா. பா-18—11]

கௌஸல்யா ஶுஶுபே4 தேந புத்ரேணாமிததேஜஸா ।
யதா2வரேண தே3வாநாமதி3திர் வஜ்ரபாணிநா ॥

[தேவர்களின் தலைவனாய் வஜ்ரத்தைக் கையில் ஏந்தியவனான இந்திரனாலே (அல்லது அந்த இந்திரனின் தம்பியாய் வஜ்ரசின்னத்தைக் கையிலுடைய வாமனனாலே) அதி3தி விளங்கியதைப்போலே, கௌஸல்யை அந்த அளவற்ற ஒளியுடைய ஸ்ரீராமனால் விளங்கினாள்.]

155. கௌஸல்யா ஸுப்ரஜா — 109-வது ப்ரமாணம் காண்க.

156. க்ருதக்ருத்யஶ்ச 200-5 [கீதை 15-20]

இதி கு3ஹ்யதமம் ஶாஸ்த்ரம் இத3முக்தம் மயாऽநக4 ।
ஏதத்3பு3த்3த்4வா பு3த்3தி4மாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பா4ரத ॥

[குற்றமற்றவனே! பரதகுலத்திலுதித்தவனே! இவ்வண்ணமாக இந்தப் புருஷோத்தம வித்யையாகிற பரமரஹஸ்யமான ஶாஸ்த்ரம், என்னால் (உனக்கு) உபதே3ஶிக்கப்பட்டது. இதை அறிந்து, என்னை அடைவதற்கு வேண்டிய அறிவினைத்தையும் பெற்றவனாகிறான்; அதற்குச் செய்யவேண்டியதனைத்தையும் செய்தவனாகிறான்.]

157. க்ருதக்ருத்யா: 200-6; 205-6 [இதிஹாஸஸமுச்சயம் 7-38]

ப்ராயஶ: பாபகாரித்வாந் ம்ருத்யோருத்3விஜதே ஜந: ।
க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதி2ம் ॥

[பெரும்பாலும், பாபம் செய்பவனாயிருப்பதாலேயே மனிதன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறான். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் மரணத்தைப் ப்ரியனை விருந்தாளியைப்போலே எதிர்பார்க்கிறார்கள்.]

158. க்ருதாநுகாரா 478-2; 502-4 [கிராதார்ஜுநீயம் 4-13]

க்₃ருதாந் பஶூநாம் ஸஹஜந்மபந்து₄தாம்
க்₃ருஹாஶ்ரயம் ப்ரேம வநேஷு பி₃ப்₄ரத: |
த₃த₃ர்ஶ கோ₃பாந் உ.பதே₄நு பாண்ட₃வ:
க்ருதாநுகாராநிவ கோ₃பி₄ரார்ஜவே ||

[பிறந்ததுமுதல் பசுக்களுக்கு உறவினராயிருப்பவரும், வீட்டிலிருக்கும் அன்பைக் காட்டில் கொண்டவரும், இவர்களுடைய வெகுளித்தனத்துடன் கூடிய செயல்களைப்பார்த்துப் பசுக்களால் அனுகாரம் செய்து பரிஹஸிக்கப்பெற்றவர்களுமான இடையர்களை அர்ஜுனன் பசுக்களின் பின்னல் பார்த்தான்.]

159. க்ருபயா பர்ய 176-9; 180-5; 317-3 [ரா-ஸு 38-34, 35]

ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி₄: |
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க₃த: ||
ஸ தம் நிபதிதம் பூ₄மௌ ஶரண்ய: ஶரணாக₃தம் |
வத₄ார்ஹமபி காகுத்ஸ்த₂: க்ருபயா பர்யபாலயத் ||

[அந்தக் காகாஸுரன், தந்தையினுலும், (தாயினுலும்,) மஹர்ஷிகளுடன் கூடிய தே₃வர்களாலும் கைவிடப்பட்டவனாய், மூன்று உலகங்களையும் சுற்றித் திரிந்து அந்த ராமனையே ஶரணமடைந்தான். ஶரணமடைந்தவனும், பூமியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத்தகுந்தவனாயிருந்தபோதிலும், ஶரணமடையத்தகுந்தவனான ஸ்ரீராமபிரான் (தன்) அருளாலே காப்பாற்றினான்.]

160 க்ருபா காப்யுபஜாயதே 31-9 [அஹிர்பு₃த்₄ந்ய14—28]

ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே₂ ப்₄ராம்யமாணே ஸ்வகர்மபி₄: |
ஜீவே து₃:க்கா₂குலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே ||

[இவ்வண்ணமாக ஸம்ஸாரமாகிற சக்கரத்தில் தன் கர்மங்களாலே சுழற்றப்படுபவனாய், ஜீவன் துன்புறுகையில், அவனைக்கண்டு விஷ்ணுவுக்கு (காரணம் இன்னது என்று சொல்லமுடியாத) நிர்ஹேதுக கிருபையொன்று உண்டாகிறது.]

161. க்ருஷிர் பூ₄வாசக: 4—1; 63—2. ?

க்ருஷிர் பூ₄வாசக: ஶப்₃தோ₃ ணஶ்ச நிர்வ்ருதிவாசக: |
விஷ்ணுஸ் தத்₃பா₄வயோகா₃ச்ச க்ருஷ்ண இத்யபி₄தீ₄யதே ||

['க்ருஷி' ஶப்₃த₃ம் (க்ருஷி விஷயமான) பூ₄மியைச் சொல்லும் சொல். 'ண:' என்பது ஆனந்தத்தைக் குறிக்கும் சொல். ஆநந்தத்துக்கு விளைநிலமாயிருக்கும் அத்தன்மையை உடையவனாகையால் விஷ்ணுவானவர் 'க்ருஷ்ணன்' என்று சொல்லப்படுகிறார்.]

162. க்ருஷ்ண ஏவ 176—5. [பா₄ர—ஸபா₄ 38—23]

க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: |
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விஶ்வம் சராசரம் ||

[க்ருஷ்ணனேதான் உலகங்களுக்கு ஸ்ருஷ்டி ஸ்தி2தி லயகாரணமாவான்; அசைவனவும், அசையாதனவுமான உலகு க்ருஷ்ணனுக்காகவே ஏற்பட்டது.]

163. க்ருஷ்ண நாம 176—1. [வி-பு. 5—13—52]

க்ருஷ்ண: ஶரச்சந்த்3ரமஸம் கௌமுதீ3ம் குமுத3ாகரம் ।
ஜகௌ3 கோ3பீஜநஸ்த்வேகம் க்ருஷ்ணநாம புந: புந: ॥

[ராஸக்ரீடை3யின் போது) கண்ணன் ஶரத்கால சந்திரனையும், சந்திரனின் ஒளியையும், குமுதம் மலர்ந்த நீர்நிலைகளையும் பற்றிப் பாடினான். கோபிகளோ வெனில் கண்ணனின் நாமத்தையே மறுபடியும் மறுபடியும் பாடினார்கள்.]

164. க்ருஷ்ணப3லா:. 355-5; 510-3; 528—2. [ப4ார—த்3ரோண 183—24]

க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணப3லா: க்ருஷ்ணநாத2ாஶ்ச பாண்ட3வா: ।
க்ருஷ்ண: பராயணம் சைஷாம் ஜ்யோதிஷாமிவ சந்த்3ரமா: ॥

[பாண்டவர்கள் க்ருஷ்ணனை ஆதாரமாகவும், அவனையே ப3லமாகவும், அவனையே ஸ்வாமியாகவும் கொண்டவர்கள்; நக்ஷத்திரங்களுக்குச் சந்திரன்போலே அவர்களுக்கு க்ருஷ்ணனே மேலான கதியாவான்.]

165. க்ருஷ்ணம் த4ர்மம். 47—1; 198—1; 202—4; 204-5; 205—3; 207—1; 480—3; 481—1; 493—4; 503—2 [ப4ார—வந 71—123]

யே ச வேத3விதோ3 விப்ரா யே சாத்4யாத்மவிதோ3 ஜநா: ।
தே வித3ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த4ர்மம் ஸநாதநம் ॥

[வேதமறிந்த ப்ராஹ்மணர்களும், ஆத்மஸ்வரூபமறிந்த பெரியோர்களும் மஹாத்மாவான க்ருஷ்ணனையே பழமையான தர்மமாக அறிகிறார்கள்.]

166. க்ருஷ்ணராமௌ 191-1. [வி-பு 5-19-17, 21]

க்ருஷ்ணராமௌ முத3ா யுக்தௌ மாலாகாரக்3ருஹம் க3தௌ ।...
ப்ரஸாத3பரமௌ நாதௌ2 மம கே3ஹமுபாக3தௌ ।
த4ந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந: ॥

[ப3லராம க்ருஷ்ணர்கள் மிக உகப்புடன் மாலாகாரர் மாளிகைக்குச் சென்றனர்;...''அன்பில் விஞ்சியவர்களாய், ஸ்வாமிகளாயுள்ள இவ்விருவரும் என் குடிசைக்கு எழுந்தருளினர்; த4ன்யனான நான் அவர்களை அர்ச்சிக்கக்கடவேன்'' என்று மாலையை விற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர் சொன்னார்.]

167. க்ருஷ்ணாநுஸ்மரணம் 92-1 [வி-பு 2-6-39]

ப்ராயஶ்சித்தாந்யஶேஷாணி தப:கர்மாத்மகாநி வை ।
யாநி தேஷாம் அஶேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம் ॥

[தவம், கர்மம்] முதலிய எல்லாப் பிராயச்சித்தங்களைக் காட்டிலும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தன்னை அடியவனாக நினைப்பது சிறந்தது.]

168 க்ருஷ்ணே நமே 72-3; 78-1; 279-2; 293-4. [ப₄ார-உத்₃ 70-48]

த்₃யௌ: பதேத் ப்ருதி₂வீ ஶீர்யேத் ஹிமவாந் ஶகலீப₄வேத் ।
ஶுஷ்யேத் தோயநிதி₄: க்ருஷ்ணே! ந மே மோக₄ம் வசோ ப₄வேத் ॥

[க்ருஷ்ணையே! ஆகாயம் கீழ்விழக்கூடும்; பூமி சுக்கலாகக்கூடும்; ஹிமாசல பர்வதம் தூளாகக்கூடும்; ஸமுத்₃ரம் வற்றக்கூடும்; என்னுடைய வார்த்தை வீணாகாது.]

169. க்ரோத₄மாஹாரயத் 229-2 [ரா—ஆ 24-34]

க்ரோத₄மாஹாரயத் தீவ்ரம் வதா₄ர்த்த₂ம் ஸர்வரக்ஷஸாம் ।
து₃ஷ்ப்ரேக்ஷ: ஸோऽப₄வத் க்ருத்₃தோ₄ யுகா₃ந்தாக்₃நிரிவ ஜ்வலந் ॥

[(ராமபிரான்) எல்லா ராக்ஷஸர்களையும் கொல்வதற்காகக் கடுங்கோபத்தை வரவழைத்துக்கொண்டார். (அப்படிக்) கோபங்கொண்ட அவர் ப்ரளயாக்₃னிபோல் ஜ்வலிப்பவராய், காணவொண்ணாதவராயிருந்தார்.]

## க₂

170. க₂ஸ்த₂ ஏவ 108 வது ப்ரமாணம் காண்க.

## க₃

171. க₃ச்ச₂ாநுஜாநாமி 229-7; 233-5; 268-1; 373-4; 475-4; [ரா-யு-59-144]

க₃ச்சா₂நுஜாநாமி ரணார்த்தி₃தஸ் த்வம் ப்ரவிஶ்ய ராத்ரிஞ்சரராஜ! லங்காம் ।
ஆஶ்வாஸ்ய நிர்யாஹி ரதீ₂ ச த₄ந்வீ ததா₃ ப₃லம் த்₃ரக்ஷ்யஸி மே ரத₂ஸ்த₂: ॥

[ராக்ஷஸராஜனே! நீ யுத்₃த₄த்தில் களைப்படைந்துவிட்டாய்; திரும்பிப்போ; நானே அனுமதிக்கிறேன்: லங்கையில் நுழைந்து, களைப்பாறிக்கொண்டு, ரத₂த்தையும் வில்லையும் கொண்டு திரும்பிவா. ரத₂த்திலிருந்துகொண்டு அப்போது என் ப₃லத்தைப் பார்ப்பாய்.]

172. க₃ஜம் வா 832-4; 846-2 [ரா-ஆ 60-20]

க₃ஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்₄ரம் வாபி வராநநா ।
நாஹாரயதி ஸந்த்ராஸம் பா₃ஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா ॥

[ராமனுடைய தோள்நிழலை அண்டியிருக்கையாலே, யானையையோ, சிங்கத்தையோ, புலியையோ கண்டால் சீதாபிராட்டி மலர்ந்த முகத்தையுடையவளானாள்; பயமடையவில்லை.]

173. க₃ஜஸிம்ஹ 405-2; 406-7 [ரா-பா₃ 48-2,3]

க₃ஜஸிம்ஹக₃தீ வீரௌ ஶார்தூ₃லவ்ருஷபோ₄பமௌ ।
புண்ட₃ரீக விஶாலாக்ஷௌ க₂ட்க₃தூணீத₄நுர்த₄ரௌ ॥

[(ராமலக்ஷ்மணர்கள் இருவரும்) யானைபோலும், சிங்கம் போலும், புலி போலும், ஏறுபோலும் நடப்பவர்கள். தாமரைத்தடங்கண்ணினர்; கத்தியும், அம்பருத்தூணியும், வில்லும் த₄ரித்தவர்.]

174. க்ருத: ஸ்வம் 158-5 [ப₄ார-மௌஸல 8-30]

க்ருத்வா ப₄ாராவதரணம் ப்ருதி₂வ்யா: ப்ருது₂லோசந: ।
மோஹயித்வா ஜக₃த்ஸர்வம் க₃த: ஸ்வம் ஸ்த₂ாநமுத்தமம் ॥

[தாமரைத்தடங்கண்ணன் பூ₄மியின்ப₄ாரத்தைப்போக்கி, உலகனைத்தையும் மயங்கச்செய்து தனது மேலான இருப்பிடத்திற்குச் சென்றான்.]

175. க்ருதாந் பரமநாம் 158-வது ப்ரமாணம் காண்க.

176. க₃ர்ப்ப₄பூ₄தா: 388-1 [ரா-ஆ 1-21]

ந்யஸ்ததண்ட₃ா வயம் ராஜந்! ஜிதக்ரோதா₄ ஜிதேந்த்₃ரியா: ।
ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஶஶ்வத் க₃ர்ப்ப₄பூ₄தாஸ் தபோத₄நா: ॥

[அரசரே! (ராக்ஷஸர்கள் விஷயத்தில் சபித்தல் முதலிய) தண்டனைகளை விட்டிருப்பவர்களாகவும், கோபத்தை வென்றிருப்பவர்களாகவும், இந்த்ரியங்களை ஜயித்திருப்பவர்களாகவும், தவத்தையே த₄னமாகக்கொண்டவர்களாகவும், (உமக்கு) கர்ப்பம் போன்றவர்களாகவுமுள்ள நாங்கள் உம்மால் எப்போதும் காப்பாற்றத் தக்கவர்கள்.]

177. கு₃ணதுங்க₃தயா 500-1 [ர-ஸ்த 2-104]

கு₃ணதுங்க₃தயா தவ ரங்க₃பதே ப்₄ருஶநிம்நமிமம் ஜநமுந்நமய ।
யத₃பேக்ஷ்யமபேக்ஷிதுரஸ்ய ஹி தத்பரிபூரணமீஶிதுரீஶ்வரதா ॥

[ஸ்ரீரங்க₃நாத₂ரே! மிகத்தாழ்ந்த இவ்வடியேனை தேவரீருடைய மிகவுயர்ந்த கு₃ணங்களாலே நிரவியருளவேணும். யாசகனை அடியேன் விரும்பியதை நிறைவேற்றுவதல்லவோ ஸ்வாமிக்கு ஸ்வாமித்வத்தை நிரம்பெறச்செய்யும்.]

178. கு₃ணவாந் 244-5; 245-5 [ரா—பா₃ 1-2]

கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே கு₃ணவாந் கஶ்ச வீர்யவாந் ।
த₄ர்மஜ்ஞஶ்ச க்ருதஜ்ஞஶ்ச ஸத்யவாக்யோ த்₃ருட₄வ்ரத: ॥

[வால்மீகி- "இப்போது இவ்வுலகில் எவன் ஶீலகு₃ணத்தை உடையவன்? எவன் வீர்யகு₃ணத்தை உடையவன்? எவன் (ஶரணாக₃தி) த₄ர்மத்தை அறிந்தவன்? (அடியார்) செய்த சிறிதளவு நன்மையையும் பெரியதாகக் கொள்பவன் எவன்? உண்மையேயுரைப்பவன் எவன்? (தஞ்சமென்றடைந்தவர்களைக் காப்பதாகிற) உறுதியான விரதத்தைக் கொண்டவன் எவன்?]

179. கு₃ணநாமயுதைக 150-2; 370-8 [வராஹ 73-94]

சதுர்முகா₂யுர் யதி₃ கோடிவக்த்ரோ ப₄வேந்நர: க்வாபி விஶுத்₃த₄சேதா: ।
ஸ தே கு₃ணநாமயுதைகதே₃ஶம் வதே₃ந்ந வா தே₃வவர ப்ரஸீத₃ ॥

[பலப்ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனாய், கோடிக்கணக்கான முகங்களை உடையவனாய், மிகவும் ஶுத்₃த₄மான மனத்தையுடையவனான ஒருமனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய கு₃ணங்களில் பதினாயிரத்தில் ஒருபங்கைச் சொல்லுவானோ மாட்டானோ அறியோம். தே₃வர்களில் சிறந்தவனே! அருள்புரியவேண்டும்.]

180. கு₃ணாநாமாகரோ 370—7 [ரா-கி 15—21]

தா₄தூநாமிவ ஶைலேந்த்₃ரோ கு₃ணாநாமாகரோ மஹாந் ।

[ஒரு சிறந்த மலை தா₄துக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதுபோல், ஸ்ரீராமபிரானும் கு₃ணங்களுக்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவர்.]

181. கு₃ணைர்த₃ஶரதோ₂பம: 302-2; 307-4; 327-1; 369-1 [ரா-அ 1-9]

ஸஹி வீர்யோபபந்நஶ்ச ரூபவாநநஸூயக: ।

பூ₄மாவநுபம: ஸூநுர் கு₃ணைர் த₃ஶரதோ₂பம: ॥

[அந்த இராமபிரான் வீர்யமுடையவன்; வடிவழகுடையவன்; (பிறரிடம்) பொறாமையற்றவன்; உலகில் ஒப்பற்ற பிள்ளை; கு₃ணங்களில் (தந்தையான) த₃ஶரத₂ரை ஒத்தவன்.]

182. கு₃ணைர்தா₃ஸ்ய 369-1; 379-1; 380-3; 388-1; 389-2 [ரா-கி 4-12]

அஹமஸ்யாவரோ ப்₄ராதா கு₃ணைர் தா₃ஸ்யமுபாக₃த: ।

[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய கு₃ணங்களால் அடிமைப்பட்டவன்.]

183. கு₃ரவ: கிம் கரிஷ்யந்தி 146-3; 151-4 [வி-பு 5-18-22]

கு₃ரூணமக்₃ரதோ வக்தும் கிம் ப்₃ரவீஷி ந ந: க்ஷமம் ।

கு₃ரவ: கிம் கரிஷ்யந்தி த₃க்₃தா₄நாம் விரஹாக்₃நிநா ॥

[பெரியவர்களுக்கு முன்னால் இவ்விஷயத்தை நம்மால் சொல்ல முடியாதென்று சொல்லுகிறாய்? பிரிவாகிற நெருப்பால் வெந்துகிடக்கும் நம்மை நம் பெரியவர்கள் என்ன செய்து விடுவார்கள்?]

184. கோடராக்₃நிரிவ 554-1 [ரா-அ 85-17]

அந்தர்தா₃ஹேந த₃ஹந: ஸந்தாபயதி ராக₄வம் ।

வநதா₃ஹாபி₄ஸந்தப்தம் கோடரஸ்தோ₂(அ)க்₃நிரிவ பாத₃பம் ॥

[காட்டுத்தீயால் வெந்த மரத்தை உள்ளே மறைந்திருக்கும் நெருப்பு சுட்டெரிப்பதுபோல், ராமவிரஹ நெருப்பு ரகு₄குலத்தோன்றலான ப₄ரதனை உள்ளிருந்து எரிக்கிறது.]

185. கோ₃பஸ்த்ரீ 566-1 ?

கோ₃பஸ்த்ரீ குலமதி₄ கோ₃த₃யோபதி₃ஷ்டம்

க்ருஷ்ணாக்₂யம் ப்ரணவமிவாதி₄காரிஜப்யம் ।

தத் த்ரிம்ஶத்பரிமிதபத்ய - மார்க்கஶீர்ஷ—
ப்ராரப்தோத்ஸவஸமயோசிதம் ப்ரஸித்தம் ॥

[திருவாய்ப்பாடியில் ஆய்ச்சியரின் பாவனையில் ஆண்டாளால் உபதேஶிக்கப்பெற்றதாய், கண்ணனின் பெயரைத் தன்னுள் கொண்டதாய், முப்பது பாடல்கள் கொண்டதாகையாலே, மார்கழியில் தொடங்கப்படும் திருப்பள்ளியெழுச்சி உத்ஸவத்திற்குப் பொருத்தமானதாய், பிரசித்தமானதான திருப்பாவை ப்ரணவம்போலே ப்ரபந்நாதிகாரிகள் அனைவராலும் அநுஸந்திக்கத்தக்கது.]

186. கோபாலோ 429-2; 434-2; 441-2 [வி-பு 5-40]

அயம் ஸ கத்யதே ப்ராஜ்ஞை: புராணார்த்தவிஶாரதை: ।
கோபாலோ யாதவம் வம்ஶம் மக்நமப்யுத்தரிஷ்யதி ॥

[(பழைய) புராணச்செய்திகளை நன்கறிந்த அறிவாளிகளால், "(யயாதிசாபத்தாலே) தாழ்ந்துபோன யதுவம்ஶத்தை உயர்த்தப்போகிறவன், கோபாலனை இவனே" என்று கூறப்படுகிறான்.]

187. கோபீபரிவ்ருதோ 19—3; 556—1 [வி—பு 5—13—2]

கோபீபரிவ்ருதோ ராத்ரிம் ஶரச்சந்த்ரமநோரமாம் ।
மாநயாமாஸ கோவிந்தோ ராஸாரம்பரஸோத்ஸுக: ॥

[ராஸக்ரீடை (குரவைக்கூத்து) ரஸத்தை அநுபவிக்க விரும்பியவனும், கோபிகளால் சூழப்பெற்றவனுமான கோவிந்தன் ஶரத்காலசந்திரனால் அழகியதாய் விளங்கும் இரவை மதிக்கலுற்றான்.]

188. கோபீஜந 385-2; 343-2; 345-5; 347-7?

கோபீஜநவல்லப:
[ஆய்ச்சிகளுக்கு இனியவன்]

189. கோவர்த்தநோ 21-2 [அதிமாநுஷ 49]

கோவர்த்தநோ கிரிவரோ யமுநாநதீ ஸா
ப்ருந்தாவநம் ச மதுரா ச புரீ புராணீ ।
அத்யாபி ஹந்த ஸுலபா: க்ருதிநாட் ஜநாநாம்
ஏதே பவச்சரணசாரஜுஷ: ப்ரதேஶா: ॥

[மலைகளில் சிறந்த கோவர்த்தனமலையும், நதிகளில் சிறப்புற்ற அந்த யமுநாநதியும், (காடுகளில் சிறந்த) ப்ருந்தாவனமும், பழம்பெருமைபெற்ற சிறந்த நகரான வடமதுரை நகரும், (ஆகிய) தேவரீருடைய திருவடிகள் நடையாடிய இவ்விடங்கள் நற்பேறு பெற்றவர்களுக்கு இன்றும் அடைதற்கு எளிதாய் உள்ளன.]

190. கோவிந்ததாமோ 47-7; 161-2; 163—3; 166—1 [க்ருஷ்ணகர்ணாம்ருதம் 2—59]

விக்ரே(ரீ)துகாமா கில கோபகந்யா முராரிபாதார்ப்பித சித்தவ்ருத்தி: ।
தத்யாதிகம் மோஹவஶாதவோசத் கோவிந்த தாமோதர மாதவேதி ॥

[முராரியான கண்ணனின் திருவடிகளில் நெஞ்சுசெலுத்தியவளான ஓர் ஆய்ச்சி தயிர் வெண்ணெய் நெய் முதலானவற்றைத் தெருவில் கூவி விற்கவிரும்பியவளாய், கண்ணனிடம் மயக்கத்தாலே அவற்றை 'கோ3விந்த3ா, தா3மோத3ரா, மாத4வா' என்று அழைத்தாள்.]

191. கோ3ரஷ்ட2ாத்4யக்ஷே 509-3 [அமர 3—3—91]

கோ3ஷ்ட2ாத்4யக்ஷேऽபி கோ3விந்த3: |

[மாட்டுக்கொட்டிலின் தலைவனை இடையனையும் 'கோ3விந்த3ன்' எனும் சொல் குறிக்கும்.]

192. [illegible] 184—வது ப்ரமாணம் காண்க.

## க4

193. க்4ருதவத்ய 43—3 ?

க்4ருதவத்ய க்ஷீரவத்ய: ப3பூ4வு: புத்ரஜந்மத: |
யத3ா ச க்ருஷ்ண உத்3பூ4தஸ் தத3ாப்ரப்4ருதி மே வ்ரஜே |
யாவத்3து3க்3த4ம் ஸமுத்3பூ4தம் தாவதே3வ க்4ருதம் ப4வேத் ||

[என்னுடைய ஆய்ப்பாடியில் கண்ணன் பிள்ளையாகப் பிறந்ததிலிருந்து (பசுக்கள்) நெய்யும் பாலும் நிறைந்து விளங்கின. எவ்வளவு பால் கிடைத்ததோ அவ்வளவு நெய்யும் கிடைத்தது. (நாழிப்பாலிலிருந்து நாழிநெய் கிடைத்தது என்றபடி.)]

## ச

194. சசால சாபஞ்ச 229—5; 233—6; 460—2; 473—4 [ரா—யு 59—139]

யோ வஜ்ர - பாதாஶநி - ஸந்நிபாதாத் ந சுக்ஷுபே4 நாபி சசால ராஜா |
ஸ ராமபா3ணாபி4ஹதோ ப்4ருஶார்த்த: சசால சாபஞ்ச முமோச வீர: ||

[எந்த ராவணன், வஜ்ரத்தின் அடியினாலும், இடி விழுவதாலும் கலங்காமலும், அசையாமலுமிருந்தானோ, அந்த வீரன் ராம பா3ணத்தால் அடிபட்டு, மிகவும் வருந்தித் தள்ளாடினான்; வில்லையும் கைவிட்டான்.]

195. சண்ட3ப்ரசண்டௌ3 280—2 [பாஞ்சராத்ரம்]

சண்ட3ப்ரசண்டௌ3 ப்ராக்3த்3வாரே யாம்யே ப4த்3ரஸுப4த்3ரகௌ |
வாருண்யாம் ஜயவிஜயௌ ஸௌம்யே தா4த்ருவிதா4த்ருகௌ ||
குமுத3: குமுத3ாக்ஷஸ்ச புண்ட3ரீகோऽத2 வாமந: |
ஶங்குகர்ண: ஸர்ப்பநேத்ரஸ் ஸுமுக2: ஸுப்ரதிஷ்டி2த: ||

[சண்டனும், ப்ரசண்டனும் கிழக்கு வாசலிலும், ப4த்3ரனும், ஸுப4த்3ரனும் தெற்குவாசலிலும், ஜயவிஜயர்கள் மேற்குவாசலிலும், தா4தாவும், விதா4தாவும் வடக்கு வாசலிலும் (எம்பெருமானுக்கு த்3வாரபாலகர்கள்). குமுத3ன், குமுத3ாக்ஷன், புண்ட3ரீகன், வாமனன், ஶங்குகர்ணன், ஸர்ப்பநேத்ரன், ஸுமுக2ன், ஸுப்ரதிஷ்டி2தன் ஆகியவர்கள் (மற்ற ஆவரணங்களில்) த்3வாரபாலகர்கள்.]

196. சதுர்க்கதி: 395-2; 402-1; 405-1; 406—6 [விஷ்ணுஸஹஸ்ரநாமம் 774]

சதுர்க்கதி:

[நாலுவகையான நடையை உடையவன்.]

197. சதுர்முகாயு:- 179-வது ப்ரமாணம் காண்க.

198. சந்த்ரகாந்தாநநம்-15 வது ப்ரமாணம் காண்க.

199. சந்த்ரபாஸ்கர 48-6 ?

சந்த்ரபாஸ்கர வர்ச்சஸம

[வெய்யிலிலே நிலவை ஊட்டினாற்போலேயிருக்கும் ஒளியுடையவனை எம் பெருமானை]

200. சந்த்ரமா மநஸோ 387 - 2. [பு ஸூ 1-14]

சந்த்ரமா மநஸோ ஜாத: சக்ஷோ: ஸூர்யோ அஜாயத |

முகாதிந்த்ரஶ்சாக்நிஶ்ச ப்ராணாத்வாயுரஜாயத ||

[(பரமபுருஷனுடைய) மனத்தினின்றும் சந்திரன் உண்டானான்: கண்ணி லிருந்து ஸூர்யன் உண்டானான்; முகத்திலிருந்து இந்திரனும் அக்னியும் பிறந்தார்கள்; பிராணனிலிருந்து வாயு பிறந்தான்.]

201. சிராய மே 386-1; 389-5. [ஸ்தோ-ர 24.]

நிமஜ்ஜதோऽநந்த பவார்ணவாந்தஶ்-

சிராய மே கூலமிவாஸி லப்த: |

த்வயாபி லப்தம் பகவந்நிதாநீ-

மநுத்தமம் பாத்ரமிதம் தயாயா: ||

[(தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவினாலும்) அளவற்றவனான எம் பிரானே! ஸம்ஸாரமாகிய கடலினுள்ளே நெடுநாள் அழுந்துகிற எனக்கு, கரைபோல் நீ கிடைத்தாய்; பகவானே! உன்னாலும், இப்பொழுது, (உன்) அருளுக்கு உயர்ந்த பாத்திரமாகிய இந்த வஸ்து (அடியேன்) அடையப்பட்டது.]

202. சைத்ர : ஸ்ரீமாந் 25-1; 39-2; 47-2; 50-3. [ரா-அ 3-4]

சைத்ர: ஸ்ரீமாநயம் மாஸ: புண்ய: புஷ்பிதகாநந: |

யௌவராஜ்யாய ராமஸ்ய ஸர்வமேவோபகல்ப்யதாம் ||

[(முதன்மைபெற்ற) இந்தச் சித்திரை மாதமானது மாதங்களில் சிறப்புற்றதாய், பரிசுத்தமானதாய் (பாவனமாய்), மலர்ந்தபுஷ்பங்கள் நிறைந்த காட்டை உடையதாய் (இனியதாய்) உள்ளது. (ஆகையால், இந்தக்காலத்தில்) ஸ்ரீராமனுடைய யுவராஜபட்டாபிஷேகத்திற்குரிய எல்லாக் காரியங்களும் செய்யப்படட்டும்.]

203. சோரேணாத்மா 243-4; 245-1; 247-1. [ப4ார-உத் 42-35]

யோऽந்யதா2 ஸந்தமாத்மாநமந்யதா2 ப்ரதிபத்3யதே ।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥

[ப4க3வானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது?]

## ச2

204. சி2ந்நம் பி4ந்நம் 19-4; 149-3. [ரா-யு 94-22]

சி2ந்நம் பி4ந்நம் ஶரைர் த3க்3த4ம் ப்ரப4க்3நம் ஶஸ்த்ர பீடி3தம் ।
ப3லம் ராமேண த3த்3ருஶு: ந ராமம் ஶீக்4ரகாரிணம் ॥

[ராக்ஷஸஸேனையானது அம்புகளால் வெட்டப்பட்டும், பிளக்கப்பட்டும், எரிக்கப்பட்டும், நன்கு உடைக்கப்பட்டும், துன்புறுத்தப்பட்டும் கிடப்பதை அனைவரும் கண்டனர். மிகவேக3மாகக் காரியம் செய்யும் ராமனைக் கண்டாரில்லை.]

## ஜ

205. ஜக3த் வ்யாபார 543-1; 545-1; [ப்3ரஹ்மஸூ 4-4-17]

ஜக3த்3வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாத3ஸந்நிஹிதத்வாச்ச

[(முக்தனுடைய ஐஶ்வர்யம்) ஜக3த்3வ்யாபாரமில்லாததே (ப்3ரஹ்மானுப4வ மாத்ரமே); ப்3ரஹ்மத்தைக் குறித்தே ஜக3த்3வ்யாபாரம் சொல்லப்படுவதால்; (ஜக3த்3வ்யாபாரத்தில் முக்தனுக்கு) ஸந்நிதா4னம் இல்லாததாலும்.]

206. ஜக3த் ஸஶைலம் 241-4; 358-2. [ரா-ஆ 64-7]

புரேவ மே சாருத3தீமநிந்தி3தாம்
தி3ஶந்தி ஸீதாம் யதி3 நாத்3ய மைதி2லீம் ।
ஸதே3வக3ந்த4ர்வமநுஷ்யபந்நக3ம்
ஜக3த் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம் ॥

[மிதி2லா ராஜகுமாரியாய், அழகிய பல்வரிசையை உடையவளாய், குற்றமற்றவளான ஸீதையை முன்போலவே எனக்கு இன்று காட்டிக்கொடுக்கவில்லையானால், தே3வர், க3ந்த4ர்வர், மனிதர், பாம்புகள் ஆகியவைகளோடும் மலைகளோடும் கூடிய உலகைத் தலைகீழாக்கிவிடுவேன் நான்.]

207. ஜநகாநாம் 211-3, 215-4; 320-4 [ரா-பா3 64-7]

ஜநகாநாம் குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே ஸுதா ।
ஸீதா ப4ர்த்தாரமாஸாத்3ய ராமம் த3ஶரத2ாத்மஜம் ॥

[என் பெண் ஸீதை த3ஶரத2ர்பிள்ளை ராமனைக் கணவனாக அடைந்து ஜனககுலத்தின் புகழை விளங்கச் செய்யப் போகிறாள்.]

த்வத்₃ஜ்ஞாநஶக்தி கருணாஸு ஸதீஷு நேஹ
பாபம் பராக்ரமிதுமர்ஹதி மாமகீநம் ||

[மிகவும் பாவமுடையவனாயிருந்தபோதிலும், ஶரணாக₃தன் என்னும் பெயரைச் சுமந்து கொண்டிருக்கும் அடியேனை உபேக்ஷிப்பது ஸர்வேஶ்வரனான உனக்குத் தகாது. உன்னுடைய ஜ்ஞானம், ஶக்தி, கருணை ஆகிய கு₃ணங்கள் இருக்கும் போது இங்கு என்னுடைய பாபம் வீறுபெறமாட்டாது காண்!]

218. ஜ்ஞாநீ த்வாத்மைவ 111-வது ப்ரமாணம் காண்க.

219. ஜ்ஞாநேந ஹீந: — 96-வது ப்ரமாணம் காண்க.

220. ஜ்யாகிண 322-2; 346-4. [ஸ்தோ—ர 38]

சகாஸதம் ஜ்யாகிணகர்க்கஶைஶ்ஶுபை₄ஶ்
சதுர்ப்பி₄ராஜாநுவிலம்பி₃பி₄ர் பு₄ஜை: |
ப்ரியாவதம்ஸோத்பலகர்ணபூ₄ஷண -
ஶ்லத₂ாலகாப₃ந்த₄விமர்த்த₃ஶம்ஸிபி₄: ||

[நாண்தழும்பேறிக் கரடுமுரடாயிருப்பவையும், சுப₄மானவையும், முழந்தாள் கள் வரை தொங்குகின்றவையும், பிராட்டியின் திருச்செவிமலரான நீலோத் பலபுஷ்பமென்ன, கர்ணபூ₄ஷணமென்ன, அலைந்த திருக்குழல்கற்றையென்ன இவை அமுந்தியிருப்பதைத் தெரிவிப்பவையுமான நான்கு பு₄ஜங்களாலும் ப்ரகாசிப்பவனாகவும்.]

221. ஜ்யோதிஷ்டோமேந 90-1; 445-2; 456-5. [யஜுஸ்ஸம்ஹிதை 2-5-5]

ஸ்வர்க்க₃காமோ ஜ்யோதிஷ்டோமேந யஜேத
[ஸ்வர்க்க₃த்தில் விருப்பமுள்ளவன் ஜ்யோதிஷ்டோமயாக₃ம் செய்யக்கடவன்.]

## த

222. தச்சித்தவிமலா 140-1. [வி. பு 5-13-20, 21, 22]

காசித₃ாவஸத₂ஸ்யாந்தே ஸ்தி₂த்வா த்₃ருஷ்ட்வா ப₃ஹிர்கு₃ரும் |
தந்மயத்வேந கோ₃விந்த₃ம் த₃த்₄யௌ மீலிதலோசநா ||
தச்சித்தவிமலாஹ்லாத₃க்ஷீணபுண்யசயா தத₂ா |
தத₃ப்ராப்திமஹாது₃:க்க₂விலீநாஶேஷபாதகா ||
சிந்தயந்தீ ஜக₃த்ஸூதிம் பரப்₃ரஹ்மஸ்வரூபிணம் |
நிருச்ச்₂வாஸதயா முக்திம் க₃தாந்யா கோ₃பகந்யகா ||

[ஒரு கோ₃பி (கண்ணனின் குழலோசையைக் கேட்டு) வீட்டுவாசலில் வீட்டுப் பெரியவர்களைப் பார்த்து (மேலே செல்ல முடியாமல்) வாசலிலேயே நின்று கண்ணை மூடிக்கொண்டு கோ₃விந்த₃னையே தியானித்தாள். அவனை நினைத்ததால் உண்டான துன்பங்கலக்காத ஆனந்தத்தால் புண்ணியமனைத்தும் அனுபவித்துக்

கழித்தாள். அவனை நேரில் சென்று அடைய முடியாத பெருந்துன்பத்தால் பாபமனைத்தும் அனுப₄வித்துக் கழித்தாள். ஜக₃த்காரணனாய், பரப்₃ரஹ்மமான அவனை இவ்வண்ணம் நினைப்பதாலேயே (ப்ராரப்₃த₄கர்மம் அனைத்தும் கழியப் பெறுகையாலே) மூச்சடங்கப்பெற்று அந்த கோ₃பி மோக்ஷமடைந்தாள்.]

223. தச்ச்₂ரேஷ்ட₂ம் 281—4 [ஆப-ஸூ 1-1-6]

ஸ ஹி வித்₃யாதஸ் தம் ஜநயதி । தச்ச்₂ரேஷ்ட₂ம் ஜந்ம ॥

[ஆசாரியனன்றோ வித்₃யையினால் சிஷ்யனைப் பிறப்பிக்கிறான்; அது மேலான ஜன்மம்.]

224. ததஸ்ச த்₃வாத₃ஸே 25-5. [ரா-பா₃ 18-8,9,10]

ததஸ்ச த்₃வாத₃ஸே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ ।
நக்ஷத்ரே ऽதி₃தி₃தைவத்யே ஸ்வோச்சஸம்ஸ்தே₂ஷு பஞ்சஸு ॥
க்₃ரஹேஷு கர்க்கடே லக்₃நே வாக்பதாவிந்து₃நா ஸஹ ।
ப்ரோத்₃யமாநே ஜக₃ந்நாத₂ம் ஸர்வலோகநமஸ்க்ருதம் ॥
கௌஸல்யா ऽஜநயத்₃ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம் ॥

[(பாயஸத்தைப் பருகிய பின்) பன்னிரண்டாவதுமாதமான சித்திரை மாதத்தில், நவமிதிதியில், அதி₃தியை தேவதையாகக் கொண்ட புநர்வஸு நக்ஷத்திரத்தில் ஐந்து கிரஹங்கள் உச்சநிலையிலிருக்கும் போது கடகலக்₃னத்தில், ப்ருஹஸ்பதியும் சந்திரனும் உதிக்கும்போது, லோகஸ்வாமியாய், அனைத்துல கினராலும் வணங்கப்படுபவனாய், மஹாபுருஷலக்ஷணங்கள் அனைத்தோடும் கூடியவனான ஸ்ரீராமனைக் கௌஸல்யை பெற்றெடுத்தாள்.]

225. ததஸ்துவை 88-1 [ரா-கி 66-40; 67-1]

ததஸ்து வை ஜாம்ப₃வதாபி₄சோதி₃த: ப்ரதீதவேக₃: பவநாத்மஜ: கபி: ।
ப்ரஹர்ஷயம்ஸ்தாம் ஹரிவீரவாஹிநீம் சகார ரூபம் மஹதா₃த்மநஸ்ததா₃ ॥
ஸம்ஸ்தூயமாநோ ஹநுமாந் வ்யவர்த்த₄த மஹாகபி: ।
ஸமாவித்₄ய ச லாங்கூலம் ஹர்ஷாச்ச ப₃லமேயிவாந் ॥

[அதற்குப்பின் ஜாம்ப₃வானால் தூண்டப்பெற்றவனாய், வேக₃த்தை வரவழைத்துக்கொண்டவனாய், வானரனாய், வாயுபுத்திரனான அனுமன் அந்த ஸுக்₃ரீவஸேனையை உகப்பித்துக்கொண்டு, தன் உருவத்தை மிகப்பெரிதாக்கிக் கொண்டான்; (வானரர்களால்) துதிக்கப்பட்ட மஹாகபியான அவன் வளரத் தொடங்கினான். ஆனந்தத்தாலே வாலை அடித்துக்கொண்டு ப₃லத்தை அடைந்தான.]

226. ததோ ராமோ 106-2; 111-5; 113-2; 115-6; 205-1; 207-2; 225-1; 229-1. [ரா-யு 59-136]

208. ஜநநபவந 302-6 [ஸ்ரீகுண 56]

ஜநநபவநப்ரீத்யா துக்தார்ணவம் பஹுமந்யஸே
ஜநநி! தயிதப்ரேம்ணா புஷ்ணஸி தத் பரமம் பதம் ।
உததி பரமவ்யோம்நோர் விஸ்ம்ருத்ய மாத்ருஶரக்ஷண
க்ஷமமிதி தியா பூய: ஸ்ரீரங்கதாமநி மோதஸே ॥

[தாயே! பிறந்தகமாயிருக்கும் பிரீதியாலே திருப்பாற்கடலை உகந்தருள்கின்றீர். கணவனிடம் உள்ள காதலாலே (புக்ககமான) பரமபதத்தை ஆதரிக்கின்றீர். (ஆகி னும்) பிறந்தகமான திருப்பாற்கடலையும், புக்ககமான ஸ்ரீவைகுண்டத்தையும் மறந்துவிட்டு எம்மைப்போன்ற ஸம்ஸாரி ஜீவர்களைக் காப்பதற்குப் பாங்கான இடம் என்னும் திருவுள்ளத்தாலே திருவரங்கம் பெரியகோயிலிலே மிகவும் ப்ரீதி கொள்கிறீர்.]

209. ஜநபதஸரி 281–1; 563–1. [ர-ஸ்த 1–32]

ஜநபதஸரிதந்தரீபுஷ்யத் புரபரிபாலந நித்யஜாகரூகாந் ।
ப்ரஹரண பரிவாரவாஹநாட்யாந் குமுதமுகாந் குணநாயகாந் நமாமி ॥

[ஜனங்களுக்கு இருப்பிடமாய்க்கொண்டு காவேரியின் இடையிலுள்ள தீவில் வளர்கின்ற ஸ்ரீரங்கநகரத்தைக் காப்பதில் இடைவிடாது விழிப்புடையவர்களாக வும், ஆயுதங்களோடும், பரிவாரங்களோடும், வாஹனங்களோடும் கூடியவர்களா கவுமிருக்கும் குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், ஸர்ப்பநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டிதன் என்னும் குணநாதர்களை வணங்கு கிறேன்.]

210. ஜந்மகர்ம 144-5; 150-3; 428-4; 440-5; 526-3 [கீதை 4–9]

ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: ।
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந! ॥

[அர்ஜுனா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும், சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தேஹத்தை விட்டு மறுஜன்மம் அடையான்: என்னை அடைவான்,]

211. ஜராமரண 432-3 [கீதை 7–29]

ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம் ॥

[கிழத்தனம், மரணம் முதலான ஆறு ஊர்மிகளும் அடியோடு கழிந்து ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற ஆத்மாநுபவரூபமோக்ஷம் கிடைப்பதற்காக என்னை அடைந்து எவர்கள் யத்னம் பண்ணுகிறார்களோ, அவர்கள் ப்ரஹ்மமெனப்படுவதையும், அத்யாத்மம் எனப்படுவது முழுவதையும், கர்மமெனப்படுவது அனைத்தையும் அறிய வேண்டும்.]

௨12. ஜாதோऽஸி தே3வ 119-1; 172—2; 178-2; 180—2 [வி-பு 5—3—10]

ஜாதோऽஸி தே3வதே3வேஶ! ஶங்க2சக்ரக3தா3த4ர।
தி3வ்யரூபமிதம் தே3வ! ப்ரஸாதே3நோபஸம்ஹர ॥

[என்றும் ஒளிவிடும் தேவர்களான நித்யஸூரிகளுக்கு ஆநந்தத்தை அளிப்பவனாகவும், ஈசனாகவுமிருப்பவனே! சங்கசக்ர கதைகளை தரிப்பவனே! தேவனே! நீயன்றோ பிறந்திருக்கிறாய்! இந்த திவ்யரூபத்தை அருள் கூர்ந்து மறைத்துக்கொள்வாயாக]

௨13. ஜாநுமாத்ரோத3கோ 121-1; 121-3; 127-3; 132—6; 134—6 [வி-பு 5-3-18]

யமுநாம் சாதிக3ம்பீ4ராம் நாநாவர்த்தஜஷாகுலாம்।
வஸுதே3வோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோத3கோ யயௌ ॥

[வஸுதேவர் குழந்தையான கண்ணனைத் தூக்கிக்கொண்டு, மிகவும் ஆழமுள்ளதும், பல சுழிகளும், பெரியமீன்களும் நிறைந்து கலங்கியிருப்பதுமான யமுநா நதியை முழங்காலளவு நீரே உடையதாய்க்கொண்டு கடந்தார்.]

214. ஜாம்ப3வந்தம் 447-2 [பாஞ்சராத்ர?—க்ரியாபாத3 16]

ஜாம்ப3வந்தஞ்ச பி4த்தௌ து பே4ரீதாட3நதத்பரம்

[(அண்டச்) சுவரருகில் (திரிவிக்கிரமனின் வெற்றியை முழக்கும்) பெரும் பறையை அடிக்கும் ஜாம்பவானை]

215. ஜிதம்தே 108-3; 255-4. 256-2; 258-2; 474-7 [ஜிதந்தே 1-1]

ஜிதந்தே புண்டரீகாக்ஷ! நமஸ்தே விஶ்வபா4வந।
நமஸ்தேऽஸ்து ஹ்ருஷீகேஶ! மஹாபுருஷ! பூர்வஜ ॥

[செந்தாமரைக்கண்ணா! உன்னால் (இவ்வாத்மவஸ்து) ஜயிக்கப்பட்டது; (இது) என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே; உலகையெல்லாம் உண்டாக்கினவனே! இந்த்ரியங்களை நியமிப்பவனே! கொடுப்பதில் சிறந்தவனே! முற்பாடனாகப் பிறப்பவனே! (இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.]

௨16. ஜ்ஞாநலவ 82-2 [நீதிசதகம் 1-2]

அஜ்ஞ: ஸுக2மாராத்4ய: ஸுக2தரமாராத்4யதே விஶேஷஜ்ஞ:।
ஜ்ஞாநலவது3ர்வித3க்3த4ம் ப்3ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி ॥

[அறிவற்றவனை எளிதில் இசையவைத்துவிடலாம்; மிக்க அறிவுள்ளவனை மிக எளிதில் இசையவைத்துவிடலாம்; அரைகுறை அறிவுடன் எல்லாமறிந்தவனாக நினைத்திருப்பவனைப் பிரமனாலும்கூட இசையவைக்கமுடியாது.]

217. ஜ்ஞாநஶக்தி கருணாஸு 244-4; 246-1 [அதிமாநுஷ 61]

பாபீயஸோऽபி ஶரணாக3த ஶப்3த3பா4ஜ:
நோபேக்ஷணம் மம தவோசிதமீஶ்வரஸ்ய।

ததோ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருதவ்ரணம் ।
த்ருஷ்ட்வா ப்லவகசார்தூலம் கோபஸ்ய வசமேயிவாந் ॥

[பிறகு மஹாதேஜஸ்வியான ராமன், ராவணனால்காயப்படுத்தப்பட்டவனும், வானரர்களுள் சிறந்தவனுமான ஹநுமானைப் பார்த்தவுடன் கோபத்திற்கு வசப்பட்டான்.]

227. ததோ மௌந 166-2. [ரா-யு 17-28]

ஏவமுக்த்வா து தம் ராமம் ஸம்ரப்தோ வாஹிநீபதி: ।
வாக்யஜ்ஞோ வாக்யகுசலம் ததோ மௌநமுபாகமத் ॥

[பிறகு, பரபரப்போடு கூடினவராய், வார்த்தை சொல்லவறிந்தவராய், வானரவரசரான சுக்கிரீவமஹாராஜர், வார்த்தை சொல்ல வல்லவரான ராமபிரானைக்குறித்து, இம்மாதிரி சொல்லி மௌனமானார்.]

228. ததஹம் த்வத்ருதே 506-6 [ஸ்தோ-ர 51]

ததஹம் த்வத்ருதே ந நாதவாந் மத்ருதே த்வம் தயநீயவாந் ந ச ।
விதிநிர்மிதமேததந்வயம் பகவந்! பாலய மா ஸ்ம ஜீஹப: ॥

[ஜ்ஞாநம் நிறைந்தவனான எம்பெருமானே!, ஆதலால், அடியேன் உன்னைத் தவிர (வேறு) நாதனற்றவன். நீயும் என்னைத்தவிர (வேறொருவனை) அருளுக்கு விஷயமாக உடையையல்லை. உன் அருளாலே ஏற்பட்ட இந்த ஸம்பந்தத்தை ரக்ஷித்துக்கொள். கைவிட்டுவிட வேண்டாம்.]

229. தத்தஸ்ய 182-1; 185-1; 275-2; 368-4; 374-2; 507-5; 547-2; 570-2. [ரா-ஸு 30-30]

சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந: ।
மாம் நயேத்யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம் பவேத் ॥

[எதிரிகளின் பலத்தை அழிக்கவல்ல சக்ரவர்த்தித்திருமகன் இலங்கையை அம்புகளால் கலக்கி என்னை மீட்டுச் செல்வாரேயாகில் அது அவருக்கே தக்கதாகும்.]

230. தத்து கர்ம 80-1. [லக்ஷ்மீதந்த்ரம் 17-90]

க்ரியமாணம் ந கஸ்மைசித்யதர்த்தாய ப்ரகல்பதே ।
அக்ரியாவததநர்த்தாய தத்து கர்ம ஸமாசரேத் ॥

[எந்தக்கர்மம் செய்யப்பட்டால் அதனால் ஒரு பயன் விளையாதோ, அதைச் செய்யாவிடில் தோஷம் உண்டாகுமோ, அத்தகைய (காம்யமல்லாத நித்ய நைமித்திக) கர்மங்களையே அனுஷ்டிக்கவேண்டும்.]

231. தத்ர காஷாயிணோ 283-2; 284-6 [ரா—அ 16—3]

தத்ர காஷாயிணோ வ்ருத்தாந் வேத்ரபாணீந் ஸ்வலங்க்ருதாந் ।
ததர்ச நிஷ்டிதாந் த்வாரி ஸ்த்ர்யத்யக்ஷாந் ஸுஸமாஹிதாந் ॥

[அந்த ராமனுடைய அந்தப்புரவாயிலில் காஷாயவஸ்திரம் த₄ரித்தவர்களும், பிராயம் முதிர்ந்தவர்களும், பிரம்பைக் கையில் ஏந்தியவர்களும், நன்கு அலங்கரிக்கப்பெற்றவர்களும், வாயிலில் கவனத்துடன் நிற்பவர்களும், பல பெண்வேலைக்காரிகளுக்குத் தலைவர்களும், புலனடக்கமுள்ளவர்களுமான துவாரபாலகர்களை (ஸுமந்திரன்) கண்டான்.]

232. தத்ர கோ₃விந்த₃ 36-1; 45-4; 58—2 [ப₄ார உத் 90—11]

தத்ர கோ₃விந்த₃மாஸீநம் ப்ரஸந்நாதி₃த்யவர்ச்சஸம் ।
உபாஸாஞ்சக்ரிரே ஸர்வே குரவோ ராஜபி₄: ஸஹ ॥

[அந்த ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருக்கிறவனை, (அனுகூலர்க்குக்) குளிர்ந்தவனை, (எதிரிகளுக்கு) ஸூர்யன்போலே கொளுத்துகிறவனையிருக்கும் கோவிந்தனை குருவம்சத்து அரசர்களும், மற்றதேசத்து அரசர்களுமான அனைவரும் ஆராதித்தனர்.]

233. தமஸ: பரமோ 120—1 [ரா—யு 114-15]

தமஸ: பரமோ தா₄தா ஶங்க₂சக்ர க₃த₃ா த₄ர: ।
ஶ்ரீவத்ஸவக்ஷா நித்யஶ்ரீ: அஜய்ய: ஶாஶ்வதோ த்₄ருவ: ॥

[(இந்த ஸ்ரீராமபிரான்) மூலப்ரக்ருதியைக்காட்டிலும் மேலானவராய், ஆதா₄ரராய், சங்கு சக்ரம் கதைகளை ஏந்தியவராய், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை மார்பில் உடையவராய், என்றும் அகலாத ஸ்ரீதேவியை உடையவராய், ஜயிக்க முடியாதவராய், விகாரமற்றவராய், நிலைநிற்பவராயுள்ளவர்.]

234. தம் த்₃ருஷ்ட்வா 158-3; 159-1; 162-2; 166-3; 167-1; 168-1; 339-2 [ரா—ஆ 30-39]

தம் த்₃ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுக₂ாவஹம் ।
ப₃பூ₄வ ஹ்ருஷ்டா வைதே₃ஹீ ப₄ர்த்தாரம் பரிஷஸ்வஜே ॥

[எதிரிகளை அழித்தவரும் மஹர்ஷிகளுக்கு ஸுக₂மளிப்பவருமான அவ்விராமபிரானைப் பார்த்து ஸீதாபிராட்டி ஸத்தைபெற்றாள்; பிரீதியடைந்தாள். கணவனை அவரை நன்கு தழுவினாள்;]

235. தம் ப்₃ரஹ்மா 462-1; 472-3; 474-4; 548-1; 573-3 [கௌஷீ 1—34]

தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதித₄ாவந்தி
ஶதம் மாலாஹஸ்தா: ஶதமஞ்ஜநஹஸ்தா:
ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோஹஸ்தா:
தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி

[அந்த முக்தபுருஷனை நோக்கி ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் ஓடிவருகிறார்கள். நூறுபேர் கையில் மாலை ஏந்தியும், நூறுபேர் கையில் மையைக்கொண்டும், நூறுபேர் கையில் வாசனைப்பொடிகளைக்கொண்டும், நூறுபேர் கையில் ஆடைகளை எடுத்துக்கொண்டும் வருகிறார்கள். அந்த முக்தனை ப்₃ரஹ்மத்தினுடைய அலங்காரத்தால் அலங்கரிக்கிறார்கள்.]

286. தம் மணிம் ஹ்ருத₃ 472-4 [ரா—ஸு 66—1]

ஏவமுக்தோ ஹநுமதா ராமோ த₃ஶரத₂த்மஜ: ।
தம் மணிம் ஹ்ருத₃யே க்ருத்வா ப்ரருரோத₃ ஸலக்ஷ்மண: ॥

[அனுமனால் இப்படிச்சொல்லப்பட்ட த₃ஶரத₂குமாரனை ஸ்ரீராமன், இலக்குவனோடு கூடியவனாய், அந்தச் சூடாமணியைத் தன் நெஞ்சில் வைத்துக்கொண்டு புலம்பினான்,]

237. தருணௌ 238-2 [ரா—ஆ 19—14]

தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாப₃லௌ ।
புண்ட₃ரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்ப₃ரௌ ॥

[வாலிபர்களாய், அழகு நிறைந்தவர்களாய், மிகவும் மிருதுவான தன்மையை உடையவர்களாய், பெரிய ப₃லத்தையுடையவர்களாய், தாமரைபோல் பரந்த கண்களை உடையவர்களாய், மரவுரியையும் மான்தோலையும் உடுப்பாக உடையவர்களாய் (ராமலக்ஷ்மணர்கள் இருக்கிறார்கள்.)]

238. தவாங்கே ஸமு 208-2 [ரா-ஸு 38—14]

தஸ்யோபவநஷண்டே₃ஷு நாநாபுஷ்பஸுக₃ந்தி₄ஷு ।
விஹ்ருத்ய ஸலிலக்லிந்நா தவாங்கே ஸமுபாவிஶம் ॥

[அந்தச் சித்ரகூடத்தாழ்வரையிலுள்ளவையாய், பல புஷ்பங்களால் மணம்மிக்கவையான தோட்டங்களில் (மந்தாகினீ நதி) நீரில் விளையாடிக் களைத்து (ஸீதையாகிய) நான் தேவரீருடைய மடியில் வீற்றிருந்தேன்.]

239. தவாம்ருத 568—3 [ஸ்தோ—ர 27]

தவாம்ருதஸ்யந்தி₃நி பாத₃பங்கஜே நிவேஶிதாத்மா கத₂மந்யதி₃ச்ச₂தி ।
ஸ்தி₂தே$\varsigma$ரவிந்தே₃ மகரந்த₃நிர்ப்ப₄ரே மது₄வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥

[அம்ருதத்தைப் பெருக்குகிற உன் திருவடித் தாமரையில் (உன் அருளாலே) வைக்கப்பட்ட மனமானது, மற்றொன்றை எப்படி விரும்பும்? தேன் நிறைந்த செந்தாமரையானது இருக்கும் பொழுது, வண்டு முள்ளிப்பூவைக் காணவும் மாட்டாதன்றோ.]

240. தஸ்மாந் ந்யாஸ 250—1 [தை—நா 50]

தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:

[ஆகையால் ந்யாஸத்தை (ஶரணாக₃தியை) இந்தத் தபஸ்ஸுக்களுள் மேலானதாகச் சொல்லுகிறார்கள்.]

241. தஸ்ய யஜ்ஞ 114—2 [விஷ்ணுத₄ர்மம் 90; ப₄ார-ஶாந்தி 46—126]

தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ: ।
ப்ரணாமம் யே$\varsigma$பி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥

[யஜ்ஞவராஹராகியவரும், அளவற்ற தேஜஸ்ஸை உடையவருமான அந்த விஷ்ணுவுக்கு எவர்கள் ஒரு நமஸ்காரம் செய்கிறார்களோ, அவர்களுக்குப் பல கால் நமஸ்காரம்.]

242. தஸ்யாபி4ஸங் 283—9 [ரா—யு 59—137]

தஸ்யாபி4ஸ(ச)ங்க்ரம்ய ரத2ம் ஸசக்ரம்
ஸாஶ்வத்4வஜச்ச2த்ரமஹாபதாகம் |
ஸஸாரதி2ம் ஸாஶநிஶூலக2ட்3க3ம்
ராம: ப்ரசிச்சே2த3, ஶரை: ஸுபுங்கை2: ||

[ராமபிரான் அந்த ராவணனுக்கு அருகில் அடிக்கடி சென்று அவனுடைய சக்கரம், குதிரை, கொடி, குடை, தோரணம், ஸாரதி2, அஶனி, ஶூலம், கத்தி முதலான ஆயுத4ங்கள் ஆகியவற்றோடு கூடிய தேரை மிகக் கூர்மையான அம்புகளாலே வெட்டி வீழ்த்தினான்.]

243. தஸ்யோபவந—238 காண்க.

244. தாம் ஶ்ரீரிதி 474-2 [ஶ்ரீவைகுண்ட2 29]

யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீஶ்வராணும்
ஐஶ்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத் |
தாம் ஶ்ரீரிதி த்வது3பஸம்ஶ்ரயணாந்நிராஹு:
த்வாம் ஹி ஶ்ரியஶ் ஶ்ரியமுதா3ஹருதா3ரவாச: ||

[யாவளொரு பிராட்டியின் கடாக்ஷமானது இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அடிக்கடி ஐஶ்வர்யஹேதுவாகிறதென்பது ஸர்வஜநஸம்மதமானதோ, அந்தப் பிராட்டியை தேவரீரிடத்தில் ஆச்ரயித்திருப்பது காரணமாகவே ஶ்ரீ யென்று நிருக்தி கூறுகின்றார்கள். உதா3ரவாக்குக்களான திருமங்கையாழ்வார் போல்வாரும் தேவரீரையேயன்றோ "திருவுக்குந்திருவாகிய செல்வன்" என்கிறார்கள்.]

245. துங்க3ஸ்தந 399-1. [ப4ட்டர் அருளிய திருப்பாவைத் தனியன்] பக்கம் 2-ல் உள்ள தனியன் பதவுரை காணக.

246. துல்யஶீல—57 வது ப்ரமாணத்தில் 2—வது ஶ்லோகம் காண்க,

247. தேஜோவிஶேஷேண 491-1. [ஆபஸ்தம்ப3 2-13-7, 8]

த்3ருஷ்டோ த4ர்மவ்யதிக்ரம: ஸாஹஸம் ச பூர்வேஷாம் |

தேஷாம் தேஜோவிஶேஷேண ப்ரத்யவாயோ ந வித்3யதே |

[முன்னாளில் வாழ்ந்த சில பெரியவர்கள் த4ர்மத்திற்குப் புறம்பாக நடந்ததும், ஸாஹஸகாரியங்களைச் செய்ததும் (இதிஹாஸ புராணங்களில்) காணப்படுகிறது. அவர்களுடைய தேஜஸ்ஸின் பெருமையால், (பாபச்செயல் செய்தாலும்) அவர்களுக்கு தோ3ஷம் இல்லை.]

248. தேந மைத்ரீ 29-1; 42-3; 51-1; 107-5; 114-5; 217-2; 219-3; 444-1; 450-1; 456-1. [ரா-ஸு 21-20]

விதி₃தஸ் ஸ ஹி த₄ர்மஜ்ஞஶ் ஶரணாக₃தவத்ஸல: ।
தேந மைத்ரீ ப₄வது தே யதி₃ ஜீவிதுமிச்ச₂ஸி ॥

[(ராவணா!) ஸ்ரீராமபிரான் த₄ர்மத்தை அறிந்தவராகவும், ஶரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்₃த₄மானவர். நீ உயிர்வாழ விரும்பிணுயாகில், அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும்.]

249. தே யே ஶதமித் 568-1. [ஸ்தோ—ர 19]

உபர்யுபர்யப்₃ஜபு₄வோऽபி பூருஷாந்
ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத் ।
கி₃ரஸ் த்வதே₃கைககு₃ணாவதீ₄ப்ஸயா
ஸதா₃ ஸ்தி₂தா நோத்₃யமதோऽதிஶேரதே ॥

[ப்₃ரஹ்மாக்களுக்கு மேலும் மேலும், ''தே யே ஶதம்'' என்று அடிக்கடி படிப்பதன் மூலம் ப்₃ரஹ்மாக்களைக் கற்பித்து, உன்னுடைய ஒவ்வொரு கு₃ணத்தினுடையவும் எல்லையைக் காண்கையிலே இச்சை₂யாலே, எப்போதும் இருக்கின்றவையான வேத₃வாக்கியங்களானவை, ஆரம்ப₄த₃ஶையைக் கடந்து மேல்செல்லவில்லை.]

250. த்யக்த்வா புத்ரா 344-2; 348-3; 383-2. [ரா-யு 17-14]

ஸோऽஹம் பருஷிதஸ்தேந தா₃ஸவச்சாவமாநித: ।
த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா₃ராம்ஶ்ச ராக₄வம் ஶரணம் க₃த: ॥

[அவனாலே கடுமையாகப் பேசப்பட்டவனும், வேலைக்காரன் போலே அவமதிக்கப்பட்டவனுமான அப்படிப்பட்ட நான் பிள்ளைகளையும், மனைவியையும் விட்டு ராமபிரானை ஶரணமடைந்தேன்.]

251. த்யக்த்வா தே₃ஹம் - 210 வது ப்ரமாணம் காண்க.

252. த்ரயாணாம் ப₄ரதா 302-3 [ரா-ஸு 55-26]

த்ரயாணாம் ப₄ரதாதீ₃நாம் ப்₄ராத்ருணாம் தே₃வதா ச யா ।
ராமஸ்ய ச மந:காந்தா ப்ராணேப்₄யோऽபி க₃ரீயஸீ ॥

[ப₄ரதன் முதலான மூன்று ஸஹோத₃ரர்க்கும் எந்தப் பிராட்டியானவள் தே₃வதையாயிருக்கிறளோ, ராமனுக்கும் மனத்துக்கினியவளாய், ப்ராணனைக் காட்டிலும் சிறப்புற்றவளாயிருக்கிறளோ...]

253. த்ரிவிக்ரமத்வச் 568-4 [ஸ்தோ-ர 31]

கதா₃ புநஶ் ஶங்க₂ரதா₂ங்க₃கல்பக த்₄வஜாரவிந்தா₃ங்குஶவஜ்ரலாஞ்ச₂நம் ।
த்ரிவிக்ரம ! த்வச்சரணாம்பு₃ஜத்₃வயம் மதீ₃யமூர்த்₄நமலங்கரிஷ்யதி ॥

[திரிவிக்ரமாவதாரம் செய்த எம்பிரானே!, சங்கு, சக்கரம், கல்பகவ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குஶம், வஜ்ராயுதம் இவைகளை அடையாளமாக உடைய உன் திருவடித்தாமரையிணை, என் தலையை எப்போதுதான் அலங்கரிக்கப் போகிறது?]

254. த்ரீந் லோகாந் 368-1; 373-5 [ரா-ஸு 38-33]

ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி₄: ।
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க₃த: ॥
ஸ தம் நிபதிதம் பூ₄மௌ ஶரண்ய: ஶரணாக₃தம் ।
வத₄ார்ஹமபி காகுத்ஸ்த₂: க்ருபயா பர்யபாலயத் ॥

[அந்தக் காகாஸுரன், தந்தையினாலும், (தாயினாலும்,) மஹர்ஷிகளுடன் கூடிய தே₃வர்களாலும் கைவிடப்பட்டவனாய், மூன்று உலகங்களையும் சுற்றித் திரிந்து அந்த ராமனையே ஶரணமடைந்தான். ஶரணமடைந்தவனும், பூமியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத் தகுந்தவனாயிருந்தபோதிலும், ஶரணமடையத் தகுந்தவனான ஸ்ரீராமபிரான் (தன்) அருளாலே காப்பாற்றினான்.]

255. த்வத்பாத₃மூலம் 282-1. [ஸ்தோ—ர 22]

ந த₄ர்மநிஷ்ட்டோ₂ऽஸ்மி ந சாத்மவேதீ₃
ந ப₄க்திமாம் ஸ்த்வச்சரணாரவிந்தே₃ ।
அகிஞ்சநோऽநந்யக₃திஶ் ஶரண்ய !
த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே ॥

[ஶரணமடையத்தகுந்த எம்பிரானே!, (அடியேன்) கர்மயோக₃த்தில் நிலை நின்றவன் அல்லேன்; ஆத்மஜ்ஞாநமும் உடையேனல்லேன்; உன் திருவடித் தாமரைகளில் ப₄க்தியை உடையவன் அல்லேன்; வேறு உபாயமற்றவனும், வேறு புகலற்றவனுமான அடியேன், உன் திருவடித்தாமரைகளை உபாயமாக நிஶ்சயிக்கிறேன்.]

256. த்வதீ₃யக₃ம்பீ₄ர 26-2; 40-8; 281-3; 289-2; 291-2. [ஸ்தோ—ர 20]

த்வத₃ாஶ்ரிதாநாம் ஜக₃து₃த்₃ப₄வஸ்தி₂தி-
ப்ரணாஶஸம்ஸாரவிமோசநாத₃ய: ।
ப₄வந்தி லீலா விதய₄ஶ்ச வைதி₃காஸ்
த்வதீ₃யக₃ம்பீ₄ரமநோநுஸாரிண: ॥

[(பிரமன் முதலிய) உன்னுடைய அடியார்களுக்கு, உலகத்தைப்படைப்பது, காப்பது, அழிப்பது, ஸம்ஸாரத்தைத் தாண்டுவிப்பது முதலியவை விளையாட்டாக இருக்கின்றன; வேத₃ விதி₄களும், உன்னுடைய அடியார்களுடைய க₃ம்பீ₄ரமான திருவுள்ளத்தைப் பின்செல்லுகின்றவைகளாக இருக்கின்றன.]

257. த்வமேவ மாதா 483-1 [ஶரணாக₃தி க₃த்₃யத்தில் எடுக்கப்பட்ட இதிஹாஸபுராண ஶ்லோகம்]

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ ப₃ந்து₄ஶ்ச கு₃ருஸ்த்வமேவ ।
த்வமேவ வித்₃யா த்₃ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தே₃வதே₃வ ॥

[தே₃வர்க்கும் தே₃வனுயிருப்பவனே! நீயே எனக்குத் தாய்; தந்தையும் நீயே; நீயே உறவினன்; நீயே ஆசாரியன்; நீயே (அவன் உபதே₃ஶித்த) ஜ்ஞானம்; (போ₄க₃த்துக்கு உறுப்பான) ப₄க்தியாகிற செல்வமும் நீயே; எல்லாமும் நீயே.]

258. த்வம் நீச ஶஶ 287-1; 241-2; 244-1; 245-2 [ரா—ஸு 22-16]

யதா₂ த்₃ருப்தஶ்ச மாதங்க₃: ஶஶஶ்ச ஸஹிதோ வநே ।
ததா₂ த்₃விரத₃வத்₃ ராமஸ் த்வம் நீசஶஶவத் ஸ்ம்ருத: ॥

[ஒரு காட்டில் மத₃ங்கொண்ட யானையும், நரியும் சேர்ந்திருந்தாலெப்படியோ அப்படியே யானைபோன்றவர் ராமபிரான்; நீ ஒரு குள்ளநரியைப் போன்றவன்.]

259. த்வயி கிஞ்சித் 217-3; 219-4 [ரா—யு 41-4]

த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம ।
ப₄ரதேந மஹாபா₃ஹோ! லக்ஷ்மணேந யவீயஸா ।
ஶத்ருக்₄நேந ச ஶத்ருக்₄ந ! ஸ்வஶரீரேண வா புந: ॥

[நீண்ட கைகளையுடைய ஸுக்₃ரீவனே! உனக்கு ஏதாவது அவமானம் நேர்ந்ததாகில், ஸீதையால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? ப₄ரதனாலும், இளையவனான லக்ஷ்மணனாலும், சத்ருக்₄னனாலும் என்ன ப்ரயோஜனம்? சத்துருக்களை அழிப்பவனே! என்னுடைய ஶரீரத்தினால்தான் என்ன ப்ரயோஜனம்?]

260. த்வயோபபு₄க்த 5-4 ?

த்வயோபபு₄க்த ஸ்ரக்₃க₃ந்த₄-உச்சி₂ஷ்டப₄க்ஷிணோ தா₃ஸா: ।

[உன்னால் அனுப₄விக்கப்பட்டு அருளப்பட்ட மாலை, க₃ந்த₄ங்கள் ஆகியவற்றை அனுப₄விக்கும் அடியார்கள்.]

261. த்வராயை 226-1; 227-3; 231-6; 234-2 [ர-ஸ்த 2-57]

அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருத-
ப்ரணீதமணிபாது₃கம் கிமிதி சாகுலாந்த:புரம் ।
அவாஹநபரிஷ்க்ரியம் பதக₃ராஜமாரோஹத:
கரிப்ரவரப்₃ரும்ஹிதே ப₄க₃வதஸ்த்வராயை நம: ॥

[க₃ஜேந்திராழ்வானுடைய தீனக்குரல் செவிப்பட்டவளவில், ஸேனைமுதலியாரால் கொடுக்கப்பட்ட ஹஸ்தாவலம்ப₃த்தை கவனிக்காமலும், கொண்டுவரப்பட்ட ரத்நபாது₃கையை அணிந்துகொள்ளாமலும், 'இதுவென்!' என்று அந்த:புரத்திலுள்ளோர் வியாகுலப்படும்படியாகவும், வாஹனாலங்காரங்களில்லாத பெரிய திருவடியை ஏருநிற்கிற ப₄க₃வானுடைய வேக₃த்தின் பொருட்டு என் நமஸ்காரம்.]

# த₃

262. த₃தா₃மி 26-4; 41-2; 50-6; 288-5; 294-6 [கீ₃தை 10-10]

தேஷாம் ஸததயுக்தாநாம் ப₄ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
த₃தா₃மி பு₃த்₃தி₄யோக₃ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥

[என்னிடத்தில் எப்போதும் சேர்ந்திருப்பதை விரும்புபவர்களும், என்னை ப₄ஜிப்பவர்களுமான அவர்களுக்கு, என்னை அடைவதற்கு ஸாத₄னமான அந்த பு₃த்₃தி₄யோக₃த்தை அன்புடன் அளிக்கிறேன்.]

263. த₃தௌ₃ ப₃ாஹு 316-2; 329-1 [வி.பு 5-13-53]

பரிவ்ருத்தி ஶ்ரமேணைகா சலத்₃வலயலாபிநீம் ।
த₃தௌ₃ ப₃ாஹுலதாம் ஸ்கந்தே₄ கோ₃பீ மது₄நிகா₄திந: ॥

[(ராஸக்ரீடையின் போது) சுற்றிவந்த களைப்பாலே, ஓர் ஆயர்சிறுமி அசையும் வளையல்களின் ஒலியையுடைய தன் கொடிபோன்ற கையை மது₄ஸூத₃னனின் தோளில் வைத்துக் கொண்டாள்.]

264. த₃ஶவேஶ்யாஸமோ 384-3 [விஷ்ணுத₄ர்மம் 66—54]

த₃ஶஸூநிஸமஶ்சக்ரீ த₃ஶசக்ரிஸமோ த்₄வஜீ ।
த₃ஶத்₄வஜிஸமா வேஶ்யா த₃ஶவேஶ்யாஸமோ ந்ருப: ॥

[கசாப்புக்கடைக்காரர்கள் பதின்மரின் பாபம் ஓர் குயவனுக்கு உண்டு; குயவர் பதின்மரின் பாபம் ஓர் மது₄பானக்கடைக்காரனுக்கு உண்டு; மது₄பானக்கடைக்காரர் பதின்மரின் பாபம் ஓர் வேசிக்கு உண்டு; வேசிகள் பதின்மரின் பாபம் ஓர் அரசனுக்கு உண்டு.]

265 தா₃ரா: பித்ரு 288-7; [ரா—பா₃ 77—27]

ப்ரியா து ஸீதா ராமஸ்ய தா₃ரா: பித்ருக்ருதா இதி ।
கு₃ணாத்₃ரூபகு₃ணாச்சாபி ப்ரீதிர் பூ₄யோऽப்₄யவர்த்₄த₄த ॥

[தகப்பனரால் மணம் செய்விக்கப் பெற்ற மனைவி என்னும் காரணத்தாலேயே சீதை இராமனுக்கு இனியவளாயிருந்தாள். (சீதையின்) ஆத்மகு₃ணங்களாலும், ரூபகு₃ணங்களாலும், இராமனின் அன்பு மிகவும் வளர்ந்தது.]

266. தா₃ஸோऽஹம் 317—6; 326—3. [ரா—ஸு 42-35]

தா₃ஸோऽஹம் கோஸலேந்த்₃ரஸ்ய ராமஸ்யாऽக்லிஷ்டகர்மண: ।
ஹநுமாந் ஶத்ருஸைந்யாநாம் நிஹந்தா மாருதாத்மஜ: ॥

[கோஸலதே₃ஶத்துக்கு அதி₄பதியும், பெருங்காரியங்களையும் எளிதாகச் செய்து முடிப்பவனுமான ராமனுக்கு, ஶத்ருஸைன்யங்களை அழிப்பவனும், வாயுவின் புத்ரனும், ஹனுமான் என்னும் பெயரை உடையவனுமான நான் தா₃ஸன்.]

267. தி₃வ்யமஹிஷீம்—2 வது ப்ரமாணம் காண்க.

268. தீ₃வ்யந்தி 119-2 [தே₃வஸப்₃த₃வ்யுத்பத்தி]

தீ₃வ்யந்தீதி தே₃வா: ['தி₃வு-த்₃யுதி' என்னும்தா₄து]

[எப்போதும் பிரகாசிக்கையாலே (நித்யஸூரிகள்) தே₃வர்கள் எனப் படுகிறார்கள்.]

269. து₃ர்வ்ருத்த: 241—1; 486—1; 502—8 [ரா—யு 17-10]

ராவணோ நாம து₃ர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர: ।
தஸ்யாஹமநுஜோ ப்₄ராதா விபீ₄ஷண இதி ஶ்ருத: ॥

[கெட்ட நடத்தையுடையவனாய், அரக்கர்களுக்கு அரசனான அரக்கன் ராவணன் என்று பிரசித்தி பெற்றவன்; நான் அவனுக்குப் பின் பிறந்தவனாய் விபீஷணன் என்று பெயர்பெற்றவனான தம்பியாவேன்.]

270. து₃ஷ்டகாளிய 12-1; 18-1 [வி. பு. 5-13-27]

து₃ஷ்ட காளிய திஷ்ட₂ாத்ர க்ருஷ்ணோ஽ஹமிதி சாபரா ।
பா₃ஹுமாஸ்போ₂ட்ய க்ருஷ்ணஸ்ய லீலயா ஸர்ப்பமாத₃தே₃ ॥

["கொடிய காளியனே! இங்கு நில். நானே கிருஷ்ணன்" என்று மற்றோர் ஆய்ச்சி கைகளைத்தட்டிக்கொண்டு கண்ணனின் விளையாட்டை அநுகாரம் செய்து காளிய நாகத்தை (அநுகரித்த மற்றோராய்ச்சியை) எடுத்துக் கொண்டாள்.]

271. தூ₃தோ ராமஸ்ய 317-5 [ரா-ஸு 36-2]

வாநரோ஽ஹம் மஹாபா₄கே₃ தூ₃தோ ராமஸ்ய தீ₄மத: ।
ராமநாமாங்கிதம் சேத₃ம் பஶ்ய தே₃வ்யங்கு₃ளீயகம் ॥

[மஹாபா₄க்₃யவதியே! வானரனான நான் பேரறிவாளரான ஸ்ரீராமபிரானுடைய தூதன்; தே₃வி! ஸ்ரீ ராமனுடைய பெயர் பொறித்த இந்த மோதிரத்தை—(அவர் அடையாளமாகக் கொடுத்ததைக்)—காண்பாயாக.]

272. தே₃வகீபூர்வ—9-வது ப்ரமாணம் காண்க.

273. தே₃வத்வே 509-2; 520-1; 525-2; 527-6 [வி. பு. 9-14-5]

தே₃வத்வே தே₃வதே₃ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ ।
விஷ்ணோர் தே₃ஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும் ॥

[(ப₄க₃வான்) தே₃வனாய் அவதரிக்கும்போது இப்பிராட்டி தே₃வரூபமெடுக்கிறாள்; அவன் மனுஷ்யனாகும்போது இவள் மநுஷ்யையாகிறாள். விஷ்ணுவின் தே₃ஹத்திற்குத் தகுந்ததாகத் தன் தேஹத்தை அமைத்துக்கொள்கிறாள் இவள்.]

274. தே₃வயதி—மோத, 120-3.

தே₃வயதி மோத₃யதி இதி தே₃வ: [தே₃வஶப்₃த₃ வ்யுத்பத்தி, தி₃வு-மோதே₃ என்று தா₄து]

[நித்யஸூரிகளை ஆனந்திப்பிக்கிறுனுகையாலே (நாராயணன்) தே₃வன் எனப்படுகிறுன்.]

275 தே₃வஶ்சாஸௌ 120-4 [தே₃வதே₃வேஶஶப்₃த₃ வ்யுத்பத்தி]

தே₃வஶ்சாஸாவீஶஶ்ச தே₃வேஶ:; தே₃வாநாம் தே₃வேஶோ தே₃வதே₃வேஶ:

[தே₃வனுகவும், ஈஶனுகவுமிருப்பவன் தே₃வேஶன்; தே₃வர்களாகிற நித்ய ஸூரிகளுக்கு தே₃வேஶனுயிருப்பவன் தே₃வதே₃வேஶன்.]

276. தே₃வ்யேவம் 386-4 [ரா-ஸு 35-52]

ராமஸுக்₃ரீவயோரைக்யம் தே₃வ்யேவம் ஸமஜாயத ।
ஹநூமந்தம் ச மாம் வித்₃தி₄ தயோர் தூ₃தமிஹாக₃தம் ॥

[தேவி! ராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் சேர்த்தி இவ்வண்ணமாக ஏற்பட்டது; 'அவர்களுடைய தூதனுக இங்கு வந்திருக்கும் ஹனுமான்' என்று என்னை அறிவீராக.]

277. தே₃வா: ஸ்வர்க்க₃ம் 351-1; 355-4; 361-1 [வி. பு.1-17-5]

தே₃வா: ஸ்வர்க்க₃ம் பரித்யஜ்ய தத்ராஸாந்முநிஸத்தம ।
விசேருரவநௌ ஸர்வே பி₃ப்₄ராணா மாநுஷீம் தநும் ॥

[அந்த இரணியனிடம் ப₄யத்தாலே தே₃வர்கள் அனைவரும் சுவர்க்கத்தைக் கைவிட்டு மனிதவுருவை எடுத்துக்கொண்டு பூ₄மியில் திரிந்தனர்.]

278. தே₃ஹி மே த₃தா₃மி 414-1; 428-1; 425-1; 527-4 [யஜுர்-கா 1-8]

தே₃ஹி மே த₃தா₃மி தே

[தே₃வனே! எனக்கு இப்பயனைக் கொடுப்பாயாக; நான் உனக்கு (யாக₃த்தில் ஹவிஸ்ஸைக்) கொடுக்கிறேன்.]

279. தோ₃ஷோ யத்₃யபி 144-1. 180-8; 219-11; 372-9 [ரா-யு 18-3]

மித்ரபா₄வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந ।
தோ₃ஷோ யத்₃யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத₃க₃ர்ஹிதம் ॥

[நண்பனின் வேஷத்தோடு வந்த இவனை ஒருபடியாலும் விட இடமில்லை. இவனுக்கு தோ₃ஷம் இருந்தாலும் இருக்கட்டுமே; இவனைக் கைக்கொள்வது நல்லோர்களுக்கு இகழத்தக்கதன்று.]

280. த்₃ரவந்தி 100-1; 107-2; 113-5 [வி-த₄ர் 43—28]

த்₃ரவந்தி தைத்₃யா: ப்ரணமந்தி தே₃வதா நஶ்யந்தி ரக்ஷாம்ஸ்-
யபயாந்தி சாரய: ।
யத்கீர்த்தநாத் ஸோத்₃பு₄தரூபகேந மமாஸ்து மாங்க₃ல்யவிவ்ருத்₃த₄யே ஹரி: ॥

[எவனைத்துதிப்பதால் அஸுரர்கள் ஓடிவிடுகின்றனரோ, தேவர்கள் வணங்குகின்றனரோ, அரக்கர்கள் அழிகின்றனரோ, எதிரிகள் விலகுகின்றனரோ, அந்த ஹரி தனது ஆச்சர்யமான உருவத்தைக்கொண்டு எனக்கு மங்களங்களை வளரச் செய்யட்டும்.]

281. த்₃வ்யக்ஷரஸ்(ம்)து 253-1 [ப₄ார-ஶாந்தி 13—4; ஆஶ்வ 51—30]

த்₃வ்யக்ஷரந்து ப₄வேந்ம்ருத்யு: த்ர்யக்ஷரம் ப்₃ரஹ்மண: பத₃ம் ।
மமேதி த்₃வ்யக்ஷரோ ம்ருத்யு: ந மமேதி ச ஶாஶ்வதம் ॥

[இரண்டெழுத்து ஸம்ஸாரகாரணம். மூன்றெழுத்து ப்₃ரஹ்மத்தை அடைவிக்குமதாயிருக்கும்; 'மம' என்கிற இரண்டெழுத்து ஸம்ஸார காரணம். 'ந மம' என்கிற மூன்றெழுத்து நிலைநின்ற மோக்ஷத்துக்குக் காரணம்.]

282. த்₃விதா₄பு₄ஜ் 344 1; 348—2; 368—3; 373—3; 374—1; 375—3; 376-4; 460—1 473-2; 475-3 [ரா-யு 36—11]

த்₃விதா₄ ப₄ஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித் ।
ஏஷ மே ஸஹஜோ தோ₃ஷ: ஸ்வபா₄வோ து₃ரதிக்ரம: ॥

[இரண்டாகப் பிளந்து விழுந்தாலும் விழுவேனேயொழிய இவ்வாறு ஒருவனுக்கும் வணங்கமாட்டேன்; இது என்னுடைய உடன்பிறந்த தோ₃ஷம். அவரவர் ஸ்வபா₄வம் மீறமுடியாதன்றோ.]

283. த்₃விஷத₃ந்நம் 214—9; 225-2; 283-1; 356-4 [ப₄ார உத் 74—27]

த்₃விஷத₃ந்நம் ந போ₄க்தவ்யம் த்₃விஷந்தம் நைவ போ₄ஜயேத் ।
பாண்ட₃வாந் த்₃விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்ட₃வா: ॥

[த்₃வேஷிப்பவனின் அன்னம் பு₄ஜிக்கத்தக்கதன்று; த்₃வேஷிப்பவனை பு₄ஜிப்பிக்கவும் கூடாது, அரசனே! நீ பாண்ட₃வர்களை த்₃வேஷிக்கிறாய்; பாண்ட₃வர்கள் எனக்கு ப்ராணனன்றோ.]

284. து₄நம் மதீ₃யம் 516-1 [ஸ்தோ-ர 30]

விலாஸவிக்ராந்தபராவராலயம் நமஸ்யதா₃ர்த்திக்ஷபணே க்ருதக்ஷணம் ।
து₄நம் மதீ₃யம் தவ பாத₃பங்கஜம் கதா₃ நு ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா ॥

[விளையாட்டாக அளக்கப்பட்ட மேலானவரான தே₃வர்களுடையவும், கீழான மனுஷ்யாதி₃களுடையவும் உலகங்களை உடையதும், வணங்கினவர்களின் து₃:க்கங்களைப் போக்கும் விஷயத்தில் காலத்தைச் செலவிடுவதும், எனக்குச்

செல்வமாயிருப்பதுமான உன்னுடைய திருவடித்தாமரையை, எப்போதுதான் கண்ணாலே காணப்போகிறேன்?]

285. த₄ர்மஜ்ஞஸமய: 10-2; 251-1; 254-5; 256-1; 257-1; 446-1 [ஆபஸ்தம்ப₃த₄ர்மஸூத்ர தொடக்கம்]

த₄ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத₃ாஶ்ச

[த₄ர்மத்தையறிந்தவர்களுடைய ஆசாரம் (முக்கியமான) ப்ரமாணம். வேத₃ங்களும் ப்ரமாணம்.]

286. த₄ர்மம் சரதி 197-8 [பாணிநி 4-4-41]

த₄ர்மம் சரதி

[த₄ர்மப்படி நடப்பவன் தா₄ர்மிகன்]

287. தா₄த்ரா துலிதா 558—1 [மஹீஸாரக்ஷேத்ரமாஹாத்ம்யம்]

தா₄த்ரா துலிதா லகு₄ர் மஹீ

[(திருமழிசையையும், மற்ற உலகனைத்தையும்) பிரமன் (தன் மனமாகிற தராசில் வைத்து) நிறுத்தபோது உலகனைத்தும் (திருமழிசையைவிட) எடை குறைந்ததாயிருந்தது.]

288. தீ₄ர: ஶரண 99-3 ?

தீ₄ர: ஶரணமுபாக₃த:

[உறுதியுள்ளவனாய் கு₃ருவின் வீட்டை அடைந்த (சிஷ்யன்).]

289. நகஶ்சிந்நாப 89-1; 91-1; 94-1; 102-1; 108-1; 109-1; 114-7; 331-1; 336-1. [ரா—யு 116-44]

பாபாநாம் வா ஶுபா₄நாம் வா வதா₄ர்ஹாணாம் ப்லவங்க₃ம ।
கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்₄யதி ॥

[வானர! பாபிகளாயினும், புண்யமுள்ளவராயினும், கொல்லத்தகுந்தவர்களாயிருந்தாலும் கு₃ணவானாயிருப்பவனால் (அவன் விஷயத்தில்) கருணை காட்டப்படவேண்டும். அபராத₄ம் செய்யாதவன் ஒருவனுமில்லையே.]

290. ந க்ஷமாமி 208-1; 288-6; 294-7; 499-1 [வராஹபுராணம்]

மத்₃ப₄க்தம் ஶ்வபசம் வாऽபி நிந்தா₃ம் குர்வந்தி யே நரா: ।
பத்₃மகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே ॥

[பூதேவி ! சண்டா₃ளனாயிருந்தபோதிலும், என்னுடைய ப₄க்தனை எந்த ஜனங்கள் நிந்தை₃ செய்கிறார்களோ, அவர்களைக் கோடிக்கணக்கான பத்₃ம காலங்களானாலும் பொறுக்கமாட்டேன்.]

291. நக்ருத்₄யத் 224-3 [ரா—அ 20-4; 41-3]

ந க்ருத்₄யத்யபி₄ஶப்தோऽபி க்ரோத₄நீயாநி வர்ஜயந் ।

[கோபத்திற்கு இடமளிப்பவற்றை விலக்குகையாலே, பிறரால் நிந்திக்கப்பட்டபோதிலும் ஸ்ரீராமன் கோபமடைவதில்லை.]

292. நகரஸ்த்ரீகலா 172-4 [வி. பு 5—18—14]

மதுராம் ப்ராப்ய கோவிந்த: கதம் கோகுலமேஷ்யதி ।
நகரஸ்த்ரீகலாலாபமது ஶ்ரோத்ரேண பாஸ்யதி ॥

[மதுரையை அடைந்த கோவிந்தன் (இனி) கோகுலத்திற்கு எப்படி வருவான்? நகரப்பெண்களின் இனிய வார்த்தைகளாகிற தேனையே காதுகளால் பருகுவான். (கோபிகைகளாகிற நம்மை மறந்து விடுவான் என்று கருத்து.]

293. நகராணி ச 93-2 [ரா—பா 1—93]

ந சாபி க்ஷுத்பயம் தத்ர ந தஸ்கரபயம் ததா ।
நகராணி ச ராஷ்ட்ராணி தநதாந்யயுதாநி ச ॥

[ராமராஜ்யத்தில் பசியினால் உண்டாகும் பயமோ திருடர்களால் உண்டாகும் பயமோ கிடையாது; நகரங்களும் தேசங்களும் பணமும், தான்யங்களும் நிறைந்து விளங்கின,]

294. ந ச புநராவர்த்ததே [சாந் 8-15-1]

ந ச புநராவர்த்ததே । ந ச புநராவர்த்ததே ।

[(இந்த முக்தாத்மா) மறுபடியும் திரும்பி வருவதில்லை; மறுபடியும் திரும்பி வருவதில்லை.]

295. நசஸீதா 448-1; [ரா-அ 53-31]

ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ ।
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ ॥

[ரகுகுலத்துதித்தவனே! உன்னைப் பிரிந்த ஸீதையும் பிழைக்கமாட்டாள்; (உன்னைப்பிரிந்த) நானும் பிழைக்கமாட்டேன். ஒருகால் (நாங்களிருவரும்)உயிர் வாழ்ந்தோமானால் ஜலத்திலிருந்து எடுக்கப்பட்ட மீன்கள்போலே ஒரு முஹூர்த்த நேரமே உயிர் வாழ்வோம்,]

296. ந ச ஸாமர்த்யவாந் 172-3; 178-3; 183-3; 487-1; 526-5 [வி. பு 5—7—70]

ஸோऽஹம் தே தேவதேவேஶ! நார்ச்சநாதௌ ஸ்துதௌ ந ச ।
ஸாமர்த்யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத மே ॥

[தேவர்களுக்கும் தேவர்களான நித்யஸூரிகளுக்கும் தலைவனே! இப்படிப்பட்ட நான் உன்னுடைய ஸ்துதியிலும், அர்ச்சனை முதலியவற்றிலும் ஸாமர்த்தியம் உடையவனல்லேன். அருள் கூர்ந்த திருவுள்ளத்துடன் கூடியவனாய் எனக்கு தயை புரியவேண்டும்.]

297. ந ஜாது ஹீயதே 77-3; 123-4; 129-4; 133-9 [ஸ்தோ-ர 28]

த்வதங்க்ரி முத்திஶ்ய கதாऽபி கேநசித் யதா ததா வாऽபி ஸக்ருத்க்ருதோ-ऽஞ்ஜலி: ।

ததைவ முஷ்ணாத்யஶுபாந்யஶேஷத: ஶுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே ॥

[உன்திருவடியைக் குறித்து எப்போதாவது எவனாலேயாவது எம்மாதிரியாகவாவது ஒரு தடவை செய்யப்பட்ட அஞ்ஜலியானது அப்போதே பாபங்களை மிகுதியில்லாமல் போக்குகின்றது; நன்மைகளை விருத்தியடையச் செய்கிறது; ஒரு சமயத்திலும் குறைகிறதில்லை.]

298. ந ஜீவேயம் 57-வது ப்ரமாணம் முதல் ஶ்லோகம் காண்க.

299. நதா: ஸ்ம 371-4 [வி. பு 1-14-23]

நதா: ஸ்ம ஸர்வவசஸாம் ப்ரதிஷ்டா யத்ர ஶாஶ்வதீ ।
தமாத்யந்தமஶேஷஸ்ய ஜகத: பரமம் ப்ரபும் ॥

[எல்லா வார்த்தைகளுக்கும் எவனிடத்தில் பொருள் எப்போதும் நிறைவு பெறுகிறதோ, அனைத்துலகுக்கும் முதலும் முடிவுமாகவும், மேலான ஸ்வாமியாகவுமிருக்கும் கோவிந்தனை வணங்குகிறோம்.]

300. ந தே ரூபம் 84-1; 94-2; 96-2; 510-1; 528-4 [ஜிதந்தே 1-5]

ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம் ।
ததாऽபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥

[(உன்னுடைய) திவ்யாத்மஸ்வரூபமானது உனக்காக இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்). திவ்யமங்களவிக்ரஹமும் உனக்காயிராது; திவ்யாயுதங்களும் உனக்காயிருக்கவில்லை; இருப்பிடமான வைகுண்டமும் முதலியவைகளும் உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்). பக்தர்களுடைய உடைமையான நீ இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரமான ஸ்வரூப ரூப குணவிபூதிகளை உடையவனாயிருந்தபோதிலும் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதிகனாயிருக்கும் தன்மையுடன் விளங்குகிறாய்.]

301. ந த்யஜேயம் 279-வது ப்ரமாணம் காண்க.

302. ந தேவலோகா 223-1; 228-3; 232-1; 235-1. [ரா-அ 31-5]

ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே ।
ஐஶ்வர்யம் வாऽபி லோகாநாம் காமயே ந த்வயா விநா ॥

[நித்யஸூரிகள் வாழும் உலகமான ஸ்ரீவைகுண்டத்தில் வாழ்ச்சியையும், கைவல்யத்தையும், உலகங்களிலுள்ள ஐஶ்வர்யத்தையும் உன்னைப் பிரிந்த நான் விரும்பமாட்டேன்.]

303. ந த4ர்மநிஷ்டோ2ऽஸ்மி 480-2; 503-1 [ஸ்தோ—ர 22]

ந த4ர்மநிஷ்ட்டோ2ऽஸ்மி ந சாத்மவேதீ3 ந ப4க்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே3 ।
அகிஞ்சநோऽநந்யக3திஸ் ஶரண்ய! த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே ॥

[ஶரணமடையத்தகுந்த எம்பிரானே! (அடியேன்) கர்மயோக3த்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஆத்மஜ்ஞாநமும் உடையேனல்லேன்; உன திருவடித் தாமரைகளில் ப4க்தியை உடையவன் அல்லேன்; ஓர் உபாயமுமற்றவனும் வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித்தாமரைகளை உபாயமாக நிஶ்சயிக்கிறேன்.]

304. ந நமேயம் 282-வது ப்ரமாணம் காண்க.

305. நந்த3ாமி பஶ்யந் 48-2. [ரா—அ 12-104]

அஹம் புநர்தே3வகுமாரரூபம் அலங்க்ருதம் தம் ஸுதமாவ்ரஜந்தம் ।
நந்த3ாமி பஶ்யந்நபி த3ர்ஶநேந ப4வாமி த்3ருஷ்ட்வாச புநர்யுவேவ ॥

[தேவகுமாரனைப் போலே உருவமுடையவனும், அலங்கரிக்கப் பெற்றவனும், வருகின்றவனுமான என் பிள்ளை ராமனை மனக்கண்ணால் காணும்போதே ஆனந்திக்கிறேன். நேரே கண்டாலோவெனில், மறுபடியும் வாலிபன் போலே ஆகிவிடுகிறேன்.]

306. ந பி3பே4தி 41வது ப்ரமாணம் காண்க.

307. நம இத்யேவ 69-4; 369-4. [பா4ர—ஶாந்தி 344-45]

முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்2வேதத்3வீபவாஸிநாம் ।
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதி3ந: ॥

[ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ, அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும். அதாவது:— எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள். (அதனால்) ஆநந்தி3ப்பார்கள். வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.]

308. நம: ஶ்ரீரங்க3 563-5 [ர—ஸ்த 1-7]

நம: ஶ்ரீரங்க3நாயக்யை யத்3ப்4ரூவிப்4ரமபே4த3த: ।
ஈஶேஶிதவ்ய வைஷம்ய நிம்நோந்நதமித3ம் ஜக3த் ॥

[எவளுடைய புருவநெரிப்புக்களின் வேறுபாட்டாலே, ஆள்பவர்களும் ஆளப்படுபவர்களுமாகிற ஏற்றத்தாழ்வுகளாலே இவ்வுலகம் மேடுபள்ளங்களையுடையதாகிறதோ, அத்தகைய ஶ்ரீரங்க3நாச்சியாருக்கு வணக்கம்.]

309. நமஸ்யந்தஶ்ச 254-4 [கீ3தை 9-14]

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்3ருட4வ்ரதா: ।
நமஸ்யந்தஶ்ச மாம் ப4க்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥

[என்னை ப4க்தியோடு எப்போதும் ஸங்கீர்த்தனம் செய்கிறவர்களாய், உறுதியான ஸங்கல்பத்தையுடையவர்களாக (என் விஷயமான அர்ச்சனம் முதலிய செயல்களில்) முயல்கின்றவர்களாய், என்னை வணங்குகின்றவர்களாய், என்னோடு என்றும் சேர்ந்திருப்பதை விரும்புகின்றவர்களாய் உபாஸிக்கிறார்கள்.]

310. நமே ப4க்த: 526-2 [கீ3தை 9-31]

க்ஷிப்ரம் ப4வதி த4ர்மாத்மா ஶஶ்வச்சா2ந்திம் நிக3ச்ச2தி ।
கௌந்தேய! ப்ரதிஜாநீஹி ந மே ப4க்த: ப்ரணஶ்யதி ॥

[என் விஷயமான ஸ்வயம் ப்ரயோஜன ப4க்தியைச் செய்பவன் (து3ராசாரம் உள்ளவனாயினும்) விரைவிலேயே (தடை நீங்கப்பெற்ற) ப4க்தியோக3த்திலேயே ஈடுபட்ட நெஞ்சுடையவனாகிறான். நிலையான து3ராசாரநிவ்ருத்தியை நன்கு அடைகிறான். குந்தீ புத்ரனே! (ஸர்வேஶ்வரனாகிற) என்னுடைய ப4க்தன் அழியமாட்டான் (என்னும் இந்த அர்த்த2த்தை) (நீயே) ப்ரதிஜ்ஞை செய்வாய்.]

311. நமே மோக்ஷம் 168-வது ப்ரமாணம் காண்க.

312. நமே ஸ்நாநம் 72-3; 78-1; 97-2 [ரா-யு 124-6]

ந மே ஸ்நாநம் ப3ஹுமதம் வஸ்த்ராண்யாப4ரணாநி ச ।
தம் விநா கைகயீபுத்ரம் ப4ரதம் த4ர்மசாரிணம் ॥

[த4ர்மவழிப்படி நடப்பவனும், கைகேயியின் புத்திரனுமான அந்த ப4ரதனில்லாமல் எனக்கு ஸ்நானமும், வஸ்த்ரங்களும், ஆப4ரணங்களும் இஷ்டமில்லை.]

313. நமோ நாராயணாய 242-2; 245-8 [திருமந்த்ரம்]

ஓம் நமோ நாராயணாய

[அகாரத்தின் பொருளான விஷ்ணுவுக்கே உரியவன் மகாரத்தின் பொருளான அடியேன்; எனக்கும் உரியேனல்லேன்; நித்யவஸ்துக்களின் திரளுக்கு இருப்பிடமான (அல்லது அத்திரளை இருப்பிடமாகக் கொண்ட) நாராயணனுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி எல்லா நிலைகளிலும் வழுவிலா அடிமை செய்யப்பெறுவேனாக.]

314. நமோऽஸ்து ராமாய 317-1 [ரா-ஸு 13—60]

நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய
தே3வ்யை ச தஸ்யை ஜநகாத்மஜாயை ।

[லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு நமஸ்காரம்; ஜநகராஜன் திருமகளான அந்தப் பிராட்டிக்கும் நமஸ்காரம்.]

315. நயாமி பரமாம் 355-1; 458-1; 526-1 [வராஹசரமம்]

ஸ்தி2தே மநஸி ஸுஸ்வஸ்தே2 ஶரீரே ஸதி யோ நர: ।
தா4துஸாம்யே ஸ்தி2தே ஸ்மர்த்தா விஶ்வரூபஞ்ச மாமஜம் ॥

ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்டபாஷாணஸந்நிபம் ।
அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் ॥

[மனம் (கலக்கமின்றி) நிலைநிற்கையில், உடம்பு நோயற்று நன்றாயிருக்கையில், வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் என்னும் மூன்று தாதுக்களும் ஓரளவாயிருக்கையில் எந்த மனிதன்—உலகை உடம்பாக உடையவனும், பிறப்பு (முதலான விகாரங்கள்) இல்லாதவனுமான என்னை நினைக்கிறானோ, பிற்காலத்தில், கட்டையோடும், கல்லோடும் ஒத்தவனாய், மரணமடையாநிற்கிற அந்த என் பக்தனை நானே நினைக்கிறேன். உயர்ந்த பதவிக்கு அழைத்துச்செல்கிறேன்.]

316. ந ராம: பரதாராந் 48-2 [ரா—அ 72-48]

ந ராம: பரதாராந் வை சக்ஷுர்ப்யாமபி பஶ்யதி ।

[ராமன் பிறர் மனைவியரைக் கண்ணாலும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டான்.]

317. ந ஶாஸ்த்ரம் 334-1; 341-2; 345-1; 347-1?

அத்யந்த பக்தியுக்தஸ்ய ந ஶாஸ்த்ரம் நைவ சக்ரம: ।

[மிகவும் அன்புடையவன் ஶாஸ்த்ரவிதியையோ உலக முறைமையையோ காணமாட்டான்.]

318. ந ஸமம் யுத்தம் 176-3; 264-1; 268-2 [ரா—யு 103-5]

பூமௌ ஸ்திதஸ்ய ராமஸ்ய ரதஸ்தஸ்ய ச ரக்ஷஸ: ।
ந ஸமம் யுத்தமித்யாஹுர் தேவகந்தர்வதாநவா: ॥

['பூமியிலிருக்கும் ராமனுக்கும், ரதத்திலிருக்கும் ராக்ஷஸனுக்கும் யுத்தம் ஸமமானதல்ல' என்று தேவர்களும், கந்தர்வர்களும், அஸுரர்களும் சொன்னார்கள்.]

319. ந ஹிம்ஸ்யாத் 33-1 [யஜுஸ்ஸம் 2-5-5]

ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி

[ஜீவராசிகள் ஒன்றையும் கொல்லக்கூடாது.]

320. நாகபர்யங்க 133-வது ப்ரமாணம் காண்க.

321. ந காமகலுஷம் 522-1. [ஜிதந்தே 1-13]

ந காமகலுஷம் சித்தம் மம தே பாதயோஸ்ஸ்திதம் ।
காமயே வைஷ்ணவத்வந்து ஸர்வஜந்மஸு கேவலம் ॥

[தேவரீருடைய திருவடிகளில் நிலைநின்ற அடியேனுடைய மனம் மற்ற ஆசைகளினால் கலங்கவில்லை; எல்லாப் பிறப்புகளிலும் வைஷ்ணவனாயிருக்கும் தன்மையை மட்டுமே ஆசைப்படுகிறேன்.]

322. நாதமுநிம் 67-3; 78-3; 96-4; 133-5; 282-2; 289-3, 291-6; 294-8; 486-3
[ஸ்தோ-ர 65]

அக்ருத்ரிமத்வச்சரணாரவிந்த₃ ப்ரேமப்ரகர்ஷாவதி₄மாத்மவந்தம் ।
பிதாமஹம் நாத₂முநிம் விலோக்ய ப்ரஸீத₃ மத்₃வ்ருத்தமசிந்தயித்வா ॥

[என்னுடைய நடத்தையை நினைக்காமல், உன்னுடைய திருவடித்தாமரைகளில் இயற்கையாயிருக்கும் மேலான அன்பிற்கு எல்லைநிலமாயிருப்பவரும், ஆத்மஸ்வருபத்தை உணர்ந்தவரும், எனக்குப் பாட்டனருமாகிய நாத₂முனிகளைக் கடாக்ஷித்து க்ஷமித்தருளவேண்டும்.]

323. நாதிஶீதா 24-1; 39-5 [கூ₃ரருட₃ம் 222]

வாஸுதே₃வதருச்சா₂யா நாதிஶீதா ந க₄ர்மதா₃ ।
நரகாங்கா₃ரஶமநீ ஸா கிமர்த்த₂ம் ந ஸேவ்யதே ॥

[வாஸுதே₃வனாகிற விருக்ஷத்தின் நிழல் அதி₄கக்குளிருமற்றது; மிகவும் உஷ்ணத்தையும் தராது. நரகமாகிற அக்₃னிஜ்வாலையின் உஷ்ணத்தை ஶமிக்கச் செய்வது. அதை ஏனோ (பலர்) அடையாமலிருக்கிறார்கள்?]

324. நாநயோர் வித்₃யதே 303-3 [வி. பு 1-8-35]

தே₃வதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா ப₄க₃வாந் ஹரி: ।
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய ! நாநயோர் வித்₃யதே பரம் ॥

[மைத்ரேயரே! தே₃வர், திர்யக் (ஊர்வன), மனுஷ்யர்கள் ஆகிய ஜீவ ராசிகளுள் ஆணாயிருப்பது ப₄க₃வான் ஹரியின் அம்ஶம் பெற்றது. பெண்ணாயிருப்பது லக்ஷ்மியின் அம்ஶம் பெற்றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலானதில்லை.]

325. நாந்ருக்₃வேத₃ 252-1; 255-1; 258-1 [ரா-கி 3-28, 29]

நாந்ருக்₃வேத₃விநீதஸ்ய நாயஜுர்வேத₃தா₄ரிண: ।
நாஸாமவேத₃விது₃ஷ: ஶக்யமேவம் ப்ரபா₄ஷிதும் ॥
நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நமநேந ப₃ஹுதா₄ ஶ்ருதம் ।
ப₃ஹு வ்யாஹரதாநேந ந கிஞ்சித₃பஶப்₃தி₃தம் ॥

[ருக்₃வேத₃த்தை ஓதி அடக்கத்தைப் பெறாதவனுக்கும், யஜுர் வேத₃த்தை ஓதி த₄ரிக்காதவனுக்கும், ஸாமவேத₃த்தை ஓதி அறிவுபெறாதவனுக்கும் இவ்வண்ணமாகப் பேச இயலாது. எல்லா இலக்கணநூல்களும் இவனாலே பலமுறை கேட்கப்பட்டுள்ளதென்பது தெளிவு. (ஏனெனில்) மிகுதியாகப்பேசும் இவனால் ஒரு சொல்லும் தவறாகக் கூறப்படவில்லையன்றோ.]

326. நாரா: 214-4; 219-6 [நாராயணஶப்₃த₃த்தின் முற்பகுதி]

நாரா:

[நித்யமான பொருள்களின் திரள்கள்.]

327. நாராயணபரம் 37-3; 45-6 [தை-நா 11]

நாராயணபரம் ப்3ரஹ்ம தத்வம் நாராயண: பர: ।
நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர: ॥

[நாராயணனே பரப்3ரஹ்மம்; நாராயணனே பரதத்துவம்; நாராயணனே பரஞ்சோதி; நாராயணனே பரமாத்மா.]

328. நாராயணபரா வேதா3: 371-6 [பா4கவதம் 2-5-15]

நாராயணபரா வேதா3 தே3வா நாராயணாங்க3ஜா: ।
நாராயணபரா லோகா நாராயணபரா மகா2: ॥

[வேத3ங்கள் நாராயணனைச் சொல்லுபவை; தே3வர்கள் நாராயணனுடைய அங்க3த்திலிருந்து உண்டானவர்கள்; நாராயணனைப் பற்றியிருப்பவை உலகங்கள்; யாக3ங்கள் நாராயணனை ஆராதி4ப்பவை.]

329. நாராயணமுபாக3மத் 125-3; 131-4; 140-1; 145-4; 148-2; 151-1 [ரா-அ 6-1]

க3தே புரோஹிதே ராம: ஸ்நாதோ நியதமாநஸ: ।
ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாக3மத் ॥

[புரோஹிதர் சென்றவுடன் ராமன் குளித்து மனத்தை அடக்கி, பரந்த கண்களையுடைய பத்னியுடன் கூடினவனாய், நாராயணனை (ஆராத4னம் செய்ய) அணுகினான்.]

330. நாராயணஶப்3 37-1; 45-5 [பா4ர—விஷ்ணு ஸஹஸ்ரநாமம்]

ஆர்த்தா விஷண்ணா: ஶிதி2லாஶ்ச பீ4தா:
கோ4ரேஷு ச வ்யாதி4ஷு வர்த்தமாநா: ।
ஸங்கீர்த்ய நாராயணஶப்3த3மாத்ரம்
விமுக்தது3:க்கா2ஸ் ஸுகி2நோ ப4வந்தி ॥

[இழந்த செல்வத்தைப்பெற விரும்புபவர்களும், புதிய செல்வம் பெறவிரும்புபவர்களும், பகவானை அடையாது ஆத்மாநுப4வத்தை விரும்புபவர்களும், ஸம்ஸாரத்துக்கு அஞ்சினவர்களும், ப4யங்கரமான வியாதியுள்ளவர்களும் நாராயண ஶப்3த3த்தை மட்டும் கீர்த்தனம் பண்ணி ஸகல து3:க்க2ங்களினின்றும் விடுபட்டு ஸுக2மடைகிறார்கள்.]

331. நாராயணஸ்த்வம் 528—3 ?

நாராயணஸ்த்வம்

[நீ உன்னிடமிருந்து தோன்றிய நாரங்களுக்கு ஆதா4ரமாகவும், ஆத்மாவாகவும் முள்ள நாராயணன்,]

332. நாராயணாய நம; 6—2 [ஸ்ரீவைகுண்ட2 க3த்3யம் 3]

தூ3ராதே3வ ப4க3வந்தம் 'ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:'

இதி ப்ரணம்ய உத்தா₂ய உத்தா₂ய புந: புந: ப்ரணம்ய

[ப₄க₃வானை 'எல்லாப்பரிவாரங்களோடும் கூடிய ஸ்ரீமந்நாராயணனுக்கு நமஸ்காரம்' என்று சொல்லி நெடுந்தூரத்திலிருந்தே த₃ண்ட₃னிட்டு, (மேலே செல்லும்போது) எழுந்திருந்து எழுந்திருந்து மறுபடியும் மறுபடியும் த₃ண்ட₃னிட்டுக் கொண்டே சென்று.]

333. நாரீணுமுத்தமா 171—1; 177—3; 179—2; 298—1; 303—1; 306—2; 308—1 [ரா—பா₃ 1—27, 28]

ஸர்வலக்ஷண ஸம்பந்நா நாரீணுமுத்தமா வதூ₄: ।
ஸீதாப்யநுக₃தா ராமம் ஶஶிநம் ரோஹிணீ யதா₂ ॥

[பெண்களுக்குரிய எல்லா லக்ஷணங்களும் உடையவளும், மிகச்சிறந்த பெண்ணுமான ஸீதை, சந்திரனை ரோஹிணி பின்தொடர்வதுபோலே ராமனை வனத்திற்குப் பின்தொடர்ந்தாள்.]

334. நாஸௌ புருஷ 31—5 [லக்ஷ்மீதந்த்ரம் 18—10, 11]

நாஸௌ புருஷகாரேண ந சாப்யந்யேந ஹேதுநா ।
கேவலம் ஸ்வேச்ச₂யைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதா₃சந ॥

[இத்தகைய நான் புருஷகாரத்தினுலோ, வேறு காரணத்தினுலோ அல்லாமல் எனது இச்சை ஒன்றினுலேயே ஒரு சேதனனை ஒரு சமயம் கடாக்ஷிக்கிறேன்.]

335. நாஸ்திக: புரா 215—3; 220—1; 378—1 [ஸாத்வத 16—28]

து₃ராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்₄நோ நாஸ்திக: புரா ।
ஸமாஶ்ரயேதா₃தி₃தே₃வம் ஶ்ரத்₃த₄யா ஶரணம் யதி₃ ॥
நிர்தோ₃ஷம் வித்₃தி₄ தம் ஜந்தும் ப்ரபா₄வாத் பரமாத்மந: ॥

[அநாதி₃காலமாக ஒருவன் கெட்ட ஒழுக்கமுள்ளவனுகவும், எதையும் சாப்பிடுபவனுகவும், செய்ந்நன்றி மறந்தவனுகவும், நாஸ்திகனுகவும் இருந்தபோதிலும், ஆதி₃தே₃வனுகிற ப₄க₃வானை ஶ்ரத்₃தை₄யுடன் ஶரணமடைவானுகில், அந்த மனிதனை, பரமாத்மாவினுடைய மஹிமையினுலே தோ₃ஷமற்றவனுக அறிவாயாக.]

336. நாஹாரயதி 172 வது ப்ரமாணம் காண்க.

337. நிகாமே நிகாமே 87—1 [யஜுர்-கா 7-5-44]

நிகாமே நிகாமே ந: பர்ஜந்யோ வர்ஷது

[நாம் விரும்பிய போதெல்லாம் மழைக்கு அதி₄தே₃வதையான பர்ஜந்யன் மழைபொழியட்டும்.]

338. நித்யகிங்கர: 342—1 [ஸ்தோ-ர 46]

ப₄வந்தமேவாநுசரந் நிரந்தரம் ப்ரஶாந்தநிஶ்ஶேஷமநோரதா₂ந்தர: ।
கதா₃ऽஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத₂ஜீவித: ॥

[உன்னையே இடைவிடாமல் அனுஸரித்துக்கொண்டு மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனுய், ஒருபடிப்பட்டதாய், நித்யமான கைங்கர்யத்தை உடையவனுய், ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனுய், என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப்போகிறேன்?]

339. நித்யாஞ்ஜலிபுடா: 307—வது ப்ரமாணம் காண்க.

340. நித்யாபி₄வாஞ்சி₂த 162—1; 262-1; 266-1 [ஸ்ரீவைகுண்ட₂ஸ்தவம்—77]

கைங்கர்யநித்யநிரதைர் ப₄வதே₃கபோ₄கைர்
நித்யைரநுக்ஷண நவீநரஸார்த்₃ரபா₄வை: |
நித்யாபி₄வாஞ்சி₂தபரஸ்பரநீசபா₄வைர்
மத்₃தை₃வதை: பரிஜனைஸ்தவ ஸங்க₃ஸீய ||

[கைங்கர்யத்திலேயே எப்போதும் ஈடுபட்டிருப்பவர்களும், உன்னையே போ₄க்₃யமாகக் கொண்டிருப்பவர்களும், க்ஷணந்தோறும் புதிது புதிதாக விளைகின்ற ப₄க₃வத₃நுப₄வத்தால் உருகுகின்றவர்களும், எப்போதும் ஒருவருக்கொருவர் அடிமையாயிருப்பதை ஆசைப்படுபவர்களும், எனக்குப் பூஜிக்கத்தக்கவர்களும், உன்னுடைய பரிஜனங்களுமான நித்யர்களுடன் கூடப்பெறுவேனுக.]

341. நித்யைவைஷா 370—4 [வி. பு. 1—8—17]

நித்யைவைஷா ஜக₃ந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ |
யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணுஸ் ததை₂வேயம் த்₃விஜோத்தம ||

[ஜக₃ந்மாதாவாய், விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவளாய், இறையும் அகலகில்லாதவளான இந்தப் பிராட்டி நித்யையே. ப்₃ராஹ்மணோத்தமரே! எப்படி ப₄க₃வான் ஸர்வவ்யாபியாயிருக்கிருனே, அப்படியே இவளும் ஸர்வ வ்யாபினியாயிருக்கிருள்.]

342. நிதி₃த்₄யாஸிதவ்ய: 445-2; 455-1; 456-6 [ப்₃ருஹ 6—5—6]

ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்ய:
ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி₃த்₄யாஸிதவ்ய: ||

[கேட்கத்தக்கதும், நினைக்கத்தக்கதுமான ஆத்மா தியானிக்கத்தக்கது. பார்க்கத்தக்கது.]

343. நிரஞ்ஜந: 428-3; 440-8; 449-2 [முண்ட₃க 3-1-3]

யதா₃ பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீஶம் புருஷம் ப்₃ரஹ்மயோநிம் |
ததா₃ வித்₃வாந் புண்யபாபே விதூ₄ய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி ||

[ப்ரஹ்மஜ்ஞானியானவன், ஸ்வர்ணம்போல் ஒளியுள்ளவனும், ஜகத்தை ஸ்ருஷ்டித்து நியமிப்பவனும், பிரமனுக்கும் காரணபூ₄தனனவனுமான புருஷனை எப்போது பார்க்கிருனே, அந்த ஞானி புண்யபாபங்களை உதறி, ப்ரக்ருதிஸம்பந்தமற்றவனுய், ப்ரஹ்மத்துடன் மேலான ஸாம்யத்தை அடைகிருன்.]

344. நிர்த்தோ3ஷம் 335—வது ப்ரமாணம் காண்க.

345. நிவாஸவ்ருக்ஷ: 112—4; 115-2 [ரா-கி 15—19]

நிவாஸவ்ருக்ஷ: ஸாதூ4நாம் ஆபந்நாநாம் பரா க3தி: |
ஆர்த்தாநாம் ஸம்ஶ்ரயஶ்சைவ யஶஸஶ்சைகபா4ஜநம் ||

[ஸ்ரீராமபிரான் நல்லோர்கள் களைப்பாறும் நிழல்தரு மரமாயிருப்பவன்; ஆபத்தடைந்தவர்களுக்கு மேலான தஞ்சமாயிருப்பவன்; வருந்தியவர்கள் சேருமிடமாயிருப்பவன்; புகழுக்கு ஒரே இருப்பிடமாயிருப்பவன்.]

346. நிவேத3யத 67-2; 78-2, 281-7; 291-4; 527-1 [ரா-யு 17-15]

நிவேத3யத மாம் க்ஷிப்ரம் விபீ4ஷணமுபஸ்தி2தம் |
ஸர்வலோகஶரண்யாய ராக4வாய மஹாத்மநே ||

[எல்லா உலகினராலும் ஶரணமடையத்தக்கவராய், பெரும் குணவாளரான ஸ்ரீராமபிரான் பொருட்டு, (அவரை) வந்தடைந்திருக்கிற விபீஷணனென்னும் பெயரையுடைய என்னை, விரைவில் அறிவியுங்கள்.]

347. நிஸ்ருஷ்டாத்மா 289-1 [ரா-யு 17—34]

த்வம் ஹி ஸத்யவ்ரதஶ் ஶூரோ தா4ர்மிகோ த்3ருட4விக்ரம: |
பரீக்ஷ்யகாரீ ஸ்ம்ருதிமாந் நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச ||

[நீர் பழுதாகாத விரதத்தையுடையவர்; சூரர்; தா4ர்மிஷ்ட2ர்; திடமான பராக்ரமமுள்ளவர்; (எல்லாமறிந்தவராயிருந்தும்) ஆலோசித்துக் காரியங்களைச் செய்பவர்; (உம்மிடம் ஆஶாலேஶம் உடையவரையும்) எப்போதும் நினைவிற்கொண்டிருப்பவர்; நண்பர்களுக்குத் தம்மையே கொடுப்பவர்,]

348. நிஸ்ஸ்வநம் சக்ரவாகாநாம் 160-1; 163-1; 164-2 [ரா-கி 30—10]

நிஸ்ஸ்வநம் சக்ரவாகாநாம் நிஶம்ய ஸஹசாரிணும் |
புண்ட3ரீக விஶாலாக்ஷீ கத2மேஷா ப4விஷ்யதி ||

[இணையாயிருக்கும் சக்ரவாகப்பறவைகளின் ஒலியைக்கேட்டு, தாமரைத்தடங்கண்ணியான இந்த ஸீதை என்னபாடு படுவாளோ?]

349. நிலமேக4நிப4 48-5 [வரத3ராஜ 23.]

நீலமேக4நிப4மஞ்ஜநபுஞ்ஜ ஶ்யாமகுந்தளமநந்தஶயம் த்வாம் |
அப்3ஜபாணிபத3மம்பு3ஜநேத்ரம் நேத்ரஸாத்குரு கரீஶ ஸதா3 மே ||

[அத்திகிரியப்பனே! கார்முகில் போன்றவனும், மைவண்ணக்கருங்குழலையுடையவனும், திருவநந்தாழ்வான்மீது பள்ளிகொள்பவனும், தாமரைபோன்ற திருக்கைகளையும், திருவடிகளையும் உடையவனும், தாமரைபோன்ற திருக்கண்களைக் கொண்டவனுமான உன்னை எப்போதும் அடியேனது கண்ணுக்கு இலக்காக்கியருள்வாய்.]

350. நீளா குலேந 3-2; 518-1 [ஸுந்தரபாஹு 107.]

ஹே ஸுந்தரைகதரஜந்மநி க்ருஷ்ணபாவே
த்வே மாதரௌ ச பிதரௌ ச குலே அபி த்வே।
ஏகக்ஷணாதநுக்ருஹிதவத: பலம் தே
நீளா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச॥

[அழகனே! கண்ணனாய் அவதரித்தபோது, ஒரே பிறவியில் இரு தாய் தந்தையரையும், இரு குலங்களையும் ஓரிரவில் ஒரு கணத்திலேயே ஏற்றுக் கொண்ட உனக்குப் பயனாயமைந்தது யாதெனில்; குலத்துக்குத்தக்க மனைவியராக நப்பின்னையும், ருக்மிணியும் அமைந்ததேயாகும்.]

351. நூநம் வ்யாகரணம் 325-வது ப்ரமாணம் காண்க.

352. நோபஜநம் 313-2; 322-1; 328-2 [சாந் 8-12-3]

நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்

[ஜனங்களுக்கு அருகிலிருக்கும் இந்த சரீரத்தை முக்தியடைபவன் காண்பதில்லை]

353. நோபேக்ஷணம் 500-2 217-வது ப்ரமாணம் காண்க.

ப

354 பக்ஷிணோऽபி ப்ரயா 145-1; 150-4 [ரா-அ 45-31.]

நிஶ்சேஷ்டாஹாரஸஞ்சாரா வ்ருக்ஷைகஸ்தநிஷ்டிதா:।
பக்ஷிணோऽபி ப்ரயாசந்தே ஸர்வபூதாநுகம்பிநம்॥

[செயலும், உணவும், பறத்தலுமில்லாதவையாய், மரத்தில் ஒரே இடத்தில் இருப்பவையான பறவைகளும், எல்லா ஜீவராசிகளிடமும் இரக்கம் காட்டிய இராமனை (வனத்திற்குச் செல்லாதே என்று) யாசித்துக் கூவுகின்றன.]

355. பதாகாபிரலங்க்ருதாம் 284—5 [ரா-அ 7-3.]

அயோத்யாம் மந்தரா தஸ்மாத் ப்ராஸாதாதந்வவைக்ஷத।
பதாகாபிர் வரார்ஹாபிர்த்வஜைஶ்ச ஸமலங்க்ருதாம்॥

[அந்தக் கைகேயியின் மாளிகையின் மேலிருந்து மந்தரை என்னும் கூனி சிறந்த தோரணங்களாலும், கொடிகளாலும் அலங்கரிக்கப்பெற்ற அயோத்தி மாநகரைப் பார்த்தாள்.]

356. பதிம் விஶ்வஸ்ய 4-14; 31-6; 203-7; 339-6; 343-7; 346-3; 365-1; 371-1; 376-1 384-1 [தை-நா—11]

பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ... நாராயணம்

[உலகத்துக்கெல்லாம் பதியாயிருப்பவனும், தனக்குத்தானே ஈஶ்வரனாயிருப்பவனும் நாராயணனே.]

357. பதிஸம்மாநிதா 84-வது ப்ரமாணம் காண்க.

358. பதிஸம்யோக 17-1; 21-1; 211-4; 213-1; 215-5 [ரா-அ 118-34]

பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா ।
சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா ॥

[என்னை ஓர் கணவனோடு சேர்க்கவேண்டிய பருவம் வந்துவிட்டதைப் பார்த்த என் தந்தையான ஜனகர், (கடலில் மூழ்கிக் கரையேறுவதற்கு) ஓடமும் இல்லாதவனைப்போலே கவலைக்கடலில் மூழ்கிக் கரையேறுமலிருந்தார்.]

359. பத்ரம் புஷ்பம் 129-8 [கீதை 9-26]

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அஶ்நாமி ப்ரயதாத்மந: ॥

[ஓரிலையாவது, மலராவது, பழமாவது, ஜலமாவது எவனொருவன் எனக்கு பக்தியுடன் கொடுக்கிறானோ, மனஸ்ஸை அடக்கிய அந்த பக்தனாலே பக்தியுடன் அளிக்கப்பட்ட அவற்றை (கிடைத்தற்கரியது கிடைத்தாற்போலே) உண்கிறேன்.]

360. பத்ப்யாமபி 123-8; 129-2; 133-7; 138-8; 173-2; 178-4; 180-6; 355-3; 507-1; 514-2; 524-2; 526-6 [ரா-அ 50-41].

அர்ச்சிதாஶ்சைவ ஹ்ருஷ்டாஶ்ச பவதா ஸர்வதா வயம் ।
பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்ஶநேந ச ॥

[காலால் நடந்து வந்ததன்மூலமும், அன்பைக்காட்டியதன் மூலமும் உன்னால் நாங்கள் பூஜிக்கப்பட்டோம்; உகப்படைந்தோம்.]

361. பரமம் ஸாம்ய 348-வது ப்ரமாணம் காண்க.

362. பரமாத்மநி 254—2 [பார்ஹஸ்பத்யஸ்ம்ருதி.]

பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோऽபரமாத்மநி ।
ஸர்வேஷணாவிநிர்முக்தோ ஸ பைக்ஷம் போக்துமர்ஹதி ॥

[எவனொருவன் பரமாத்மாவிடம் பெருங்காதல் கொண்டிருக்கிறானோ, மற்ற பொருள்களில் வைராக்யமுடையவனாயிருக்கிறானோ, (அக்காரணத்தினாலேயே) புத்ரேஷணை, வித்தேஷணை, தாரேஷணை என்னும் (பிள்ளை பணம் மனைவிகளில் ஆசையாகிற) மூன்று ஈஷணைகளையும் விட்டிருக்கும் அவன் ஸந்யாஸி ஆவதற்கு உரியவன்.]

363. பரமாநந்தம் 4-5 [க்ருஷ்ணாஷ்டகம்]

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூரமர்த்தநம் ।
தேவகீபரமாநந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் ॥

[வஸுதேவர்பிள்ளையாய், கம்ஸசாணூரர்களை அழித்தவனாய், தேவகிக்குப் பரமானந்தத்தை விளைப்பவனாய், உலகிற்கே ஆசாரியனான கண்ணனாகிற தேவனை வணங்குகிறேன்.]

364. பரவாநஸ்மி 4-10; 344-6; 346-10. [ரா - அ 15-7]

பரவாநஸ்மி காகுத்ஸ்த2 த்வயி வர்ஷஶதம் ஸ்தி2தே ।
ஸ்வயந்து ருசிரே தே3ஶே க்ரியதாமிதி மாம் வத3 ॥

[ராம! அடியேன் பரதந்த்ரன்; தேவரீர் பல்லாண்டு வாழினும் பரதந்த்ர ஞகவே இருப்பேன். தேவரீர் திருவுள்ளத்திற்குப் பாங்கான அழகிய இடத்தில் 'ஆச்ரமம் அமைத்திடுக' என்று அருளிச்செய்யவேணும்.]

365. பரஸ்பரநீச 340-வது ப்ரமாணம் காண்க.

366. பரஸ்பரம்தத்3 287-4; 246-2 ?

லோகாம்ஶ்ச லோகாநுக3தாந் பஶூம்ஶ்ச
ஹித்வா ஶ்ரிதாஸ் த்வச்சரணாதபத்ரம் ।
பரஸ்பரம் தத்3கு3ணவாத3ஶீது4-
பீயூஷநிர்யாபித தே3ஹயாத்ரா: ॥

[இவ்வுலகங்களேயும் உலகிலுள்ள ஜந்துக்களேயும் விட்டு, உன் திருவடி நிழலின்கீழ் ஒதுங்கிஞேம். அத்திருவடிகளின் திருக்குணங்களை ஒருவருக் கொருவர் சொல்லுகையாகிற மயங்வைக்கும் அம்ருதத்திஞல் தே3ஹயாத்ரையை நடத்திப் போராநிற்கிரேம்.]

367. பரித்யக்தா 81-2; 228-2; 282-2; 388-1 [ரா-யு 19-5]

பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச த4நாநி ச ।
ப4வத்3க3தம் மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுகா2நி வை ॥

[என்னலே, இலங்கையரசும் கைவிடப்பட்டது; நண்பர்களும், செல்வங் களும் கைவிடப்பட்டன; என்னுடைய அரசும், உயிரும், ஸுகங்களும் தேவரீரிடம் அடங்கியுள்ளன.]

368. பரித்யஜ்ய 124-வது ப்ரமாணம் காண்க.

369. பரித்ராணய 168-4; 372-3 [கீ3தை 4-8]

பரித்ராணய ஸாதூ4நாம் விநாஶாய ச து3ஷ்க்ருதாம் ।
த4ர்மஸம்ஸ்த2ாபநார்த்த2ாய ஸம்ப4வாமி யுகே3 யுகே3 ॥

[நல்லோர்களே நன்கு ரக்ஷிப்பதன் பொருட்டும், தீயவர்களேச் சித்ரவதை செய்து அழிப்பதன் பொருட்டும், அறத்தை நன்கு நிலைநிறுத்துவதன் பொருட் டும் அந்தந்த யுகங்களில் பலபடியாகப் பிறக்கிறேன்.]

370. பரிஹர 100-2; 101-1; 107-3; 108-1; 118-6 [வி. பு 3-7-14]

ஸ்வபுருஷமபி4வீக்ஷ்ய பாஶஹஸ்தம்
வத3தி யம: கில தஸ்ய கர்ணமூலே ।
பரிஹர மது4ஸூத3நப்ரபந்நாந்
ப்ரபு4ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம் ॥

[பாஶத்தைக் கையில் கொண்டிருக்கும் தன் தூ₃தனைக் கண்ணால் சைகை செய்தழைத்து, அவனுடைய காதினுள் யமன் பின்வருமாறு சொல்லலுற்றான்:— ''மது₄ஸூத₃னனை ஶரணமடைந்தவர்களை அணுகாதே; நான் மற்ற மனிதர் களுக்கு ப்ரபு₄வேயொழிய வைஷ்ணவர்களுக்கல்ல'']

371. பர்யாயேண 334-2; 341-3; 345-2; 347-2 [ரா-ஸு 38-21]

பரிஶ்ரமாத் ப்ரஸுப்தா ச ராக₄வாங்கேऽப்யஹம் சிரம் |
பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச மமாங்கே ப₄ரதாக்₃ரஜ: ||

[ராக₄வனுடைய திருத்தொடையில், நான் களைப்பினால் வெகுநேரம் தூங்கினேன். ப₄ரதனுடைய தமையனாரான அவரும் என் தொடையில் தூங்கினார்.]

372. பர்வதாதி₃வ 395-1; 404-5; 406-5 [ரா-அ 16-26]

பர்வதாதி₃வ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கி₃ரிகு₃ஹாஶய: |
லக்ஷ்மணம் த்₃வாரி ஸோऽபஶ்யத் ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்தி₂தம் ||

[அந்த ராமபிரான் மலைக்குகையில் வாழும் சிங்கம் அம்மலைக்குகையிலிருந்து புறப்பட்டு வருவதுபோலே தன் மாளிகையிலிருந்து புறப்பட்டு, வாசலில் வணங்கிக் கைகூப்பிநின்ற லக்ஷ்மணனைக் கண்டான்.]

373. பாதே₂யம் புண்ட₃ரீ 64-1; 238-1; 242-3; 246-3 [க₃ருட₃ புராணம்]

க₃ச்ச₂தாம் தூ₃ரமத்₄வாநம் த்ருஷ்ணாமூர்ச்சி₂தசேதஸாம் |
பாதே₂யம் புண்ட₃ரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம் ||

[(ஜீவன் மரணமடைந்தபின்) வெகுதூரம் நடந்ததால் பசிதாகங்களால் மயக்க மடைந்த ஜீவனுக்குத் தாமரைக்கண்ணனின் திருநாமஸங்கீர்த்தனமாகிற அமுதமே கட்டுச்சோறாகும்.]

374. பாதே₃நாத்₄ய 333-1; 340-1; 344-4; 346-8 [கௌஷீதகீ 1—49, 50, 51]

உத்₃கீ₃த₂ உபஶ்ரீ: ஶ்ரீருபப₃ர்ஹணம் | தஸ்மிந் ப்₃ரஹ்ம
ஆஸ்தே | தமித்த₂ம்வித் பாதே₃நாத்₄யாரோஹதி ||

[உத்₃கீ₃த₂மந்திரத்திற்கு அதி₄தே₃வதை (படுக்கைவிரிப்பாக) ஶ்ரீ தே₃வியின் அரு கில் உள்ளது: ஶ்ரீதே₃வியானவள் காலுக்கு அணையாக எழுந்தருளியிருக்கிறாள்; (ஆதிசேஷனாகிற) அப்படுக்கையில் ப்₃ரஹ்மம் எழுந்தருளியிருக்கிறது; ஞானி யான முக்தன் அப்படுக்கையின்மேல் அடியிட்டு ஏறுகிறான்.]

375. பாபாநாம் வா 289 வது ப்ரமாணம் காண்க.

376. பாபிஷ்ட₂: 276-1; 282-3; 292—1 ?

பாபிஷ்ட₂: க்ஷத்ரப₃ந்து₄ஶ்ச புண்ட₃ரீகஶ்ச புண்யக்ருத் |
ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதா₃சார்யவாந் ப₄வேத் ||

[மிகப்பாபம் செய்த க்ஷத்ரப₃ந்து₄வும், மிகப்புண்ணியசாலியான புண்ட₃ரீகனும்

ஸத்3ஆசார்ய ஸம்ப3ந்த4த்தாலேயே மோக்ஷமடைந்தனர். ஆகையால் (ஒவ்வொரு மனிதனும்) நல்ல ஆசாரியனை அடையவேண்டும்.]

377. பாபீயஸோऽபி 217 வது ப்ரமாணம் காண்க.

378. பாவநஸ்ஸர்வ 25-2; 39-3; 128-1 [ரா உத் 82-9.]

பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு4நந்த3ந

[ரகு4நந்த3னு! நீயே எல்லா உலகங்களையும் பரிஶுத்3த4ப்படுத்துபவன்]

379. பிதாமஹம் நாத2 322 வது ப்ரமாணம் காண்க.

380. பிது: 188-1 [ரா—ஸு 28—14]

பிதுர் நிதே3ஶம் நியமேந க்ருத்வா வநாந்நிவ்ருத்தஶ் சரிதவ்ரதஶ்ச ।
ஸ்த்ரீபி4ஸ்து மந்யே விபுலேக்ஷணாபி4: த்வம் ரம்ஸ்யஸே வீதப4ய: க்ருதார்த்த2: ॥

[தந்தையின் ஆணையை நன்கு நிறைவேற்றிவிட்டு வனவாஸ வ்ரதம் நிறைவேறிக் காட்டிலிருந்து திரும்பியவுடன், பயமற்றவராய் தடங்கண்ணிகளான ஸ்த்ரீகளோடு இன்புற்று வாழ்க்கைப் பயனை அடைவீர் என எண்ணுகிறேன்.]

381. புண்யாநாமபி 481-2; 493-3 [பா4ர-வந 88-27]

பவித்ராணாம் ஹி கோ3விந்த3: பவித்ரம் பரமுச்யதே ।
புண்யாநாமபி புண்யோऽஸௌ மங்க3ளாநாஞ்ச மங்க3ளம் ॥

[பரிசுத்தமானவைகளுள் கோவிந்தன் மேலான பரிசுத்தப் பொருளாகச் சொல்லப்படுகிறான்; புண்யங்களினுள்ளும் மிகப் புண்யமானவன் இவனே; மங்களங்களுக்குள் மிக மங்களமானவன் இவனே.]

382 புத்ரஸ்தே ஜாத: 105—1; 111—2; 113—1; 115—3 [உலகவழக்கு]

புத்ரஸ்தே ஜாத:

[உனக்குப் பிள்ளை பிறந்திருக்கிறான்]

383. புத்ரேண ஸஹ 463—2 [பே4ாக்த்ருஸாஹசர்ய த்3ருஷ்டாந்தம்; இதற்கு எதிர்த்தட்டான பே4ாக்3யஸாஹசர்யத்திற்கு த்3ருஷ்டாந்தம் "பயஸா ஸஹ ஓத3நம் பு4ங்க்தே" (பாலோடுகூட உணவை உண்கிறான்)]

புத்ரேண ஸஹ ஓத3நம் பு4ங்க்தே

[பிள்ளையோடு கூட (தந்தை) உணவை உண்கிறான்.]

384. புந்நாம்நோ 440—7 [புத்ரஶப்3த3வ்யுத்பத்தி]

புந்நாம்நோ நரகாத் த்ராயத இதி புத்ர:

['புத்' என்னும் நரகத்தைத் தந்தை அடையாமல் காக்கிறானுகையால் பிள்ளை 'புத்ரன்' எனப்படுகிறான்.]

385. பூர்ப4ாவம் 211-5; 215-6; 217-6; 220-5 [பா4ர—உத்3

பாஞ்சால்யா: பத்3ம பத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா ஜக4நம் க4நம் ।
யா: ஸ்த்ரியோ த்3ருஷ்டவத்யஸ் தா: பும்ப4ாவம் மநஸா யயு: ॥

[தாமரையிதழ்போன்ற கண்ணேயுடைய பாஞ்சாலராஜகுமாரியான த்3ரௌபதி குளிக்கும்போது அவளது அல்குலேக்கண்ட ஸ்த்ரீகள் [இவளே மனைவியாகப் பெறலாம்படி] புருஷனுகப் பிறக்கப்பெற்றிலோமே என்று மனத்தால் நினேத்தனர்.]

386 பும்ஸாம் த்3ருஷ்டி 25-3, 39-4; 211-6; 215-7; 220-6 [ரா—அ 3—29]

ரூபௌதா3ார்யகு3ணை: பும்ஸாம் த்3ருஷ்டிசித்தாபஹாரிணம்

[வடிவழகு, வண்மை, கு3ணங்கள் முதலியவற்ருல் ஆண்களின் கண்ணேயும் நெஞ்சையும் அபஹரிக்கும் ராமனே.]

387. புருஷர்ஷப4: 108-4; 114-4; 343-6; 402-2 [ரா—ஸு 21—19]

மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தா2நம் பரீப்ஸதா ।
வத4ம் சாऽநிச்ச2தா கோ4ரம் த்வயாऽஸௌ புருஷர்ஷப4: ॥

[(ராவண!) நீ உன்னுடைய குடியிருப்பை விரும்பினுயாகில், கோ4ரமான வத4த்தை விரும்பாமலிருந்தாயாகில், இந்தப் புருஷஶ்ரேஷ்ட2ரான ஸ்ரீராமபிரானே நண்பனுகக்கொள்வது தகுந்தது.]

388. புருஷார்த்தோ2 61-2; 70-7; 77-5 [பா4ரதம் ?]

புருஷார்த்தோ2ऽயமேவைகோ யத் கதா2ஶ்ரவணம் ஹரே:

[(மஹாபா4ரதத்தைக் கேட்டதில் எனக்குப் பயனுக நெஞ்சில் பட்டது, அறம் பொருள் இன்பம் வீடுகளன்று; ஆனல்) நீர் ப4க3வானின் சரிதத்தைச் சொல்ல, நான் அதைக்கேட்டதொன்றே எனக்குப் பயனுகப் படுகிறது; (பா4ரதம் சொன்ன வைசம்பாயனரிடம், அதைக்கேட்ட ஜநமேஜயன் சொன்ன வாக்யம் இது.)]

389. பூர்வம் ஸதூ3ர்வம் 13—2. [வரத3ராஜ-69]

த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்3தே4!
ஜ்ஞாநக்ரியாப4ஜநலப்4யமலப்4யமந்யை: ।
ஏதேஷு கேந வரதோ3த்தரகோஸலஸ்தா2:
பூர்வம் ஸதூ3ர்வமப4ஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம் ॥

[கருணேக்கடலான வரதனே! (வியாஸர் முதலான கவிகள் உன்னே ஜ்ஞாநயோக3 கர்மயோக3 ப4க்தியோக3ங்களால் அடையத்தக்கவனுகவும், வேறு வகையில் அடையமுடியாதவனுகவும் சொல்லிவைத்திருக்கிருர்கள். முன்பு (ஸ்ரீ ராமாவதாரத்தில்) உத்தரகோஸலத்திலுள்ள புல்லீருகவுள்ள ஜீவராசிகள் உன்னே அடைந்தனவன்ருே; அப்படி அடைந்தது கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞாநப4க்தியோக3ங்களுள் எந்த உபாயத்தைக் கொண்டு?]

390. பூர்வஸந்த்4யாயாம் 9 வது ப்ரமாணம் காண்க.

391. பூர்வாம்தி3ஶம் 404-4 [ரா-அ 16-24.]

பூர்வாம் தி3ஶம் வஜ்ரத4ர: த3க்ஷிணாம் பாது தே யம. |
வருண: பஶ்சிமாமாஶாம் த4நேஶஸ் தூத்தராம் தி3ஶம் ||

[வஜ்ரத்தை த4ரிக்கும் இந்திரன் உன்னைக் கீழ்த்திசையிலும், யமன் தெற்குத் திசையிலும், வருணன் மேற்குத்திசையிலும். த4னபதியான குபே3ரன் வடக்குத் திசையிலும் ரக்ஷிப்பார்களாக.]

392. ப்ரக்ருதிம் ஶ்லோகம் 11 வதுப்ரமாணம் காண்க.

393. ப்ரக்ருஷ்டவிஜ்ஞாந 148-3; 152-1 [ஸ்தோ-ர 39]

தயா ஸஹாஸீநமநந்தபோ4கி3நி ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநப3லைகதா4மநி |
ப2ணாமணிவ்ராதமயூக2மண்ட3ல ப்ரகாஶமாநோத3ரதி3வ்யதா4மநி ||

[மேலான ஞானத்திற்கும், ப3லத்திற்கும் நிகரற்ற இருப்பிடமானவனும், தன்படங்களிலிருக்கும் மணிஸமூஹங்களுடைய கிரணமண்ட3லங்களாலே ஒளி விடும் மத்4யப்ரதே3ஶத்தையுடைய தி3வ்யாந்த:புரத்தை உடையவனுமான திருவநந்தாழ்வானுடைய திருமேனியில் அந்தப்பிராட்டியுடன் கூட எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை.]

394. ப்ரஜாஸுகத்வே 25-4 [ரா-அ 2-30]

ப்ரஜாஸுக2த்வே சந்த்3ரஸ்ய வஸுதா4யா: க்ஷமாகு3ணை: |
பு3த்3த்4யா ப்3ருஹஸ்பதேஸ்துல்யோ வீர்யே ஸாக்ஷாத் ஶசீபதே: ||

[(ஸ்ரீராமபிரான்) குடிகளுக்கு இனியவனுயிருப்பதில் சந்திரனையும், பொறுமைக் குணத்தில் பூ4மியையும், அறிவில் தே3வகுரு3வான பிருஹஸ்பதியையும், வீர்யகு3ணத்தில் ஶசீபதியான இந்திரன் தன்னையும் ஒத்தவன்.]

395. ப்ரணயாச்சாபி4 157-2 [ரா-அ 30—2]

ஸா தமுத்தமஸம்விக்3நா ஸீதா விபுலவக்ஷஸம் |
ப்ரணயாச்சாபி4மாநாச்ச பரிசிக்ஷேப ராக4வம் ||

[பெருந்துயரடைந்த அந்த ஸீதை அன்பினாலும், அபி4மானத்தாலும் பரந்த மார்பையுடைய ராக4வனைக் கண்டித்தாள்.]

396. ப்ரணத3ஶ்ச 287-2; 290-3; 293-5 [ரா-யு 18-14. 15]

அவ்யக்3ராஶ்ச ப்ரது3ஷ்டாஸ்தே ந ப4விஷ்யந்தி ஸங்க3தா: |
ப்ராணத3ஶ்ச மஹாநேஷஸ் ததோ2ஸ்ய ப4யமாக3தம் ||
இதி பே4த3ம் க3மிஷ்யந்தி தஸ்மாத்3க்3ராஹ்யோ விபீ4ஷண: ||

[மிகவும் து3ஷ்டராயிருக்குமவர்கள் பதருதவர்களாய், கூடியிருப்பவர்களுமாயிரார்கள்; (விபீ4ஷணனுடைய) இந்த த்வனியானது பெரிதாயிருக்கிறது. ராவ

ணனிடமிருந்து இவ்விபீஷணனுக்கு பயம் உண்டாயிருக்கிறது. ஆகையால், வேறு பாட்டை அடைவர்கள்; ஆகையால் விபீஷணன் கைக்கொள்ளத் தக்கவனே.]

397. ப்ரதிபு3த்3த4ா ந 73—1 [ப்4ார—மோக்ஷ 350—36]

ப்3ரஹ்மாணம் ஶிதிகண்ட2ஞ்ச யாஶ்சாந்யா தே3வதா: ஸ்ம்ருதா: ।
ப்ரதிபு3த்3த4ா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப2லம் ॥

[பிரமன், சிவன், மற்ற தே3வதைகள் முதலானுரை அவர்களிடமிருந்து கிடைக்கும் ப2லன் அளவுபட்டதாகையால் (நான்காமவர்களான) ப்ரதிபு3த்3த4ர்கள் ஆராதி4க்கமாட்டார்கள்.]

398. ப்ரதே3ஹி ஸுப4கே3 461-2; 472—2; 474-3 [ரா—யு 131-81, 82]

ப்ரதே3ஹி ஸுப4கே3 ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பா4மிநி ।
தேஜோ த்4ருதிர் யஶோ த3ாக்ஷ்யம் ஸாமர்த்2யம் விநயோ நய: ॥
பௌருஷம் விக்ரமோ பு3த்3தி4ர் யஸ்மிந்நேதாநி நித்யதா3 ॥

[அழகியவளே! ஸௌபா4க்3யவதியே! எவனிடம் தேஜஸ்ஸும், தை4ர்யமும், புகழும், திறமையும், வல்லமையும், அடக்கமும், நீதியும், ஆண்மையும், பராக்ரமமும், அறிவும் என்றும் விளங்குகின்றனவோ, எவனிடம் நீ உகந்திருக்கிருயோ, அவனுக்கு இந்த ஹாரத்தை நீயே அளிப்பாய்.]

399. ப்ரவக்ஷ்யாம்யந 26 வது ப்ரமாணம் காண்க.

400. ப்ரஸந்நாதி3த்ய 282-வது ப்ரமாணம் காண்க.

401. ப்ரஸாத3பரமௌ 166-வது ப்ரமாணம் காண்க.

402. ப்ரஸாத3ம் நிம்நகா3 121-2; 127-5; 130-2; 132-3 [வி பு 5-3-4]

ஸந்த: ஸந்தோஷமதி4கம் ப்ரஶமம் சண்ட3மாருதா: ।
ப்ரஸாத3ம் நிம்நகா3 யாதா ஜாயமாநே ஜநார்த்த3நே ॥

[கண்ணன் பிறந்தபோது நல்லவர்கள் பேரானந்த3ம் அடைந்தனர்; புயற் காற்றுகள் அடங்கிநின்றன; (யமுனைமுதலிய) நதி3கள் தெளிவையடைந்தன.]

403. ப்ரஸாத3ஸ்து 36-2 [அமர 1-3-16]

ப்ரஸாத3ஸ்து ப்ரஸந்நதா

[ப்ரஸாத3 ஶப்3த3ம் தெளிவைக்குறிக்கும்.]

404. ப்ரஹர்ஷயிஷ்யாமி 107-1; 112-1; 113-3; 116-1; 176-10 [ஸ்தோ-ர 46]

ப4வந்தமேவாநுசரந் நிரந்தரம் ப்ரஶாந்தநிஶ்ஶேஷமநோரத2ாந்தர: ।
கதா3ாஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத2ஜீவித: ॥

[உன்னையே இடைவிடாமல் அநுஸரித்துக்கொண்டு மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனாய், ஒருபடிப்பட்டதாய் நித்யமான

கைங்கர்யத்தை உடையவனாய், ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனாய், என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப்போகிறேன்.]

405. ப்ரஹர்ஷேண 196-2; 201-3; 204-3 [ரா-யு 116-14]

ஏவமுக்தா ஸமுத்பத்₃ய ஸீதா ஶஶிநிப₄ாநநா ।
ப்ரஹர்ஷேணாவருத்₃த₄ா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந ॥

[சந்திரனையொத்த முகத்தையுடைய ஸீதை ஹனுமானால் இப்படிச் சொல்லப்பட்டவளாய், பேரானந்₃த்தாலே நெருக்குண்டு ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.]

406. ப்ரஹ்ருஷ்டமுதி₃தோ 22-1; 86-2; 95-1 [ரா-ப₃ா 1-90]

ப்ரஹ்ருஷ்டமுதி₃தோ லோக: துஷ்ட: புஷ்ட: ஸுதா₄ர்மிக: ।
நிராமயோ ஹ்யரோக₃ஶ்ச துர்பி₄க்ஷப₄யவர்ஜித: ॥

[(ராமன் அரசாளும்போது) உலகினர் மிகவும் இன்புற்றிருந்தனர்; திருப்தியும், புஷ்டியும் பெற்றிருந்தனர்; நல்லறத்தைக் கடைப்பிடித்தனர்; சரீர வியாதியும், மநோவியாதியுமில்லாமலிருந்தனர்; பஞ்சத்தின் ப₄யமற்றிருந்தனர்.]

407. ப்ரஹ்ருஷ்டோ வாக்ய 370-2 [ரா-ப₃ா 1-6]

ஶ்ருத்வா சைதத் த்ரிலோகஜ்ஞோ வால்மீகேர் நாரதோ₃ வச: ।
ஶ்ரூயதாமிதி சாமந்த்ர்ய ப்ரஹ்ருஷ்டோ வாக்யமப்₃ரவீத் ॥

[வால்மீகியின் இந்த வார்த்தையைக் கேட்டு மூவுலகத்தையுமறிந்த நாரதர் மிகவும் ஆனந்த₃மடைந்தவராய் "சொல்லுகிறேன் கேளும்" என்று கூறிப் பின்வருமாறு சொன்னார்.]

408. ப்ராஜ்ஞேநாத்மநா 208-1 [ப்₃ருஹ 6-3-21]

தத்₃யதா₂ ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்தோ ந
பா₃ஹ்யம் கிஞ்சந வேத₃ நாந்தரம், ஏவமேவாயம்
புருஷ: ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்தோ
ந பா₃ஹ்யம் கிஞ்சந வேத₃ நாந்தரம்

[எப்படி ஒருமனிதன் தன் மனத்துக்கினிய பெண்ணால் அணைத்துக்கொள்ளப் பட்டிருக்கும்போது வெளிப்பொருள்களையும், மனத்திலுள்ள துன்பம் முதலானவற்றையும் அறிவதில்லையோ, அப்படியே எல்லாமறிந்த பரமாத்மாவால்(தூக்கநிலையில்) அணைத்துக்கொள்ளப்பட்டிருக்கும் இந்த ஜீவன் வெளிப்பொருள்களையும், மனத்தினுள்ளிருக்கும் துன்பம் முதலானவற்றையும் அறிவதில்லை.]

409. ப்ரியாவதம்ஸ 462—2; 474-5 [ஸ்தோ—ர 33]

சகாஸதம் ஜ்யாகிணகர்க்கஶைஶ்ஶுபை₄ஶ்
சதுர்ப்பி₄ராஜாநுவிலம்பி₃பி₄ர் பு₄ஜை: ।

ப்ரியாவதம்ஸோத்பலகர்ணபூ₄ஷண-
ஶ்லத₂ாலகாபூ₄ந்த₄விமர்த்த₃ஶம்ஸிபி₄: ||

[நாண்தழும்பேறிக் கரடுமுரடாயிருப்பவையும், சுப₄மானவையும், முழந் தாள்கள் வரை தொங்குகின்றவையும், பிராட்டியின் திருச்செவி மலரான நீலோத்பலபுஷ்பமென்ன, கர்ணபூ₄ஷணமென்ன, அலைந்த திருக்குழற்கற்றை யென்ன இவை அழுந்தியிருப்பதைத் தெரிவிப்பவையுமான நான்கு பு₄ஜங்களாலும் பிரகாசிப்பவனாகவும்.]

410. ப்ரீதிரோத₄மஸ 43-1; 51-3 [ரகு₄வம்சம் 11-52]

ஆஸஸாத₃ மிதி₂லாம் ஸ வேஷ்டயந் பீடி₃தோபவநபாத₃பாம் ப₃லை: |
ப்ரீதிரோத₄மஸஹிஷ்ட ஸா புரீ ஸ்த்ரீவ காந்தபரிபோ₄க₃மாயதம் ||

[அந்த த₃ஶரத₂ன் தன் ஸைன்யங்களாலே நெருக்கப்பட்ட உபவனங்களி லுள்ள மரங்களைக் கொண்ட அந்த மிதிலையை, வளைத்துக்கொண்டு அடைந் தான். நெஞ்சுக்கினியவனோடு நீண்டநேரம் கலவியை (அதனால் விளைந்த இன்ப நெருக்குதலை) யுவதியானவள் பொறுத்துக்கொள்வது போலே, அந்த மிதி லாபுரியும் இன்பத்தால் விளைந்த அந்த நெருக்குதலைப் பொறுத்துக் கொண்டது.]

411. ப்ரீயதே ஸததம் 176-11 [ரா-யு 131-118]

ராமாயணமித₃ம் க்ருத்ஸ்நம் ஶ்ருண்வத: பட₂தஸ் ஸதா₃ |
ப்ரீயதே ஸததம் ராம: ஸ ஹி விஷ்ணு: ஸநாதந: ||

[இந்த ராமாயணம் முழுவதையும் எப்போதும் கேட்பவனிடமும், படிப்பவ னிடமும் ராமபிரான் எப்போதும் பிரியம் வைக்கிறான். அந்த ராமபிரானே யன்றோ பழமையான விஷ்ணு.]

412. ப்ருஷ்ட₂தஸ்து 489-2 [ரா—ஆ 11-1]

அக்₃ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்₄யே ஸுமத்₄யமா |
ப்ருஷ்ட₂தஸ்து த₄நுஷ்பாணி: லக்ஷ்மணோऽநுஜகா₃ம ஹ ||

[ராமன் முதலில் சென்றான்; அழகிய இடையை உடைய ஸீதை இடை யில் சென்றாள். வில்லேந்திய லக்ஷ்மணன் பின்னால் சென்றான்; (இது ப்ரண வம் நடந்து சென்றதுபோல் இருந்தது என்று ரிஷி வியப்படைகிறார்.)]

413. ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து 305-3 ?

இங்கி₃தஜ்ஞாஸ்து மக₃தா₄: ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா: |
அர்த்தோ₄க்தா: குருபாஞ்சாலாஸ் ஸர்வோக்தா த₃க்ஷிணாபதா₂: ||

[மக₃த₄தேசத்தவர்கள் முகக்குறியைக் கொண்டே கருத்தைப் புரிந்து கொள்வார்கள்; பார்வையைக்கொண்டே கோஸலதேசத்தவர்கள் கருத்தைப் புரிந்துகொள்வார்கள்; பாதிசொன்னால் குருபாஞ்சாலதேசத்தவர்கள் புரிந்துகொள் வார்கள்; முழுவதும் சொன்னால்தான் தென்னாட்டவர்கள் புரிந்து கொள்வார்கள்.]

414. ப்ரேஷ்யஸ்ய 560-3 [ரா—கி 36-11]

யதி3 கிஞ்சித3திக்ராந்தம் விஸ்வாஸாத் ப்ரணயேந வா ।
ப்ரேஷ்யஸ்ய க்ஷமிதவ்யம் மே ந கஸ்சிந்நாபராத்4யதி ॥

[நம்பிக்கையாலோ, அன்பாலோ சிறிது தவறு செய்திருந்தாலும், உமது அடியேனான என்னை மன்னிக்கவேண்டும்; (இவ்வுலகில்) குற்றம் செய்யாதவன் எவனுமில்லையே.]

## ப3

415. ப3ஹூ4வ 234-வது ப்ரமாணம் காண்க.

416. ப3லிபு4ஜி 46-1 [ர-ஸ்த 2—97]

ப3லிபு4ஜி ஸிஸுபாலே தாத்3ருகா3க3ஸ்கரே வா
கு3ணலவஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ ।
மயி கு3ணபரமாணூத3ந்த சிந்தாநபி4ஜ்ஞே
விஹரது வரத3ஸௌ ஸர்வதா3 ஸார்வபௌமீ ॥

[வரமளிக்கும் பிரானே! வாயால் சொல்லவொண்ணாத குற்றத்தைச் செய்த காகாஸுரனிடத்திலும், சிசுபாலனிடத்திலும் சிறிது குணமும் இருந்ததால் ஸங்கோசமுடையதான உனது பொறுமைக்குணம் நற்குணத்தின் லவலேசத்திற்கும் இடமேயில்லாத அடியேன்திறத்தில் எப்போதும் செங்கோல் செலுத்திக்கொண்டு விளையாடட்டும்.]

417. ப3லகத4மநி 305-6; 308-2 393-வது ப்ரமாணம் காண்க.

418. ப3ஹவோ து3ர் 214-7 [ரா-பா3 1-7]

ப3ஹவோ து3ர்லப4ாஸ்சைவ யே த்வயா கீர்த்திதா கு3ணா: ।
முநே வக்ஷ்யாம்யஹம் பு3த்3த்4வா தைர் யுக்த: ஸ்ரூயதாம் நர: ॥

[முனிவரே! உம்மால் கீர்த்திக்கப்பட்ட குணங்கள் கிடைத்தற்கரியவையும், பலவுமாயிருக்கும். நான் தெளிந்துநின்று சொல்லுகிறேன். அந்த குணங்களோடு கூடிய மனிதனைக் கேட்பீராக.]

419. ப3ஹவோ ந்ருப 214-6 [ரா—அ 2-26]

ப3ஹவோ ந்ருப கல்யாணகு3ணா: புத்ரஸ்ய ஸந்தி தே ।

[தசரத மன்னனே! உன் புத்ரனாகிய ராமனுக்குப் பல நற்குணங்கள் உள்ளன.]

420. ப3ஹூநாம் 64-2; 72-1; 214-5; 297-2; 301-4 [கீதை 7-19]

ப3ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்3யதே ।
வாஸுதே3வ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது3ர்லப4: ॥

[பல ஜன்மங்களுக்குப் பின் ஜ்ஞானியானவன் "வாஸுதேவனே (எனக்கு)

எல்லாம்'' என்று என்னை உபாஸிக்கிறான். அப்படிப்பட்ட மஹாத்மா மிகவும் கிடைத்தற்கரியவன்.]

421. ப₃ாலா அபி 145-8; 148-1 [ரா-அ 6-16]

ப₃ாலா அபி க்ரீட₃மாநா: க்₃ருஹத்₃வாரேஷு ஸங்க₄ஶ: ।
ராமாபி₄ஷ்டவஸம்யுக்தா: சக்ருரேவ மித₂: கத₂ா: ॥

[வீட்டுவாயில்களில் கூட்டங்கூட்டமாக விளையாடும் பிள்ளைகளும், ராமனைப் புகழ்ந்துபேசும் பேச்சுக்களையே ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு இருந்தனர்.]

422. ப₃ால்யாத் ப்ரப்₄ருதி 10-1; 17-1 [ரா—ப₃ா 18-27]

ப₃ால்யாத் ப்ரப்₄ருதி ஸுஸ்நிக்₃தே₄ா லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்த₄ந: ।
ராமஸ்ய லோகராமஸ்ய ப்₄ராதுர் ஜ்யேஷ்ட₂ஸ்ய நித்யஶ: ॥

[ப₄க்திப்பெருஞ்செல்வம் நிறைந்தவனான லக்ஷ்மணன், எல்லா உலகையும் ஆநந்தி₃க்கச்செய்பவனும், தன் தமையனுமான ராமனிடம் சிறு வயது முதல் எப்போதும் மிகவும் அன்பு பூண்டவனாயிருந்தான்.]

423. ப₃ாஹுச்ச₂ாயாம் 104-1; 111-1; 112-8; 115-1 [ரா-ஸு 34-81]

ப₃ாஹுச்ச₂ாயாமவஷ்டப்₃தே₄ா யஸ்ய லோகோ மஹாத்மந: ।

[எந்த மஹாத்மாவினுடைய தோள்நிழலிலே உலகெல்லாம் ஒதுங்குகிறதோ .....]

424. பி₃லே ப₃தோரு 91-8 [ப₄ாக₃வதம் 2-3-20]

பி₃லே ப₃தோருக்ரமவிக்ரமாந் யே ந ஶ்ருண்வதே கர்ணபுடே நரஸ்ய ।
ஜிஹ்வாऽஸதீ த₃ார்த்து₃ரிகேவ ஸூத ந சோபகா₃யத்யுருகா₃யகா₃த₂ா: ॥

[ஸூதபௌராணிகரே! திரிவிக்கிரமனின் பராக்ரமங்களை எந்த மனிதனின் காதுகள் கேட்கவில்லையோ அவை வெறும் துவாரங்களே; எந்த நாக்கு நல்லோர்களால் பாடப்படும் நாராயணனைப்பற்றிய பாடல்களைப் பாடவில்லையோ, அது தவளையின் நாக்குப்போலே பொருளற்ற சப்தங்களையே எழுப்புவதால் வீணானதே.]

425. பு₃த்₃தி₄நாஶாத் 69-1 [கீ₃தை 2-62, 63]

த்₄யாயதோ விஷயாந் பும்ஸஸ் ஸங்க₃ஸ் தேஷூபஜாயதே ।
ஸங்கா₃த் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோ₄ऽபி₄ஜாயதே ॥
க்ரோதா₄த்₃ப₄வதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்₄ரம: ।
ஸ்ம்ருதிப்₄ரம்ஶாத்₃பு₃த்₃தி₄நாஶோ பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணஶ்யதி ॥

[சப்தம் முதலான ஐந்து புலன்களையுமே (அநாதி வாஸனையினால்) சிந்திப்பவனாய் (என்னை தியானிக்காத) அதிகாரிக்கு அப்புலன்களில் பற்று வளர்கிறது; அப்பற்றினால் (விஷயங்களைப் பெற்றாலல்லது தரிக்க மாட்டாமைக் குறுப்பான) காமம் அதிகமாக ஏற்படுகிறது; காமத்தினாலே கோபம் பரவ

லாக உண்டாகிறது. கோபத்தினாலே பகுத்தறிவின்மை ஏற்படுகிறது. பகுத்தறிவின்மையால் நினைவின் அழிவு ஏற்படுகிறது, நினைவின் அழிவினாலே அறிவின் அழிவு உண்டாகிறது. அறிவின் அழிவினாலே, (ஸம்ஸாரத்தில் மூழ்கி) அழிகிறான்.]

426. போ₃த₄யந்த: 61-3; 77-6; 144-3; 159-2; 197-1; 275-1; 547-1; 570-1 [கீ₃தை 10-9]

மச்சித்தா மத்₃க₃தப்ராணா போ₃த₄யந்த: பரஸ்பரம் ।
கத₂யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥

[என்னிடம் நெஞ்சு செலுத்தியவர்களாய், என்னிடம் அமைந்த வாழ்வையுடையவர்களாய் (தாம் தாம் அநுப₄வித்த என்னுடைய கு₃ணங்களை) ஒருவருக்கொருவர் அறிவிப்பவர்களாய், என்னையும் எனது தி₃வ்யசேஷ்டிதங்களையும் எப்போதும் பேசுகின்றவர்களாய், (பேசுகிறவர்கள் ஸ்வயம்ப்ரயோஜனமான பேச்சாலே) இன்புறுகின்றனர்; (கேட்கிறவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லாலே) இன்புறுகின்றனர்.]

427. ப்₃ரஹ்மத₃ண்ட₃ 233—8 [ரா—யு 60—3]

ப்₃ரஹ்மத₃ண்ட₃ ப்ரகாஶாநாம் வித்₃யுத்ஸத்₃ருஶவர்ச்சஸாம் ।
ஸ்மரந் ராக₄வபா₃ணாநாம் விவ்யதே₂ ராக்ஷஸேஶ்வர: ॥

[ப்₃ரஹ்மத₃ண்ட₃த்தைப்போல் பிரகாசிப்பவையும், மின்னலை ஒத்த ஒளியுடையவையுமான ராமபா₃ணங்களை நினைத்து ராக்ஷஸராஜாவான ராவணன் கலங்கினான்.]

428. ப்₃ரஹ்மவித₃ இவ 538—1 [சா₂ந் 4—14—2]

ப்₃ரஹ்மவித₃ இவ ஸோம்ய தே முக₂ம் பா₄தி

[குழந்தாய்! உனது முக₂ம் ப்₃ரஹ்மஜ்ஞானியினுடைய முகம்போலே பிரகாசிக்கிறதே.]

429. ப்₃ராஹ்மே முஹூர்த்தே 50—1; 75—1; 139—1; 506-1; 524-1 [பராசரஸ்மிருதி?]

ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்தா₂ய சிந்தயேதா₃த்மநோ ஹிதம் ।
ஹரிர் ஹரிர் ஹரிரிதி வ்யாஹரேத் வைஷ்ணவ: புமாந் ॥

[வைஷ்ணவனான புருஷன் விடியற்காலைவேளையில் எழுந்து தனக்கு நன்மையைச் சிந்திக்கக்கடவன்; "ஹரி: ஹரி: ஹரி:" என்று மூன்று தடவை சொல்லக்கடவன்.]

## ப₄

430. ப₄க்தாநாம் ஆத்ம 510—1; 528-4; [பா₄ர அநுசாஸந—36—24]

ஸர்வேஷாம் கில த₄ர்மாணாம் உத்தமோ வைஷ்ணவோ விதி₄: ।
ரக்ஷதே ப₄க₃வாந் விஷ்ணுர் ப₄க்தாநாத்மஶரீரவத் ॥

[எல்லா த₄ர்மங்களைக் காட்டிலும் வைஷ்ணவ த₄ர்மத்தைப் பின்பற்றுவது மிகச் சிறந்தது; ப₄க₃வான் விஷ்ணு ப₄க்தர்களைத் தன் ஶரீரத்தைப்போலே காப்பாற்றுகிறான்.]

431. ப₄க்தாநாம் 800 வது ப்ரமாணம் காண்க.

432. ப₄க்திக்ரீதோ 133-2 [விஷ்ணுத₄ர்மம்?]

ப்₄ராம்யதாமத்ர ஸம்ஸாரே நராணும் கர்மது₃ர்க்க₃மே ।
ஹஸ்தாவலம்ப₃நோ ஹ்யேகோ ப₄க்திக்ரீதோ ஜநார்த்த₃ந: ॥

[கர்மத்தால் வழி தெரியாதிருக்கும் இந்த ஸம்ஸாரமாகிற காட்டில், ப₄க்தியால் விலைக்கு வாங்கப்பட்ட ஜனார்த்த₃னன் ஒருவனே கையைப்பிடித்து அழைத்துச் செல்லும் வழிகாட்டியாயிருப்பவன்.]

433 ப₄க்திஶ்ச ஜ்ஞாந 479-1; 501-2; 502-5 [ஸ்ரீபா₄ஷ்யம்]
ப₄க்திஶ்ச ஜ்ஞாநவிஶேஷ:

[ப₄க்தியும் ஞானத்தில் ஒருவகைப்பட்டதே.]

434. ப₄க்திஶ்ச நியதா 59-1; 69-5; 70-3; 76-2; 385-2; 389-3; 525-4; 528-6 [ரா-உத் 40—16]

ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டி₂த: ।
ப₄க்திஶ்ச நியதா வீர! பா₄வோ நாந்யத்ர க₃ச்ச₂தி ॥

[அரசரே! தேவரீரிடத்தில் எனக்கு மிகச்சிறந்த அன்பானது எப்போதும் நிலைத்திருக்கிறது. வீரரே! (உம்மிடத்தில்) ப₄க்தியும் நித்யமாயிராநின்றது. என் நினைவு ஸ்ரீவைகுண்ட₂நாத₂னிடத்திலும் செல்லுகின்றதில்லை.]

435. ப₄க₃வத ஏவாஹ 94—3 70-வது ப்ரமாணம் காண்க.

436. ப₄க₃வதஸ்த்வரயா 261-வது ப்ரமாணம் காண்க.

437. ப₄க₃வதோ ப₃லேந 242-4 [பாஞ்சராத்ரம்—ப₃லமந்த்ரம்]

ப₄க₃வதோ ப₃லேந ப₄க₃வதோ வீர்யேண
ப₄க₃வதஸ்தேஜஸா ப₄க₃வத: கர்மணு ப₄க₃வத: கர்ம கரிஷ்யாமி ॥

[ப₄க₃வானுடைய ப₃லத்தினல், ப₄க₃வானுடைய வீர்யத்தினல், ப₄க₃வானுடைய தேஜஸ்ஸால், ப₄க₃வானுடைய கைங்கர்யமாக, ப₄க₃வானுடைய கர்மத்தைச் செய்கிறேன்.]

438. ப₄யாநாம் 278-1; 285-2 [வி பு 1—17—86]

ப₄யம் ப₄யாநாமபஹாரிணி ஸ்தி₂தே மநஸ்யநந்தே மம குத்ர திஷ்ட₂தி ।
யஸ்மிந் ஸ்ம்ருதே ஜந்மஜராந்தகாதி₃ப₄யாநி ஸர்வாண்யபயாந்தி தாத ॥

[தந்தையே! எவனை நினைத்தால் பிறப்பு, மூப்பு, மரணம் முதலான எல்லா ப₄யங்களும் விலகுமோ, அத்தகைய ப₄யங்களைப்போக்கும் அநந்தன் என் மனத்தில் வீற்றிருக்கும்போது (அந்த என்மனத்தில்) ப₄யம் எங்கு நிற்கமுடியும்.]

439. ப₄ரதஸ்ய வதே₄ 72—6 [ரா—அ 96—28]

ஸம்ப்ராப்தோऽயமரிர் வீர ப₄ரதோ வத்₄ய ஏவ மே ।
ப₄ரதஸ்ய வதே₄ தோ₃ஷம் நாஹம் பஶ்யாமி ராக₄வ ॥

[வீரரான ராக₄வரே! எதிரியான ப₄ரதன் வந்திருக்கிருன்; அவன் என்னுல் கொல்லத்தகுந்தவனே. அவனைக் கொல்வதில் எக்குற்றத்தையும் நான் காண்கின்றிலேன்.]

440. பூ₄ர்த்தாரம் 234—வது ப்ரமாணம் காண்க.

441, ப₄வதி புமாந் 29-2, 32-3; 42-4; 549-2 [வி-பு 3—7—25]

வஸதி ஹ்ருதி₃ ஸநாதநே ச தஸ்மிந் ப₄வதி புமாந் ஜக₃தோऽஸ்ய ஸௌம்யரூப: ।

க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோऽந்த: கத₂யதி சாருதயைவ ஸாலபோத: ॥

[பழையோனுன அப்பெருமான் நெஞ்சில் வாழ்ந்தானெனில், அந்த மனிதன் இவ்வுலகிற்கே அழகிய ரூபமுடையவனுகக் காட்சியளிக்கிருன்; இளம் ஸால (ஆச்சா) மரம் தன் அழகினுலேயே தான் நிற்கும் பூமியின் உள்ளிருக்கும் நீரின் மிக அழகிய ரஸத்தை உணர்த்துகிறதன்ருே.]

442. ப₄வத்₃விஷய 90—6 [ரா—ஆ 1—20]

தே வயம் ப₄வதா ரக்ஷ்யா ப₄வத்₃விஷயவாஸிந: ।
நக₃ரஸ்தோ₂ வநஸ்தோ₂ வா த்வம் நோ ராஜா ஜநேஶ்வர: ॥

[உம் தேசத்தில் வஸிக்கும் நாங்கள் உம்மால் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்கள்; நரபதியான நீரே நக₃ரத்திலிருந்தாலும், வனத்திலிருந்தாலும் எங்களுக்கு அரசனுவீர்.]

443. ப₄வ ஶரணம் 100-4; 108-2; [வி-பு 3-7-33]

கமலநயந! வாஸுதே₃வ! விஷ்ணோ!
த₄ரணித₄ராச்யுத! ஶங்க₂சக்ரபாணே! ।
ப₄வ ஶரணமிதீரயந்தி யே வை
த்யஜ ப₄ட தூ₃ரதரேண தாநபாபாந் ॥

[தூ₃தனே! ''தாமரைக் கண்ணனே! வாஸுதே₃வனே! விஷ்ணுவே! பூமியைத் தாங்கியவனே! அடியவரை நழுவ விடாதவனே! ஶங்க₂ சக்ரங்களைக் கையில் உடையவனே! எனக்குத் தஞ்சமாவாய்'' என்று எவர்கள் கூறுகிருர்களோ, பாபமற்ற அவர்களைவிட்டு வெகுதூ₃ரத்தில் விலகிச் செல்வாய்.]

444. ப₄வாமி த்₃ருஷ்ட்வா 210-1; 214-2; 218-3—305 வது ப்ரமாணம் காண்க.

445. ப₄வேயம் 303-2; 315-1; 328-3; 326-1; 329-3 [ரா-ஸு 58-90]

ததஸ் ஸா ஹ்ரீமதீ பா₃லா ப₄ர்த்துர் விஜயஹர்ஷிதா ।
அவோசத் யதி₃ தத் தத்₂யம் ப₄வேயம் ஶரணம் ஹி வ: ॥

[லஜ்ஜை நிரம்பியவளாய், கணவனின் ஜயத்தைக் கேட்டு ஆநந்த₃மடைந்தவளான அப்பிராட்டி, 'அக்கனவு உண்மையானால் உங்களுக்கு நான் அடைக்கலமாகிறேன்' என்று உரைத்தாள்.]

446. ப₄ார்க்க₃வோ 558-2 [திருமழிசை மாஹாத்மியம்]

பார்க்க₃வோ தீ₃ர்க்க₄ஸத்ரேண வாஸுதே₃வம் ஸநாதநம் ।
அபி₄பூஜ்ய யதா₂ந்யாயம் .....

[ப₄ார்க்க₃வமஹரிஷி பழையோனான வாஸுதே₃வனை தீ₃ர்க்க₄ஸத்ரயாக₃த்தால் முறைப்படி ஆராதி₄த்து...]

447. ப₄ார்க்க₃வீ லோகஜநநீ 558-3 [லக்ஷ்மீஸஹஸ்ரநாமம்]

[பிருகு மஹரிஷியின் பெண்; உலகின் தாய்]

448. ப₄ாவோ நாந்யத்ர 484-வது ப்ரமாணம் காண்க.

449. ப₄ாஸ்கரேண 24-வது ப்ரமாணம் காண்க.

450. பீ₄ஷாஸ்மாத் 100-3; 109-1 [தை—ஆந 8-1]

பீ₄ஷாஸ்மாத்₃ வாத: பவதே பீ₄ஷோதே₃தி ஸூர்ய: ।
பீ₄ஷாஸ்மாத₃க்₃நிஶ்சேந்த்₃ரஶ்ச ம்ருத்யுர் தா₄வதி பஞ்சம: ॥

[இந்தப் பரமாத்மாவினிடம் ப₄யத்தினால் காற்று அடிக்கிறது, இவனிடம் ப₄யத்தால் ஸூர்யன் உதிக்கிறான்; இவனிடம் பயத்தினாலேயே அக்₃னியும், இந்திரனும், ஐந்தாமவனான யமனும் (தங்கள் தங்கள் காரியங்களிலே) விரைகின்றார்கள்.]

451. பூ₄தாநாம் யோ 427-2 [ஸஹஸ்ரநாம உபோத்₃கா₄தம்5]

பவித்ராணாம் பவித்ரம் யோ மங்க₃ளாநாஞ்ச மங்க₃ளம் ।
தை₃வதம் தே₃வதாநாஞ்ச பூ₄தாநாம் யோऽவ்யய: பிதா ॥

[எந்த ப₄க₃வான் பவித்திரங்களுள் பவித்திரனாயிருக்கிறானோ, மங்க₃ளங்களுள் மங்க₃ளமாயிருக்கிறானோ, தே₃வதைகளுக்கும் தே₃வதையாயிருக்கிறானோ, எவனொருவன் ஜீவராசிகளுக்கெல்லாம் அழிவற்ற தந்தையாயிருக்கின்றானோ...]

452. ஏவம்பூ₄தபூ₄மிநீளா நாயக! [ஶரணாக₃திக₃த்₃யம்-5]

[ஸ்ரீதே₃வியைப்போன்ற பூ₄மிதே₃விக்கும், நீளாதே₃விக்கும் நாயகனே!]

453. பூ₄ய ஏவ மஹாபா₃ஹோ 228-1; 370-1 [கீ₃தை 10-1]

பூ₄ய ஏவ மஹாபா₃ஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥

[தடக்கையனே! (என்பெருமையைக் கேட்டு) உகக்கும் உனக்கு (என் விஷயமான ப₄க்தி உண்டாவதும் வளருவதுமாகிற) நன்மையின் பொருட்டு மறுபடியும்

(என் பெருமையை விரித்துரைக்கும்) யாதொரு மேலான வார்த்தையையே நான் கூறுகிறேனே, அந்த என்னுடைய மேலான வார்த்தையை (கவனமாகக்) கேட்பாயாக.]

454. பே₄ஜுர் முகுந்த₃ 515-2 ?

பே₄ஜுர் முகுந்த₃பத₃வீம்

[(கோ₃பிகள்) முகுந்தன் சென்ற வழியைப் பின்தொடர்ந்தனர்.]

455. ப்₄ராதா 521-2 [ரா-அ 58—31]

அஹம் தாவந் மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே |

ப்₄ராதா ப₄ர்த்தா ச ப₃ந்து₄ஶ்ச பிதா ச மம ராக₄வ: ||

[நான் த₃ஶரத₂மஹாராஜாவைத் தந்தையாக எண்ணுகின்றேனல்லேன்; ராக₄வரே எனக்குத் தமயனும், ஸ்வாமியும், உறவினரும், தந்தையுமாவார்.]

456. ப்₄ராது: ஶிஷ்யஸ்ய 131—வது ப்ரமாணம் காண்க.

ம

457. மகரே குண்ட₃லா 24—3. ?

மகரே குண்ட₃லாக்ருதி

[மகர (தை) மாதத்தில் (சீதக்காற்று) குண்ட₃லம் போல் சுழன்று சுழன்று வீசுகிறது.]

458. மங்க₃ளதீ₃ப 8—2 [ஸ்ரீகு₃ண—2]

உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீநிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் |

ஸ்ரீரங்க₃ஹர்ம்யதலமங்க₃ளதீ₃பரேகா₂ம் ஸ்ரீரங்க₃ராஜமஹிஷீம் ஶ்ரியமாஶ்ரயாம: ||

[ஏழுலகங்களையும் (ப₄க₃வான்) படைத்தவுடன் தளிர்விடுவதாகவும், (அவ ஞலே) ரக்ஷிக்கப்பட்ட ஏழு உலகங்களின் நிர்வாஹத்தினுல் மொட்டு விடுவதாகவுமிருக்கிற அர்த்த₂கடாக்ஷலீலையை உடையவளும், திருவரங்க மாளிகைக்கு (ஒரு) மங்க₃ள தீ₃பக்கொழுந்துபோலிருப்பவளும், ஸ்ரீரங்க₃நாத₂னுடைய தி₃வ்ய மஹஷியானவளுமான ஸ்ரீதே₃வியை ஆஶ்ரயிக்கிறோம்.]

459. மஞ்ஜரீஸுப்த 4-4 [ர—ஸ்த 1-24]

தரளதநுதரங்கை₃ர் மந்த₃மாந்தோ₃ள்யமாந—

ஸ்வதடவிடபிராஜீ மஞ்ஜரீ ஸுப்தப்₄ருங்கா₃ |

க்ஷிபது கநகநாம்நீ நிம்நகா₃ நாரிகேள-

க்ரமுகஜமகரந்தை₃ர் மாம்ஸலாபா மத₃ம்ஹ: ||

[அசையாநிற்பதாயும், சிறிதாயுமிருக்கும் அலைகளாலே மெல்ல அலைக்கப் படும் தன் கரையிலுள்ள சோலைகளின் பூங்கொத்துக்களில் உறங்குகின்ற வண்டு

களை உடையதும், தென்னை, பாக்குமரங்களிலிருந்து உண்டான மகரந்தங்களினல் நிரம்பிய நீரை உடையதுமான 'பொன்னி' என்னும் பெயருடைய காவேரி நதியானது எனது பாபத்தை அழிக்கக்கடவது.]

460. மத்தமாதங்க3 402—4 [ரா—அ 3—28]

க3ந்த4ர்வராஜப்ரதிமம் லோகே விக்2யாதபௌருஷம் ।
தீ3ர்க்க4பா3ஹும் மஹாஸத்த்வம் மத்தமாதங்க3கா3மிநம் ॥

[க3ந்த4ர்வராஜாவை ஒத்தவனும், உலகில் புகழப்படும் வீரத்தையுடையவனும், நீண்ட கைகளை உடையவனும், பெரும்ப3லமுள்ளவனும், மதங்கொண்ட யானை போல நடப்பவனுமான இராமனை (தசரதன் கண்டு திருப்தியடையவில்லை.)]

461. மத்பாபமேவ 262—2; 266—2; 270—1; 272—1 [ரா-அ ? ]

ந மந்த2ராயா ந ச மாதுரஸ்யா தோ3ஷோ ந ராஜ்ஞோ ந ச ராக4வஸ்ய ।
மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத் வநப்ரவேஶே ரகு4நந்த3நஸ்ய ॥

[ராக4வன் வனம் சென்றதற்கு மந்த2ரையினுடையவும், என் தாயான கைகேயியினுடையவும், அரசரான தந்தையுடையவும், ராமனுடையவும் தோ3ஷம் காரணமன்று. என் பாபமே காரணமாயிற்று.]

462. மத்3பா4க்3ய 270-1 [ரா-ஸு 26-11]

க்2யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராக4வ: ।
ஸத்3வ்ருத்தோ நிரநுக்ரோஶ: ஶங்கே மத்3பா4க்3யஸங்க்ஷயாத் ॥

[அறிவாளியாகவும், நன்றிமறவாதவராகவும், இரக்கமுள்ளவராகவும், நல்லொழுக்கமுடையவராகவும் பிரஸித்3த4ரான ராமபிரான் என் பா4க்3யஹானியால் இரக்கமற்றவராகிவிட்டார் என்று ஸந்தே3ஹிக்கிறேன்.]

463. மத்3வ்ருத்த 322—வது ப்ரமாணம் காண்க.

464. மது4ரா நாம 120-2; 126-4; 130-1; 132-1 ?

மது4ரா நாம நக3ரீ புண்யா பாபஹரீ ஶுபா4 ।
யஸ்யாம் ஜாதோ ஜக3ந்நாத2ஸ் ஸாக்ஷாத்3 விஷ்ணுஸ் ஸநாதந: ॥

[யாதொரு நக3ரத்தில், உலகங்களுக்கெல்லாம் நாயகனும், அநாதி3யானவனுமான ஸாக்ஷாத் விஷ்ணு (க்ருஷ்ணனாய்த்) திருவவதரித்திருக்கிறாரோ, அப்படிப்பட்ட மது4ரை என்னும் நக3ரம் அவனைத் தருகைக்கு உபாயமாகவும், பாபத்தைப் போக்கடிப்பதாகவும், ஸ்வயம் ப்ராப்யமாகவுமிருக்கிறது.]

465. மது4ராம் ப்ராப்ய 176-2; 179-4; 292-வது ப்ரமாணம் காண்க.

466. மது4ரா மது4ராலாபா 71-4; 197-2; 201-4; 204-4; 206-4; 446-3; 508-2 [ரா—ஸு 66-15]

மது4ரா மது4ராலாபா கிமாஹ மம பா4மிநீ ।
மத்3விஹீநா வராரோஹா ஹநுமந் கத2யஸ்வ மே ।

யச்சாபஹாஸார்த்தமஸத்க்ருதோऽஸி விஹாரஶய்யாஸநபோஜநேஷு ।
ஏகோऽதவாப்யச்யுத தத்ஸமக்ஷம் தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் ॥

[அடியாரை நழுவவிடாதவனே! உன்னுடைய இந்தப் பெருமையை அறியாத என்னால் மயக்கத்தாலோ நெடுநாள் பழகியதாலோ எனது தோழன் என்று எண்ணி ''ஏ க்ருஷ்ண! ஏ யாதவனே! ஏ நண்பனே!'' என்று (உன்விஷயத்தில்) அடக்கமில்லாத யாதொரு சொல் சொல்லப்பட்டதோ, பரிஹாஸத்தின் பொருட்டு நீ (என்னால்) அவமதிக்கப்பட்டாய் என்பது யாதொன்றுண்டோ, விளையாடும் போதும், படுத்திருக்கும்போதும், வீற்றிருக்கும்போதும், உண்ணும்போதும் உன்னோடு சேர்ந்திருக்கையிலும் அல்லது நான் தனியேயிருக்கையிலும் பிறர் முன் நிலையிலும் நீ (என்னால்) அவமதிக்கப்பட்டாய் என்பது யாதொன்றுண்டோ, அவை யனைத்தையும் நான் அளவிடவொண்ணாத உன்னை மன்னிக்கவேண்டுகிறேன்.]

477. மயா போதித: 71-5 [ரா-யு 38-25]

வாயஸேந ததஸ்தேந பலவத் க்லிஶ்யமாநயா ।
ஸ மயா போதித: ஶ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப: ॥

[பிறகு அந்தக் காகாஸுரனால் பலாத்காரமாகத் துன்புறுத்தப்பட்ட என்னால் ஸுகமாகக் கண்வளர்ந்தருளியவரும், (அத்தாலே) அழகாயிருப்பவரும், எதிரிகளை தவிக்கச் செய்பவருமான ஶ்ரீராமபிரான் எழுப்பப்பட்டார்.]

478. மஹதா தபஸா 207-3; 301-2; 307-2 [ரா—ஆ 66—8]

மஹதா தபஸா ராம மஹதா சாபி கர்மணா ।
ராஜ்ஞா தஶரதேநாஸி லப்தோऽம்ருதமிவாமரை: ॥

[ராமபிரானே! பெருந்தவத்தாலும், (புத்ரகாமேஷ்டி) முதலான பெருங்காரியங்களைச் செய்தும், தேவர்கள் அமுதத்தைப் பெற்றதுபோலே தஶரதமஹாராஜாவால் தேவரீர் அடையப்பட்டீர்.]

479. மஹாத்மந: 370-6; 428-வது, 496-வது ப்ரமாணங்கள் காண்க.

480. மஹேந்த்ர 284-2 [ரா-அ 87-24]

ததஸ்த்வஹம் சோத்தம பாணசாபத்ருக்
ஸ்திதோऽபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண: ।
அதந்த்ரிபிர் ஜ்ஞாதிபிராத்தகார்முகை:
மஹேந்த்ரகல்பம் பரிபாலயம்ஸ்ததா ॥

[(லக்ஷ்மணன் ராமனை ரக்ஷித்துக்கொண்டிருக்கையில்) நான் உத்தமமான அம்பையும், வில்லையும் எடுத்துக்கொண்டு, லக்ஷ்மணன் இருக்குமிடத்தில் (அவன் மேலே ஐயங்கொண்டு) காத்து நின்றேன். (என்மேல் ஐயமுற்று) எனது உறவினர்கள் சோம்பலில்லாமல் வில்லெடுத்து மஹேந்திரனைப்போன்ற ஶ்ரீராமனை ரக்ஷித்துக்கொண்டிருந்தனர்.]

481. மாதங்க₃ இவ 229-6; 238-7; 339-4 [ரா-யு 60-2]

மாதங்க₃ இவ ஸிம்ஹேந க₃ருடே₃நேவ பந்நக₃: ।
அபி₄பூ₄தோऽப₄வத்₃ராஜா ராக₄வேண மஹாத்மநா ॥

[யானே சிங்கத்தால் அடக்கப்படுவது போலவும், பாம்பு க₃ருட₃னுல் ஒடுக்கப் படுவதுபோலவும் மஹாபுருஷனுன ராமனுல் ராக்ஷஸராஜாவான ராவணன் அடக்கி ஒடுக்கப்பட்டான்.]

482. மாதா பிதா 81-3; 510-2; 521.1; 525-3; 528-1 [ஸுபா₃ல—16]

மாதா பிதா ப்₄ராதா நிவாஸஶ் ஶரணம் ஸுஹ்ருத்₃ க₃திர் நாராயண:

[நாராயணன் தாயாகவும், தந்தையாகவும், தன்னுடன் பிறந்தவனுகவும், தங்குமிடமாகவும், மோக்ஷோபாயமாகவும், நண்பனுகவும், மோக்ஷத்தில் அடையப் படுபவனுகவுமிருப்பவன்.]

483. மாநுஷீம் 366-5; 372-7 [கீ₃தை 9-11]

அவஜாநந்தி மாம் மூடா₄ மாநுஷீம் தநுமாஶ்ரிதம் ।
பரம் பா₄வமஜாநந்தோ மம பூ₄தமஹேஶ்வரம் ॥

[அறிவிலிகள் என்னுடைய மேலான தன்மையை அறியாதவர்களாய், எல்லாப்பொருள்களுக்கும் பெரிய ஈஶ்வரனுய், மனித உருவை எடுத்துக்கொண்டிருப்பவனுன என்னே அவமதிக்கின்றனர்.]

484. மாமேகம் ஶரணம் 124-வது ப்ரமாணம் காண்க,

485. மாயை 127-2; 11-வது ப்ரமாணம் காண்க.

486. மாஸாநாம் மார்க்க₃ 24-2; 40-1; 47-3; 50-2 [கீ₃தை 10.35]

ப்₃ருஹத்ஸாம தத₂ா ஸாம்நாம் கா₃யத்ரீ ச₂ந்த₃ஸாமஹம் ।
மாஸாநாம் மார்க்க₃ஶீர்ஷோऽஹம் ருதூநாம் குஸுமாகர: ॥

[அவ்வண்ணமே ஸாமங்களில் ப்₃ருஹத்ஸாமம் (நானே); ச₂ந்த₃ஸ்ஸுக்களுள் கா₃யத்ரீ ச₂ந்த₃ஸ்ஸு நானே; மாதங்களுக்குள் மார்கழி நானே; ருதுக்களுக்குள் வஸந்தருது (நானே).]

487, மித்ரமௌபயிகம் 387 வது ப்ரமாணம் காண்க

488. முமுக்ஷுர்வை 5-2; 281-6; 291.-3 [ஶ்வே 6-18]

யோ ப்₃ரஹ்மாணம் வித₃தா₄தி பூர்வம்
யோ வை வேதா₃ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹ தே₃வமாத்மபு₃த்₃தி₄ப்ரஸாத₃ம்
முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்₃யே ॥

[எவன் பிரமனை முன் படைத்தானோ, எவன் வேதங்களையும் அவனுக்கு உபதேஶித்தானோ, அப்படிப்பட்ட தேவனும், தன் விஷயமான ஞானத்தை வெளிப்படுத்துபவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய விரும்பும் நான் ஶரணமடைகிறேன்.]

489. மூடோ₄ऽயமல்பமதி 526-4 [வி-த₄ர் 98-23]

மூடோ₄ऽயமல்பமதிரல்பவிசேஷ்டிதோऽயம்
க்லிஷ்டம் மனோऽஸ்ய விஷயைர் ந மயி ப்ரஸங்கீ₃ ।
இத்த₂ம் க்ருபாம் குரு மயி ப்ரணதேऽகி₂லேஶ
த்வாம் ஸ்தோதுமம்பு₃ஜப₄வோऽபி ஹி தே₃வ நேஶ: ॥

[அனைவரையும் நியமிக்கும் தேவனே! "இவன் அறிவிழந்தவன்; புல்லறிவாளன்; புல்லிய செயலோன்; இவனது மனம் ஶப்₃தா₃தி₃விஷயங்களால் கலங்கியதால் என்னிடம் ஈடுபடாமலிருக்கிறது" என்று எண்ணி, உன்னைச் சரணடைந்த எனக்கு அருள்புரிவாய்; உந்தித்தாமரையில் பிறந்த பிரமனும் உன்னைத்துதிக்க வல்லவனன்றே.]

490. மேக₄ஶ்யாமம் 45-1; 216-2 [ரா-அ 88-8]

மேக₄ஶ்யாமம் மஹாபா₃ஹும் ஸ்தி₂ரஸத்வம் த்₃ருட₄வ்ரதம் ।
கதா₃ த்₃ரக்ஷ்யாமஹே ராமம் ஜக₃த: ப்ரபு₄மவ்யயம் ॥

[மேகம்போல் கறுத்தவனாய், தடக்கையனாய், நிலையான ப₃லத்தையுடையவனாய், உறுதியான (அடியாரைக்காக்கும்) விரதத்தை உடையவனாய், அழிவற்றவனாய், உலகிற்கு ஸ்வாமியான ராமனை எப்போது காண்போம்?]

## ய

491. ய ஏஷ ஸுப்தேஷு 136-வது ப்ரமாணம் காண்க.

492. யதோ வா இமானி 176-6 [தை ப்₄ருகு₃ 17]

யதோ வா இமானி பூ₄தானி ஜாயந்தே ।
யேந ஜாதானி ஜீவந்தி । யத் ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி ।
தத் விஜிஜ்ஞாஸஸ்வ । தத்₃ ப்₃ரஹ்மேதி ॥

[எதனிடமிருந்து இந்த பூ₄தங்கள் பிறக்கின்றனவோ, உண்டானவை எதனால் உயிர் வாழ்கின்றனவோ, ப்ரளய காலத்தில் எதனிடம் லயிக்கின்றனவோ அதுவே ப்₃ரஹ்மமென்று அதை அறிவாயாக.]

493. யதோ வாசோ 4-வது ப்ரமாணம் காண்க.

494. யத்புருஷோ மநஸா 468-வது ப்ரமாணம் காண்க.

495. யத்ராவதிர்ணம் 440-6 [வி-பு 4-11-3]

யதே₃ார் வம்ஶம் நர: ஶ்ருத்வா ஸர்வபாபை: ப்ரமுச்யதே ।
யத்ராவதிர்ணம் க்ருஷ்ணாக்₂யம் பரம்ப்₃ரஹ்ம நராக்ருதி ॥

[யாதொரு குலத்திலே பரப்₃ரஹ்மமானது கிருஷ்ணன் என்னும் பெயருடன் மனிதவுருவில் அவதரித்ததோ, அந்த யது₃வம்ஶத்தைக் கேட்டானாகில், மனிதன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறான்.]

496. யத்ராஷ்டாக்ஷர 56-1; 81-5; 92-2; 94-4; 97-3 [நாரதீ₃ய 1-20]

யத்ராஷ்டாக்ஷர ஸம்ஸித்₃தோ₄ மஹாபா₄கோ₃ மஹீயதே ।
ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி₄து₃ர்ப்பி₄க்ஷதஸ்கரா: ॥

[அஷ்டாக்ஷரஸித்தியடைந்த மஹான் எவ்விடத்தில் கொண்டாடப்படுகிறானோ அங்கு வியாதி, பஞ்சம், திருடர்கள் முதலியவை ஸஞ்சரிப்பதில்லை.]

497. யதா₂க்ரதுரஸ்மிந் 164-1 [சா₂ந் 3-14-1]

யதா₂க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ ப₄வதி ததே₂த: ப்ரேத்ய ப₄வதி

[இந்த உலகத்தில் உபாஸகன் எப்படி உபாஸிக்கிறானோ, அப்படியே மேலுலகம் சென்ற பிறகு பலனை அனுப₄விக்கிறான்.]

498. யதா₂ததா₂ரவாபி 297-வது ப்ரமாணம் காண்க.

499. யதா₂ தருண 217-1; 219-1 [பரமஸம்ஹிதை ?]

யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி ।
தத்₃ யதா₂ தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் சா₂யா வா ஸத்வமநு-
க₃ச்சே₂த் ததா₂ப்ரகாரம் ॥

[இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும் (அல்லது குழந்தை தாயையும்), நிழல் பிராணியையும் எப்படிப் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்லுகிறானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.]

500. யதா₂தே 269-1 [தை-ஶிக்ஷா 11-3. 4]

அத₂ யதி₃ தே கர்மவிசிகித்ஸா வா வ்ருத்தவிசிகித்ஸா
வா ஸ்யாத் । யே தத்ர ப்₃ராஹ்மணா: ஸம்மர்ஶிந: ।
யுக்தா ஆயுக்தா: । அலூக்ஷா த₄ர்மகாமா: ஸ்யு: ।
யதா₂ தே தத்ர வர்த்தேரந் । ததா₂ தத்ர வர்த்தேதா₂: ॥

[(சிஷ்யனுக்கு ஆசாரியனின் உபதேசம்:—) உனக்கு (ஶாஸ்த்ர ஸித்₃த₄மான) கர்மங்களைப்பற்றியோ, (ஶிஷ்டாசாரஸித்₃த₄மான) ஒழுக்கங்களைப்பற்றியோ ஸந்தேஹம் இருந்ததாகில், ஆராய்ச்சியில் வல்லவர்களும், வேதஶாஸ்த்ரங்கள் பயின்றவர்களும், லௌகிகஜ்ஞானம் உள்ளவர்களும், கோபம், லோப₄ம் முத

லான து₃ர்க்கு₃ணங்களற்றவர்களும், த₄ர்மத்தில் ஈடுபாடு உள்ளவர்களுமான ப்₃ராஹ்மணர்கள் அவ்விஷயத்தில் எப்படி நடக்கிறார்களோ, அப்படியே நீயும் நடக்கவேண்டும்.]

501. யதா₂ ரத்நாநி 370-4 [வாமநபுராணம் 67-39]

யதா₂ ரத்நாநி ஜலதே₄ரஸங்க்₂யேயாநி புத்ரக ।

ததா₂ கு₃ணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்₂யேயா மஹாத்மந: ॥

[பிள்ளாய்! கடலில் ரத்னங்கள் எண்ணமுடியாமலிருப்பதுபோலே, மஹா புருஷனான அநந்தனுடைய கு₃ணங்களும் எண்ணமுடியாதவை.]

502. யதோ₂சிதம் 277-1; 293-5; 292-3 [ஸ்தோ-ர 40]

நிவாஸஶய்யாஸநபாது₃காம்ஶுகோபதா₄நவர்ஷாதபவாரணாதி₃பி₄: ।

ஶரீரபே₄தை₃ஸ் தவ ஶேஷதாம் க₃தைர் யதோ₂சிதம் ஶேஷ இதீரிதே ஜநை: ॥

[(ப₄க₃வானுக்கு) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாகவும், கண்வளர்ந்தருளுகிற படுக்கையாகவும், ஸிம்ஹாஸனமாகவும், பாது₃கையாகவும், திருப்பரியட்டமாகவும், அணையாகவும், மழைக்கும் வெயிலுக்கும் குடையாகவும், மற்றும் பலபடியாகவும் ஆகின்றவையாய், அந்தந்தக் காலத்திற்குத் தக்கபடி உனக்கு அடிமைப்பட்டவையான பலஶரீரங்களாலே ஶேஷன் என்று எல்லா ஜனங்களாலும் சொல்லப்படுபவனுமான (திருவனந்தாழ்வானுடைய திருமேனியில் எழுந்தருளியிருக்கிறவனாகவும்.)]

503. யத₃ஹரேவ 254-1 [ஜாபா₃லோபநிஷத்]

யத₃ஹரேவ விரஜேத் தத₃ஹரேவ ப்ரவ்ரஜேத்

[என்றைக்கு வைராக்₃யம் விளைகிறதோ, அன்றைக்கே துறவு மேற்கொள்ள வேண்டும்.]

504. யதி₃ வா ராவண: 88-வது ப்ரமாணம் காண்க.

505. யது₃குலோத்₃ப₄வ: 47-வது ப்ரமாணம் காண்க.

506. யத்₃யத₄ர்மோ 225-3; 229-3; 231-5; 233-4 [ரா-ஸு 49-18]

யத்₃யத₄ர்மோ ந ப₃லவாந் ஸ்யாத₃யம் ராக்ஷஸேஶ்வர: ।

ஸ்யாத₃யம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா ॥

[த₄ர்மத்துக்குப் புறம்பானவனாயில்லாவிட்டால், ப₃லம் மிகுந்த இந்த ராவணன் ராக்ஷஸர்களுக்கு அரசனாயிருப்பதோடல்லாமல், இந்திரனுள்ளிட்ட மூவுலகிற்குமே அரசனாயிருக்கலாம்.]

507. யத்₃யதா₃சரதி 254-6; 446-2; 455-2; 456-6 [கீ₃தை 3-21]

யத்₃யதா₃சரதி ஶ்ரேஷ்ட₂ஸ் தத் ததே₃வேதரோ ஜந: ।

ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தத₃நுவர்த்ததே ॥

[ஶ்ரேஷ்ட₂னைவொருவன் எப்படியெப்படி அனுஷ்டி₂க்கிருனே, அப்படியப்படியே மற்ற ஜனங்கள் அனுஷ்டிக்கின்றனர். அவன் எவ்வளவு செய்கின்ருனே, உலகமும் அதை அனுஸரிக்கின்றது.]

508. யத்₃யத்₃விபூ₄தி 384-4 [கீ₃தை 10-41]

யத்₃யத்₃விபூ₄திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ₃ர்ஜிதமேவ வா ।
தத்ததே₃வாவக₃ச்ச₂ த்வம் மமதேஜோம்ஶஸம்ப₄வம் ॥

[எந்தெந்த ஜீவராசி தன்னால் நியமிக்கப்படும் செல்வங்களை உடையதாய் உள்ளதோ, ஒளி உடையதாய் உள்ளதோ, மங்க₃ளமான கார்யங்களைத் தொடங்குவதில் ஊற்றமுடையதாய் விளங்குகின்றதோ அந்தந்த ஜீவராசியை நீ (அளப்பரிய சக்தியுள்ள) என்னுடைய நியமன ஶக்தியின் ஒரு பகுதியினால் உண்டானதே என்றே அறிவாயாக.]

509. யத்₃விநா 232-5 [ரா-அ 97-8]

யத்₃விநா ப₄ரதம் த்வாம் ச ஶத்ருக்₄நஞ்சாபி மாநத₃ ।
ப₄வேந்மம ஸுக₂ம் கிஞ்சித் ப₄ஸ்மஸாத் குருதாம் ஶிகீ₂ ॥

[பெருமையைத் தருபவனே! ப₄ரதனையும், உன்னையும், ஶத்ருக்₄னனையுமில்லாமல் ஏதாவது எனக்கு ஸுக₂முண்டாகுமானால், அதை அக்₃னி சாம்பலாக்கட்டும்]

510. ய: பூர்வ்யாய 218-4 [ருக்-மண்ட₃ல 1-21-154-14]

ய: பூர்வ்யாய வேத₄ஸே நவீயஸே ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே த₃த₃ாஶதி ।
யோ ஜாதமஸ்ய மஹதோ மஹி ப்₃ரவத் ஸேது₃ ஶ்ரவோபி₄ர் யுஜ்யம் சித₃ப்₄யஸத் ॥

[எந்த மனிதன் முதல்வனும், விதவிதமான உலகைப் படைத்தவனும், (என்றும்) புதியவனும், லக்ஷ்மீ நாதனுமான விஷ்ணுவுக்குத் தன்னை அளிக்கிருனே (அவனும்), மஹாநுபாவனை இந்த பகவானுடைய, பூஜிக்கத்தகுந்த ஜன்மத்தை (எவன்) ஸங்கீர்த்தனம் செயகிருனே அவனும், பெரும்புகழாளனாய் (அனைவரும்) அடையத்தக்க அந்த பகவானுடைய பரமபதத்தை எதிர்நோக்கிச் செல்கின்றனர்.]

511. யமுநாம் சாதி 213— வது ப்ரமாணம் காண்க.

512. யயௌ ச காசித் 146-2 [வி-பு 5-13-19]

யயௌ ச காசித் ப்ரேமாந்த₄ா தத்பார்ஶ்வமவிலம்பி₃தம் ।

[அன்பினால் அறிவு மழுங்கியவளான ஓர் ஆயர்மங்கை கண்ணனுக்கருகில் விரைவில் வந்தாள்.]

513. யயௌ தூர்ய 447-1; 455-4; 457-2 ?

யயௌ தூர்யப்ரணாதே₃ந பே₄ரீணாம் ச மஹாஸ்வநை: ।

[தூரியம் என்னும் வாத்தியத்தின் பேரொலியோடும், பேரி(முரசு)களின் ஒலியோடும் சென்றான்.]

514. யஸ்த்வயா 196-1; 201-1; 204-1; 206-1 [ரா—அ 30-18]

யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நரகோ யஸ் த்வயா விநா ।
இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ॥

[ராகவரே! 'உம்முடன் கூடியிருக்கும் இருப்பே (எனக்கு) ஸ்வர்க்கம்; உம்மைப் பிரிந்திருக்குமிருப்பு நரகம்' என்பதை அறிந்து, என்னுடன் கூடவே மேலான ஆநந்தத்தை அடைவீராக.]

515. யஸ்மாத் த்வயைவ 158-1 [வி.பு 5-16-23]

யஸ்மாத் த்வயைவ துஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்த்தந ।
தஸ்மாத் கேஶவநாமா த்வம் லோகே க்யாதிம் கமிஷ்யஸி ॥

[ஜநார்த்தனனே! தீயவனான கேசி உன்னால் கொல்லப்பட்ட காரணத்தால் நீ உலகில் 'கேசவன்' என்று பெயர் பெறப்போகிறாய்.]

516. யஸ்ய ஸ்ரீருப 346-12. (யஸ்ய?) ஸ்ரீருபபூர்ஹணம் 374-வது ப்ரமாணம் காண்க.

517. யஸ்ய ஸா 432-1; 439-2; 442-1; [ரா-ஆ 18-37]

அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா ।
ந த்வம் ஸமர்த்தஸ் தாம் ஹர்த்தும் ராமசாபாஶ்ரயாம் வநே ॥

[யாதொரு தேஜஸ்ஸுக்கு ஜனகராஜன்திருமகளான பிராட்டி உரியவளோ, அந்த ராமதேஜஸ்ஸானது அளவிடவொண்ணாதது: காட்டில் ராமனுடைய வில்லை அண்டைகொண்டிருக்கும் அவளை எடுத்துவர நீ வல்லனல்லை.]

518. யஸ்யா: கடாக்ஷண 302-5; 358-7; [வைகுண்டஸ்தவ 22]

யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீஶ்வராணும்
ஐஶ்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத் ।
தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம்ஶ்ரயணாந் நிராஹு:
த்வாம் ஹி ஸ்ரிய: ஸ்ரியமுதாரஹ்ருதாரவாச: ॥

[யாவளொரு பிராட்டியின் கடாக்ஷமானது, இந்திரன் முதலிய தேவர்களுக்கும் க்ஷணந்தோறும் ஐஶ்வர்யஹேதுவாகிறதென்பது ஸர்வஜநஸம்மதமானதோ, அந்தப் பிராட்டியை தேவரீரிடத்தில் ஆஶ்ரயித்திருப்பது காரணமாகவே ஸ்ரீயென்று நிருக்தி கூறுகின்றார்கள். உதாரவாக்குக்களான திருமங்கையாழ்வார், ஆளவந்தார் போல்வாரும் தேவரீரையன்றோ திருவுக்கும் திருவாகிய செல்வனென்கிறார்கள்.]

519. யஸ்யாத்மா 72-2 [ப்ருஹ 5-7-22]

யஸ்யாத்மா ஶரீரம்
[எந்தப் பரமாத்மாவுக்கு ஆத்மா ஶரீரமோ...]

520. யஸ்யாமதம் தஸ்ய 375-2; 376-3—54—வது ப்ரமாணம் காண்க.

521. யஸ்யாஸ்மி 4-9; 5-1; 340-3 [யஜுர்-அஷ்டக 3-7]

யஸ்யாஸ்மி ந தமந்தரேமி

[எவனுக்கு நான் தாஸனுயிருக்கிறேனே அவனைவிட்டு வேறொருவனிடம் செல்லமாட்டேன்.]

522. யா: காஸ்சந 548-2 ?

யா: காஸ்சந க்ருதயோ மம பவந்தி,

தாஸு மம மமதா நாஸ்தி, பகவத ஏவ தா:

[என்னுடைய யாவைசில செயல்களுண்டோ, அவற்றில் எனக்கு ''என்னுடையவை'' என்னும் எண்ணமில்லை: பகவானுடையவையே அவை.]

523. யாவத: குருதே 383-5 [வி.பு 1—17—66]

யாவத: குருதே ஜந்து: ஸம்பந்தாந் மநஸ: ப்ரியாந் ।

தாவந்தோ஽ஸ்ய நிகந்யந்தே ஹ்ருதயே ஶோகஶங்கவ: ॥

[ஜீவன் தன் மனத்துக்கினிய (பெண்டு பிள்ளைகள் முதலான) ஸம்பந்தங்களை எவ்வளவு வளர்த்துக்கொள்கிருனே, அந்த அளவுக்கு அவன் தன் இருதயத்தில் ஶோகங்களாகிற அம்புகளைப் பாய்ச்சிக்கொள்கிருன்.]

524. யாவதாவர்த்ததே 15-1 [ரா-யு 131—11]

யாவதாவர்த்ததே சக்ரம் யாவதீ ச வஸுந்தரா ।

தாவத் த்வமிஹ ஸர்வஸ்ய ஸ்வாமித்வமநுவர்த்தய ॥

[காலசக்கரம் எத்தனை நாள் சுழல்கிறதோ, பூமி எவ்வளவு பரப்பை உடையதாயிருக்கிறதோ, அவ்வளவு காலமும், அவ்வளவு இடத்திலும் இவ்வுலகில் நீர் எல்லாப் பொருள்களையும் அரசனுக ஆளக்கடவீர்.]

525. யாவந்ந சரணௌ 180-13 [ரா-அ 98-8]

யாவந்ந சரணௌ ப்ராது: பார்த்திவ வ்யஞ்ஜநாந்விதௌ ।

ஶிரஸா தாரயிஷ்யாமி ந மே ஶாந்திர் பவிஷ்யதி ॥

[அரசனுக்குரிய அலங்காரங்களோடு கூடிய ஸ்ரீராம பாதங்களை என் தலையாலே தரிக்கும்வரையில் எனக்கு சாந்தி உண்டாகப்போவதில்லை.]

526. யா: ஸ்த்ரியோ 385-வது ப்ரமாணம் காண்க.

527. யுத்தே சாப்யபலாயநம் 311-1; 319-1; 327-2 [கீதை 18-43]

ஶௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயநம் ।

தாநமீஸ்வர பாவஸ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥

[(யுத்தகளத்தில் பயமற்றுநுழையும் திறமையாகிற) சூரத்தன்மை, (பிறரால் வெல்லவொண்ணமையாகிற) தேஜஸ், (இடையூறுகளை அழிக்கும் வல்லமை

யாகிற) த்₄ருதி, (எல்லாச் செயல்களையும் நிறைவேற்றும் திறமையாகிற) த₃க்ஷத் தன்மை, போர்க்களத்தில் (மரணம் உறுதியானாலும்) பின்வாங்காமை, (தன் பொருளைப் பிறர்க்குக்கொடுக்கையாகிற) தா₃னம், பிறரை நியமிக்கும் திறமை ஆகியவை க்ஷத்ரியனுக்கு இயல்பாக இருக்கவேண்டியவை.]

528. யு₂வராஜமமந்யத 281-1; 292-2 [ரா-அ 1-42]

தம் ஸமீக்ஷ்ய மஹாராஜோ யுக்தம் ஸமுதி₃தை: கு₃ணை: ।
நிஶ்சித்ய ஸசிவை: ஸார்த்த₄ம் யுவராஜமமந்யத ॥

[தசரதமஹாராஜர் சிறந்த கு₃ணங்களோடு கூடிய அந்த ராமனைப்பார்த்து, மந்திரிகளோடு ஆலோசனை செய்து அவனை யுவராஜாவாக்க எண்ணினர்.]

529. யுவைவ வஸுதே₃வோ 48-3 [வி-பு 5-20-52]

மஹோத்ஸவமிவாஸாத்₃ய புத்ராநந விலோகநம் ।
யுவேவ வஸுதே₃வோऽபூ₄த் விஹாயாப்₄யாக₃தாம் ஜராம் ॥

[மைந்தன் முகத்தாமரையைக் காண்பதை ஒரு பெரிய உத்ஸவத்தைப் போலே அடைந்து, வசுதேவர், தேடியடைந்த கிழத்தனத்தை விட்டு வாலிபனைப்போல் ஆனர்.]

530. யே ச வேத₃விதோ₃ 165—வது ப்ரமாணம் காண்க.

531. யேஷாம் த்ரீண்யப 289-1; 291-1 ?

யேஷாம் த்ரீண்யபதா₃நாநி யோநிர் வித்₃யா ச கர்ம ச ।
தே ஸேவ்யாஸ் தைஸ்ஸமாயுக்த: ஶாஸ்த்ரேப்₄யோऽபி விஶிஷ்யதே ॥

[நற்குடிப்பிறப்பு, கல்வி, நல்லொழுக்கம் ஆகிய மூன்று சிறப்புக்கள் எவரிடமுள்ளனவோ அவர்களே ஆஶ்ரயிக்கத்தக்கவர்கள். இம்மூன்று சிறப்புக்களுடையவன் (ப்ராமாண்ய விஷயத்தில்) சாஸ்திரங்களைக் காட்டிலும் சிறப்புற்றவன்.]

532. யோ மாமேவ 200-4 [கீ₃தை 15—19]

யோ மாமேவமஸம்மூடோ₄ ஜாநாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்₃ப₄ஜதி மாம் ஸர்வபா₄வேந பா₄ரத ॥

[பா₄ரதகுலத்திலே பிறந்தவனே! எவனொருவன் இம்மாதிரியாக க்ஷராக்ஷர புருஷர்களைக் காட்டிலும் பல காரணங்களால் சிறப்புற்றவனாக என்னைக் கலக்கமில்லாமல் அறிகிறானோ, அவன் என்னை அடைவதற்குரிய வழியனைத்தையும் அறிந்தவனாகிறான்; (என்னை அடையும் வழியான) ப₄க்தி ப்ரகாரங்களனைத்தாலும் என்னிடம் ப₄க்தி செய்தவனாகிறான்.]

533. யோ வஜ்ர பாதா 194-வது ப்ரமாணம் காண்க.

534. யோ வைவேத₃ 488-வது ப்ரமாணம் காண்க.

## ர

535. ரக்ஷது த்வாம் 147-2; 149-2; 153-2 [வி. பு 5-5-1½]

ரக்ஷது த்வாமஶேஷாணாம் பூ₄தாநாம் ப்ரப₄வோ ஹரி: |
யஸ்ய நாபி₄ஸமுத்₃பூ₄தபங்கஜாதா₃ப₄வஜ்ஜக₃த் ||

[எவனுடைய உந்தியிலிருந்து உண்டான தாமரையிலிருந்து இவ்வுலகம் உண்டாயிற்றோ, ஸகல ஜக₃த்காரணனான அந்த ஹரி உன்னைக் காப்பானாக.]

536. ரக்ஷிதா ஜீவ 386—1 [ரா-பா₃ 1-14; ரா-ஸு 35-10]

ரக்ஷிதா ஜீவலோகஸ்ய ஸ்வஜநஸ்ய ச ரக்ஷிதா

[ஸ்ரீராமபிரான் எல்லா உலகையும் காப்பாற்றுமவர்; தம்முடைய ஜனங்களையும் காக்குமவர்.]

537. ரக்ஷ்யாபேக்ஷா 99-1 [லக்ஷ்மீதந்த்ரம் 17-78]

ஸர்வஜ்ஞோऽபி ஹி ஸர்வேஶ: ஸதா₃ காருணிகோऽபி ஸந் |
ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யா(க்ஷா)பேக்ஷாம் ப்ரதீக்ஷதே ||

[அனைவரையும் நியமிக்கும் பரமபுருஷன் எல்லாமறிந்தவனாயும், எப்போதும் கருணையுள்ளவனாயுமிருந்தபோதிலும் ஸம்ஸாரநெறிமுறையை நடத்துகிறவனாகையால் ரக்ஷிக்கப்படுபவனின் (ரக்ஷிக்கவேண்டுமென்னும்) பிரார்த்தனையை எதிர்பார்க்கிறான்.]

538. ரங்கீ₃ நேத்ர 6-1 [மாமுனிகள் முக்தகம்]

ரங்கீ₃ நேத்ரஶரேண தாடி₃ததநு: ஶேதே, ஸ்வயம் ஸுந்த₃ர:
ப₃த்₃த₄ஶ் சம்பகதா₃மபி₄:, குசதடே மக்₃நோऽஞ்ஜநாத்₃ரீஸ்வர: |
பே₄கா₃பாடவலஜ்ஜயா வடமஹாதா₄மா ப₂ணீந்த்₃ரேऽபதத்
ரம்யேஶஸ் தவ விஸ்மிதேந மநஸா கோ₃தே₃ பரம் திஷ்ட₂தி ||

[(கோ₃தா₃ஸ்வயம்வரத்திற்குப் பல அர்ச்சாவதார எம்பெருமான்கள் எழுந்தருளினர். அவர்களில்) பெரியபெருமாள் (ஆண்டாளின்) கண்ணம்புகளாலே அடிக்கப்பட்டவராய் (ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகில் உள்ள கோயிலில்) சயனித்திருக்கிறார். திருமாலிருஞ்சோலை அழகர் (சம்பகக்காட்டிலுள்ள காட்டழகர் கோயிலில்) சம்பகமாலைகளாலே கட்டப்பட்டார். திருமலையப்பனான திருவேங்கடவனோ (அருகிலுள்ள திருவண்ணாமலையாகிற) (பூமிதேவியின் அவதாரமான ஆண்டாளின்) முலையில் அழுந்தி நிற்கிறார். வடபெருங்கோயிலுடையானாகிற கிழவரோவெனில் (இளம் பெண்ணான ஆண்டாளைத் தாம் மணம்புணர்ந்து) அனுப₄விக்க இயலாது என்னும் வெட்கத்தாலே ஆதிஶேஷன்மேலே விழுந்தார். உன்னுடையவரான அழகியமணவாளன் (நம்பெருமாள்) ஒருவரே வியப்புற்ற நெஞ்சோடு உனதருகில் நிற்கிறார்.]

539. ரஞ்ஜநீயஸ்ய 69-6; 237-3; 242-1; 244-3; 245-6; 374-3; 475-5 [ரா-யு 106-6]

ஶத்ரோ: ப்ரக்₂யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: ।
பஶ்யதோ யுத்₃த₄லுப்₃தோ₄ऽஹம் க்ருத: காபுருஷஸ்த்வயா: ॥

[புகழ்பெற்ற வீர்யத்தையுடையவனும், எனது பராக்ரமத்தைக் காட்டி உகப்பிக்கத்தக்க எதிரியுமான ராமன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, போர்புரிவதில் பேராசைகொண்ட நான் (ஸாரதி₂யான) உன்னால் (போரில் பின்வாங்கும்) பயங்கொள்ளி மனிதனாக ஆக்கப்பட்டேன்.]

540. ரத₂குஞ்ஜர 210-2; 214-3; 217-4; 219-7 [ரா-ஸு 31-2]

ராஜா த₃ஶரதோ₂ நாம ரத₂குஞ்ஜரவாஜிமாந் ।
புண்யஶீலோ மஹாகீர்த்தி: ருஜுராஸீந் மஹாயஶா: ॥

[தசரதன் என்னும் பெயருள்ள அரசர், தேர், யானை, குதிரை (காலாள்) படைகளை உடையவராய், புண்ணியமான ஒழுக்கமுடையவராய் (தனது நாட்டிலும், வெளிநாடுகளிலும்) பெரும் புகழுடையவராய், நேர்மையானவராய் இருந்தார்.]

541. ரமமாணா வநே 338-1; 344-7; 346-11 [ரா-பா₃ 1-31]

ரம்யமாவஸத₂ம் க்ருத்வா ரமமாணா வநே த்ரய: ।
தே₃வக₃ந்த₄ர்வஸங்காஶாஸ் தத்ர தே ந்யவஸந் ஸுக₂ம் ॥

[தே₃வக₃ந்த₄ர்வர்களைப் போல் விளங்குமவர்களும், வனத்தில் ஆனந்திப்பவர்களுமான (ராமன், லக்ஷ்மணன், ஸீதை ஆகிய) அம்மூவரும், ஓர் அழகிய பர்ணசாலையைக் கட்டி அதிலேயே ஸுக₂மாக வாழ்ந்தனர்.]

542. ரமஸ்வ 206-6 [ரா-அ 16-20]

ஹந்த ஶீக்₄ரமிதோ க₃த்வா த்₃ரக்ஷ்யாமி ச மஹீபதிம் ।
ஸஹ த்வம் பரிவாரேண ஸுக₂மாஸ்ஸ்வ ரமஸ்வ ச ॥

[இந்த அந்தப்புரத்திலிருந்து விரைவிலேயே சென்று (தந்தையான) தசரத சக்ரவர்த்தியைப் பார்க்கிறேன். (ஸீதையாகிற) நீ தோழிகளோடு கூட இனி திருந்து ஆனந்தமடைவாய்.]

543. ரஸோவை 4-2 [தை-ஆந 7-1]

ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம்
லப்₃த்₄வா ஆநந்தீ₃ ப₄வதி ।

[அந்தப் பரமபுருஷன் ரஸ (ஆநந்த₃) ஸ்வரூபனல்லவா; இந்த ஜீவன் ஆநந்த₃ஸ்வரூபனான அப்பரமபுருஷனை அடைந்து ஆனந்த₃முடையவனாகிறான்.]

544. ராக₄வோऽர்ஹதி 53-1, 57-வது ப்ரமாணம் 2 வது ஶ்லோகம் காண்க.

545. ராஜதா₄நீ 283-4 [ரா-யு 126-50]

நாநாதருஶதாகீர்ணா ஸம்ப்ரபுஷ்பிதகாநநா !
ஏஷா ஸா த்₃ருஶ்யதேऽயோத்₄யா ராஜதா₄நீ பிதுர்மம ||

[பலவகைப்பட்ட நூற்றுக்கணக்கான மரங்கள் நிறைந்ததாய், நன்கு மலர்ந்த காடுகளை உடையதாய், எனது தந்தையின் தலைநகரான அயோத்திநகரம் இதோ தெரிகிறது.]

546. ராஜந் 385-2; 389-3 [ரா-அ 72—24]

உத்திஷ்டோ₂த்திஷ்ட₂ கிம் ஶேஷே ராஜந்நத்ர மஹாயஶ: |
த்வத்₃விதா₄ நஹி ஶோசந்தி ஸந்த: ஸத₃ஸி ஸம்மதா: ||

[பெரும்புகழுள்ள அரசனே! எழுந்திரு; எழுந்திரு. ஏன் இங்கு வீழ்ந்து விட்டாய்? நல்லோர்களின் கூட்டத்தில் கொண்டாடப்படும் நல்லோர்களான உன் போன்றவர்கள் (தந்தையின் மரணத்தைக்கேட்டு) வருந்துவதில்லை.]

547. ராஜஸம்ஶ்ரய 114-8 [ரா-யு 116-38]

ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா !
விதே₄யாநாம் ச தா₃ஸீநாம் க: குப்யேத்₃ வாநரோத்தம ||

[வாநரஶ்ரேஷ்ட₂னே! ராஜாவுக்குப் பரதந்திரர்களும், அவனுடைய ஆஜ்ஞை யினால் (எனக்குத் துன்பத்தைச்) செய்பவர்களும், அவனுக்கு வசப்பட்டவர்களு மான வேலைக்காரிகளிடத்தில் எவன் கோபங்கொள்வான்?]

548. ராஜா த₃ஶரதோ₂ 540-வது ப்ரமாணம் காண்க.

549. ராஜாதி₄ராஜ; 384—5; 389-1 [பா₄ர—ஆஶ்வ 43-13]

ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்₃ரஹ்மமயோ மஹாந் |
ஈஶ்வரம் தம் விஜாநீம: ஸ பிதா ஸ ப்ரஜாபதி: ||

[எல்லா அரசர்களுக்கும் பேரரசராய், ப்₃ரஹ்மஸ்வரூபியாய், பெரியவராய் விளங்குபவர் விஷ்ணுவே. அவரையே ஈஶ்வரரென்று அறிவோம். அவரே தந்தையாவார். ப்ரஜாபதியுமாவார்.]

550. ராஜ்யமஸ்மை 270-4; 272-4 [ரா-அ 97-17, 18, 19]

யதி₃ ராஜ்யஸ்ய ஹேதோஸ்த்வமிமாம் வாசம் ப்ரபா₄ஷஸே |
வக்ஷ்யாமி ப₄ரதம் த்₃ருஷ்ட்வா ராஜ்யமஸ்மை ப்ரதீ₃யதாம் ||
உச்யமாநோऽபி ப₄ரதோ மயா லக்ஷ்மண தத்த்வத: |
ராஜ்யமஸ்மை ப்ரயச்சே₂தி பா₃ட₄மித்யேவ வக்ஷ்யதி ||
ததோ₂க்தோ த₄ர்மஶீலேந ப்₄ராத்ரா தஸ்ய ஹிதே ரத: |
லக்ஷ்மண: ப்ரவிவேஶேவ ஸ்வாநி கா₃த்ராணி லஜ்ஜயா ||

[''லக்ஷ்மணு, ராஜ்யத்தில் ஆசையினுல் (ப₄ரதனே நிந்திக்கும்) இந்த வார்த்தையை நீ பேசினுயாகில், ப₄ரதனேப் பார்த்தவுடன் 'ராஜ்யத்தை இந்த லக்ஷ்மணனுக்குக் கொடுத்துவிடு' என்று கூறுகிறேன். நான் 'ராஜ்யத்தை இவனுக்குக் கொடுத்துவிடு' என்று உள்ளபடி கூறுவேனுகில், ப₄ரதன் 'அப்படியே ஆகட்டும்' என்றே சொல்லுவான்'' என்று இவ்வண்ணமாக அறவழிநடக்கும் தமயனை ராமனுல் சொல்லப்பட்டவனுய், ராமனது நன்மையிலேயே ஈடுபட்டவனுன லக்ஷ்மணன் தன் உடலினுள் அவயவங்கள் புகுந்ததுபோலே, வெட்கத்தாலே கூனிக்குறுகிப்போனுன்.]

551. ராஜ்யம் நாம 384-2 [ரா-கி 12—20]

ராஜ்யம் நாம மஹாவ்யாதி₄: அசிகித்ஸ்யோவிநாஸ₂ந: l
ப்₄ராதரம் வா ஸுதம் வாபி த்யஜந்தி க₂லு பூ₄மிபா: ll

[ராஜ்யம் என்பது சிகிச்சை செய்யமுடியாததாய், நீக்கமுடியாததாய் (அல்லது நோயாளியை அழிப்பதாய்) இருக்கும் பெரிய வியாதியாகும். ஸஹோதரனுனுலும், பிள்ளையானுலும், அவனேயும் அரசர்கள் கைவிடுகிருர்களன்றே.]

552. ராமஸா₂ர்த்தூ₃லம் 402—3 ?

ராமஸா₂ர்த்தூ₃லம்

[ராமனுகிற புலியை]

553. ராமஸ்ய த₃யிதா 236—1 [ரா—பா₃ 1—26]

ராமஸ்ய த₃யிதா பா₄ர்யா நித்யம் ப்ராணஸமா ஹிதா l
ஜநகஸ்ய குலே ஜாதா தே₃வமாயேவ நிர்மிதா ll

[ஜனககுலத்தில் பிறந்தவளும், தே₃வர்களின் ஆச்சர்யமான படைப்புப்போன்றவளும், ராமனுக்கு இனியவளும், எப்போதும் அவனுக்கு உயிர்போலே நன்மை செய்யும் மனேவியுமாயிருந்தாள் (ஸீதை)]

554. ராமாநுஜம் லக்ஷ்மண 140-2; 145-5 [ரா—ஸு 28—10]

நூநம் ஸ காலோ ம்ருக₃ரூபதா₄ரீ மாமல்பபா₄க்₃யாம் லுலுபே₄ ததா₃நீம் l
யத்ரார்யபுத்ரம் விஸஸர்ஜ மூடா₄ ராமாநுஜம் லக்ஷ்மணபூர்வஜம் ச ll

[அறிவிலியான நான் எந்த சமயத்தில் சக்ரவர்த்தித்திருமகனுடைய தம்பியான இளையபெருமாளேயும், இளையபெருமாளுடைய தமயனுராய், எனது கணவரான பெருமாளேயும் விரட்டிவிட்டேனே, அப்போதே ஸுப்ரஸித்₃த₄னை யமன் மானுக உருக்கொண்டு அற்பமான புண்ணியத்தையுடைய என்னே வஞ்சித்துவிட்டான்.]

555. ராமே ராஜ்யம் 86—1; 93-1 557-வது ப்ரமாணம் காண்க.

556. ராமோ த்3விர் 286—2; 290—2; 293—2 [ரா—அ 18—30]

தத்3 ப்3ரூஹி வசநம் தே3வி! ராஜ்ஞோ யத3பி4காங்க்ஷிதம் ।
கரிஷ்யே ப்ரதிஜாநே ச ராமோ த்3விர் நாபி4பா4ஷதே ॥

[அம்மா! அரசர் விரும்பியதான அந்த வசனத்தைச் சொல்லுவாயாக; அப்படியே செய்கிறேன்; ப்ரதிஜ்ஞையையும் செய்கிறேன்; ராமன் இரண்டு விதமாகப்பேசமாட்டான்.]

557. ராமோ ராமோ 145-2; 150-7 [ரா-யு 131—102]

ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமப4வந் கத2ா: ।
ராமபூ4தம் ஜக3த3பூ4த் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி ॥

['ராமன், ராமன், ராமன்' என்றே குடிகளுடைய பேச்சுக்களிருந்தன. ராமன் ராஜ்யம் ஆளும்போது உலகம் முழுவதும் ராமமயமாயிருந்தது.]

558. ராமோ விக்3ரஹ 70—2; 125—2; 431—8 [ரா—ஆ 37—13]

ராமோ விக்3ரஹவாந் த4ர்ம: ஸாது4: ஸத்யபராக்ரம: ।
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தே3வாநாம் மக4வாநிவ ॥

[ராமன் த4ர்மமே உருவெடுத்தவன்; நல்லொழுக்கமுடையவன்; உண்மை வீரன்; தேவர்களுக்கு இந்திரனைப்போல் எல்லாவுலகிற்கும் இவன் அரசனாகிறான்.]

559. ராவணஸ்யாநுஜோ 224—2; 228—4; 231-3; 232-6 [ரா-யு 17-17]

ராவணஸ்யாநுஜோ ப்4ராதா விபீ4ஷண இதி ஶ்ருத: ।
சதுர்ப்பி4ஸ் ஸஹ ரக்ஷோபி4ர் ப4வந்தம் ஶரணம் க3த: ॥

[விபீ4ஷணன் என்று பெயர் பெற்றவனாய், ராவணன் தம்பியான அரக்கன் நாலு அரக்கர்களோடு தேவரீரை ஶரணமடைந்துள்ளான்.]

560. ராவணோ நாம 269-வது ப்ரமாணம் காண்க.

561. ரிபூணமபி 198-2; 202-3; 229-8 [ரா-யு 50-56]

ஸகே2! ராக4வ! த4ர்மஜ்ஞ! ரிபூணமபி வத்ஸல! ।
அப்4யநுஜ்ஞாதுமிச்சா2மி க3மிஷ்யாமி யதா2க3தம் ॥

[நண்பரே! ரகு4குலத்தில் உதித்தவரே! த4ர்மத்தை அறிந்தவரே! சத்துருக்களுக்கும் வாத்ஸல்யத்தை உடையவரே! விடைபெற்றுக்கொள்ள விரும்புகிறேன்; வந்தவாறே போய்விடுகிறேன்.]

## ல

562. லக்ஷ்மண பூர்வ 554-வது ப்ரமாணம் காண்க.

563. லக்ஷ்மணேந க₃த₂ம் 305-7 [ரா-உ 107—3]

அத்₃யைவாஹம் க₃மிஷ்யாமி லக்ஷ்மணேந க₃தாம் க₃திம் ।

[நான் இன்றே லக்ஷ்மணன் சென்ற அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்வேன்.]

564. லக்ஷ்மணோ லக்ஷ்மி 31-1; 48-1; 51-4; 223-3; 224—1; 228-2; 231-1; 282-3; 305—4 [ரா-பா₃ 18—28]

ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத: ।
லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ ப₃ஹி: ப்ராண இவாபர: ॥

[கைங்கர்ய லக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், ராமனுக்கு ஶரீரத்தைக்காட்டிலும் எல்லாப் பிரியத்தையும் செய்பவனாகவும், வெளியிலிருக்கும் மற்றொரு ப்ராணன் போலவும் விளங்கினான்.]

565. லக்ஷ்மீபதி: 192-1 [பாஞ்சராத்ரம்]

அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால்லக்ஷ்மீபதி: ஸ்வயம் ।
லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப₄ா ப்ராப்தியோகி₃நீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிக₃மாந்தேஷு ஶப்₃த்₃யதே ॥

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன். என் பிரியையான லக்ஷ்மியானவள் புருஷகாரத்தினால் என்னை அடைய உதவிபுரிகிறாள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதா₃ந்தங்களில் சொல்லப்படுகிறது.]

566. லோகப₄ர்த்தாரம் 153-வது ப்ரமாணம் காண்க.

567. லோகாம்ஶ்ச 366-வது ப்ரமாணம் காண்க.

## வ

568. வக்தா ஶ்ரோதா 70-6 [ரா-யு 16-20; ரா-ஆ 27-2]

ஸுலப₄ா: புருஷா ராஜந்! ஸததம் ப்ரியவாதி₃ந: ।
அப்ரியஸ்ய து பத்₂யஸ்ய வக்தா ஶ்ரோதா ச து₃ர்லப₄: ॥

[அரசனே! (மனத்துக்கு) இனிய வார்த்தைகளைச் சொல்லுகிறவர்கள் கிடைத்தற்கு எளியவர்கள்; இனிமையில்லாததாய், நன்மை பயப்பதான வார்த்தையைச் சொல்லுபவனும், (அதைக்) கேட்பவனும் கிடைத்தற்கு அரியவன்.]

569. வசஸாம் வாச்ய 371-5 [ஜிதந்தே 1-9]

கார்யாணாம் காரணம் பூர்வம் வசஸாம் வாச்யமுத்தமம் ।
யோகா₃நாம் பரமாம் ஸித்₃தி₄ம் பரமம் தே பத₃ம் விது₃: ॥

[கார்யங்களான எல்லாப்பொருள்களுக்கும் ஆதி₃காரணமாகவும், சொற்களுக்கு மேலான சொற்பொருளாகவும், யோக₃ங்களுக்கு மேலான ப்ராப்யமாகவும் உன்னுடைய மேலான திருவடிகளை (பெரியோர்கள்) அறிகிறார்கள்.]

570. வசஸா ஸாந்த்வ 392—1; 405—5; 407—1 [ரா-யு 19-6]

தஸ்ய தத்₃வசநம் ஶ்ருத்வா ராமோ வசநமப்₃ரவீத் |
வசஸா ஸாந்த்வயித்வைநம் லோசநாப்₄யாம் பிப₃ந்நிவ ||

[ஸ்ரீராமபிரான் அந்த விபீஷணனுடைய அந்தச்சொல்லைக் கேட்டு, இந்த விபீஷணனை, வார்த்தையினாலே ஆறுதல்கூறி, கண்களினாலே பருகுபவர்போலே வார்த்தையை உரைத்தார்.]

571. வஞ்சிதாஶ்சாபி 385—3 [ரா—அ 84-16]

நிஷ்குடஶ்சைவ தே₃ஶோऽயம் வஞ்சிதாஶ்சாபி தே வயம் |
நிவேத₃யாமஸ்தே ஸர்வே ஸ்வகே தா₃ஸகுலே வஸ ||

[இந்த வனப்ரதேசம் உங்களுடைய அரண்மனைத்தோட்டமாகும். (இராமன் வனம் அனுப்பப்பட்டதால், அல்லது எங்களுக்கு உங்கள் வருகை பற்றிச் சொல்லாததால்) நாங்கள் வஞ்சிக்கப்பட்டோம். இங்குள்ள அனைவரும் உன் தா₃ஸர்கள். "உன் தா₃ஸனின் இடத்தில் வஸிப்பாய்" என விண்ணப்பித்துக் கொள்கிறோம். (இது பரதனிடம் குகன் கூறியது)]

572. வத்ஸமத்₄ய 214-1 [வி-பு 5-17-19]

ஸ த₃த₃ர்ஶ தத₃ா க்ருஷ்ணமாத₃ாவாதே₃ாஹநே க₃வாம் |
வத்ஸமத்₄யக₃தம் பா₃லம்(பு₂ல்ல)நீலோத்பலத₃ளச்ச₂விம் ||

[அப்போது அந்த அக்ரூரன் முதலில் மாடுகறக்குமிடத்தில் கன்றுகளுக்கு நடுவிலிருப்பவனாய், (மலர்ந்த) நீலோத்பல இதழ்போன்ற நிறமுடைய சிறுவனான கண்ணனைப் பார்த்தான்.]

573. வத₃தி யம: கில 370-வது ப்ரமாணம் காண்க.

574. வத₄ார்ஹமபி 159-வது ப்ரமாணம் காண்க.

575. வத்₄யதாம் 50-8; 280-1; 288-2; 290-6; 294-3; 372-8; 392-2 [ரா-யு 17-27]

வத்₄யதாமேஷ தீவ்ரேண த₃ண்டே₃ந ஸசிவை: ஸஹ |
ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்₄ராதா ஹ்யேஷ விபீ₄ஷண: ||

[இந்த விபீஷணன் மந்திரிகளோடுகூடக் கொடியதான தண்டனையால் கொல்லப்படட்டும்; [ஏனெனில்] இந்த விபீஷணன் கொடியவனான ராவணனுடைய ஸஹோதரனன்றோ.]

576. வயோऽஸ்யா 243—3 [ரா-யு 5—5]

ந மே து₃:க்க₂ம் ப்ரியா தூ₃ரே ந மே து₃:க்க₂ம் ஹ்ருதேதி வா |
ஏததே₃வாநுஶோசாமி வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே ||

[(எனக்கு) இனிமையான ஸீதை தூரத்திலிருக்கிறாள் என்று எனக்குத் துன்பம் இல்லை; (ராவணனால்) அபஹரிக்கப்பட்டாள் என்றாவது எனக்குத் துன்பம் இல்லை; இவளுடைய வயது கழிகின்றதன்றோ; இதைக் குறித்தே வருந்துகிறேன்.]

577. வரம் ஹுதவஹ 27—3 [கருடட- பூர்வ ?]

வரம் ஹுதவஹ ஜ்வாலா பஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: ।
ந ஶௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைஶஸம் ॥

[பரமபுருஷனின் நினைவற்ற மக்களிடையேயிருக்கும் உயிர்க் கொலை கொடிது; தீக்கொழுந்து விட்டெரியும் கூட்டினுள் வாழ்வது (அதனிலும்) நன்று.]

578. வரஷாயுதைர் 179-வது ப்ரமாணம் காண்க.

579. வல்லவீவதநோ 121-4; 127-4; 132-5 ?

வல்லவீவதநோச்சிஷ்டபவித்ராதரவித்ரும:

[இடைப் பெண்களின் வாயமுதைச் சுவைத்துப் பரிசுத்தியடையும் செம்பவள வாயையுடைய கண்ணன்.]

580. வஸதி ஹ்ருதி 441—வது ப்ரமாணம் காண்க.

581. வஸுதேவோவஹந் 213-வது ப்ரமாணம் காண்க.

582. வஸ்த்வேகமேவ 56-3; 57-1 [வி பு 2—6—47]

வஸ்த்வேகமேவ து:க்காய ஸுகாயேர்ஷ்யாகமாய ச ।
கோபாய ச யதஸ்தஸ்மாத்வஸ்து வஸ்த்வாத்மகம் குத : ॥

[(அன்னம் பானம் முதலான) ஒரு பொருளே (ஒருவனுக்கு அல்லது ஒரு தேசகாலத்தில்) துன்பத்திற்குக் காரணமாகிறது; (மற்றொருவனுக்கு அல்லது மற்றொரு தேசகாலத்தில்) இன்பத்திற்கோ, பொருமை ஏற்படவோ, கோபத் திற்கோ காரணமாகிறது. ஆகையால், ஒரு பொருள் ஸுகரூபமானது அல்லது து:க்கரூபமானது என்று எப்படிச் சொல்லமுடியும்?]

583. வாகுத்தர: 129-7 [தை—ஸம் 7-5-3]

மந: பூர்வோ வாகுத்தர:

[முதலில் மனஸ்ஸும் அடுத்தபடியாக வாகிந்திரியமும் செயல்படுகின்றன.]

584. வாக்மீ ஶ்ரீமாந் 279-1; 286-1; 290-1; 293-1 [ரா-பா 1-9]

புத்திமாந் நீதிமாந் வாக்மீ ஶ்ரீமாந் ஶத்ருநிபர்ஹண:

[(ராமன்) அறிவுடையவன்; நீதியுடையவன்; நல்லவார்த்தைகளை நன்றாகப் பேசுபவன்; (அப்படிப் பேசும்போது) மிக அழகாயிருப்பவன்; எதிரிகளை அழிப்பவன்.]

585. வாசா தர்ம 288-1; 290-8; 294-10 [ரா-ஸு 39-10]

ஜீவந்தீம் மாம் யதா ராமஸ் ஸம்பாவயதி கீர்த்திமாந் ।
தத் ததா ஹநுமந் வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி ॥

[கீர்த்திமானுன ராமபிரான் உயிருடன் வாழும் என்னை கௌரவிக்கும்படியாக நீ வார்த்தை சொல்லவேண்டும். வார்த்தை சொல்லிப் புண்ணியம் பெறுவாயாக.]

586. வாநராணும் 380-2; 386-3; 388-2; 388-7 [ரா-ஸு 35-2]

வாநராணும் நராணும் ச கதமாஸீத் ஸமாகமः ।

[வானரர்களுக்கும், நரர்களுக்கும் சேர்த்தி எப்படி உண்டாயிற்று?]

587. வாநரோஹம் 326-2; 271-வது ப்ரமாணம் காண்க,

588. வாஸுதேவஸ்ஸர்வம் 420-வது ப்ரமாணம் காண்க.

589. விக்ரேது காமா 190-வது ப்ரமாணம் காண்க.

590. விசக்ரமே ப்ருதிவீ 88-1 [ருக் மண்டல 7-6-99-11]

விசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம் க்ஷேத்ராய விஷ்ணுர் மநுஷே தஸஸ்யந் ।
த்ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ: உருக்ஷிதிம் ஸுஜநிமா சகார ॥

[இந்த தேவனுகிற விஷ்ணு இந்த பூமியை, குடியிருப்பதற்காக, துதிக்கும் தேவர்களுக்கு (மாவலியிடமிருந்து அபஹரித்துக்) கொடுக்க விரும்பி, திருவுலகளந்தருளினுன்; இந்த பகவானை (திருநாம) ஸங்கீர்த்தனம் செய்யும் ஜனங்கள் நிலையாயிருக்கின்றனர்; திவ்யமான பிறப்புக்களையுடைய பகவான் பெரிய நிவாஸ ஸ்தலங்களை (தன்னை ஸங்கீர்த்தனம் செய்வார்க்குச்) செய்து கொடுக்கிருன்.]

591. விஜ்ஞாநம் யதிதம் 300-2; 56-9 [ஜிதந்தே 1-11]

விஜ்ஞாநம் யதிதம் ப்ராப்தம் யதிதம் ஸ்தாநமார்ஜிதம் ।
ஜந்மாந்தரேபி மே தேவ மாபூத் தஸ்ய பரிக்ஷய: ॥

[எம்பிரானே! அடியேனுக்கு (நீயே உபாயமும் உபேயமும் என்கிற) யாதொரு ஜ்ஞானமானது கிடைத்திருக்கிறதோ, (இந்த ஜ்ஞானவிஷயமான அத்யவஸாயமாகிற) யாதொரு நிலை (அடியேனுல்) ஸம்பாதிக்கப்பட்டிருக்கிறதோ அவற்றுக்குக் குறைவானது எப்பிறப்பிலும் ஏற்பட வேண்டாம்.]

592. விது: க்ருஷ்ணம் 176-4; 195-1; 200-3; 205-4 [தாநதர்மம்-வேத்யுதாஹரணம்]

ஸர்வே வேதாஸ்ஸர்வவேத்யா: ஸஶாஸ்த்ரா:
ஸர்வே யஜ்ஞாஸ் ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண: ।
விது: க்ருஷ்ணம் ப்ராஹ்மணஸ் தத்த்வதோ யே
தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞா: ஸமாப்தா: ॥

[அரசனே! எல்லா வேதங்களும், சாஸ்திரங்களும், (அவற்ருல்) அறியப்படும் எல்லாப்பொருள்களும், ஸகல யாகங்களும், அந்த யாகங்களில் ஆராதிக்கப்படும் தேவர்கள் அனைவரும் க்ருஷ்ணனேயாவான். எந்த ப்ராஹ்மணர்கள் கிருஷ்ணனை உள்ளபடி அறிகிருர்களோ, அவர்களுக்கு எல்லா யஜ்ஞங்களும் முடிந்தன.]

593. விதி₄நிர்மித 501-3; 503-5; 228—வது ப்ரமாணம் காண்க.

594. விபீ₄ஷணமுப 178-5; 180-7; 346—வது ப்ரமாணம் காண்க.

595. விபீ₄ஷணஸ்து 70-5; 237-2; 241—3; 244-2; 245-3 [ரா-ஆ 17-24]

விபீ₄ஷணஸ்து த₄ர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித:।

[விபீ₄ஷணனேவெனில் த₄ர்மாத்மாவாயிருப்பவன்; ராக்ஷஸச் செயல்கள் அற்றவன்.]

596. விபீ₄ஷணோ மஹா 456-2 [ரா-யு 19-1]

ராக₄வேணாப₄யே த₃த்தே ஸந்நதோ ராவணாநுஜ: ।
விபீ₄ஷணோ மஹாப்ராஜ்ஞோ பூ₄மிம் ஸமவலோகயந் ।।
கூாத் பபாதாவநிம் ஹ்ருஷ்டோ ப₄க்தைரநுசரை: ஸஹ ।।

[ரகு₄குலத்துதித்தவரான ராமபிரானால் அபயமானது கொடுக்கப்பட்டளவில், ராவணன் தம்பியாய், பேரறிவாளனாய், நன்கு வணங்கியவனான விபீ₄ஷணன் பூமியைப் பார்த்துக்கொண்டு, பின்தொடர்ந்துவந்த அன்பு நிறைந்த அரக்கரோடு கூட ஆனந்தமுடையவனாய் ஆகாயத்தினின்றும் தரையிலே விழுந்தான்.]

597, விவாஹகாலே 396-2

விவாஹகாலே ரதிஸம்ப்ரயோகே₃ ப்ராணாத்யயே ஸர்வத₄நாபஹாரே ।
விப்ரஸ்ய சார்த்தே₂ऽப்யந்ருதம் வதே₃யு: பஞ்சாந்ருதாந்யாஹுரபாதகாநி ।।

[(1) விவாஹகாலம் (2) மனைவியோடு காதல் புரியும் சமயம் (3) உயிர் போகும் சமயம் (4) எல்லாப்பொருளும் அபஹரிக்கப்படும் காலம் (5) அந்தணனுக்கு நன்மை செய்யும் காலம் ஆகிய ஐந்து சமயங்களில் (நல்லோர்கள்) பொய் கூறலாம்; இவ்வைந்து சமயங்களில் சொல்லப்படும் பொய் தீயதல்ல.]

598. விஶ்ரம்ய விஶ்ரம்ய 110-1; 112-2; 114-10 [ரா-கி 28-22]

ஸமுத்₃வஹந்த: ஸலிலாதிபா₄ரம் ப₃லாகிநோ வாரித₄ரா நத₃ந்த: ।
மஹத்ஸு ஶ்ருங்கே₃ஷு மஹீத₄ராணாம் விஶ்ரம்ய விஶ்ரம்ய புந: ப்ரயாந்தி ।।

[மிகுந்த நீரைச் சுமப்பவையாய், நாரைகளையுடையவையாய், முழங்குபவையான மேகங்கள் மலைகளின் உயரமான உச்சிகளில் தங்கித் தங்கி மறுபடியும் செல்கின்றன.]

599. விஷயே தே மஹா. 39-வது ப்ரமாணம் காண்க,

600. வேதை₃ஶ்ச ஸர்வை: 4-3 [கீ₃தை 15-15]

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச।
வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃யோ வேதா₃ந்தக்ருத்₃வேத₃விதே₃வ சாஹம் ।।

[நான் எல்லா ஜீவராசிகளுடையவும் ஹ்ருதயத்தில் ஆத்மாவாக நுழைந்து இருக்கிறேன். (அனைவருடைய) நினைவும், வஸ்து நிர்ணயமும், மறதியும் என்னிடமிருந்தே உண்டாகின்றன; எல்லா வேத3ங்களாலும் நானே அறியப்படுகிறேன்: வேத3விதி4களின் ப2லனை அளிப்பவனும், வேத3த்தை அறிந்தவனும் நானே. ]

601. வைதி3காஸ்த்வதீ3ய 256-வது ப்ரமாணம் காண்க.

602. வைதே3ஹிரமஸே 456-4 [ரா-அ 94-18]

வைதே3ஹி ரமஸே கச்சிச்சித்ரகூடே மயா ஸஹ ।
பஶ்யந்தி விவிதா4ந் பா4வாந் மநோவாக்காய ஸம்யதாந் ।

[விதே3ஹராஜகுமாரியே! சித்திரகூடத்தில் என்னோடு கூடியிருந்து, மநோவாக்காயங்களையீர்க்கும் விதவிதமான பொருள்களைக் கண்டு இன்புறுகிறாயா?]

603. வைத4ர்ம்யம் 860-1; 862-1; 527-3 [ரா-அ 81-24]

குருஷ்வ மாமநுசரம் வைத4ர்ம்யம் நேஹ வித்3யதே ।
க்ருதார்த்தோ2஽ஹம் ப4விஷ்யாமி தவ சார்த்த2: ப்ரகல்பதே ॥

[என்னைக் கைங்கர்யபரனாக வைத்துக்கொள்ளும்; இதில் தவறொன்றுமில்லை. இதனால்) நானும் த4ன்யனாவேன். உம்முடைய கார்யமும் நடைபெறும்.]

604. வ்யஸநேஷு 90-5 [ரா-அ 2-40]

வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்4ருஶம் ப4வதி து3:க்கி2த: ।
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி ॥

[(ராமன்) மநுஷ்யர்களுடைய து3:க்க2ங்களில் (அவர்களைக் காட்டிலும்) அதி4கமாகத் துன்புறுகிறான். (அவர்களுடைய) எல்லா உத்ஸவங்களிலும் தந்தையைப் போல் ஆனந்த3ப்படுகிறான்.]

605. வ்யுஷ்ய ராத்ரிம் 556-2 [ரா-அ 89-1, 2, 3]

வ்யுஷ்ய ராத்ரிம் து தத்ரைவ க3ங்கா3கூலே ஸ ராக4வ: ।
ப4ரத: கல்யமுத்தா2ய ஶத்ருக்4நமித3மப்3ரவீத் ॥
ஶத்ருக்4நோத்திஷ்ட2 கிம் ஶேஷே நிஷாதா3தி4பதிம் கு3ஹம் ।
ஶீக்4ரமாநய ப4த்3ரம் தே தாரயிஷ்யதி வாஹிநீம் ॥
ஜாக3ர்மி நாஹம் ஸ்வபிமி தமேவார்யம் விசிந்தயந் ॥
இத்யேவமப்3ரவீத் ப்4ராத்ரா ஶத்ருக்4நோ஽பி ப்ரசோதி3த: ॥

[அந்த கங்கைக்கரையிலேயே ரகுகுலத்தோன்றலான ப4ரதன் அவ்விரவைக் கழித்து, காலையில் எழுந்து ஶத்ருக்4னனைப்பார்த்து "ஶத்ருக்4ந! ஏன் படுத்திருக்கிறாய்? எழுந்திரு; வேடர் தலைவனான குஹனை விரைவில் அழைத்துவா. உனக்கு மங்க3ளமுண்டாகட்டும். கு3ஹன் நம் சேனையைக் கங்கைக்கு அக்கரையில் சேர்ப்பான்" என்று கூறினான். தமயனான ப4ரதனால் இவ்வண்ணமாக நியமிக்கப்பட்ட ஶத்ரு

க்₄னனும் ''நான் தூங்கவில்லை; பெரியவரான பெருமாளை நினைத்துக்கொண்டு விழித்தேயிருக்கிறேன்'' என்று பதிலுரைத்தான்.]

606. வ்ருக்ஷே வ்ருக்ஷே 87-2; 97-1 [ரா-ஆ 39-14]

வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணஜிநாம்ப₃ரம் ।
க்ருஹீததநுஷம் ராமம் பாஶஹஸ்தமிவாந்தகம் ॥

[(மாரீசன் ராவணனைக் குறித்துச் சொன்ன வாக்யம்:-) மரவுரியும் மான் தோலுமுடுத்தவனாய், வில்லேந்தியவனாயிருக்கும் ராமனை, பாசக்கயிற்றை ஏந்திய யமனைப்போலே, ஒவ்வொரு மரத்திலும் காண்கிறேன்.]

607. வ்ருத: ப்ரக்ருதி 72-5; 97-1 [ரா-ஆ 16—28, 29]

த்யக்த்வா ராஜ்யம் ச மாநம் சபோ₄காந்₃ம்ஶ்ச விவித₄ாந் ப₃ஹூந் ।
தபஸ்வீ நியதாஹார: ஶேதே ஶீதே மஹீதலே ॥
ஸோऽபி வேலாமிமாம் நூநம் அபி₄ஷேகார்த்த₂ முத்₃யத: ।
வ்ருத: ப்ரக்ருதிபி₄ர் நித்யம் ப்ரயாதி ஸரயூம் நதீ₃ம் ॥

[அந்த ப₄ரதன் ராஜ்யத்தையும், (அரசன் என்னும்) அபி₄மானத்தையும், (அரசர்க்குரிய) விதவிதமான பல போகங்களையும் விட்டு, தவம்புரிபவனாய், ஆஹார நியமம் உள்ளவனாய், குளிர்ந்த கல்லிலே படுக்கிறான். இந்த (விடியற்காலை) வேளையில் அவன் நீராடுவதற்காகப் புறப்பட்டு, குடிமக்களால் சூழப்பெற்றவனாய், தினந்தோறும் ஸரயூநதிக்குப் போவான் என்பது நிச்சயம்.]

ஶ

608. ஶக்தே: ஸுப 31-10 [லக்ஷ்மீதந்த்ரம் 17—70, 71, 72]

ஶக்தே: ஸுபஸத₃த்வாச்ச க்ருபாயோகா₃ச்ச ஶார்ங்கி₃ணி ।
ஈஶேஶிதவ்ய ஸம்ப₃ந்த₄ாத₃நிதம்ப்ரத₂மாத₃பி ॥
ரக்ஷிஷ்யத்யநுகூலாந்ந: இதி யா ஸுத்₃ருட₄ா மதி: ।
ஸ விஶ்வாஸோ ப₄வேச்சக்ர! ஸர்வது₃ஷ்க்ருதநாஶந: ॥

[இந்திரனே! ''சார்ங்கமென்னும் வில்லுடைய தேவனிடத்தில், (நம்மையொழிய செல்லாமையாலே) நமக்கு எளிதில் பெறக்கூடிய ஶக்தியிருக்கையாலும், கருணை யிருக்கையாலும், அநாதிகாலமாகவுள்ள ஆண்டான் அடிமை என்னும் உறவிருக் கையாலும் அநுகூலரான நம்மை நிச்சயமாகக் காப்பாற்றுவான்'' என்னும் உறுதி யான எண்ணமே விஶ்வாஸம் எனப்படுகிறது. அது எல்லாத்தடைகளையும் நீக்கும்.]

609. ஶத்ரோ; ப்ரக்₃யாத 539—வது ப்ரமாணம் காண்க.

610. ஶத்ரோ: ஸகாஶாத் 214—8; 217-5; 219—8; 356-3 [ரா—யு 17—37]

ஶத்ரோ: ஸகாஶாத் ஸம்ப்ராப்த: ஸர்வதா₂ ஶங்க்ய ஏவஹி ।
விஶ்வாஸயோக்₃ய: ஸஹஸா ந கர்த்தவ்யோ விபீ₄ஷண: ॥

[விபீஷணன் எதிரியிடத்திலிருந்து வந்தவன்; எல்லாவிதத்திலும் ஐயமுறத் தக்கவனேயன்றோ; விரைவில் நம்பிக்கைக்குப் பாத்திரமாக்கத் தகுந்தவனல்லன்.]

611. ஶரணம் க₃த: 250—வது ப்ரமாணம் காண்க.

612. ஶரண்ய 486-2. 303—வது ப்ரமாணம் காண்க.

613. ஶரணுக₃த 248—வது ப்ரமாணம் காண்க.

614. ஶரண்யஶ்ஶரணு 159—வது ப்ரமாணம் காண்க.

615. ஶரவர்ஷம் 106-2; 111-5; 113-2; 115-6 [ரா—யு 94—18]

தடதோ ராமோ மஹாதேஜா த₄நுராதா₃ய வீர்யவாந் !
ப்ரவிஶ்ய ராக்ஷஸம் ஸைந்யம் ஶரவர்ஷம் வவர்ஷ ஹ ||

[அதற்குப்பிறகு மஹாதேஜஸ்வியும் வீர்யவானுமான ராமன் வில்தாங்கி ராக்ஷஸ ஸைந்யத்தினுள் நுழைந்து சரமழை பொழிந்தான்.]

616 ஶாஸநாத் ஶாஸ்த்ரம் 13-1 [வ்யுத்பத்தி]

[(அதி₄காரிகளான ஜீவர்களை) நியமிக்கையாலே (வேத₃ங்களும் அதை விளக்கும் நூல்களும்) ஶாஸ்த்ரம் எனப்படுகின்றன.]

617. ஶிரஸா யாசத: 176-7; 180-1 [ரா—யு 124-19]

தம் து மே ப்₄ராதரம் த்₃ரஷ்டும் ப₄ரதம் த்வரதே மந: !
மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாக₃த: ।
ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ||

[என்னைத் திருப்பியழைத்துச் செல்ல எவனொருவன் சித்ரகூடத்திற்கு வந்தானோ, அந்த என்னுடைய தம்பியாகிய ப₄ரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப் படவில்லை.]

618. ஶிஷ்யா தா₃ஸீ 74-வது ப்ரமாணம் காண்க.

619. ஶுகமுகா₂த₃ம்ருத 551-10 [பா₄க₃வத 1-1-3]

நிக₃மகல்பதரோர்க₃ளிதம் ப₂லம் ஶுகமுகா₂த₃ம்ருதத்₃ரவஸம்யுதம் !
பிப₃த பா₄க₃வதம் ரஸமாலயம் முஹுரஹோ ரஸிகா பு₄வி பா₄வுகா: ||

[ரஸிகரான பா₄க்₃யஶாலிகளே! வேத₃ங்களாகிற கற்பகமரத்தில் ஶுக ப்₃ரஹ்மரிஷியாகிற கிளியின் முகத்திலிருந்து நழுவியதும், அமுத (மோக்ஷ) ரஸம் நிறைந்ததுமான பா₄க₃வதமாகிற இன்கனியை தே₃ஹவியோக₃மாகும் வரையில் பருகுங்கள்.]

620. ஶுத்₃த₄ம் வேத்தி 473-வது ப்ரமாணம் காண்க.

621. ஶேதே ஶீதே 607-வது ப்ரமாணம் காண்க.

622. ஶோப₄யந் த₃ண்ட₃ 212-1; 215-8; 218-1; 220-7; [ரா—ஆ 38-15]

ஶோப₄யந் த₃ண்ட₃காரண்யம் தீ₃ப்தேந ஸ்வேந தேஜஸா ।
அத்₃ருஶ்யத ததோ ராமோ பா₃லசந்த்₃ர இவோதி₃த: ॥

[பிரகாசியாநிற்கும் தன் ஒளியினலே தண்டகாரண்யத்தை அலங்கரித்துக் கொண்டு அப்போதுதித்த இளஞ்சந்திரனைப் போல ஸ்ரீராமபிரான் காணப்பட்டான்.]

623. ஶ்ரத்₃த₄யா 358-4 [யஜு காண்ட₃ 8-3]

ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமஶ்நுதே

[தே₃வனுகிற ப₄க₃வான் ஶ்ரத்₃தா₄ஶப்₃த₃வாச்யையான பிராட்டியாலேயே தே₃வனுயிருக்கும் தன்மையை அடைகிறுன்.]

624. ஶ்ரிய: ஶ்ரியம் 358-6; 442-2 [ஸ்தோ-ர 45]

அசிந்த்யதி₃வ்யாத்₃பு₄தநித்யயௌவந-
ஸ்வபா₄வலாவண்யமயாம்ருதோத₃தி₄ம் ।
ஶ்ரிய: ஶ்ரியம் ப₄க்தஜநைகஜீவிதம்
ஸமர்த்த₂மாபத்ஸக₂மர்த்தி₂கல்பகம் ॥

[நினைக்கமுடியாததாய், அப்ராக்ருதமாய், ஆஶ்சர்யமாய், நித்யமாயிருக்கும் யௌவனத்தை இயற்கையாக உடையவனாகவும், அழகு நிறைந்த அமுதக் கடலாகவும், திருவுக்கும் திருவாகவும், ப₄க்தஜனங்களுக்கு ஒருயிராகவும், (ஞானத்தினால் குறைந்தவர்களையும் சிறிது சிறிதாகத் தன்னை அனுப₄விப்பிக்கவல்ல) ஸாமர்த்₂யத்தை உடையவனாகவும், ஆபத்திலுதவும் நண்பனாகவும், யாசிப்பவர்களுக்குக் கல்பகவ்ருக்ஷம் போன்றவனாகவுமிருக்கிற.]

625. ஶ்ரியை நம: 552-3; 563-7; [வாக்யகு₃ருபரம்பரை]

ஶ்ரியை நம:

[பெரியபிராட்டியாருக்கு நமஸ்காரம்]

626. ஸ்ரீத₄ராய 552-4; 563-8 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீத₄ராய நம:

[திருவை மார்பில் த₄ரிப்பவனுக்கு நமஸ்காரம்]

627. ஸ்ரீபராங்கு₃ஶ 551-5 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீபராங்குஶதா₃ஸாய நம:

[பெரியநம்பிகளுக்கு நமஸ்காரம்]

628. ஸ்ரீபுண்ட₃ரீகாக்ஷாய நம: 551-8 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீபுண்ட₃ரீகாக்ஷாய நம:

[உய்யக்கொண்டாருக்கு நமஸ்காரம்]

629. ஸ்ரீமதே ராமாநுஜாய 551-4 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

[ஜ்ஞாநப₄க்தி வைராக்₃யச்செல்வம் மிக்க எம்பெருமானார்க்கு நமஸ்காரம்]

630. ஸ்ரீமதே விஷ்வக் 552-2 [வாக்ய கு₃ருபரம்பரை]

ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:

[(உப₄யவிபூ₄தியையும் நியமிக்கும்) செல்வம் மிக்க சேனைமுதலியாருக்கு நமஸ்காரம்.]

631. ஸ்ரீமதே ஶட₂கோபாய 552-1 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீமதே ஶட₂கோபாய நம:

[(வேதம் தமிழ்செய்த) செல்வரான நம்மாழ்வாருக்கு நமஸ்காரம்]

632. ஸ்ரீமத்₃யாமுநமுநயே 551-6 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீமத்₃யாமுநமுநயே நம:

[(எம்பெருமானாரைக் கடாக்ஷித்த) செல்வமுடைய ஆளவந்தாருக்கு நமஸ்காரம்.]

633. ஸ்ரீரங்க₃ராஜப்₄ரு [ர-ஸ்த 1-11]

லக்ஷ்மீகல்பலதோத்துங்க₃ஸ்தநஸ்தப₃கசஞ்சல: ।

ஸ்ரீரங்க₃ராஜப்₄ருங்கோ₃ மே ரமதாம் மாநஸாம்பு₃ஜே ॥

[பெரியபிராட்டியாகிற கற்பகக்கொடியின் உயர்ந்த கொங்கைகளாகிற பூங்கொத்துக்களில் வட்டமிடாநின்ற ஸ்ரீரங்க₃ராஜனாகிற வண்டு எனது நெஞ்சத்தாமரையில் உகந்து வாழ்ந்திடுக.]

634. ஸ்ரீராமமிஶ்ராய 551—8 [வாக்யகு₃ருபரம்பரை]

ஸ்ரீராமமிஶ்ராய நம:

[மணக்கால் நம்பிக்கு நமஸ்காரம்.]

635. ஸ்ரீஸ்தநாப₄ரணம் 406—1; 563—6 [ர— ஸ்த 1—8]

ஸ்ரீஸ்தநாப₄ரணம் தேஜ: ஸ்ரீரங்கே₃ஶயமாஶ்ரயே ।

சிந்தாமணி மிவோத்₃வாந்த முத்ஸங்கே₃ऽநந்தபோ₄கி₃ந: ॥

[பெரியபிராட்டியாருடைய கொங்கைகளுக்கு ஆப₄ரணம் போலிருப்பதும் திருவநந்தாழ்வானுடைய மடியில் உமிழப்பட்ட சிந்தாமணிபோன்றதுமான ஸ்ரீரங்க₃நாத₂னாகிற தேஜஸ்ஸை ஆஶ்ரயிக்கிறேன்.]

636. ஶ்ருயதாமிதி 77—4; 517—2; 407—வது ப்ரமாணம் காண்க.

637. ஶ்ரேயாம்ஸி 117—1; 125—1; 183—2; 569—1 ?

ஶ்ரேயாம்ஸி ப₄ஹூ₃விக்₄நாநி ப₄வந்தி மஹதாமபி ।
அஶ்ரேயஸி ப்ரவ்ருத்தே து குத்ர யாந்தி விக₄ாதகா: ॥

[பெரியோர்களுக்குங்கூட நற்காரியங்கள் பல தடைகளை உடையனவாகின்றன. கெட்ட காரியம் செய்யும்போது தடைகள் எங்கு போகின்றனவோ?]

## ஸ

638. ஸ உ ஶ்ரேயாந் 366—4; 372—6; 377-1; 440-4 [யஜு₂—அஷ்டக 3-6-3-9]

ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந: ।

[அப்பரமபுருஷன் பிறந்தபின்பே பெருமை பெறுகிறுன்.]

639. ஸ ஏவமுக்தோ 233-10 [ரா-யு 59-144]

ஸ ஏவமுக்தோ ஹததர்ப்பஹர்ஷோ நிவ்ருத்தசாப: ஸ ஹதாஶ்வஸூத: !
ஶரார்த்தித: க்ருத்தமஹாகிரீடோ விவேஶ லங்காம் ஸஹஸா ஸ ராஜா ॥

[(ஸ்ரீராமனுல் 'இன்றுபோய் நாளை வா' என்று) இவ்வண்ணமாகச் சொல்லப்பட்ட அந்த ராக்ஷஸராஜாவான ராவணன் கர்வமும், ஆனந்தமும் அழிக்கப்பெற்றவனுய், வில்லிழந்தவனுய், குதிரையும் ஸாரதியும் அழிக்கப்பெற்றவனுய், அம்புகளால் துளைக்கப்பெற்றவனுய், பெரிய கிரீடமும் பிளக்கப்பெற்றவனுய் உடனே இலங்கையில் நுழைந்தான்.]

640. ஸ ஏஷ தே₃ஶ: [ரா-யு 17-57]

ஸ ஏஷ தே₃ஶ: காலஶ்ச ப₄வதீஹ யதா₂ ததா₂ ।

[விபீ₄ஷணன் யாதொரு தேசத்திலே யாதொரு காலத்திலே வந்தானே, இதுவே அவன் வரவுக்கு உகந்த தேசமும், காலமும் ஆகும் என்பதை (அடியேன் விண்ணப்பம் செய்யக்கேட்டருளவேணும்.)]

641. ஸ ஏஷ ப்ருது₂ 71-2 [பா₄ர—ஶந 192—51]

ஸ ஏஷ ப்ருது₂தீ₃ர்க்க₄ாக்ஷ: ஸம்ப₃ந்தீ₄ தே ஜநார்த்தந: ।

[அந்தப் பரமபுருஷனே பெரிய நீண்ட கண்களையுடையவனுய், உனக்கு உறவினனை இந்தக் கண்ணன்.]

642. ஸகலமநுஜ 366-3; 372-4 [கீ₃தாபா₄ஷ்ய அவதாரிகை]

பூ₄பா₄ராவதரணுபதே₃ஶேந அஸ்மதா₃தீ₃நாமபி ஸமாஶ்ரயணீயத்வாய
அவதீர்ய உர்வ்யாம் ஸகலமநுஜநயந விஷயதாம் க₃த: ।

[மண்ணின் பா₄ரத்தை நீக்குவது என்னும் வியாஜத்தையிட்டு இவ்வுலகில் நம்மைப்போன்றவர்கள் தன்னை அடைந்து உய்வதற்காக அவதரித்து, (உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் வாசியில்லாமல்) எல்லா மனிதர்களின் கண்ணுக்கும் இலக்கானுன்.]

643. ஸக்₂ய: பஶ்யத 172—1; 178-1; 180-1; 267-1; 389-9 [வி-பு 5-20-54, 59]

1: ஸக்₂ய: பஶ்யத சாணூர(ம்) நியுத்₃த₄ார்த்த₂மயம் ஹரி: ।
ஸமுபைதி ந ஸந்த்யத்ர கிம் வ்ருத்₃த₄ா யுக்தகாரிண: ॥

[தோழிகளே! பாருங்கள். (முரடனான) சாணூரனோடு போர்புரிய (சிறுவனான) இக்கண்ணன் வருகிறான்; தடுக்கவேண்டிய இதைத் தடுக்கும் நற்செயலைச்செய்ய வல்ல முதியவர்கள் எவரும் இங்கில்லையா?]

2. ஸக்₂ய: பஶ்யத க்ருஷ்ணஸ்ய முக₂மத்யருணேக்ஷணம் ।
க₃ஜயுத்₃த₄க்ருதாயாஸ ஸ்வேத₃ாம்பு₃ கணிகாஞ்சிதம் ॥

[தோழிகளே! யானையோடு போரிட்ட களைப்பினால் உண்டான வேர்வைத் துளிகளால் விளங்குவதாய், மிகச்சிவந்த கண்களையுடையதான கண்ணனின் முகத்தைப் பாருங்கள்.]

644. ஸ கோ₄ஷோ த₄ார்த்த 105-2; 111-3; 115-1; 446-4; 455-3; 457-1 [கீ₃தை 1-19]

ஸ கோ₄ஷோ த₄ார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத₃யாநி வ்யதா₃ரயத் ।
நப₄ஶ்ச ப்ருதி₂வீம் சைவ துமுலோ வ்யநுநாத₃யந் ॥

[ஆகாயத்தையும் பூமிமுழுவதையுமே எதிரொலிக்கச்செய்ததான ஒன்றுசேர்ந்த அந்த சங்கநாதம் திருதராஷ்ட்ரனின் புத்ரர்களுடைய இருதயங்களை நன்றாகப் பிளந்தது.]

645. ஸ ச நித்யம் 74-2 [ரா-அ 1—10]

ஸ ச நித்யம் ப்ரஸந்நா (ப்ரஶாந்தா) த்மா ம்ருது₃பூர்வம் ச ப₄ாஷதே ।
உச்யமாநோऽபி பருஷம் நோத்தரம் ப்ரதிபத்₃யதே ॥

[அந்த ராமபிரான் எப்போதும் தெளிந்த (ஶாந்தமான) நெஞ்சையுடையவனாய், மென்மையாகவே பேசுகிறான். கடுஞ்சொல்லைப் பிறர் சொன்னாலும் அதற்குப் பதில் உரைப்பதில்லை.]

646. ஸஞ்ஜாதபா₃ஷ்ப: 225-1; 233-3 [ரா-கி 24-24]

இத்யேவமார்த்தஸ்ய ரகு₄ப்ரவீர: ஶ்ருத்வா வசோ வால்யநுஜஸ்ய தஸ்ய ।
ஸஞ்ஜாதபா₃ஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா ப₃பூ₄வ ॥

[மிகவருந்தியவனும், வாலியின் தம்பியுமான அந்த ஸுக்₃ரீவனின் வார்த்தையைக் கேட்டு, வீரர்களான எதிரிகளையும் அழியச் செய்யும் ராமன் கண்ணீர் வரப்பெற்றவனாய் முஹூர்த்த நேரம் மனம் வெதும்பினான்.]

647. ஸததம் கீர்த்த 251-3; 309-வது ப்ரமாணம் காண்க.

648. ஸ தத₃ந்த: 186-1; 285-1; 289-4; 292-4 [ரா-அ 16-1]

ஸ தத₃ந்த:புரத்₃வாரம் ஸமதீத்ய ஜநாகுலம் ।
ப்ரவிவிக்தாம் தத: கக்ஷ்யாம் ஆஸஸாத₃ புராணவித் ॥

[பழைய ஆசாரங்களை அறிந்த அந்த ஸுமந்திரன் ஜனங்கள் நிறைந்த அந்த அந்தப்புர வாசலை ஒருவாறு கடந்து, ஆள் நடமாட்டமில்லாத அடுத்த கட்டை அடைந்தான்.]

649. ஸ து நாக₃வர: 467 வது ப்ரமாணம் காண்க.

650. ஸத் கர்ம நிரதா: 9—2 [லக்ஷ்மிதந்த்ரம் 17—63]

ஸத்கர்ம நிரதா: ஶுத்₃தா₄: ஸாங்க்₂யயோக₃வித₃ஸ்ததா₂ ।
நார்ஹந்தி ஶரணஸ்த₂ஸ்ய கலாம் கோடிதமீமபி ॥

[(மற்ற பயன்களில் ஆசையில்லாத) பரிசுத்தர்களான கர்மயோகிகளும், ஜ்ஞாநப₄க்தியோக₃ங்களில் நிற்பவர்களும், ஶரணாக₃தி நிஷ்ட₂னான ப்ரபன்னனுடைய கோடியில் ஒரு பங்குக்கும் இணையாகார்கள்.]

651. ஸத்யேந 368-2; 375—4; 376—5; 472—1; 473—3 [ரா—அ 12—29]

ஸத்யேந லோகாந் ஜயதி தீ₃நாந் தா₃நேந ராக₄வ: ।
கு₃ரூந் ஶுஶ்ரூஷயா வீர: த₄நுஷா யுதி₄ ஶாத்ரவாந் ॥

[ராகவன் உண்மையுரைத்தலாலே உலகங்களை ஜயிக்கிறான்; எளியவர்களைக் கொடையினாலே கவர்கிறான்; ஆசார்யர்களைக் கைங்கர்யத்தினாலே கைவசப்படுத்துகிறான்; வீரனான அவன் போரில் எதிரிகளை வில்லினாலே வெல்கின்றான்.]

652. ஸதா₃ பஶ்யந்தி 44-1; 48—4; 52—2; 77-8; 126-2; 131—5; 134—5; 304—1; 369—3 [ருக்—அஷ்டக 1—2—7]

தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய: ।
தி₃வீவ சக்ஷுராததம் தத்₃விப்ராஸோ விபந்யவோ
ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே விஷ்ணோர் யத் பரமம் பத₃ம் ॥

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை அல்லது (ஸ்வரூபத்தை) நித்ய ஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள்; அப்பரமபத₃ம் — எல்லாவற்றையும் கண் போல் பிரகாசிக்கச் செய்பவனும் ஆகாயத்திலிருப்பவனுமான ஸூர்யன்போல் விளங்குகிறது. அப்பரமபத₃த்தில் மேதா₄விகளும், துதிப்பவர்களும், (பரிவாலே) விழிப்புடனிருப்பவர்களுமான நித்யஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.]

653. ஸதை₃கரூப 90—4; 126—3; 334—3; 341-4; 347—3 [வி—பு 1—2—1]

அவிகாராய ஶுத்₃தா₄ய நித்யாய பரமாத்மநே ।
ஸதை₃கரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

[(அசேதனத்தைப்போலல்லாமல்) விகாரம் அற்றவனாகவும், (ஸம்ஸாரி சேதனனைப்போலல்லாமல்) அஶுத்₃தி₄ இல்லாதவனாகவும், (முக்தாத்மாவைப் போலல்லாமல்) நித்ய ஶுத்₃த₄னாகவும், (நித்ய ஸூரிகளைப்போலல்லாமல்) தனக்கு மேல் ஒருவனற்றவனாகவும், எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் தி₃வ்யமங்க₃ளவிக்₃ர

ஹத்தை உடையவனுகவும், ஸர்வவ்யாபியாகவும், எல்லாவற்றையும் ஜயிப்ப வனுகவுமுள்ள ப4க3வானுக்கு (நமஸ்காரம்).]

654. ஸந்தமேநம் 56—வது ப்ரமாணம் காண்க.

655. ஸந்த்யஜ்ய 487-2; 511-1 [விஹகேஶ்வர ஸம்ஹிதை?]

பிதரம் மாதரம் தா3ராந் புத்ராந் ப3ந்தூ4ந் ஸகீ2ந் கு3ரூந் ।
ரத்நாநி த4நதா4ந்யாநி க்ஷேத்ராணி ச க்3ருஹாணி ச ॥
ஸர்வத4ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந் ।
லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தே3வ்ரஜம் விபோ4 ॥

[ப4க3வானே! தந்தையையும், தாயையும்; மனைவியையும், பிள்ளைகளையும், உறவினரையும், நண்பர்களையும், ஆசாரியர்களையும், ரத்னங்களையும், த4னதா4ன்யங் களையும், வயல்களையும், வீடுகளையும், எல்லா உபாயங்களையும், கைவல்யமுள்ளிட்ட எல்லா ப்ராப்யங்களையும் வாஸனையுடன் விட்டு, திருவுலகளந்தருளின உன் திருவடிகளை ஶரணமடைகிறேன்.]

656. ஸந்தே3ஶை: 300—1; 305--5; 307-1; 308-8 [வி-பு 5-24-20]

ஸந்தே3ஶைஸ் ஸாமமது4ரை: ப்ரேமக3ர்ப்பை4ரக3ர்விதை: ।
ராமேணாஶ்வாஸிதா கோ3ப்யோ ஹரிணா ஹ்ருதசேதஸ: ॥

[ஹரியினுல் (கிருஷ்ணனுல்) அபஹரிக்கப்பட்ட நெஞ்சையுடைய கோ3பிகள் நயம் நிறைந்து இனியவையும், அன்பு நிறைந்தவையும், க3ர்வமற்றவையுமான செய்திகளாலே ப3லராமனுலே ஆறுதலடைவிக்கப்பட்டனர்.]

657. ஸம இதி லோக 114—8 [வி–பு 3-7-15]

அஹமமரவரார்ச்சிதேந தா4த்ரா ஸ(ய)ம இதி லோகஹிதாஹிதே நியுக்த: ।
ஹரிகு3ருவஶகோ3ऽஸ்மி ந ஸ்வதந்த்ர: ப்ரப4வதி ஸம்யமநே மமாபி விஷ்ணு: ॥

[நான் தேவர் தலைவர்களாலே ஆராதி4க்கப்படும் ஸர்வேஶ்வரனுல் நடுநிலை நின்று நியமிக்கக் கூடியவன் என்னும் காரணத்தாலே, உலகில் நன்மையை நடத்தவும், தீமையை விலக்கவும் நியமிக்கப்பட்டேன்: பரமனுன ஹரிக்கு வசப்பட்டவனேயொழிய நான் ஸ்வதந்திரன் அல்லன்; விஷ்ணு என்னையும் நியமிக்கவல்லவர்.]

658. ஸமயா போ3தி4த: 71-5; 279-8; 287-6; 290-5; 294-2; 398-1; 404-1; 406-8 [ரா-யு 38-25]

வாயஸேந ததஸ்தேந ப3லவத்க்லிஶ்யமாநயா ।
ஸ மயா போ3தி4த: ஸ்ரீமாந் ஸுக2ஸுப்த: பரந்தப: ॥

[பிறகு அந்தக் காகாஸுரனுல் ப3லாத்காரமாகத் துன்புறுத்தப்பட்ட என்னுல், ஸுகமாகக் கண்வளர்ந்தருளியவரும், (அத்தாலே) அழகாயிருப்பவரும், (தூங்கும் போதும்) எதிரிகளைத் தவிக்கச் செய்பவருமான ஸ்ரீராமபிரான் எழுப்பப்பட்டார்.]

659. ஸமஸ்த கல்யாண 370-10 [ஸ்தோ-ர 18]

வஶீ வத3ாந்யோ கு3ணவாந் ருஜு: ஶுசி:
ம்ருது1ர்த3யாளுர் மது4ரஸ்ஸ்தி2ரஸ் ஸம: ।
க்ருதீ க்ருதஜ்ஞஸ்த்வமஸி ஸ்வப4ாவதஸ்
ஸமஸ்தகல்யாணகு3ணம்ருதோத3தி4: ॥

[(ஆஶ்ரிதர்களுக்கு) வசப்பட்டிருப்பவனுய், (தன்னையே தமர்க்கு நல்கும்) வள்ளலாய், ஸௌஶீல்யகு3ணத்தை உடையவனுய்,(மனோவாக்காயங்களால்) ஒருபடிப் பட்டிருப்பவனுய் (நிர்ஹேதுகமாக உபகரிக்கும்) ப4ாவஶுத்3தி4யை உடையவனுய், அடியார்களின் பிரிவைப் பொறுக்கமாட்டாதவனுய், (ஆஶ்ரிதருடைய து3:க்க2த்தை ஸஹிக்கமாட்டாத) த3யையை உடையவனுய். இனியவனுயிருப்பவனுய், (அடியார்களை) ரக்ஷிக்கும் விஷயத்தில் அசைக்கமுடியாதவனுய், (ஆஶ்ரயிக்குமிடத்தில் எல்லாருக்கும்) ஸமனுய், (ஆஶ்ரிதர்களுடைய காரியங்களைத் தன்னுடையவையாக நினைத்துக்) காரியம் செய்பவனுய், ஆஶ்ரிதர் செய்த சிறிய ஆநுகூல்யத்தையும் பெரிதாக நினைத்திருப்பவனுயிருக்கும் நீ இயற்கையாகவே எல்லாக் கல்யாணகு3ணங்களுக்கும் அமுதக்கடலாயிருக்கிருய்.]

660. ஸமுத்3ர இவ 108-4; 109-2 [ரா—பா3 1-17]

ஸ ச ஸர்வகு3ணோபேத: கௌஸல்யாநந்த3வர்த்த4ந: ।
ஸமுத்3ர இவ கா3ம்பீ4ர்யே தை4ர்யேண ஹிமவாநிவ ॥

[கௌஸல்யைக்கு ஆநந்த3த்தை வளர்க்கும் அந்த ராமன் எல்லா குணங்களும் நிறைந்தவன்; கா3ம்பீ4ர்யத்தில் (நெஞ்சின் ஆழத்தில்) ஸமுத்3ரம் போன்றவன்; தை4ர்யத்தில் (உறுதியில்) ஹிமவானைப் போன்றவன்.]

661. ஸம்ப்ராப்தம் 279 வது ப்ரமாணம் காண்க.

662. ஸம்ப4வாமி 369—வது ப்ரமாணம் காண்க.

663. ஸம்வத்ஸரம் 99-4 [தைத்-ஆரண்ய 1-32-1]

ஸம்வத்ஸரமேதத்3வ்ரதம் சரேத் !

[இந்த விரதத்தை ஒருவருடகாலம் கடைப்பிடிக்கவேண்டும்]

664. ஸம்ஶ்ரவே 7-2; 61-1; 71-1; 77-7; 196-3; 201-2, 204-2; 206-2; 252-3; 255-3 [ரா-ஸு 31-1]

ஏவம் ப3ஹுவித4ாம் சிந்தாம் சிந்தயித்வா மஹாகபி: ।
ஸம்ஶ்ரவே மது4ரம் வாக்யம் வைதே3ஹ்யா வ்யாஜஹார ஹ ॥

[மஹாவானரனுன அனுமன் இவ்வண்ணமாகப் பலவிதமான சிந்தனைகளைச் செய்து விதே3ஹராஜகுமாரிக்காகச் செவிக்கினிய செஞ்சொல்லைப் பேசினுன்.]

665. ஸரயூமவ 12-வது ப்ரமாணம் காண்க.

666. ஸர்வக3ந்த4: 318-1; 320-3; 325-1; 328-1; 329-4; 394-1. 400-1; 404-3; 407-3 [சா2ந் 3-14-2]

ஸர்வக3ந்த4: ஸர்வரஸ:

[(பரமபுருஷன் தன் திருமேனியில்) எல்லா நறுமணங்களையுமுடையவன்; எல்லா நற்சுவைகளையுமுடையவன்.]

667. ஸர்வத4ர்மாந் 654-வது ப்ரமாணம் காண்க.

668. ஸர்வபூ4தாத்மகே 178-2 [வி—பு 1—19—37]

ஸர்வபூ4தாத்மகே தாத ஜக3ந்நாதே2 ஜக3ந்மயே |
பரமாத்மநி கோ3விந்தே3 மித்ராமித்ரகதா2 குத: ||

[தந்தையே! எல்லா ஜீவர்களையும் சரீரமாகக் கொண்டவனாய், (அதனாலேயே) எல்லாவுலகாகவுமிருப்பவனாய், தனக்கு ஓர் அந்தர்யாமியில்லாதவனாய், (அதனால்) உலகிற்கு ஒரே நாத2னாக கோ3விந்த3ன் இருக்கும்போது ஒருவனை நண்பனென்றும், ஒருவனை எதிரியென்றும் எப்படிப் பேசமுடியும்?]

669. ஸர்வயஜ்ஞா: 592—வது ப்ரமாணம் காண்க.

670. ஸர்வலாப4ாய 128 —வது ப்ரமாணம் காண்க.

671. ஸர்வலோகசரண்யாய 238-3; 346—வது ப்ரமாணம் காண்க.

672. ஸர்வாத்மநா 74-1; 507-4 [ரா-யு 131—93]

ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதா2 ந ஸௌமித்ரிருபைதி யோகம் |
நியுஜ்யமாநோऽபி ச யௌவராஜ்யே ததோऽப்4யஷிஞ்சத்3 ப4ரதம் மஹாத்மா ||

[யுவராஜாவாகப் பட்டாபி4ஷேகம் செய்துகொள்ளும்படி நியமிக்கப்பட்டும், எல்லாப்படியாலும் நல்வார்த்தைகளாலே கேட்டுக்கொள்ளப்பட்டும், அதற்கு லக்ஷ்மணன் இசையாமலிருந்தபோது, மஹாத்மாவான ஸ்ரீராமபிரான் ப4ரதனை யுவராஜாவாகப் பட்டாபி4ஷேகம் செய்வித்தான்.]

673. ஸர்வாநசேஷத: 486-4: 498-1 [சரணாக3திக3த்3யம் 10]

மநோவாக்காயை: அநாதி3கால ப்ரவ்ருத்தாநந்தாக்ருத்யகரண-
க்ருத்யாகரண ப4க3வத3பசார பா4க3வதாபசாராஸஹ்யாபசார ரூப-
நாநாவித4ாநந்தாபசாராந் ஆரப்3த4கார்யாந் அநாரப்3த4கார்யாந்
க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ச்ச ஸர்வாந் அசேஷத: க்ஷமஸ்வ |

[மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களாலும் அநாதி3காலமாகத் தொடரும் கணக்கற்றவையான தகாதனசெய்வனவும், தக்கன செய்யாமையும், ப4க3வானிடம் செய்யும் குற்றமும், பா4க3வதர்களைக் குறித்துச் செய்யும் குற்றமும், பொறுக்கவொண்ணாக் குற்றமுமாகிற பலவித எல்லையற்ற குற்றங்களையும்,

பயன்தரத்தொடங்கியவற்றையும், பயன்தரத்தொடங்காதவற்றையும், செய்தவற்றையும், செய்கிறவற்றையும், செய்யப்புகுமவற்றையும் ஆகிய இவையெல்லாக் குற்றங்களேயும் ஒன்றுவிடாமல் பொறுத்தருளவேணும்.]

674. ஸர்வாந் தே₃வாந் 117-2; 131-3; 284-3 [ரா-அ 2-52]

ஸ்த்ரியோ வ்ருத்₃த₄ாஸ் தருண்யஸ்ச ஸாயம் ப்ராத: ஸமாஹிதா: ।
ஸர்வாந் தே₃வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே₂ யஶஸ்விந: ॥

[(அயோத்தியிலுள்ள) ஸ்த்ரீகளும், வயோதி₄கர்களும், பெண்களும் காலேயும் மாலேயும் கூடியிருந்து (தே₃வஶத்ருக்களே வென்று) புகழ்படைத்த ராமனுக்காக எல்லா தேவர்களேயும் வணங்குகிருர்கள்.]

675. ஸர்வே வேதா₃ யத்பத₃ 4-12; 371-2 [கட₂ 1-2-15]

ஸர்வே வேதா₃ யத்பத₃மாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்₃வத₃ந்தி ।
யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பத₃ம் ஸங்க்₃ரஹேண ப்ரவக்ஷ்யே
ஓமித்யேதத் ॥

[எல்லா வேத₃ங்களும் எந்தப் பரமாத்மஸ்வரூபத்தை ஓதுகின்றனவோ, தவமாகிற உபாஸனத்தை முக்₂யமாகக்கொண்ட உபநிஷத்₃பா₄க₃ங்கள் எதை நேரே கூறுகின்றனவோ, எந்தப் பரமாத்மாவை அடைய விரும்பி ப்₃ரஹ்மசர்யத்தை (1. கு₃ருகுலவாஸம் 2. விஷயப்பற்றின்மை) அநுஷ்டி₂க்கின்றனரோ அந்த ஸ்வரூபத்தைச் சுருக்கமான சொல்லாலே கூறுகிறேன். ஓம் என்பது அச்சொல்.]

676. ஸர்வே வேதா₃ யத்ரைகம் 371-3 [யஜு—ஆரண்ய 3-11]

ஶதம் ஶுக்ராணி யத்ரைகம் ப₄வந்தி ஸர்வே வேதா₃ யத்ரைகம் ப₄வந்தி ।
ஸர்வே ஹோதாரோ யத்ரைகம் ப₄வந்தி ஸர்வா: ப்ரஜா யத்ரைகம் ப₄வந்தி ॥

[கணக்கற்ற சோதிகள் எவனிடத்தில் ஒன்றுகின்றனவோ, எல்லா வேத₃ங்களும் எவனிடம் ஒன்றுகின்றனவோ, எல்லா ஹோதாக்களும் எவனிடம் ஒன்றுகின்றனரோ, எல்லா ஜீவர்களும் எவனிடம் ஒன்றுகின்றனரோ]

677. ஸர்வேऽஸ்மை 114-1; 569-2 [தை—ஶீக்ஷா 5-3]

ஸ வேத₃ ப்₃ரஹ்ம, ஸர்வேऽஸ்மை தே₃வா ப₃லிமாவஹந்தி ।

[அவன் ப்₃ரஹ்மத்தை அறிகிருன்; எல்லா தே₃வர்களும் அவனே ஆராதி₄க்கிருர்கள்.]

678. ஸலிலேந 398-3 [ரா-கி 28-53]

வ்ருத்தா யாத்ரா நரேந்த்₃ராணும் ஸேநா ப்ரதிநிவர்த்ததே ।
வைராணி சைவ மார்க்₃ாஶ்ச ஸலிலேந ஸமீக்ருதா: ॥

[(மழைகாலத்தில்) அரசர்களின் விஜயயாத்ரை முடிந்து விட்டது; ஸேனையும் திரும்பிவிட்டது; அரசர்களிடையேயிருந்த விரோத₄ங்களும், வழிப்பாதைகளும் மழைகாலமழையினுல் ஸமமாகி மறைந்தன.]

679. ஸ ஸத்யவசநாத் 70-1 [ரா—பா₃ 1-33]

ஸ ஸத்யவசநாத்₃ராஜா த₄ர்மபாஶேந ஸம்யத: ।
விவாஸயாமாஸ ஸுதம் ராமம் த₃ஶரத₂ஸ்ததா₃ ॥

[அப்போது த₃ஶரத₂மஹாராஜர் ஸத்யவசனத்தைப் பற்றிக்கொண்டு (ஸாமாந்ய) த₄ர்மமாகிற கயிற்றினாலே கட்டுண்டு (பரமத₄ர்மமான) தன்பிள்ளை ராமனைக் காட்டுக்கு அனுப்பினார்.]

680. ஸ ஸர்வவித் 205-5 [கீ₃தை 15—19]

யோ மாமேவமஸம்மூடோ₄ ஜாநாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்₃ப₄ஜதி மாம் ஸர்வபா₄வேந பா₄ரத ॥

[பா₄ரதகுலத்தில் பிறந்தவனே! எவனொருவன் இம்மாதிரியாக, க்ஷராக்ஷரபுருஷர்களைக் காட்டிலும் பல காரணங்களால் சிறப்புற்றவனாக என்னைக் கலக்கமில்லாமல் அறிகிறானோ, அவன் என்னை அடைவதற்குரிய வழியனைத்தையும் அறிந்தவனாகிறான். என்னை (என்னை அடையும் வழியான) ப₄க்தி ப்ரகாரங்களனைத்தாலும் ப₄க்தி செய்தவனாகிறான்.]

681. ஸ ஸர்வாநர்த்தி₂நோ 216-3; 375-6 [ரா-அ 16-27]

அத₂ மத்₄யமகக்ஷ்யாயாம் ஸமாக₃ச்ச₂த் ஸுஹ்ருஜ்ஜநை: ।
ஸ ஸர்வாநர்த்தி₂நோ த்₃ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்₃ய ச ॥

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு ஆநந்த₃ப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.]

682. ஸஸைந்யம் 270-3; 272-3 [ரா-அ 96-30]

ஸஸைந்யம் ப₄ரதம் க₃த்வா ஹநிஷ்யாமி ந ஸம்ஶய: ।

[நான் சென்று ஸேனையோடு கூடிய ப₄ரதனைக் கொன்று விடுவேன்; இதில் ஐயமில்லை.]

683. ஸஹ பத்ந்யா 329-வது ப்ரமாணம் காண்க.

684. ஸஹோவாச 532-1; 543-2; 545-2 [தை-ஆர 1-7]

ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய: ।

[பராஶரரின் புத்திரரான அப்படிப்பட்ட வியாஸரன்றோ சொன்னார்.]

685. ஸாக்ஷாத்₃விஷ்ணு: 127-1; 464 வது ப்ரமாணம் காண்க.

686. ஸாக்ஷாந்மந்மத₂ 296-1; 300-3 [பா₄க₃வதம் 10-32-2]

தாஸாமாவிரபூ₄ச்சௌ₂ரி: ஸ்மயமாநமுகா₂ம்பு₃ஜ: ।
பீதாம்ப₃ரத₄ர: ஸ்ரக்₃வீ ஸாக்ஷாந்மந்மத₂மந்மத₂: ॥

[புன்சிரிப்புடன் கூடிய திருமுகத்தாமரையை உடையவனாய், பீதகவாடை யுடையவனாய், வனமாலையால் அலங்கரிக்கப்பெற்றவனாய், ஸாக்ஷாத் மந்மதனுக்கும் மந்மதனாயுள்ள கிருஷ்ணன் அந்த கோபிகளுக்கிடையில் தோன்றினான்.]

687. ஸா ப்ரஸ்க₂லந்தீ 199-1; 203-2; 205-2; 207-4 [ரா-கி 33-38]

ஸா ப்ரஸ்க₂லந்தீ மத₃விஹ்வலாக்ஷீ ப்ரலம்ப₃காஞ்சிகு₃ணஹேமஸூத்ரா ।
ஸலக்ஷணா லக்ஷ்மணஸந்நித₄ாநம் ஜகா₃ம தாரா நமிதாங்க₃யஷ்டி: ॥

[அந்தத் தாரை (கலவிக்களிப்பினால்) தடுமாறுகின்றவளாய், மது அருந்தியதால் சுழலும் கண்களையுடையவளாய், தொங்கும் பொன்னாலான அரைநாண்கயிற்றையுடையவளாய், ஸம்போ₄க₃லக்ஷணங்களையுடையவளாய், வளைந்திருக்கும் கொடிபோன்ற உடலையுடையவளாக லக்ஷ்மணனிருந்த இடத்தை அடைந்தாள்.]

688. ஸாம ஸாந்த்வே 392-8 [அமர 2-8-21]

ஸாம ஸாந்த்வே உபே₄ ஸமே

[''ஸாம'' ''ஸாந்த்வம்'' என்னும் இரு பத₃ங்களும் நல்ல வார்த்தை என்னும் ஒரே பொருளையுடையவை]

689. ஸா வித்₃யா 281-5 [வி. பு 1-19-41]

தத் கர்ம யந்ந ப₃ந்த₄ாய ஸா வித்₃யா யா விமுக்தயே ।
ஆயாஸாயாபரம் கர்ம வித்₃யாந்யா ஶில்பநைபுணம் ॥

[எந்தக் கர்மம் ப₃ந்த₄த்திற்குக் காரணமல்லவோ அதுவே கர்மம்; எது முக்திக்குக் காரணமோ அதுவே வித்₃யை. மற்ற கர்மம் ஶ்ரமத்திற்கே. மற்ற வித்₃யை செருப்புக்குத்தக்கற்றது போன்றது.]

690. ஸிம்ஹவிக்ராந்த 402-5 [ரா-ஸு 25-16]

தம் பத்₃மத₃ளபத்ராக்ஷம் ஸிம்ஹவிக்ராந்தகா₃மிநம் ।
த₄ந்யா: பஶ்யந்தி மே நாத₂ம் க்ருதஜ்ஞம் ப்ரியவாதி₃நம் ॥

[தாமரையிதழ் போன்ற கண்ணையுடையவரும், சிங்கம் போல் வீறுநடையுடையவரும், செய்ந்நன்றி மறவாதவரும், இனிமையாகப் பேசுகின்றவருமான எனது நாதரைக் காண்பவர்கள் பா₄க்₃யஶாலிகள்.]

691. ஸீதாமாஶ்ரித்ய 317-4; 324-1 [ரா-ஸு 16-2]

ஸ முஹூர்த்தமிவ த்₄யாத்வா பா₃ஷ்பபர்யாகுலேக்ஷண: ।
ஸீதாமாஶ்ரித்ய தேஜஸ்வீ ஹநுமாந் விலலாப ஹ ॥

[சிறிது நேரம் சிந்தை செய்து கண்ணீரால் கலங்கிய கண்களையுடையவனாய், ஸீதா தே₃வியை ஆஶ்ரயித்து மிக்க திறலையுடையவனான அந்த அனுமன் அழுதானந்தோ!]

692. ஸுக₂மாஸ்ஸ்வ 206-5; 542-வது ப்ரமாணம்காண்க.

693. ஸுக்3ரீவம் நாத₂ 507-8; 524-3; 526-8 [ரா-கி 4-18]

ஏஷ த3த்வா ச வித்தாநி ப்ராப்ய சாநுத்தமம் யஶ: ।
லோகநாத3: புரா பூ4த்வா ஸுக்3ரீவம் நாத₂மிச்ச₂தி ॥

[இந்த ராமபிரான் எல்லாருக்கும் எல்லாப் பொருள்களையும் கொடுத்தும், மேலான கீர்த்தியை அடைந்தும், முன்னெல்லாம் லோகநாத₂னாக இருந்தவர் (இன்று) ஸுக்3ரீவனை நாத₂னாக விரும்புகிறார்.]

694. ஸுக்3ரீவவசநாத் 465-1; [ரா-பு3ா 1-70]

தத: ஸுக்3ரீவவசநாத் ஹத்வா வாலிநமாஹவே ।
ஸுக்3ரீவமேவ தத்3ராஜ்யே ராக4வ: ப்ரத்யபாத3யத் ॥

[அதற்குப்பின் சுக்கிரீவன் சொன்னதற்கிணங்கி வாலியைச் சண்டையில் கொன்று ராமன் சுக்கிரீவனையே அவனுடைய ராஜ்யத்தில் நிலைநிறுத்தினான்.]

695. ஸுப்ரஜாஸ்த்வம் 81-1 [யஜு-அஷ்ட 3-5]

ஸுப்ரஜாஸ்த்வமாஶாஸ்தே

[(யாக₃ம் செய்பவன்) நன்மக்களை வேண்டுகிறான்]

696. ஸுப்ரப4ாதாऽத்3ய 20-5; 41-4; 50-2 [வி. பு. 5-18-24]

ஸுப்ரப4ாதாऽத்3ய ரஜநீ மது4ராவாஸயோஷிதாம் ।
பாஸ்யந்த்யச்யுதவக்த்ராப்3ஜம் யாஸாம் நேத்ராலிபங்க்தய: ॥

[எவர்களுடைய கண்களாகிய வண்டுவரிசை அச்சுதனின் திருமுகத்தாமரையில் தேனைப்பருகுகின்றனவோ அத்தகைய மதுரைவாழும் பெண்களுக்கு இன்று இரவு நன்றாக விடிந்தது.]

697. ஸுப்ரப4ாதா ச 20-3. 19-வது ப்ரமாணம் காண்க.

698. ஸுஸுக₂ம் கர்த்தும் 68-2; 77-1; 507-2; 526-7 [கீ3தை 9-2]

ராஜவித்3யா ராஜகு3ஹ்யம் பவித்ரமித3முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவக₃மம் த4ர்ம்யம் ஸுஸுக₂ம் கர்த்துமவ்யயம் ॥

[வித்3யைகளுக்குள்ளும், ரஹஸ்யங்களுக்குள்ளும் மேலானது இது. இது பாபங்களைப் போக்கடிப்பவற்றில் உயர்ந்தது. என்னை நேரில் காட்டுவது. என்னை அடைவதற்கு ஸாத₄னமாயிருப்பது. செய்வதற்கு வெகு ஸுக₂மானது. (ப₂லத்தைக் கொடுத்தபின்பும்) அழியாதது.]

689. ஸுஹ்ருத3ம் ஸர்வ 67-1; 73-3; 202-1; 356-2 [கீ3தை 5-29]

போ4க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஸ்வரம் ।
ஸுஹ்ருத3ம் ஸர்வபூ4தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச₂தி ॥

[யஜ்ஞங்களையும், தவங்களையும் பூஜிப்பவனும், எல்லா உலகங்களுக்கும் மஹேஶ்வரனும், எல்லா ஜீவராசிகளுக்கும் நண்பனுமான என்னை அறிந்து சாந்தியை அடைகிறான்.]

700. ஸூர்யமிவோத₃ய 53-3 [ரா- ஸு 31-19.]

ஸா திர்யகூ₃ர்த்₄வஞ்ச தத₂ாப்யத₄ஸ்தாத் நிரீக்ஷமாணா தமசிந்த்யபு₃த்₃தி₄ம் ।
த₃த₃ர்ஶ பிங்கா₃தி₄பதேரமாத்யம் வாதாத்மஜம் ஸூர்யமிவோத₃யஸ்த₂ம் ॥

[அந்த சீதாபிராட்டி பக்கங்களிலும், மேலும், அப்படியே கீழும் பார்ப்பவளாயிருந்துகொண்டு, மனத்தால் எண்ணத்தகாத புத்தியுடையவனும், வானரவரசனுடைய மந்திரியாயும், வாயுவின் புத்திரனுயுமுள்ள அந்த அனுமனை உதயகிரியிலுள்ள சூரியனைப் போலே பார்த்தாள்.]

701. ஸேநாந்யமந்ய 563-3 [ர—ஸ்த 1-50]

ஶ்ரீரங்க₃சந்த்₃ரமஸமிந்தி₃ரயா விஹர்த்தும்
விந்யஸ்ய விஶ்வசித₃சிந்நயநாதி₄காரம் ।
யோ நிர்வஹத்யநிஶமங்கு₃ளிமுத்₃ரயைவ
ஸேநாந்யமந்யவிமுகா₂ஸ் தமஶிஶ்ரியாம ॥

[எந்தச் சேனைமுதலியார், ஸ்ரீரங்க₃நாத₂னைப்பிராட்டியோடு கூட விளையாடும்படியாக (நாகணையிலே) இருத்தி, எல்லாச்சேதநாசேதனங்களையும் நியமிக்கும் பதவியை எப்போதும் தமது திருவிரல்முத்திரையைக் கொண்டே நடத்துகின்றாரோ, அந்த விஷ்வக்ஸேனரான சேனைத்தலைவரை வேறுபுகலிடம் கருதாதவர்களாய் நாம் அடிபணிந்தோம்.]

702. ஸைந்யது₄ரீண 563-4 [ர-ஸ்த 1-51]

ஸைந்யது₄ரீண ப்ராணஸஹாயாம் ஸூத்ரவதீமாஶ்ரியமம்பா₃ம் ।
ஶ்ரீபத₃லாக்ஷாலாஞ்சி₂தஸேவா ப்ரோதலஸத்₃தோ₃ர்வல்லிவிலாஸாம் ॥

[பெரியபிராட்டியாருடைய திருவடியிலேயிட்ட செம்பஞ்சுக் குழம்பினால் அடையாளமிடப் பெற்றதாய், கைங்கர்யோபயோகி₃யான திருவொற்றுவாடையினால் விளங்கா நிற்பதான கொடிபோன்ற கையின் அழகையுடையவளும், ஸேனைமுதலியாரின் பிரியபத்தினியுமான ஸூத்ரவதியென்னும் தாயை ஆஶ்ரயித்தேன்.]

703. ஸோऽஶ்நுதே 272-2; 461-1; 475-1; [தை-ஆந 1-2]

ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா

[முக்தன் எல்லாக் கல்யாணகு₃ணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்₃ரஹ்மத்துடன் கூட அனுப₄விக்கிறான்.]

704. ஸோऽஹம் தே 296 வது ப்ரமாணம் காண்க.

705. ஸோऽப்4யக3ச்ச2த் 515-1 [ரா-பா3 1-57]

ஸோऽப்4யக3ச்ச2ந்மஹாதேஜா: ஶப3ரீம் ஶத்ருஸூத3ந: ।
ஶப3ர்யா பூஜித: ஸம்யக்3 ராமோ த3ஶரத2த்மஜ: ॥

[பெரும்திறலுடையவனாய், எதிரிகளை அழிப்பவனாய், த3ஶரத2குமாரனான ராமன் ஶப3ரியைச் சென்றடைந்தான்; ஶப3ரியினால் நன்கு ஆராதி4க்கப்பட்டான்.]

706. ஸௌம்யரூப: 51-2; 99-2 441-வது ப்ரமாணம் காண்க.

707. ஸௌமித்ரே பு4ங்க்ஷ்வ 231-2; 232-4 [ரா—அ 4-44]

ஸௌமித்ரே பு4ங்க்ஷ்வ போ4கா3ம்ஸ்த்வமிஷ்டாந் ராஜ்யப2லாநி ச ।
ஜீவிதம் ச ஹி ராஜ்யம் ச த்வத3ர்த்த2மபி4காமயே ॥

[லக்ஷ்மணா! நீ விரும்பும் போ4க3ங்கள் அனைத்தையும், அரசாட்சியின் பயன்களையும் அனுபவிப்பாயாக. நான் எனது உயிரையும், அரசையும் உனக்காகவே விரும்புகிறேன்.]

708. ஸௌமித்ரே ஶ்ருணு 163-2; 164-3 [ரா-அ 56-2]

ஸௌமித்ரே ஶ்ருணு வந்யாநாம் வல்கு3 வ்யாஹரதாம் ஸ்வநம் ।
ஸம்ப்ரதிஷ்டா2மஹே காலः ப்ரஸ்தா2நஸ்ய பரந்தப ॥

[லக்ஷ்மணா! காட்டிலுள்ள பிராணிகள் இனிதாக எழுப்பும் ஒலியைக் கேட்பாயாக. எதிரிகளைக்காய்பவனே! (சித்திர கூடத்திற்குப்) புறப்படும் காலம் வந்துவிட்டது, புறப்படுவோம்.]

709. ஸ்துதோऽஹம் 438-1; 440-1 [வி. பு 5-3-14]

ஸ்துதோऽஹம் யத் த்வயா பூர்வம் புத்ரார்த்தி2ந்யா தத3த்3ய தே ।
ஸப2லம் தே3வி ஸஞ்ஜாதம் ஜாதோऽஹம் யத் தவோத3ராத் ॥

[தே3வகீதே3வியே! பிள்ளையை விரும்பிய உன்னால் நான் துதிக்கப்பட்டது-இன்று நான் உன் வயிற்றிலிருந்து பிறந்ததால் பயனுடையதாயிற்று.]

710. ஸ்த்ரியம் புருஷ 339-3 [ரா—அ 30-3]

கிம் த்வாமந்யத வைதே3ஹ: பிதா மே மிதி2லாதி4ப: ।
ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்3ரஹம் ॥

[(வெளியழகாலே) ரமிக்கச்செய்பவரே! மிதிலைக்கு அரசராய், விதேஹ குலத்திற் பிறந்த என்னுடைய தகப்பனாரான ஜநகர், ஆணுடம்பையுடைய பெண்ணான உம்மை மாப்பிள்ளையாக அடைந்து என்ன நினைத்திருப்பர்?]

711. ஸ்த்ரீசாபலா 5-3 [ரா-ஆ 9-33]

ஸ்த்ரீசாபலாதே3தது3த்3ாஹ்ருதம் மே த4ர்மம் ச வக்தும் தவ க: ஸமர்த்த2: ।
விசார்ய பு3த்3த்4யா து ஸஹாநுஜேந யத்3ரோசதே தத்குரு மா சிரேண ॥

[பெண்களுக்குரிய பரிவினுலே நான் இப்படிப் பேசினேன். உமக்கு தர்மத்தை உபதேசிக்க யாருக்கு வல்லமையுண்டு? தம்பியோடு கூட நன்கு ஆலோசித்து எது உசிதமாகப் படுகிறதோ அதை விரைவில் செய்வீர்.]

712. ஸ்தி2தே மநஸி 315 வது ப்ரமாணம் காண்க.

713. ஸ்நாத்வா 490-1 [உண்பது பற்றிய சாஸ்திரவிதி4]

ஸ்நாத்வா பு4ஞ்ஜீத

[ஸ்நானம் செய்துவிட்டே உண்ணவேண்டும்.]

714. ஸ்நுஷா த3ஶரத2ஸ் 312-2; 320-1; 324-5; 327-4 [ரா—ஸு 33-16]

ஸ்நுஷா த3ஶரத2ஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபிந: ।
து3ஹிதா ஜநகஸ்யாஹம் வைதே3ஹஸ்ய மஹாத்மந: ॥
ஸீதேதி நாம நாம்நாஹம் ப4ார்யா ராமஸ்ய தீ4மத: ॥

[எதிரிகளின் சேனைகளை மிகவும் தவிக்கச்செய்யும் தசரதரின் மருமகள் நான்; மஹாபுருஷரான விதே3ஹராஜா ஜனகரின் பெண்நான்; பேரறிவாளரான ஸ்ரீராம பிரானின் மனைவியான நான் 'ஸீதா' என்று பெயர் பெற்றவள்.]

715. ஸ்நேஹோ மே 434 வது ப்ரமாணம் காண்க.

716. ஸ்மராமி 315 வது ப்ரமாணம் காண்க.

717. ஸ்மேராநநாக்ஷி 281-2; 563-2 [ர-ஸ்த 1—87]

ஸ்மேராநநாக்ஷிகமலைர் நமத: புநாநாந்
த3ம்ஷ்ட்ராக3த3ாப்4ருகுடிபி4ர் த்3விஷதோ து4நாநாந் ।
சண்ட3ப்ரசண்ட3முக2த: ப்ரணமாமி ரங்க3-
த்3வாராவளீஷு சதஸ்ருஷ்வதி4காரபா4ஜ: ॥

[மலர்ந்த தாமரை போன்ற முகங்களினுலும், கண்களினுலும் (தம்மை) வ... குகிறவர்களைப் புனிதராக்குகிறவர்களும், கோரப்பற்கள், கதைகள், புருவ... ஆகியவற்றுல் விரோதிகளை நடுங்கச் செய்பவர்களும், கோயில் திரு... நான்கிலும் வாயில் காப்பவர்களாக விளங்குகிறவர்களுமான சண்டன் ...லான (195 வது ப்ரமாணத்தில் சொல்லப்பட்ட) த்3வாரபாலகர்களை ...ர.]

718. ஸ்ம்ருதிஶீலே ச தத்3வித3ாம் 10-3 [மநுஸ்ம்ருதி 2-3] [80-வது ப்ரமாணமும் இதுவே]

வேதோ3ऽகி2லோ த4ர்மமூலம் ஸ்ம்ருதிஶீலே ச தத்3வித3ாம் ।
ஆசாரஶ்சைவ ஸாதூ4நாம் ஆத்மநஸ்துஷ்டிரேவ ச ॥

[வேத3ம் முழுவதும், அதையறிந்த ரிஷிகளின் ஸ்ம்ருதிகளும், ஒழுக்கமும், நல்லோர்களின் ஆசாரமும், நல்லோர்களின் மனத்திருப்தியும் த4ர்மத்திற்கு ப்ரமாணமாகின்றன.]

719. ஸ்யாலோ 8-1.?

ஸ்யாலோऽத2 நந்த3கோ3பஸ்ய மிதி2லேஷு க3வாம் பதி: ।
ப்ரவ்ருத்3த4கோ3த4நோ த3க்ஷ: கும்ப4கோ நாம நாமத: ॥
த3ாதா து3க்3த4ஸ்ய ஸர்வேஷாம் தக்ரஸ்ய ச க்4ருதஸ்ய ச ।
ஜநஸ்ய ப்ரியவாக் நித்யம் யஶோத3ாயா ஜக4ந்யஜ: ॥
த4ர்மத3ா தஸ்ய பா4ர்யாऽऽஸீத் த4ர்மதை3வதநாமத: ।
ஸாऽஸூதாऽபத்யயுக3ளம் ஶோப4நம் கோ3பபூ4ஷணம் ॥
தயோஸ்தத்ர புமாந் ஜஜ்ஞே ஶ்ரீத3ாமா நாம விஶ்ருத: ।
ஸர்வைஶ்சாஸீத் கு3ணைர்யுக்த: ஸர்வப்ராணிமநோரம: ॥
நீளாநாம்நீ ச கந்யா ஸா ரூபௌதா3ர்யகு3ணாந்விதா ॥

[மிதி2லாதே3ஶத்தில் நந்த3கோ3பனுக்கு மைத்துனனும், எண்ணிறந்த பசுக்களைச் செல்வமாக உடையவனும், மஹாஸாமர்த்2யவானுமான ஆயர்க்கரசனொருவன் வாழ்ந்துவந்தான். எல்லோருக்கும் பால், மோர், நெய் முதலியவைகளை வழங்குபவனாகவும், ஜனங்களிடம் எப்போதும் பிரியமாகப் பேசுபவனாகவும் விளங்கினான் அவன். அவன் யசோதையின் தம்பி; த4ர்மதேவதையின் பெயரையுடைய த4ர்மதை3 என்பவள் அவனுக்குப் பத்தினியாயிருந்தாள். ஆயர்களுக்கு ஆப4ரணமாகவும், ஒளியாகவும் விளங்கிய இரு குழந்தைகளை அவள் பெற்றாள். அவர்களுள் ஆண்குழந்தை ஸ்ரீத3ாமா என்று பெயர் பெற்றவனாகவும், எல்லா கு3ணங்களுடன் கூடியவனாகவும், எல்லா ஜந்துக்களுடைய மனங்களையும் உகப்பிப்பவனாகவும் விளங்கினான். அழகு, வண்மை முதலிய கு3ணங்களுடன் கூடியவளாய் விளங்கினாள் நீளையென்ற பெண் குழந்தை]

720. ஸ்ரஜி நிகு3ளிதம் 540—1 [திருப்பாவை தனியன் 1]

திருப்பாவை முதல் தனியன்—பதவுரை காண்க.

721. ஸ்வத்வமாத்மநி 4-11; 31-7; [விஷ்ணுதத்வம்?]

ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்3ரஹ்மணி ஸ்தி2தம் ।
உப4யோரேஷ ஸம்ப3ந்தோ4 ந பரோऽபி4மதோ மம ॥

[உடைமையாயிருக்கும் தன்மை ஆத்மாவினிடத்தில் உள்ளது; உடையவனாயிருக்கும் தன்மை ப்3ரஹ்மத்தினிடமுள்ளது; இருவருக்கும் இதுவே ஸம்ப3ந்த4ம்; வேறு ஸம்ப3ந்த4ம் எனக்கு இஷ்டமன்று.]

722. ஸ்வபுருஷ் 870-வது ப்ரமாணம் காண்க.

723. ஸ்வரேண 287-3 119 வது ப்ரமாணம் காண்க.

724. ஸ்வர்க்கோ காமோ 221-வது ப்ரமாணம் காண்க.

725. ஸ்வவிக்ரமை: 475-5 [பூர்வர்கள் வ்யாக்யானம்]

ஸ்வவிக்ரமை: ரஞ்ஜநீயஸ்ய

[எனது பராக்ரமத்தைக் காட்டி உகப்பிக்கத்தக்கவனுடைய (கண்ணெதிரிலேயே)]

726. ஸ்வாநி கூாத்ராணி 270--5; 272—5 550 வது ப்ரமாணம் காண்க.

727. ஸ்வாமித்வமநு 15—1 524 வது ப்ரமாணம் காண்க.

## ஹ

728. ஹநுமாந் விலலாப 237—1 691 வது ப்ரமாணம் காண்க.

729. ஹநூமத்வசநாத் 465-2 [ரா-பா 1—59]

பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ |

ஹநூமத் வசநாச்சைவ ஸுக்ரீவேண ஸமாகத: ||

[ராமன் பம்பைநதிக்கரையிலே வானரனான அனுமனுடன் சேர்ந்தான்; அனுமன் சொன்னதைக் கேட்டு ஸுக்ரீவனோடு நட்புக்கொண்டான்.]

730. ஹந்யாமஹமிமாம் 220-3 [ரா-அ 78-22]

ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்டசாரிணீம் |

யதி மாம் தார்மிகோ ராமோ நாஸூயேந்மாத்ருகாதகம் ||

[அறவழிநடப்பவனான ராமபிரான் என்னைத் தாயைக்கொன்றவன் என்று வெறுக்கமாட்டானாகில், தீய செயலைச் செய்த பாபியான இக்கைகேயியை நான் கொன்றுவிடுவேன்.]

731. ஹரிர் ஹரதி 143-2 [ஹர்யஷ்டகம் 1]

ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத: |

அநிச்சயாऽபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக: ||

[கெட்ட மனமுடையவர்களால் நினைக்கப்பட்டாலும், ஹரியானவன் அவர்களுடைய பாபங்களைப் போக்கடிக்கிறான்; விருப்பமில்லாமல் தொடப்பட்ட அக்னியும் கொளுத்துகிறதன்றோ?]

732. ஹே க்ருஷ்ண 187-1; 191-2; 320-2; 476—வது ப்ரமாணம் காண்க.

733. ஹேமந்தே 8-3 ?

ஹேமந்தே ப்ரத₂மே மாஸி நந்த₃வ்ரஜகுமாரிகா:

[ஹேமந்த ருதுவில் (முன்பனிக்காலத்தில்) முதல் மாதமான மார்கழியில் ஆயர்பாடியில் உள்ள ஆயர்சிறுமிகள் (நோன்புநோற்றனர்)]

734. ஹேமலேகா₂ம் 8-1. [ரா-ஸு 5-26, 27]

அவ்யக்தரேகா₂மிவ சந்த்₃ரரேகா₂ம் பாம்ஸுப்ரதி₃க்₃தா₄மிவ ஹேமரே(ல)கா₂ம் ।
க்ஷதப்ரரூடா₄மிவ பா₃ணரேகா₂ம் வாயுப்ரபி₄ந்நாமிவ மேக₄ரேகா₂ம் ॥
ஸீதாமபஶ்யந் மநுஜேஶ்வரஸ்ய ராமஸ்ய பத்நீம் வத₃தாம் வரஸ்ய ।
ப₃பூ₄வ து₃:க்கா₂பி₄ஹதஶ்சிரஸ்ய ப்லவங்க₃மோ மந்த₃ இவாசிரஸ்ய ॥

[தெளிவில்லாத கோடுகளையுடைய சந்த்ரகலை போலவும், புழுதிபடிந்த பொற்கொடிபோலவும், புண்ணில் ஆழமாகத்தைத்திருக்கும் அம்புபோலவும், காற்றால் கலைக்கப்பட்ட மேக₄வரிசைபோலவும் உள்ளவளாய், பேசுகிறவர்களில் சிறந்தவனாய், மனிதர்களுக்கு அரசனான ராமனுடைய பத்தினியான ஸீதையை நீண்டநேரமாகக் காணாமல், அனுமனான வானரன் துன்பத்தால் பீடிக்கப்பட்டவனாய், சிறிதுகாலம் அறிவற்றவன்போல் ஆனான்.]

735. ஹ்ரீரேஷா 116-வது ப்ரமாணம் காண்க.

736. ஹ்ருத₃யாநி 64-வது ப்ரமாணம் காண்க.

737. ஹ்ருத₃யேநோத்₃வஹந் 143-1; 147-1; 149-1; 153-1 [வி-பு 1-19-12]

ததஸ் தம் சிக்ஷிபுஸ் ஸர்வே பா₃லம் தை₃தேயகிங்கரா: ।
பபாத ஸோऽப்யத₄: க்ஷிப்தோ ஹ்ருத₃யேநோத்₃வஹந் ஹரிம் ॥

[பிறகு அஸுரனாகிய ஹிரண்யகசிபுவின் கிங்கரர்களெல்லாரும் பா₃லனான அந்த ப்ரஹ்லாதனைக் கீழே தள்ளினார்கள்; தள்ளப்பட்ட அவனும் ஹரியை நெஞ்சினால் த₄ரித்துக்கொண்டு கீழே விழுந்தான்.]

738. க்ஷிபாமி 26-8; 41-1; 50-5; 288-4; 294-5; 343-4; 385-5 [கீ₃தை 16-19]

தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத₄மாந் ।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபா₄நாஸுரீஷ்வேவ யோநிஷு ॥

[(என்னை) த்₃வேஷிப்பவர்களும், கொடூரமானவர்களும், மனிதர்களுள் கீழ்மையானவர்களும், ஶுப₄மற்றவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்தில், அதிலும் அஸுரயோனிகளிலேயே எப்போதும் தள்ளுகிறேன்.]

739. க்ஷிப்ரம் ப₄வதி 491-2; 310-வது ப்ரமாணம் காண்க.

திருப்பாவை வ்யாக்₂யான—ப்ரமாணத்திரட்டு முற்றிற்று.
ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

# திருப்பாவை வ்யாக்யானங்களில் வரும் ஐதிஹ்ய நிர்வாஹ ஸம்வாதங்கள

[தொகுத்தவர் மதுரை பேராசிரியர் Dr. இரா. அரங்கராஜன், M A. Phd. ]

[ ( ) இவ்வடைப்பிலுள்ள விவரணத்தில் ஸுதர்சனர், அரங்கராஜன் இருவரது கைவண்ணமும் உள்ளது. ]

## ப்ரவேசம்

1. [17] (ஈ) எம்பெருமானரை ''ஒருரு திருப்பாவைக்கு அர்த்தம் அருளிச் செய்யவேணும்.'' என்ன, ''திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைக்கிலும், திருப் பாவைக்கு ஆள்கிடையாது'' என்று அருளிச்செய்தார். (பகவத்ப்ரேமமும் பகவத் ஸம்ருத்தியில் ஆசையும் கூடப்பெற்றவர்கள் திருப்பல்லாண்டுக்குப் பொருள் சொல்ல அதிகாரிகள்; கோபீ ப்ரேமமும் பாகவத ஸம்ருத்தியில் ஆசையும் கோபிகாநுகாரமும் கூடப்பெற்றவர்கள் திருப்பாவைக்குப் பொருள் சொல்ல அதிகாரிகள். பின் கூறப்பட்ட அதிகாரிகள் துர்லபர்)

2. [17] (ஈ) ''மோவாயெழுந்த முருடர் கேட்கைக்கு அதிகாரிகளல்லர்; முலை யெழுந்தார் கேட்கவேணும். அவர்களிலும் எம்பெருமானைத் தாங்கள் அனுபவிக்க வேணுமென்றிருக்கும் பரிவாணிச்சிகளான பிராட்டிமார்க்கும் கேட்க நிலமல்ல; பல சொல்லி யென்? பத்து ஆழ்வார்களுடைய ஸாரபூதையான தானே சொல்லித் தானே கேட்குமித்தனை'' என்று அருளிச்செய்தார். (மீசையும் தாடியும் முளைத்த முரட்டுப் புருஷர்கள் திருப்பாவைக்குப் பொருள் கேட்க அதிகாரிகள் அல்லர்; ஸ்த்ரீகளே அதிகாரிகள். அதிலும் எம்பெருமானுக்கு அனுபவங்கொடுத்து அனு பவத்தைப்பெற்று வாணிபம் செய்யும் பிராட்டிமார்களும் அதிகாரிகளல்லர்; அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய், பல்லாண்டுபாடும் ஆண்டாளே அதிகாரியா வாள். அவளே சொல்லவும் கேட்கவும் அதிகாரியாகிருள்.)

3. [21] (நா) அநந்தாழ்வான் திருமுக்குளத்திலே புக்குத் தடவினர்; 'இது வென்?' என்ன, ''அப்பெண்பிள்ளைகள் குளித்ததொரு மஞ்சட் கொழுந்தாகிலும் கிடைக்குமாகக் கருதிக் காண்'' என்ருர். (அநந்தாழ்வான்-ராமாநுஜர் சிஷ்யர் களில் ஒருவர்; திருமுக்குளம் ஆண்டாள் மார்கழி நீராட்டம் கண்டருளிய குளம். ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளது.)

## மார்கழித் திங்கள் — 1

4. [32] (மூ) நம் சிறியாத்தானைப்போலே ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநராயாய்த்துப் போருவது. (சிறியாத்தான் என்பவர் வங்கிப்புரத்து நம்பியின் சிஷ்யர்; முத லியாண்டான் காலத்தவர். பட்டருடைய கோஷ்டியிலும் நம்பிள்ளை கோஷ்டியிலும் அந்வயித்தவர். ஸ்ரீவைஷ்ணவர்களை ப்ரணமம் பண்ணினபடி தோற்ற உடம் பெல்லாம் தழும்பேறியிருந்தவர். [பெருமாள் திரு 2–4] ஸ்ரீநந்தகோபர்தாம் சிறியாத்தானைப்போலே பரம தார்மிகராயிறேயிருப்பது. [நாச் திரு 13-6] )

5. [35] (மூ) 'சிங்கக் குருகு' என்று பட்டர் அருளிச் செய்வர் (குட்டி குருகு என்பன இளமைப் பெயர்கள். 'குட்டி' என்னாமல் 'குருகு' என்று இங்கு பறவையின் குட்டியையும் இணைத்ததால், மேலெழப்பறந்து பாயும் 'சிங்கக்குட்டி' என்றபடி. ''மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்'' [பெரியாழ் திரு 1-4-7]; '' சிறியனென்று என்னிளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்'' [ஷை 1-4-8] )

6. [40] (ஆ) ''பி₄ஷக்குகள்வாசல் ஆர்த்தர் கட்டணமாய்க் கிடக்குமாபோலே, ஸ்ரீ நந்த₃கோ₃பர் வாசல் க்ருஷ்ணனாலே புண்பட்ட பெண்கள் கட்டணமாய்க் கிடக்குமாய்க் கொள்ளீர்!'' என்று ப₄ட்டர். (வைத்₃யர்களின் வாசலில் நோயினால் புண்பட்ட நோயாளிகளின் படுக்கைகள் நிறைந்திருக்கும்; ஸ்ரீ நந்த₃கோ₃பரின் திருமாளிகை வாசலில் க்ருஷ்ணனால் புண்பட்ட பெண்களின் படுக்கைகள் நிறைந்திருக்கும்.)

7. [41] (ஆ) பட்டர் ஸ்ரீபாதத்தைக் கழுவி, தீர்த்தம் கொள்ளும் ஆண்டாள். (ஆண்டாள் பட்டருடைய திருத்தாயார்)

8. [41] (ஆ) எம்பெருமானாரும் ஸ்ரீவைஷ்ணவர்களும் எழுந்தருளாநிற்க, பெரியநம்பி தான் தண்டனிட்டுக் கிடந்தார்; ''நம்மை இங்ஙனே செய்தருளிற்று என்?'' என்று கேட்க, ''நான் ஆளவந்தார் எழுந்தருளுகிறாரென்று இருந்தேன்'' என்றருளிச்செய்தார்.

9. [44] (ஆ) சிறியாத்தானைப்போலே பசும் புல் சாவ மிதியாதவர் 'பிள்ளை பிறந்தவாறே, வேலைப்புகரெழக் கடைய விட்டாராய்த்து.

10. [44] (ஆ) ''பிள்ளைக்குத் தாய்வழியாகாதே கண்''என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் வார்த்தை. (யசோதையின் கண்ணிலழகே கிருஷ்ணனுக்குத் தாய் வழி உடைமையாக வாய்த்தது என்றபடி)

11. [44] (ஆ) 'சிங்கக்குருகு' என்று ஆழ்வான் வார்த்தை.

12. [45] (ஆ) இங்கு ஆண்டான் ''மந்த்ரலிங்க₃ம் தோற்றுமே சொல்லுகிறாள் காண்'' என்னுமாம். (ஆண்டான் முதலியாண்டான் ஆவர். க்ருஷ்ணன் என்று பெயரும் பாலும் குறியாதபடி இளஞ்சிங்கம் என்றாள்; ப₄யத்தாலே மறைத்துச் சொன்னாள் என்றபடி.)

13. [46] (நா) ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் எம்பெருமானார் கேட்டருளியிருக்க, 'ஒழிவில் காலமெல்லாம் ஒழிவில் காலமெல்லாம்' என்றிங்ஙனே ஒருநாளெல்லாம் பாடிப்பாடிக் கண்ண நீரோடே விட்டுப்போம். (கண்ண நீரோடே விட்டுப்போம் — கண்ணீர்ப் பெருக்கோடே பாட்டை முடிக்காது விடுவர்.)

14. [51] (நா) ஆண்டாள் பட்டர் ஸ்ரீபாதத்தைக் கழுவித் தீர்த்தம் கொள்ளும்.

15. [51] (நா) பட்டர் திருப்பாவை அருளிச்செய்யாநிற்க; பூணூல் சாத்தாதொரு ஸ்ரீவைஷ்ணவர் வர, 'கூசாதே உள்ளே புகுவீர்; இவ்விடம் திருவாய்ப்பாடியாய்க்காணும் செல்லுகிறது' என்று அருளிச்செய்தார்.

16. [52] (நா) சிறியாத்தானைப்போலே பசும்புல் சாவ மிதியாத ஸ்ரீநந்தகோபர், தெளியக்கடைந்த வேலைக்கொண்டு பிள்ளைகள் தொட்டிற்காற் கீழே சிற்றெறும்பு வரிலும் ஸிம்ஹத்தின் மேலே விழுமாபோலே விழுந்து கொல்வர்.

17. [53] (நா) 'சிங்கக் குருகு' என்று பட்டர்.

## வையத்து வாழ்வீர்காள்—2

18. [69] (ஆ) ''இப்படி வ்யதிரேகத்தில் முடியும்படியானவன் மோக்ஷபலம் பெறுதொழிவானேன்?'' என்று நஞ்ஜீயர் பட்டரைக்கேட்க; 'இவனுக்குள்ளது நரகமே; பெருமாள் ஆந்ருசம்ஸ்யத்தாலே ஸ்வர்க்கஸ்தனானான்' என்றருளிச் செய்தார். (வ்யதிரேகத்தில் முடியும்படியானவன் — பெருமாள் வனவாஸத்துக்கு எழுந்தருளியபோது, பிரிவுதாங்காத உயிரை நீத்த தசரதன். ஸாமான்ய தர்மமான ஸத்யத்தைப் பரிபாலிக்கவேண்டி ஸாக்ஷாத் தர்மமான பெருமாளையிழந்தான். 'சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்குறுப்பு' [முமுக்ஷுப்படி 204] இதனால் இவன் ஸ்வர்க்கமடைந்ததே தந்தைபால் பெருமாளுக்குள்ள இரக்கத்தாலேயே. ஆந்ருசம்ஸ்யம்— இரக்கம்.)

19. [73] (ஆ) ஆழ்வான் ''எங்கள் பூர்வர்கள் தேவதாந்தர பஜனம் பண்ணுமையாலே'' என்றும்,

20. [78] (நா) ஆழ்வானை ''தேவரீர் தேவதாந்தர பஜநம் பண்ணுதொழிகிறதென்?'' என்ன, ''எங்கள் பூர்வர்கள் செய்து போந்திலர்கள்'' என்றார்.

## ஓங்கி உலகளந்த—3

21. [90] (ஆ) ''ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும்போது ஸம்ஸாரிகளுடைய இழவுக்குத் திருவுள்ளம் நொந்திருக்கும்'' என்று பட்டரருளிச்செய்ய; சிலர் அத்தைக் கேட்டு ''அவாப்த ஸமஸ்த காமனாய், நிரதிசயாநந்தயுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு ஓரிழவுண்டோ திருவுள்ளத்தில்?'' என்ன; '''வ்யஸநேஷு மநுஷ்யாணாம்' என்கிறது குணப்ரகரணமோ தோஷப்ரகரணமோ?'' என்றருளிச் செய்தார்.

22. [91] (ஆ) மாறனேரியிலே 'ராமாநுஜதா3ஸன்' என்பார் ஒருத்தர் "அவன் வருகிறபடியைக் கண்டு கடக்கப்போவென்பதே! நாலடி விலங்கிப் போதல் இல்லையாகில் ஒரு முழுக்கிட்டுக் கொள்ளுதல் செய்யவன்றோ அடுப்பது" என்ன; "'சண்டா3ளனேயாகிலும் அவன் ஆர்த்தனான ஸமயத்தில் அல்லாதார் விலங்கிப் போவார்; த்3விஜனாகில் அவன் விலங்குவான்' என்று விதி4விஶேஷித்த அம்ஶம் அழிந்ததே" என்று அவர்கள் சொல்ல, "கெடுவிகாள்! விதி4பூர்வகமாயோ க்ருபையிருப்பது?" என்று அருளிச்செய்தார். (பதிப்பாசிரியர் அடிக்குறிப்புக் காண்க. பக். 91)

23. [92] (ஆ) "திருநாமம் சொல்லுகைக்கு அதி4காரிஸம்பத்தி வேண்டாவோ?" என்று நஞ்ஜீயர் ப4ட்டரைக் கேட்டருள; "யோக்3யனாகில் இருந்தபடி சொல்லுகிறான்; அயோக்3யனாகில் யோக்3யதை ஸம்பாதி3க்கவேண்டா" என்றருளிச்செய்தார். (யோக்3யதை—தகுதி; யோக்3யன்—தகுதியுள்ளவன்.)

24. [92] (ஆ) தேவப்பிள்ளைக்கு "லோகஹிதார்த்த2மாகக் காண் நீ போகிறது" என்று அருளிச்செய்த வார்த்தை. (பதிப்பாசிரியர் அடிக்குறிப்புக் காண்க. பக். 92. லோகஹிதம்—தம் ஸம்ப3ந்த4த்தாலே பலரை வைஷ்ணவராக்குகை - பதிப்பாசிரியர்.)

25. [98] (நா) "உத்தமன்"— ப4ட்டர் அருளிச்செய்த வார்த்தை—"கருமாணியாயிரந்த கள்வனே! உன்னைப்பிரமாணித்தார் பெற்றபேறு" என்று சிறு காலைக் காட்டி இரந்து பெரிய காலைக்கொண்டு அளந்து நீ பண்ணின ஓரம் உன்னை ஆஶ்ரயித்தார் நிர்ப்ப4ரராகைக்கு அவர்களுக்கு நீ வைத்த சந்தானச்சாபமிறே: 'இவ்வாந்தராளிக த்3ருஷ்டாத்3ருஷ்டங்களில் ஒருவர்க்கஞ்சாதே, யமாதி3களுக்கு முழங்கைகாட்டிச் செருக்கராய் இவர்கள் திரிகைக்கடியென்?' என்னில், "அறிந்தோம்; ஒரு பரம தா4ர்மிகன் செவியிலே, 'து3ர்ப்ப3லரான நம்மால் நம் கார்யம் நிர்வஹித்துக்கொண்டு கரையிலேறவொண்ணாது; உன்னுடைய ரக்ஷணத்துக்கு ஒரு ப்ரப3லனை அண்டை கொண்டு த்3ருஷ்டாத்3ருஷ்ட விஷயமான உன்னுடைய யத்னங்களையடைய அவன் வசத்திலே பொகட்டு நிர்ப்பயனாயிரு' என்று சொல்லிப்போம்; இவனும் அத்தையே விஶ்வஸித்து 'அப்படியே' என்றிருக்கும். எம்பெருமான் கழுத்திலேஓலைகட்டித் தூதுபோயும். மார்பிலே அம்பேற்றும், ஸாரத்2யம் பண்ணியும், பகலை இரவாக்கியும், ஸத்யப்ரதிஜ்ஞையும், அஸத்யப்ரதிஜ்ஞையும், பொய்சொல்லியும், மெய்சொல்லியும், வார்க்கொத்துக்குத்தியும், எல்லை நடந்தும் இங்ஙனொத்த செயல்களைச் செய்து இவர்கள் கார்யமே நிர்வஹியாநிற்கும்" என்றார். (ஓரம்-பக்ஷபாதம்; சந்தானச்சாபம்-ஸந்தாநம்(வம்சம்) வளர்வதற்காகப் பகையரசர்கள் தோற்றவரசர்களின் ஒரு குழந்தையை மட்டும் அழிக்காது விட்டுவைப்பது. ஶாப3ம்-குட்டி. ஆந்தராளிக த்3ருஷ்டாத்3ருஷ்டங்கள் — இடைப்பட்டதான முமுக்ஷு நிலையில் அடையும் இம்மை மறுமைச் செல்வங்கள்; முழங்கை காட்டி—எள்ளி நகையாடி. பரம தா4ர்மிகன் — மிக்க கருணையுள்ள

ஆசார்யன். செவியிலே—(சிஷ்யனுடைய) காதிலே. ப்ரபு₂லனை - எம்பெருமானை. இவனும்—சிஷ்யனும்)

## ஆழிமழைக்கண்ணா—4

26. [107] (ஆ) ''அவைதான் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுவர்த்தியாதொழிவதென்? என்று கேளாய்'' என்று ஆழ்வான். (ஸ்ரீவைஷ்ணவர்கள் தே₃வதாந்தரங்களை அநுவர்த்தியா தொழிவது ஏன்? என்று ஒரு ப₄ட்டன் ஆழ்வானைக் கேட்டதற்கு இது ஆழ்வான் இறுத்த விடையாகும். மேலே (28) நாலாயிரப்படியில் இது தெளிவுபடுத்தப்படுகிறது.

27. [110] (ஆ) நாச்சியார் விழி விழிக்கவொண்ணாதாப்போலே (நாச்சியார் விழி விழிக்கவொண்ணாது என்றாற்போலே—என்றும் சில ஸ்ரீகோசங்களில் பாட₂ம் காணப்படுகிறது. பகற்பத்து முடிவுநாளிரவு ஸ்ரீரங்க₃நாத₂ன் நாச்சியார் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதித்தருள, ப₄ட்டர் எழுந்தருளி மங்க₃ளாஶாஸநம் செய்யும்போது பெருமாளை நோக்கி. 'தேவரீர் நாச்சியாருடைய வேஷத்தை ஏறிட்டுக் கொண்டதத்தனையொழிய அவளைப்போல் விழிவிழிக்க உம்மாலாகாதே! என்றருளிச் செய்தாராம். நிக்₃ரஹத்தையே அறியாதவளாய்,' கருணையே வடிவெடுத்த மையார்கருங்கண்ணியான பிராட்டியின் கண்ணைப்போலல்லாமல், நிக்₃ரஹம் கலந்த கருணையை உடையவனாகையாலே செந்தாமரைக் கண்ணனான எம்பெருமானுடைய கண் கோபத்தாலே சிவந்திருக்குமன்றோ.)

28. [114] (நா) ஆழ்வானை ஒரு ப₄ட்டன், 'தே₃வதாந்தரங்களை நீங்கள் கண்டால் பண்ணும் ஆசாரமென்?' என்று கேட்க, 'ஶாஸ்த்ர விரோத₄மாகக் கேளாதே கொள்ளாய்! தே₃வதாந்தரங்கள் உங்களைக் கண்டால் பண்ணுமாசாரமென்? என்று கேளாய்' என்றார். (ஆசாரம்-பணிவிடைகள்)

## மாயனை—5

29. [127] (ஆ) ''கம்ஸ ப₄யத்துக்கு அஞ்சி ஒளிக்கவந்து சேர்ந்தாரைச் சொல்லுமாபோலே சொன்னபடி பாரீர்'' என்று ப₄ட்டர். (கம்ஸனபாயத்துக்கு அஞ்சி—என்று திருத்துவர் ஸ்ரீ உவே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி. 'யமுனைத்துறைவன்' என்று சொன்னது-'கண்ணனுக்குக் கம்ஸனாலே என் வருமோ' என அஞ்சிப் பேரைச் சொல்லாமல் பொதுவாகத் துறையைச் சொன்னார்கள் என்று கருத்து.)

30. [128] (ஆ) ''பணைகளிலே தாவினவாறே உடை நழுவ, தழும்பைக் கண்டு இடைச்சிகள் சிரித்தார்கள்; அத்தழும்பு தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கண்ணையம் மேல் சாத்து சாத்துகிறது'' என்று ஜீயர். (பணைகள்—பணைத்த கிளைகள்.

களையம் மேல்சாத்து-'களையா மேல்சாத்து' என்று பாட2பே4த3ம்-களையாத மேல் வேஷ்டி என்றபடி. ஜீயர்-நஞ்ஜீயர்)

31. [130] (ஈ) "சேஷியினுடைய திருவிலச்சினை" என்று ப4ட்டர் அருளிச் செய்வர். (யசோதை கட்டியதால் ஏற்பட்ட தழும்பைக்குறிக்கும். கோயிற்பொறியாலே ஒற்றுண்டிருத்தல் சேஷபூ4தருடைய திருவிலச்சினை. ஆஶ்ரிதரால் கட்டுண்டு தழும்பு பெற்றிருத்தல் ஶேஷியினுடைய திருவிலச்சினை. அடுத்து (32) நாலாயிரப்படியில் விளக்கம் உள்ளது.)

32. [133] (நா) "தாமெழுத்து வாங்கின தழும்பு காட்டி நம்மை எழுத்து வாங்குவித்துக் கொள்ளும் ஶேஷியுடைய திருவிலச்சினை" என்று ப4ட்டர்.

## புள்ளுஞ் சிலம்பின—6

33. [138] (மூ) இவ்விடத்திலே "பிள்ளைப்பிள்ளையாழ்வான் 'ப4க3வத் ஸமாஶ்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிகளின் நாத3மல்லது இவ்வாத்மாவுக்கு உத்3தே3ஶ்யமில்லை' என்று பணிக்கும்" என்றருளிச் செய்வர்.

34. [146] (ஆ) ப4ட்டர், 'திருவாய்ப்பாடியிலுள்ளாரில் சிந்தயந்தியோபாதி க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தில் புதியாரில்லை' என்றருளிச்செய்வர். (க்ருஷ்ணாவதாரத்தில் ராஸக்ரீடா3ஸமயத்தில் வேய்ங்குழலோசை கேட்ட கோபியர் பிருந்தாவனத்தைத்தேடிப் புறப்பட்டவளவில், பலர் மாமியார் மாமனார் கட்டளையை மீறிப் போகாநிற்க, ஒருத்தி மட்டும் மாமனாரை மீறிப் போகமாட்டாமல் உள்ளடங்கி நின்று வேணுகா3ன லீலையில் தான் கலந்திருப்பதாக பா4வனை முற்றி க்ருஷ்ண விஷயமான தியானம்பண்ணி நெஞ்சு பதிந்திருக்கையாலே வந்த நிர்மல ஸுக2த்தாலும், உண்மையிலேயே க்ருஷ்ணனை அடையப் பெறாததாலுண்டான நிரவதி4க து3:க்க2த்தாலும் ஸகல புண்ய பாபங்களும் கழியப் பெற்று, தே3ஹகாரணமான புண்யபாபங்கள் கழிகையாலே மூச்சடங்கி வீடு பெற்றாள். "சிந்தயந்தீ ஜக3த்ஸூதிம் பரப்3ரஹ்ம ஸ்வரூபிணம், நிருச்ச்2வாஸதயா மூக்திம் க3தாந்யா கோ3பகந்யகா" என்று கூறப்பட்டிருக்கையால் 'சிந்தயந்தீ' என்கிற கு3ண நாமத்தால் இவளை நம் பூர்வாசார்யர்கள் வ்யபதேசித்தனர். இவள் க்ருஷ்ணனிடத்து ஈடுபாட்டில் புதியவள் என்பர் பட்டர். பழகியிருந்தால் தேங்காதே போகத் துணிந்திருப்பாளன்றோ!)

35. [150] (நா) "ஆண்டாள் பிறந்த ஊரில் பக்ஷிகளுக்குத்தான் உறக்கமுண்டோ" என்று ஆச்சான்பிள்ளை. (ஆச்சான் பிள்ளை - நாலூராச்சான் பிள்ளை)

36. [151] (நா) 'மஹாராஜர் வாசலிலே சென்று இளையபெருமாள் சிறு நாணேற்றியெறிந்தார்' என்ன, அநந்தாழ்வான் 'தாரையினுடைய ஸ்தநோஷ்மாவைப் பற்றிக்கிடந்த மஹாராஜர் ஆந்த்யமும் தீருகைக்குப் போரும் த்வநி' என்றான்.

## கீசு கீசென்று--7

37. [160] (ஆ) ஆட்கொண்டவில்லி ஜீயர் எழுந்தருளா நிற்கச் செய்தே நஞ்ஜீயர் தண்டனிட்டு நிற்க; ''பகவத்விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லைகாணும்'' என்றருளிச்செய்ய; ''உம்மைப்போலே ஆசார்யவான்களுண்டோ? இங்ஙனே அருளிச்செய்வானென்?'' என்ன; ''பகவத் விஷயத்திலே மெய்யே ருசியுண்டு என்றிருக்கையாவது-பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்றுகாணும்'' என்றருளிச் செய்தார். (ஆட்கொண்ட வில்லி ஜீயர் எம்பெருமானாரை ஆசாரியராகக் கொண்டவர். எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளில் ஒருவர்.)

38. [163] (ஈ) ''விடிவோறே மாளிகையிலே சென்றெழுப்புவாரும் கவி சொல்லுவாரும் வம்சாவளி ஓதுவாருமாக எழுந்திருக்கக் கடவ இவர் பக்ஷிகளுக்கு முன்னே உணரும்படியாவதே! என்ன தூர்மஹாநி!'' என்று ஆய்த்தான் அருளிச் செய்வர். (இவ்வைதிஹ்யத்தையே எடுக்கும்போதுநாலாயிரப்படியில் ''ஆய்த்தான் அருளிச்செய்வர்'' என்றவிடத்தில் ''என்கிருன் ரிஷி'' [165] என்று உ ளது)

39. [164] (நா) ஆட்கொண்ட வில்லி ஜீயர் அருளிச்செய்த வார்த்தைக்கு நஞ்ஜீயர் அருளிச்செய்த வார்த்தையை நினைப்பது. (ஆருயிரப்படி (37) காண்க.)

40. [164] (நா) ஸ்ரீதேவிமங்கலத்தில் கமுகிலே நஞ்ஜீயர் ஸ்ரீபாதத்தையுடையார் சிலர் இருப்போரையடைய அமுது செய்விக்கக்கண்டு பட்டர் பிடாத்தையிட்டுக் கொண்டிருந்து ப்ரீதராய் ''நம்முடைய கையிலே சில மெய்யுண்டாயன்று; அடியிலே சில மெய்யருண்டாய் அவர்களுடைய மெய் இவ்வளவும வரப் பேசுகிறது'' என்று அருளிச்செய்தார். (ஸ்ரீதேவிமங்கலம்-மேல்கோட்டை திருநாராயணபுரத்துக்குச் செல்லும் வழியிலுள்ளதோர் ஊர்; கமுகு-பாக்குமரச்சோலை, கமுகந்தோப்பு. பிடாம்-போர்வை. நஞ்ஜீயருடைய பூர்வாஸ்ரம சிஷ்யர்கள் திருந்தி ஸ்ரீவைஷ்ணவர்களாகித் ததீயாராதனம் செய்த வைபவத்தைக் கண்டு பட்டர் திருவுள்ளமுகந்தார். அதற்கு அடி பட்டருடைய ஸம்பந்தம் என்று சிலர் போற்றியுரைத்தபோது, பட்டர் அருளிச் செய்த வார்த்தை. மெய்—பாகவத விஷயத்தில் ஊற்றம். அடியிலே (திருவடிஸம்பந்தமுடைய) சிஷ்யர்களில். மெய்யர்—பாகவதப்ராவண்யமுடையவர்கள். இவ்வளவும் வரப்பேசுகிறது-என்னளவும் வெள்ளமிடுகிறது.)

## கீழ்வானம் — 8

41. [175] (ஆ) ''முலேயெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே'' என்று பட்டர். (ஐதிஹ்யநிர்வாஹம் 2 காண்க)

42. [177] (ஈ) ப₄ட்டர் விடியுந்தனையும் கண்வளர்ந்தருள சிஷ்யர்கள் எல்லாரும் திருவாசலிலே வந்திருக்குமாபோலே,

43. [179] (நா) பட்டர் போதுவிடியுந்தனையும் கண்வளர்ந்தருள சிஷ்யர்களெல்லாரும் கொண்ட கோலங்களும் தாங்களுமாய் வந்து கிடக்குமாபோலே.)

## தூமணிமாடம் — 9

44, [185] (ஆ) ஆழ்வான் 'ஹிதாம்ஸத்துக்கு ஒரு வைஷ்ணவனுடைய க்₃ருஹயாத்ரையை அநுஸந்தி₄க்க அமையும்' என்றுற்போலே.

45. [187] (ஆ) ப₄ட்டர்க்குச் சிலர் 'தொண்டனூர்நம்பி திருவடிச்சார்ந்தார்' என்று விண்ணப்பஞ்செய்ய; 'அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை செய்து போந்தபடிக்கு 'திருநாட்டுக்கு நடந்தார்' என்று சொல்லவேண்டாவோ? என்றருளிச்செய்தார்.

46. [187] (ஆ) நம்பியேறு திருவுடையார்தாஸரிடையாட்டமாகவும் நஞ்ஜீயர் இப்படி அருளிச்செய்தார். (ப₄க₃வத்கைங்கர்யநிஷ்ட₂ர்கள் விஷயத்தில் 'திருவடிச்சார்ந்தார்' என்றும், பா₄க₃வதகைங்கர்யநிஷ்ட₂ர்கள் விஷயத்தில் 'திருநாட்டுக்கு எழுந்தருளினர்' என்றும்; ஆசார்யகைங்கர்யநிஷ்ட₂ர்கள் விஷயத்தில் 'ஆசார்யன் திருவடிசேர்ந்தார்' என்றும், வ்யவஹாரங்கள். திருநாட்டுக்கு —திருநாடு என்பது இடவாகுபெயராகத் திருநாட்டிலேயுள்ள அடியார் குழாங்களைக் குறிக்கும். இடையாட்டம் — விஷயம்)

47. [199] (நா) 'தொண்டனூர்நம்பி திருவடிச் சார்ந்தார்' என்று ப₄ட்டருக்கு விண்ணப்பம் செய்ய; ''ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவர் அடிமை செய்து போந்தபடியாலே 'திருநாட்டுக்கு நடந்தார்' என்னுங்கோள்'' என்றுப்போலே;

48. [190] (நா) நஞ்ஜீயர், பிள்ளையேறு திருவுடையார் தாஸரையும் அப்படியே அருளிச்செய்தருளினர்.

49. [191] (நா) '''தாய்'' என்று பழியிட்டுப் போகவேணுமோ, அடியேனுயிருக்கிற என்னை?' என்னும் திருமங்கையாழ்வாரை 'வெட்டிமையர்' என்றும், எம்பெருமானரை 'கோயிலண்ணன்' என்றும் ஆண்டாள் அருளிச்செய்யும். அத்தை எம்பெருமானர் கேட்டருளி, 'நான் அடியேனல்லேனே? என்னை இப்படி அருளிச்செய்வதே' என்றுற்போலே இத்திருவாய்ப்பாடியும். (உடன்போக்கிற்

சென்ற தலைமகளைக் குறித்துத் தாய் இரங்கிக் கூறுங்கால், ''அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்'' [பெரிய திரு 3-7-7] என்று வருந்துகிறாள். '''தாய்' என்று பழியிட்டுப் பிரியவேண்டியிருந்ததோ? நாங்கள் 'அடியோங்கள்' அல்லவா? நியாம்யரான எங்களை நியாமகர் என்று பழியிட்டுச் செல்வதே!'' என்று இரங்கினள் திருத்தாயார். அஞ்சுகுடிக்கொரு சந்ததியான ஆண்டாள் இப்படிச் சொன்ன தமப்பனாரான திருமங்கையாழ்வாரை ''வெட்டிமையர்'' என்றும், ''நூறுதடா வெண்ணெய் அக்காரவடிசில் மாலிருஞ்சோலை நம்பிக்கு ஸமர்ப்பித்துத் தன் விருப்பத்தை நிறைவேற்றிய எம்பெருமானாரை ''சோமிலன்னார்'' என்றும் அருளினள் என்பது ஐதிஹ்யம்)

## நோற்றுச் சுவர்க்கம் — 10

50. [207] (நா) (அருங்கலமே) எம்பெருமானாரைப்போலே.

## கனைத்திளங்கற்றெருமை — 12

51. [226] (மூ) எம்பெருமானார் திருவவதரித்தாற்போலே காணும் இப்பெண்பிள்ளையும். (இது வ்யாக்யாதாவின் வார்த்தை. இப்பெண்பிள்ளை என்றது எழுப்புகிற பெண்பிள்ளை என்றாகி ஆண்டாளையே குறித்தது. இவள் வாசலிலேயிருந்து, உள்ளேயிருப்பவள் ரஹஸ்யமாயிருந்து அநுபவித்ததை வெளியிட்டாள் என்று கருத்து. உள்ளேயிருந்தவள் திருக்கோட்டியூர் நம்பிக்கும், வெளியேயிருந்தவள் எம்பெருமானார்க்கும் ஒப்பு ஆகின்றார்கள். வேறோர் விவரணம் வருமாறு:— இப்பெண்பிள்ளை என்றதற்கு 'இப்பாட்டில் எழுப்பப்படுகிற பெண்பிள்ளை' என்று பொருள். இப்பெண்பிள்ளைக்கும் எம்பெருமானார்க்கும் எந்த அம்சத்தில் ஸாம்யத்தை ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றினார்கள் என்னில்; இங்கு அந்யாபதேசத்தை விட்டு ஸ்வாபதேசமர்யாதையைக் கொள்ளவேண்டும், எம்பெருமானார் க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்யராய், கன்றுகள்போன்ற சிஷ்யர்களுக்குத் திருவுள்ளம் இரங்கி உபஸத்திபண்ணிக் கேட்பாரில்லாதிருந்துங்கூடத் தமது கடமையே கருதிப் பால்போன்ற சீரிய பொருளை வர்ஷித்தருளினவர், ''கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி, நினைத்துமுலைவழியே நின்றுபால் சோர, நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்'' என்ற முதல் மூன்று அடிகளும் இவ்வர்த்தத்துக்கு ஸூசனையாயிருக்கின்றன. இவ்வடிகளில் எருமையின் செயல் இல்லத்தவளான பெண்பிள்ளையின் பெருமையைக் குறித்தவாறாகும்.

52. [230] (ஆ) எம்பெருமானார் அவதரித்தாற்போலே காணும் இப் பெண்பிள்ளையும்.

53. [232] (நா) ஜீயர் பிள்ளைதிருநறையூரரையர்க்கு அருளிச்செய்த வார்த்தை: 'விடுகையும் உபாயமல்ல; பற்றுகையும் உபாயமல்ல; விடுவித்துப் பற்றுவிக்குமவனே உபாயம்' என்று.

54. [234] (நா) எம்பெருமானார் திருவவதரித்தாற்போலே காணும்; இந்நாச்சியார் அவதரித்த பின்பு எல்லாரும் பகவத் விஷயமறிந்தது.

## புள்ளின் வாய்--13

55. [247] (நா) ஆண்டாள் திருவேகாதசி பட்டினிவிட்டு பட்டரை 'தீர்த்தம் தாரும்' என்ன; 'இப்பெரிய திருநாளிலே இதொரு திருவேகாதசி எங்ஙனே தேடி எடுத்துக்கொண்டிகோள்?' என்றருளிச் செய்தார். (திருவேகாதசி—பரமபத ஏகாதசி; பட்டினிவிட்டு—உபவாஸமிருந்து; திருவேகாதசியில் ஸ்ரீவைஷ்ணவர்கள் உபவஸித்திருப்பதே பாங்கானது என்றபடி)

## உங்கள் புழக்கடை--14

56. [254] (ஆ) ''தாமஸ ப்ரக்ருதிகளைச் சொல்லுகிறது'' என்று எம்பார். ''தம:ப்ரசுரர் உணர்ந்தார்கள் என்று சொல்லியோ எழுப்புவது? என்று அவள் நினைத்திருக்கும் என்று, ஸத்வநிஷ்டரான ஸந்யாஸிகளைச் சொல்லுகிறது'' என்று திருமலைநம்பி. (புள்ளும் சிலம்பின தொடங்கி ஆம்பல்வாய் கூம்பினவரை பொழுது விடிந்த அடையாளங்கள் உத்தரோத்தரம் சொல்லப்பட்டு, செங்கற்பொடிக்கூறை வெண்பல் தவத்தவரின் அநுஷ்டானம் கடைசியாக வருவதால், தாமஸப்ரக்ருதிகள் கூட எழுந்துவிட்டார்கள் என்பதைக் காட்டுவதாக எம்பாரின் அபிப்ராயமாகும். அவர்கள் ஸத்வபுருஷர்களான ஸந்யாஸிகள் என்பது திருமலைநம்பியின் அபிப்ராயம். வெள்ளைவிளிசங்கின் பேரரவம் கேட்டுப் புள்ளரையன் கோயிலுக்குச் சென்று திருப்பள்ளியெழுச்சி ஸேவித்து விட்டுத் தங்கள் அகங்களான மடங்களில் எம்பெருமான்களைத் திருவாராதனம் செய்ய உபக்ரமித்துக் கோயிலாழ்வாரைத் திறக்கும் காலமாயிற்று என்பது அவர் கருத்து.)

57. [257] (நா) "சிறு பதத்தூற்றத்துறையிலே ஒரு தபசி பரிசிலேறி ஆற்றினுள்ளே புக்கு, காவேரிதேவிக்குச் சங்கு ஊதுகிறேனென்று அங்கே ஊத, பரிசிலிலே போகிற குதிரை மிதித்து, அதிலேறின மனிச்சரடைய செத்துப் போச்சுது" என்று எம்பார் அருளிச் செய்த வார்த்தை. (எம்பார் நிர்வாஹத்தில் சங்கு-ஊதுகிற சங்கு; திருமலைநம்பி நிர்வாஹத்தில் சங்கு-பூட்டைத்திறக்கும் திறவுகோல். குச்சி-திறவுகோல்)

## எல்லேயிளங்கிளியே--15

58. [261] (மு) திருவாய்மொழிபாடாநின்றால் செல்வர் எழுந்தருளுகையும் அஸஹ்ய மாமாபோலே. (திருப்புன்னை மரத்தின் கீழ் சந்த்ரபுஷ்கரிணிக்கரையில் திருக்கோட்டியூர் நம்பி முதலான ஆளவந்தார் சிஷ்யர்களான முதலிகள் திருவாய்மொழியை அநுஸந்தித்துக் கொண்டிருக்க, அப்போது நித்ய பலிபேரர் வாத்ய

கோ4ஷங்களுடன் எழுந்தருள; ‘கூட்டம் கலக்கியார் வந்தார்’ என்று திருக்கோட்டி யூர் நம்பி மற்றும் முதலிகள் எழுந்திருந்து அநுஸந்தா4னம் தவிர்ந்திருந்தனர். அன்று முதல் நித்ய ப3லி ஸாதிக்கச் செல்வர் எழுந்தருள்வதில்லை. செல்வர் புறப் பாட்டில் முதலிகளுக்குத் திருவாய்மொழி அநுஸந்தா4னத்திற்கு இடையறவு பட்டதால் அது அஸஹ்யமாயிற்று.)

59. [263] (மூ) ‘‘நீ ஒருவர்க்கும் விரோதி4யல்லை; நீ புக்குத் திருவடி தொழு’’ என்ன, ஆழ்வான் வார்த்தையை நினைப்பது. (கிருமிகண்ட சோழன் உபத்3ரவத் தாலே எம்பெருமானார் மேலக்கோட்டைத் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி னபோது ஆழ்வான் நம்பெருமாளை ஸேவிக்க எழுந்தருள; ராஜஸேவகர்கள் திருவா சலிலேயிருந்து ‘ராமாநுஜஸம்ப3ந்த4முடையார் புகுரவொண்ணாது’ என்று தடுக்க; வேறுசிலர் ‘‘ஆழ்வான் ஆத்ம கு3ணபூர்த்தியுடையவர்; உள்ளே போகவிடுங்கள்’’ என்று கூற, இத்தைக்கேட்ட ஆழ்வான் ‘ஆத்ம குணங்கள் ஆசார்ய ஸம்ப3ந்த4த் துக்கு உடலென்று சொல்லுவர்கள்; ஆனால் என்னுடைய ஆத்மகு3ணங்கள் எம் பெருமானார் ஸம்ப3ந்த4த்தை அறுத்துக் கொள்ளுகைக்குடலாயிற்று’ என்று புறப் பட்டருளி; ‘நமக்குப் பெருமாள் வேண்டாம்; எம்பெருமானார் ஸம்ப3ந்த4மே அமையும்’ என்று மீண்டெழுந்தருளினார்.)

60. [271] (நா) திருப்புன்னைக்கீழே திருவாய்மொழிபாடாநின்றால் செல்வர் எழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே.

61. [272] (நா) ‘‘அரைக்ஷணம் வைஷ்ணவ கோ3ஷ்டி2யைப் பிரிய நின்று
வரும் மாத்4யஸ்த்2யம் எனக்கென் செய்ய?’’ என்கிற ஸுப்3ரஹ்மண்ய ப4ட்டர்
வார்த்தையை ஸ்மரிப்பது. (உடையார் ஸுப்3ரஹ்மண்ய ப4ட்டர் சோழராஜதா4னி
யில் ராஜபுரோஹிதனாகவும் உத்தரமந்திரியாகவும் இருந்தவர்; எம்பெருமானா
ரிடத்தில் மதிப்பும் கௌ3ரவபு3த்3தி4யும் ஏற்பட்டு அதுவே ஹேதுவாக ஸ்ரீவைஷ்
ணவ கோ3ஷ்டி2யில் ப்ரீதியும் இவருக்கு ஏற்பட்டிருந்தது. [திருவிரு பா 53 ஐதி]
ஒரு ஸமயவிசேஷத்தில் காவிரியில் வெள்ளம் பெருகி ஸந்நிதி4க்குள் பிரவேசித்தது.
அதைத்தவிர்ப்பதற்காகக் கூரநாராயண ஜீயர் காவிரியிலிருந்து கிளை வாய்க்கால்
வெட்ட; அது சிந்தாமணி கிராமத்தின் வழியே செல்ல; கிராமவாஸிகளுக்கும்
திருவரங்கத்து ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் அதனால் விவாதம் உண்டாக; சோழ
ராஜா ஸுப்3ரஹ்மண்ய ப4ட்டரை மத்4யஸ்த2ம் செய்யுமாறு ஆஜ்ஞையிட; அப்
போது அவர் அதற்கு இசையாது கூறிய வார்த்தை குறிப்பிடப்படுகிறது. மத்4
யஸ்த2ம் செய்யப்புகுந்தால், இரண்டு பக்ஷங்களிலிருந்தும் விலகியிருக்கவேண்டும்
அல்லவா! ஸுப்3ரஹ்மண்ய ப4ட்டர் அரைக்ஷணமும் ஸ்ரீவைஷ்ணவ கோ3ஷ்
டி2யை விட்டுப் பிரிந்து நிற்க இயலாதிருந்ததால் தமக்கு மத்4யஸ்த2 பதவி
வேண்டாம் என்று மறுத்துவிட்டார்)

## நாயகனாய்—16

62. [281] (ஆ) நஞ்ஜீயர், பிள்ளைக்கு ''ரஸவாத₃ம் கைப்பட்டவனிருந்த விடமெல்லாம் பொன்னுமாபோலே, ப்ரமேயம் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம்'' என்றார். (பிள்ளை-நம்பிள்ளை. வார்த்தை — சாஸ்த்ரார்த்த₂ம்)

63. [282] (ஆ) ப₄ட்டர், நஞ்ஜீயரை 'பெரிய பெருமாள் தஞ்சமென்றிருக்குமவரைத் தஞ்சமென்றிரும்' என்றருளிச்செய்தார்.

64. [289] (ஈ) ப₄ட்டர் நஞ்ஜீயர்க்கு, ''பெருமாளைத் தஞ்சமென்றிரும்; பெருமாள் தஞ்சமென்று சொல்லுகையாலே நான் தஞ்சமென்றபடி' என்றருளிச்செய்தார்.

65. [291] (நா) ''கட்டின குளிகையைக் கையிலே கொடுத்தால் அப்போதே இரும்பைப் பொன்னாக்கி விடுமாபோலே'' என்று ஜீயர் அருளிச்செய்த வார்த்தை. (கட்டின குளிகை பாதரஸத்தைக் கட்டி மாத்திரையாக்கியது)

66. [291] (நா) திருவனந்தபுரத்திலே ஒரு ப₄ாக₃வதரோடே மூன்று பிள்ளைகள் ஸ்ரீராமாயணம் அதி₄கரித்துச் சொன்ன வார்த்தையை நினைப்பது. (ஸ்ரீராமாயணம் அதி₄கரித்து முடித்தவுடன் ஆசார்யர் மூன்று பிள்ளைகளையும் அழைத்து, ஸ்ரீராமாயண தாத்பர்யம் க்₃ரஹிக்கப் பட்டுள்ளதா என்று பரீக்ஷை செய்தார். முதலாமவன் ''மாத்ரு பித்ரு ஶுஶ்ரூஷை ஸ்ரீராமாயணஸாரம்'' என்றான்; இரண்டாமவன் 'சரீரமெடுத்துப் பிறப்பது பொல்லாதது; ஆகையால் ''சரீர ஸம்ப₃ந்த₄த்தைக் கழித்துக்கொள்ள வேண்டும்'' என்றான்; மூன்றாமவன் ''சக்ரவர்த்தித்திருமகன் கருணையுண்டானாலொழிய எவராலும் பிழைக்க வழியில்லை'' என்றான். மூன்றாமவனுடைய வார்த்தையை ஆசார்யர் அங்கீ₃கரித்து அதுவே ஸ்ரீராமாயண பரமஸாரம் என்று விளக்கி, அவனையே ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்ய ஆஜ்ஞையிட்டார். இவ்வரலாறு வார்த்தாமாலையில் (364) உள்ளது.)

67. [292] (நா) ப₄ட்டர் நஞ்ஜீயருக்கு, 'பெருமாளை உமக்குத் தஞ்சம் என்றிரும்; பெருமாள் தஞ்சமென்று சொல்லுகையாலே நானும் உமக்குத் தஞ்சம்' என்றருளிச்செய்தார்.

## உந்துமதகளிற்றன்—18

68. [315] (மூ) எம்பெருமானார் விசேஷித்துகந்த பாட்டு.

69. [324] (ஆ) எம்பெருமானார் விசேஷித்து உகந்திருக்கும் பாட்டு இப்பாட்டு.

70. [326] (ஈ) எம்பெருமானார் விசேஷித்து உகந்த பாட்டு இது.

71. [329] (நா) எம்பெருமானர் விசேஷித்துகந்த பாட்டு. (பதிப்பாசிரியர் குறிப்பு காண்க. பக் 315)

## அங்கண்மா ஞாலத்து--22

72. [383] (ஆ) ''வேத₃ாந்தங்களிலே ப்₃ரஹ்மாதி₃களுங்கூட ஏழு ஜந்மம் ஜனித்து அரிய ஸாத₄நாநுஷ்டாநங்களைப் பண்ணி, பின்பு ப₄க₃வத் ப்ராப்தி ரூப புருஷார்த்தம் பெற்றார்களாகச் சொல்லாநின்றது. இவ்வருகே எத்தனையேனும் கீழாயிருப்பார் சிலர், சரீராவஸாந காலத்திலே மோக்ஷம் கிடைக்குமென்று பொதி சோறு கட்டிக்கொண்டிராநின்றார்கள். இவையிரண்டும் சேர விழுந்தபடி எங்ஙனே?'' என்று ப₄ட்டரைக் கேட்க, '''ஒரு குறையில்லை' என்றருளிச்செய்தார்'' என்று தொடங்கி, ''ஈஶ்வரனையிறே இவன் முதலிலே பற்றிற்று'' [384] என்றதீருக.

73. [387] (ஆ) ''ஸிம்ஹம் யானையோடே பொராநின்றாலும், குட்டிக்கு முலைகொடுக்குமாபோலே'' என்று ப₄ட்டர். (ஹிரண்யன்பக்கல் சீற்றத்தோடே போர் செய்து நின்றாலும் ப்ரஹ்லாதனுக்கு எம்பெருமானுடைய திருக்கண்கள் அநுகூலமாயிருந்து வாத்ஸல்யத்தைப் பொழிந்தது உபமேயம். ஸிம்ஹம் பெண் யானையோடு போர்புரியும்போதும் தன் குட்டிக்குப் பால்கொடுத்துக்கொண்டே யானை போர் புரிவது உபமானம். ''இழவு தரியாததோர் ஈற்றுப்பிடி இளஞ்சீயம் தொடர்ந்து முடுகுதலும் குழவியிடைக் காலிட்டு எதிர்ந்து பொரும்'' [பெரியாழ் திரு 3-5-2] என்றது காண்க.)

## மாரிமலை முழைஞ்சில்---23

74. [397] (மூ) அழகர் கிடாம்பியாச்சானை அருள்பாடிட்டு, ''ஒன்றுசொல்லிக் காண்'' என்ன; '''அபராத₄ஸஹஸ்ரப₄ாஜநம்' என்று தொடங்கி, 'அக₃தி₃ம்''' என்ன: ''நம்மிராமானுசனையுடையையாயிருந்துவைத்து, 'அக₃தி₃ம்' என்னப்பெறாய்!'' என்றருளிச்செய்தார். (கிடாம்பியாச்சான் திருமாலிருஞ்சோலைக்குச் சென்று அழகரை ஸேவிக்க; அழகர் அவரை ஒரு ஶ்லோகம் விண்ணப்பிக்குமாறு நியமிக்க; கிடாம்பியாச்சான் ஸ்தோத்ரரத்னத்திலிருந்து 'அபராத₄ஸஹஸ்ரப₄ாஜநம்' என்ற ஶ்லோகத்தை விண்ணப்பிக்க; அதில் 'அக₃தி₃ம்' என்றதும் அழகர் பொறுக்க கில்லாது 'நம் இராமானுசனை ஆசார்யராக உடையாரில் ஒருவரும் அக₃தியில்லை காணும்' என்றருளிச்செய்தார்.)

75. [398] (ஆ) ஆச்சான் 'அக₃தி₃ம் ஶரணாக₃தம்' என்று விண்ணப்பஞ்செய்ய 'நம்மிராமானுசனையுடையையாயிருந்துவைத்து நம்முன்னே இப்படி சொல்லப் பெறாய்' என்றார் அழகர்.

76. [405] (நா) அழகர் கிடாம்பியாச்சானை அருளப்பாடிட்டு 'நீ ஒன்று சொல்' என்ன; 'அபராத₄ஸஹஸ்ர ப₄ாஜநம்' என்று தொடங்கி 'அக₃தி₃ம்' என்ன;

# ப்ரமாணாகரபரிசிஷ்டம்

[திருப்பாவை வ்யாக்₂யான ப்ரமாணத்திரட்டில் சில ப்ரமாணங்களின் முழு வடிவமும், சிலவற்றின் ஆகரமும் நமக்குக் கிடைக்கவில்லை. இவற்றின் பட்டியலைப் பல ஸ்வாமிகளுக்கு அனுப்பினோம். அவர்களில் சில ஸ்வாமிகள் (முன்னுரையில் குறிக்கப்பெற்றவர்கள்) சில ஶ்லோகங்களுக்கு முழுவடிவமும், ஆகரமும் குறிப்பிட்டனுப்பினார்கள். அவை தேவையான இடத்தில் அர்த்தத்துடன் கீழே அச்சிடப் படுகின்றன. முதலில் உள்ளது ப்ரமாணத்தின் எண்.]

6. "தே₃வாஸ்சாக்₃நி முக₂ா:" என்று மஹாபாரதம், ஶாந்திபர்வம் — மோக்ஷத₄ர்மம் 341—51 (கீதா பிரெஸ் பதிப்பு). "அக்₃நிமுக₂ா வை தே₃வா:" என்று இல்லை. "அக்₃நிர்முக₂ம் ப்ரத₂மோ தே₃வதாநாம்" என்று காட₂கஸம்ஹிதை (4—16) இலும், ஐதரேய ப்₃ராஹ்மணம் (1—4—8) இலும் காண்கிறது. "தே₃வர்களுக்கு அக்₃நியே முக்கியமான முக₂ம்" என்று பொருள்.

74. இதன் முற்பாதி வராஹபுராணம் [12!—11]ல் காணப்படுகிறது. பிற்பாதி இல்லை.

77. ஆகரம் [பா₄க₃வதம் 10—14—32]

90. ஆகரம்—பா₄ரத்₃வாஜஶ்ரௌத ஸூத்ரம் ப்ரஶ்நம் 11, ஸூத்ரம் 1.

95. ஆஷாடே₄ பூர்வப₂ல்கு₃ந்யாம் துளஸீகாநநோத்₃ப₄வாம் |
பாண்ட்₃யே விஶ்வம்ப₄ராம் கோ₃தா₃ம் வந்தே₃ ஶ்ரீரங்க₃நாயிகாம் ||

[ஆண்டாள் திருநக்ஷத்திரத் தனியன்; 'ஆஷாடே₄' என்னுமிடத்தில் 'கர்க்கடே' என உள்ளது. முற்சேர்க்கையில் பக்கம் 3ல் பொருள் காணலாம்.]

126. ஆகரம்—விஷ்வக்ஸேநஸம்ஹிதை [1-6-39] [பதிப்பு?]

161. ஆகரம் பா₄ரதம்-உத்₃யோக₃ 70—5. [கீ₃தா பிரஸ் பதிப்பு] கடைசிப் பாத₃ம் "க்ருஷ்ணோ ப₄வதி ஸாத்வத: (ஶாஶ்வத:)" என்று காண்கிறது.

214. ஆகரம்—பாத்₃மஸம்ஹிதை 17—53. [பாஞ்சராத்ர பரிஶோத₄ந பரிஷத் பதிப்பு] த்ரிவிக்ரமமூர்த்தி பி₃ம்ப₃த்தை அமைக்கும்போது பறையை அடிக்கும் ஜாம்ப₃வானைச் சுவரில் அமைக்கவேண்டும் என்று விதிக்கும் வாக்யம் இது.

260. த்வயோபபு₄க்தஸ்ரக்₃க₃ந்த₄வாஸோऽலங்கார சர்ச்சிதா: |
உச்சி₂ஷ்ட போ₄ஜிநோ தா₃ஸா: தவ மாயாம் ஜயேமஹி ||
[பா₄க₃வதம் 11—6—46]

[உன்னால் அனுப₄விக்கப்பட்டு அருளப்பட்ட மாலை, சந்த₃னம் முதலான நறுமணப்பொருள்கள், வஸ்திரம், ஆப₄ரணங்கள் ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்டவர்களாய், நீ உண்டு மிகுந்த ப்ரஸாத₃த்தை உண்ணும் அடியவர்களான நாங்கள் உனது மாயையை வெல்கின்றோம்.]

331. நாராயணஸ்த்வம் நஹி ஸர்வதே₃ஹிநாம்
ஆத்மாஸ்யதீ₄ஶோऽகி₂லலோகஸாக்ஷீ [பா₄க₃வதம் 10—14—14]

[நாரங்களான எல்லா ஜீவர்களுக்கும் நீ ஆத்மாவாயிருக்கிறாய்; அவர்களுக்கு தா₄ரகனாகவும், நியமிப்பவனாகவுமிருக்கிறாய்; நாரங்களாகிற எல்லாப் பொருள்களையும் நீ காண்பவனாயிருக்கிறாய். (இக்காரணங்களால்) நீ நாராயணனல்லவா?]

362. ஆகரம்—நாரத₃பரிவ்ராஜகோபநிஷத்—த்ருதீயோபதே₃ஶ:

385. மஹாப₄ாரதத்தில் காணப்படவில்லை. ஶார்ங்க₃ த₄ரபத்₃த₄தியில் [Dr P Peterson 1888 ல் தொகுத்தது] ஸுப₄ாஷிதரத்ந ப₄ாண்டா₃கா₃ரம் பக்கம்262ல்

தஸ்யா: பத்₃மபலாஶாக்ஷ்யா: தந்வ்யா: தஜ்ஜக₄நம் க₄நம் ।
த்₃ருஷ்ட்வா ஸகீ₂பி₄ர்யாபி₄ஸ்தா: பும்ப₄ாவம் மநஸா யயு: ॥

என்று உள்ளது. பொருள் ஏறக்குறைய அதுவே.

432. ஆகரம்—விஷ்ணுத₄ர்மம்—3

433. ஆகரம் வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹம்—இறுதி வாக்யம்

447. ஆகரம்—அமரகோஶம் 1—ஸ்வர்க்க₃—28 [அடையார் பதிப்பு] சில பதிப்புகளில் இல்லை.

454. ஆஸாமஹோ சரணரேணுஜுஷாமஹம் ஸ்யாம்
ப்₃ருந்தா₃வநே கிமபி கு₃ல்மலதௌஷதீ₄நாம் ।
யா துஸ்த்யஜம் ஸ்வஜநமார்யபத₂ம் ச ஹித்வா
பே₄ஜுர் முகுந்த₃பத₃வீம் ஶ்ருதிபி₄ர் விம்ருக்₃யாம் ॥

[ப₄ாக₃வதம் 10—47—61]

[எந்த கோ₃பிகள் விடவொண்ணாத உறவினர்களையும், நல்லோர்க்களுக்குரிய (பாதிவ்ரத்யம் முதலான) த₄ர்மங்களையும் விட்டு மறைகள் தேடியோடும் முகுந்தனின் அடிச்சுவட்டை அடைந்தனரோ, அவர்களுடைய அடிப்பொடிகள் பட்டவையாய், ப்₃ருந்தா₃வனத்தில் உள்ளவையான புதர், கொடி, மூலிகைச்செடி ஆகியவற்றில் ஏதாவதொன்றாக நான் ஆகப்பெறவேணும்.]

457. துலாயாம் ஜாயதே ஶீதம் வ்ருஶ்சிகே து ப்ரவர்த்த₄தே ।
த₄நுஷி த₄நுராகாரம் மகரே குண்ட₃லாக்ருதி ॥
கும்பே₄ ஶீதமஶீதம் ச மீநே ஶீதநிவாரணம் ॥ [ஆகரம் தெரியவில்லை]

[ஐப்பசி மாதத்தில்குளிர் உண்டாகிறது; கார்த்திகையில் வளர்கிறது; த₄நுர்மாத மான மார்கழியில் (அம்புடன் கூடிய) வில்போல் வருத்துகிறது. தை மாதத்தில் குண்ட₃லம் போல் சுழன்று சுழன்று வீசுகிறது, மாசியில் குளிரும் உஷ்ணமும் கலந்து உள்ளது. பங்குனியில் குளிர் நீங்குகிறது.]

471. மந்நிமித்தம் க்ருதம் பாபமபி த₄ர்மாய கல்பதே ।
மாமநாத்₃ருத்ய த₄ர்மோऽபி பாபம் ஸ்யாந்மத்ப்ரப₄ாவத: ॥

[திருமலையொழுகில் எடுத்தாளப்பட்டுள்ளது]

[ஸர்வேஶ்வரனை என்பொருட்டுச் செய்யப்பட்ட பாபமும் என் ப்ரப₄ாவத்தால் புண்ணியச்செயலாகவே ஆகிறது; என்னைக் கைவிட்டுச் செய்யும் புண்ணியமும் பாபச் செயலாகவே ஆகிறது.]

503. ஆகரம்—ஜாபா₃லோபநிஷத்—காண்டம் 4.

597. ஆகரம்-மஹாப₄ாரதம்—பண்டர்கார் பதிப்பு 8—694—1. க்ருஷ்ணாசார்யர் பதிப்பு ஶாந்தி 163—30 ல் சிறிது பாட₂பே₄த₃த்துடன் காண்கிறது.

733. ஹேமந்தே ப்ரத₂மே மாஸி நந்த₃வ்ரஜகுமாரிகா: ।
சேரூர் ஹவிஷ்யம் பு₄ஞ்ஜாநா: காத்யாயநயர்ச்சந வ்ரதம் ॥

[ப₄ாக₃வதம் 10—22—1]

[ஹேமந்த ருதுவில் (முன்பனிக்காலத்தில்) முதல் மாதமான மார்கழியில் ஆய்ப்பாடியிலுள்ள சிறுமிகள் ஆஹார நியமமுடையவர்களாய், துர்க்கை₃யைப் பூஜிக்கும் விரதத்தை அனுஷ்டி₂த்தனர்.]